ஸ்ரீ



ஸ்ரீ வில்லிபுத்தூர் ஸ்ரீ ஆண்டாள்
திருவாய் மலர்ந்தருளிய

# திருப்பாவை

(இத்துடன் பூர்வ ஆசாரியர்களின் உரைகளுக்கும், தற்போதுள்ள ஸ்ரீ மதழகியசிங்கர் - ஸ்ரீ மதாண்டவன் ஸ்ரீரங்கம் ஆசாரியர்களின் உரைகளுக்கும் விளக்கவுரை) முப்பது பாடல்களுக்கு ஸ்வரம் வர்ண மெட்டுக்களுடன்.




**S. ஜெகந்நாராயணன்**
Dy. Secy., (Retd)
Ministry of Finance
Govt. of India, New Delhi.


Author of:

துளசி 'மானஸ ராமாயணம்', திரிவேணி ராமாயணம்-திருமாலின் சீர் (நம்மாழ்வார்) கீதகோவிந்தம், மீராபஜன் தியாகராஜ பஞ்சரத்ன கீர்த்தனைகள் பிரம்மவித்யா (சங்கர ராமானுஜ பாஷ்யங்கள்) (தமிழில்)

**First Edition : - December 1986.**

This Book has been published with **the financial assistance** given by Tirumala Tirupathi Devasthanams Tirupathi. (A.P.)

(Under their Scheme - Aid to Authors)
for Religios bookus)

*பிரசுரிப்பவர் :* (Printers & Publishers.)

**சுதா - சுஜாதா**
*10, திருவீதி அம்மன் தெரு,*
*ராமகிருஷ்ண நகர்,*
*சென்னை - 600 028.*
Phone 416326

*பிரதிகள் கிடைக்குமிடம் :*

**S. ஜெகந்நாராயணன்,**
*10, திருவீதி அம்மன் தெரு,*
*ராமகிருஷ்ண நகர்,*
*சென்னை-600 028.*

*இவருடைய மற்ற புத்தகங்களின் விபரம் :*
(See cover Page)

வெளியிடுவோர் : (Release)

**சீனிவாச ஐய்யங்கார்,**
*அலமேலு அம்மாள் டிரஸ்ட்,*
*10, திருவீதி அம்மன் தெரு,*
*ராமகிருஷ்ண நகர்,*
*சென்னை-600 028.*

*Printed by :*

*16ம் பாட்டு முதல் முப்பதும் முடியவும் எல்லாப் பாட்டுக்களின் வர்ண மெட்டுக்கள் முடிய அனைத்துக்கும் :*

New Bharathi Vijayam Printers,
49, Venkatachala Chetty Street,
Triplicane, Madras-600 005.

*முதல் பதினைந்து பாட்டுக்களுக்கு உரை மாத்திரம்*
"Sakthi Press",
Chapauk, Madras - 600 005.

ஸ்ரீ:



ஸ்ரீஆண்டாள் திருவடிகளே சரணம்
ஸ்ரீமதே வேதாந்த தேசிகாய நம:

## திருப்பாவை

# ஸமர்ப்பணம்

வேயர் புகழ் விட்டு சித்தன், ஒளி புத்தூர் வித்தகன் விட்டு சித்தன்-மின்னுநூல் விட்டு சித்தன்-இன்னிசைக்கும் வில்லிபுத்தூர் செஞ்சொல் மறையவர் சேர்புதுவைப்பட்டன்-அல்வழக்கொன்று மில்லா அணி கோட்டியர் கோன், அபிமானதுங்கன் செல்வனைப் போலத் திருமாலே நானுமுனக்குப் பழவடியேன்-வில்லிபுத்தூர் விட்டுசித்தன்-என்று பலவாறு புகழ்பெற்ற ஸ்ரீவில்லிபுத்தூர் ஆழ்வார்-அந்தப் பெரியாழ்வாரின் ஏற்றம் மிகமிகப் பெரியது. மயர்வறமதிநலம் பெற்று, பரத்வாதிகளை யெல்லாம் தெளியக் கண்டவராகையாலே, அவருடைய திருமகளரான ஸ்ரீஆண்டாள் மிகவும் பிரசித்தி பெற்றவளாகும். இருவர்களாலும் வில்லிபுத்தூர் ஸ்ரீ வில்லிபுத்தூர் எனவும் இன்னிசைக்கும் வில்லிபுத்தூர் எனவும் மிகப் பெருமையடைந்தது. பிரணவஸேவையைத் தரும் இந்த க்ஷேத்ரம்-ரூபகுண சேஷ்டிதங்களால் வ்யாவர்த்தனுயிருக்கிற பாக்யம் பெற்ற தகப்பனும் அஞ்சுகுடிக்கொரு சந்ததியாய், ஆழ்வார்கள் தஞ்செயலை விஞ்சி நிற்கும் தன்மையளாய் பிஞ்சாய்ப் பழுத்தாள் அவரது திருமகளாரும், லோகத்தில் கண்டறியாத வைலக்ஷண்யத்தையுடைய இருவர்களையும் (பெரியாழ்வார்-ஸ்ரீ ஆண்டாள்) பெற்று - வாழவித்த பாக்யம்-பெற்ற வயிறுடையவள் இதுக்குடலாக என்ன தபஸ்ஸைப் பண்ணினளோ வென்று சிலாகித்துச் சொல்லும் வார்த்தையை, எல்லோருக்கும் பலனாக அனுபவிக்கும்படி-அளித்தது வில்லிபுத்தூர் க்ஷேத்ர மாகும்.

அத்தகைய பெருமை வாய்ந்த ஸ்ரீ ஆண்டாளின் திருப்பாவை பாவரும் இன்புறும்படி எல்லா வ்யாக்யானங்களின் முக்கிய கருத்துக்களை (பெரியவாச்சான் பிள்ளையின் மூவாயிரப்படி-அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் ஆறாயிரப்படி, உபநிஷத்பாஷ்ய காரர் ஸ்ரீரங்கராமானுஜ ஸ்வாமிகளின் வ்யாக்யானம்-பரகால ஸ்வாமிகளின் உரை-ஸ்ரீரங்கநாத ஸ்வாமிகளின் உரை-உத்தமூர் வீரராகவாச்சாரியார் ஸ்வாமிகளின் உரை, ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் முக்கூர் அழகியசிங்கரின் கருத்துக்கள் கொண்ட உரை-P.B. அண்ணங்கராச்சாரியாரின் உரை-கீதகோவிந்தம், கிருஷ்ண தேவராயரின் விஷ்ணு சித்தம், ஸ்ரீ வில்லிபுத்தூர் தேவஸ்தான வெளியீடு-இவைகளின் உதவியால் எழுதி முடிக்கப் பெற்றேன். இத்துடன் ஸ்ரீவேதாந்ததேசிகரின் கோதாஸ்துதியும் அனுபவிக்கும் பாக்யம் நேர்ந்தது. திருப்பாவைக்கு ஸ்வரம்-வர்ண மெட்டுகளும் போடப்பட்டு - இத்துடன் இணைக்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீமத் ராமானுஜரின் ஸ்ரீ பாஷ்யத்திற்கு இன் தமிழில் விளக்க உரை கொடுத்து-பிரும்மவித்யா என்கிற நூலை எழுதி-அச்சடித்த சமயம் - இந்தப் புகழ்பெற்ற திருப்பாவைக்கும் உரை எழுதவும், பிரசுரம் செய்யவும் பாக்யம் பெற்ற அடியேனுக்கு-மிக மிக திருப்தியாகும். திருப்பாவையில் நாலாயிர பிரபந்தத்தின் ஸேவையும், ஸ்ரீபாஷ்யத்தில் சகல உபநிஷத்துக்களின் (வேதங்களின்) தாத்பர்யமும் - இவைகளை விளக்கம் செய்த மஹானுபாவர்களான வைணவ ஆசார்யர்களின் திரு உரைகளும்-எல்லாம் இந்த இரண்டு புத்தகங்களுக்கு விஷயமானதே-அதனால் பரம திருப்தியடைந்தேன்.

அடியேன் காலட்சேப முறையில் திருப்பாவையை கோஷ்டிபுரம் ஸ்வாமி ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் மூலம் பயின்றேன். நான் அவருக்கு மிகக் கடமை பட்டிருக்கிறேன். பல பெரியார்களுடைய பிரவசனங்களையும் கேட்டு பயனடைந்தேன். மிக முக்கியமாக-ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவன் சிலவருஷங்களுக்கு முன்பு (1984ல்) - மார்கழி மாதத்தில் - சென்னைக்கு விஜயம் செய்து திருப்பாவை பிரவசனம் செய்து அருளினார். ஒவ்வொரு நாளும் அடியேன் அங்கு சென்று, அவருடைய திருவாக்குக்களை ஓலை செய்தது

இப்போது அந்த குறிப்புக்கள் பயன் பெற்றன. சில குறிப்புக்கள் எனது நண்பர் வாசு கெமிகல்ஸ் ஸ்ரீ K. ரங்கநாதன் அவர் களும் தந்தார்கள். இனி அம்மாதிரியிருக்கப் போவதில்லை. சிஷ்ய ஜனங்களையும் பாமரர்களையும் கவர்ந்து, ஆதி முதல் கடைசி வரை இன்னமுதம் பாய்ந்தோடும் பிரவாகமாக-ஸ்ரீமதாண்டவனின் பிரவசனம் விளங்கியது. பக்தி யில்லாதவர்களுக்கும்-நாஸ்திகம் பலவாகப் பேசுபவர்களுக்கும், விஷயங்களில் பல காலம் பழகி ஊறிப்போனவர்களுக்கும்-அந்த செஞ் சொற்கள் அருமருந்தே யாகும். எம்மைப் போன்ற ஆசார்ய பக்தியுள்ளவர்களுக்கு அதுவே அம்ருதமும் மருந்துமாகும். பரத்வத்தை ஸ்தாபிப் பதிலும்-அர்த்த விநியோகங்களை பரிமாறுவதிலும்-கடினமான ஸ்ரீ பாஷ்ய - திருமங்கையாழ்வார் - நம்மாழ்வார் மற்ற ஆசார்யர் ஆழ்வார்களுடைய கருத்துக்களையும்-வேதாந்ததேசிகர், பட்டர் கூரத்தாழ்வார் போன்ற மஹா ஆசார்யார்களின் கருத்துக் களையும்-அந்த பிரவசன சொற்களிலே பாமரரும் அறியும்படி-மெய்சிலிர்க்கும்படி, அதிஸரஸமாகச் சொல்லப்படும் ஆற்றலைக் கண்டு வியந்து களித்தனர், பல லக்ஷக்கணக்கான வைணவ பெரு மக்கள், அதிலும் அடியேனும் ஒருத்தனாகும்.

அதேபடி ஸ்ரீமத் அழகியசிங்கரின் கருத்துக்களையும் பல வரு ஷங்களுக்கு முன்பு போட்டிருந்த புஸ்தகத்திலிருந்து சில குறிப் புக்களையும் எடுத்து வைத்திருந்தேன். அந்த புத்தகம் எனக்கு இப்போது அகப்படவில்லை. ஆயினும், அடியேனது ஆசார்யரான அழகியசிங்கர் அவர்களுடைய திருவாக்குக்களின் குறிப்புக்களை எழுதி வைத்திருந்ததால்-அதுவும் பயன் பெற்றது. இவ்விதம் பல விடங்களிலிருந்து சேகரித்து வைத்திருந்த குறிப்புக்களை புத்தக வடிவாக இப்போது ஸமர்ப்பிக்கிறேன். வாசக தோஷங்கள் பலவிருப்பினும் - அவைகளை மன்னிக்கும்படி கேட்டுக் கொள் கிறேன். முழுமையும் போடாததற்கும் மன்னிக்கவும்.

அதேபடி தற்காலத்திய பெரியோர்களானவர்களும் அடியே னுக்கு மிக மதிப்புக்குரியவர்களுமான ஸ்ரீ உத்தமூர் ஸ்ரீ தி. வீரராக வாச்சாரியார் ஸ்வாமிகளின் பல விசேஷார்த்தங்களையும் காஞ்சி P. B. அண்ணங்கராச்சாரியாரின் செஞ்சொற்களின் அர்த்தத்தை யும் சமயம்-இடம் அளித்தவரை-விளக்கியுள்ளேன்

இதில் முக்ய விசேஷம் யாதெனில்-இரு வைணவ ஆசார்யர் களையும் சம்பந்தப்படுத்துவது-முதலில் ஸ்ரீரங்ககோவிலின் தென் கோபுரத்தை மிக்க தள்ளாத வயதில் தமது பரிஸ்ரமத்தைப் பாராமல் யாவரும் கண்டுகளிக்கும்படி கட்டி முடித்து-கோபுரம் முடிந்துவிட்டது ஸம்ப்ரோக்ஷண காலம் தேதியும் குறிப்பிடப்பட்

டுள்ளதாகும். அதே மாதிரி ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவனின் சதா பிஷேக உத்ஸவமும் ஏற்பட வேண்டியதாயிருக்கையாம். இந்த நற்தருணத்தில் இரண்டு ஆசார்யர்களுக்கும் அடியேன் அளித்த பக்தி-தும்ரஜைதயின் காணிக்கையாகும். இந்த அன்புநூலும்-பிரம்ம வித்யா எனப்படும் மற்றொரு இரத்தமும் ஸ்ரீபாஷ்ய முறையும் காணிக்கையாகும்.

இப்புத்தகம் திருப்பாவை வெளிவருவதற்கு நிதி பெரு அளவில் அளித்தவர்கள் திருமலை திருப்பதி தேவஸ்தானம். இசை சம்பந்தப்பட்ட வரையில் தமிழ்நாடு இயல் இசை நாடகக் கழகத்தையும் அண்டி பண உதவி கேட்டிருக்கிறேன்.

இந்தப் புத்தகத்தில் இணைக்கப்பட்டிருக்கும் திருப்பாவையின் ராகம் வர்ண மெட்டுககள், ஸ்வரங்கள்-புத்தக ரூபமாக ஞாயிற்றுக்கிழமை (28th Dec. 1986) அன்று 60th Annual Conference of the Music Academy Madras, ஆதரவின் கீழ் Sri K. V. நாராயணசாமி அவர்கள் Conference President ஆக விருக்கும்போது என் மனைவி திருமதி ராஜலக்ஷ்மி ஜகந்நாராயணன் நல் நினைவாக வெளியிடப்பட்டிருக்கிறது. திருப்பாவை முப்பது பாட்டுக்களையும் பாடிய Sri K. V. நாராயணசாமி அவர்களுக்கும், The Music Academy President Sri T. T. வாசு அவர்களுக்கும் அதன் செக்ரடரி ஸ்ரீ T. S. பார்த்தஸாரதி அவர்களுக்கும் நான் மிகக் கடமைப்பட்டிருக்கிறேன்

இப் புத்தகத்தைச் சிறப்பாக அச்சு அடித்துக் கொடுத்த வர்கள்-இருவர்களாவர்-என் ஆப்த நண்பர் ஸ்ரீ T.T. சொக்கலிங்கம் அவர்கள் - சக்தி பிரஸ் (Proprietor) - திருவல்லிக்கேணி - அவர் களாலும் திருவல்லிக்கேணி-New Bharathi Vijayam Printers Prop. ஸ்ரீ மாதவன் அவர்களாலும் சிறந்த முறையில் அச்சடிக்கப் பட்டது. நான் அவர்களுக்கு மிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இப் புத்தகத்தை அச்சு வடிவமாக வந்ததை வெளியிட்டவர் (Release) ஸ்ரீநிவாஸ ஐயங்கார் அலமேலுஅம்மாள் Trust-மதராஸ்-18 ஆவர். அவர்கள் எனக்குப் பண உதவி யளித் ததுமின்றி-இம்மாதிரி புத்தகங்களுக்கு தங்களால் முடிந்த வரை பண உதவியும்-வெளியிடும் செலவுகளைத் தாங்களே பொறுத்துக் கொள்கிறோம் என வாக்களித்திருக்கிறார்கள். அதேமாதிரி இப்புத்தகத்தை அச்சிட்டு வெளியிட்டோர்-என் மருமகளும் என் ஒரே புதல்வியுமாவார்கள்-சுதா-சுஜாதாவும் இவர்களும் பண உதவி பெரு அளவில் செய்தனர். இம்மாதிரி

புத்தகங்களுக்கு எனக்கு மீண்டும் பண உதவியளிப்பதாகச் சொல்லியிருக்கிறார்கள். நான் மிக்க கடமைப்பட் டிருக்கிறேன்.

மேலே சொல்லப்பட்ட வெளியிட்டவர்களான ஸ்ரீநிவாச ஐயங்கார்-அலமேலு அம்மாள் டிரஸ்ட் நிர்வாக அதிகாரிகளான அவர்களுக்கு அடியேன் மிக்கக் கடமைப்பட் டிருக்கிறேன். முக்கியமாக என் ஜேஷ்ட பிராதாவும் ஸ்ரீமான் S. சுந்தரராஜன் அவர்கள் (ஜபல்பூர்) - கனிஷ்ட பிராதாவான ஸ்ரீமான் S. கோவிந்தராஜன் அவர்களது மனைவி திருமதி S. கோகிலாம்பாள் அவர்களுக்கும் மிக்கக் கடமைபட்டிருக்கிறேன். சமீபத்தில் அடியேன் ஜேஷ்டபிராதா ஸ்ரீமான் S.சுந்தரராஜன் அவர்களின் மனைவி ஸ்ரீமதி புஷ்பவல்லி அவர்கள் ஆசாரியரின் திருவடிகளையடைந்தார்கள்-என் மன்னியும், எங்கள் குடும்பத்துக்கு கௌரவமாயும் ஒரு ரத்னதீபமாக சுமார் நாற்பத்தேழுவருஷங்களாக விளங்கி எல்லாச் சுப காரியங்களிலும் தேக சிரமத்தைப் பாராமல் மனமுவந்து கலந்து கொண்டு-எங்களை, எங்கள் பிதா - மாதாவுக்குப் பிற்பாடு ஆசீர்வதித்து-நற்வழியில் இருக்கும்படி-செய்து தாங்களும் கூடியிருப்பதினாலே மட்டற்ற மகிழ்ச்சியடைந்தனர். இப்புத்தகம் அவர்களின் நல் நினைவு மலராகவும்; இதனால் Trustன் நிர்வாக அதிகாரியுமான ஸ்ரீமான் S. சுந்தரராஜன் அவர்களுக்கும் நன்றி சொல்லியும்-மனம் ஆறும்படி பகவானை வேண்டியும்-அவர்களின் மனைவியின் ஆத்மா உத்தம சாந்தியடையும்படி-எல்லாம் வல்ல பகவானைப் பிரார்த்திக்கிறேன்.

இப்புத்தகம் ஒரு சிந்தனை நூலாகும். முதலில் இதைப் படித்து பின்பு - ஆர்வமுற்ற பின்பு - குருவினிடம் காலட்சேப முறையில் இந்த கிரந்தத்தைக் கிரஹித்தால் - நலம் என்று சொல்வேன்.

ஸ்ரீ விஷ்ணு சித்த குல நந்தன கல்பவல்லிம்-ஸ்ரீ ரங்கராஜ
மஹிஷீம்:ஸ்ரீமத் கோதாயை நித்ய-மங்களம்

இனி திருப்பாவையை அனுபவிப்போம்.

அக்ஷய வருஷம்
மார்கழி - 13ம் உ
ஞாயிற்றுக்கிழமை
28th-Decr-1986
10, திருவீதி அம்மன் தெரு,
ராமகிருஷ்ண நகர்
மதராஸ்-28

தாஸன்
**சீனிவாஸ ஜகந்நாராயணன்**
Deputy. Secretary (Retd)
Ministry of Finanee
Govt. of India - New Delhi.
(Madras)

# பகவத் கீதை, திருப்பாவை ஐககண்ட்யம்

## (ஒப்புநோக்கு)

(அவதாரிகை—ஸ்ரீமத் அழகியசிங்கர் திருப்பாவையை
கீதையின் ஸாரம் என்று சொல்வார், அதற்கு
விளக்கமாக இவ்வுரை அமையும்)

கீதையின் முக்கிய நோக்கங்கள் :—(அதேபடி திருப்பாவையிலும்)

1. **ஸ்ரீமந் நாராயணனே பரதத்வம். திருப்பாவையிலும் முதற் பாட்டில் நாராயணனே பறை தருவான் என்பதாம். இரண்டாம் மூன்றும் பாட்டுக்களில் வ்யூஹம் - விபவம் சொல்லப்பட்டது. மற்றவைகளில் அவதாரங்களும் அர்ச்சையின் சிறப்பும் பேசப்பெற்றது.**

1. A. **தத்வத்ரயம்—ஈஸ்வர ஸ்வரூபம்.**

கீதையில் இக்கருத்தை கீழ் சுலோகங்களில் காணலாம்...

1. अहमात्मा गुडाकेश, सर्वभूताशयस्थित: (கீதை. 10-20)
2. यस्मात् क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तम: ।
   अतोऽस्मि लोके वेदे च प्रथित: पुरुषोत्तम: ॥ (கீ. 15-18)
3. अहं कृत्स्नस्यजगत: प्रभव: प्रलयस्तथा (கீ. 7-6)
4. अहं सर्वस्य प्रभवो मत्त: सर्वं प्रवर्तते (கீ. 10-8)
5. तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात् (கீ. 12-7)
6. अहं बीजप्रद: पिता (கீ. 14-4)
7. वेदाहं समतीतानि (கீ. 7-26)
8. महा भूतान्यहंकारो बुद्धिरव्यक्तमेव च (கீ. 13-5)
9. ***ஈஸ்வர: ஸர்வபூதாநாம்....யந்த்ராரூடாநி மாயயா (18-61)***

## 2. ஸகுணபிரும்மமே தத்வம்—பிரும்மம் நிர்விசேஷமில்லை.

1. यो मामजमनादिं च वेत्ति लोकमहेश्वरम् (கீ. 10-3)
2. मत्स्यानि सर्वभूतानि न चाहं तेष्ववस्थितः (கீ. 9-4, 9-5)

न चमत्स्यानि भूतानि पश्यमे योगमैश्वरम् ।
भूतभृन्न च भूतस्थो ममाऽत्माभूतभावनः ।

3. मत्तः परतरं नान्यत् किञ्चिदस्ति धनञ्जय ।
मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव, (7-6, 7)

4. उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः ।
यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः । (15-17)
यस्मात् क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तमः ।
अतोऽस्मि लोके वेद च प्रयितः पुरुषोत्तमः । (15-18)

*உபயலிங்காத் - பிரும்மத்துக்கு கல்யாண குணங்கள் உண்டு ஹேய குணங்கள் இல்லை-பரமாத்மாவின் ஸ்வரூபம்.*

*சரீர ஆத்ம பாவத்தினால் சித் அசித் பகவானுக்கு சரீரம்; பரமாத்மா பிரும்மம் ஏகம் ஆத்மா; சரீர ஆத்ம பாவத்தினால்-பிரும்மம் குணாத்மகம், சேதனாசேதன விசிஷ்ட பிரும்மமே, பிரும்மமும் ஸத்யம்-ஜகத்தும் ஸத்யம்.*

*பரபிரும்மம் ஸ்வபாவமாகவே நிரஸ்த நிகில தோஷகந்தம் ஸமஸ்த கல்யாண குணாத்மகம் ஜகத் உத்பத்திஸ்திதி ஸம்ஹாரா ராந்த: ப்ரவேச நியமநாதி லீலம் ப்ரதிபாத்ய, க்ருத்ஸ்னஸ்ய சிதசித்வஸ்துந: ஸர்வாவஸ்தா வஸ்திதஸ்ய பாரமார்த்திகஸ்யைவ, பரஸ்ய பிரும்மணஸ்சரீரதயா ரூபத்வம் சரீரரூப தந்வம்ச சக்தி விபூத்யாதி சப்தை: தத்தச் சப்த ஸாமா நாதி கரண்யேந சபிதாய: தத்விபூதி பூதஸ்ய சித்வஸ்துந: ஸ்வரூபேணா வஸ்திதிமசிந் மிஸ்ரிதயா க்ஷேத்ரக்ஞரூபேண ஸ்திதிம் சோக்த்வா,*

க்ஷேத்ரக் ஞாவஸ்தாயாம் புண்யபாபாத்மக கர்மஸ்வரூபா வித்யா வேஷ்டி தத்வேந ஸ்வாபாவிகஞான ரூபத்வானனு ஸந்தானம் சித்ரூபார்த்தா காரதயா அனுஸந்தானம் சபிரதிபாதிதமிதி - பரபிரும்ம ஸவிசேஷம் தத்விபூதிபூதம் ஜகதபி பாரமார்த்திக மேவேதி ஞாயதே (ஸ்ரீபாஷ்யம்)

## கீதை

1. ஈஸ்வரன் அந்தர்யாமிரூபேண - எல்லாம் பூதப் பொருள் களுக்கும் ஆத்மா நானே, உள்ளிருந்து நியமிப்பவன் நானே தத்வத்ரயம் பேசலாயிற்று.

2. शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः— (5-18)
   निर्दोषं हि समं ब्रह्म—

3. क्षेत्रज्ञं चापि मां विद्धि, सर्वक्षेत्रेषु— (13-2)

4. ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्टति—
5. सर्वस्य चाहं हृदि सन्निविष्टः । (15-15)
6. अहमात्मा गुडाकेश सर्वभूता शस्यितः—

பூதசப்தத்தினால் ஆத்மா பர்யந்தம் அர்த்தம்:—

1. क्षरः सर्वाणि भूतानिकूट स्थोऽक्षर उच्यते । उत्तम पुरुषस्तु स्त्वन्यः— (15-16, 17)

2. तमेवशरणं गच्च सर्वभावेन भारत ।

3. नत्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः ।
   न चैव न भविष्यामः सर्वेवयमतः परम् (2-12)

4. न तदस्ति विना यत् स्यात्—அந்த அந்த வஸ்துக்கள் பிரும்மத்துக்கு சரீரமாகிறபடியாலே, பகவத் நிலையை பிரதி

பாதனம் செய்கின்றன. அந்த வஸ்துக்களின் பெயர்கள் ஆத்மா வரை சொல்லும்.

பிரும்மம் ஜகத் காரணம் - உபாதான, நிமித்த ஸஹகாரி எல்லாமும் பிரும்மமே.

5. यद्यद् विभूतिमत् सत्वं श्रीमदूर्जितमेव वा ।
तत्तदेवावगच्छत्वं मम तेजोंशसंभवम् ।
विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत् ।

இதனால் ஸவிசேஷ பிரும்மமே ஸ்தாபிதம். இதேமாதிரி சித் அசித் ஈஸ்வரன்-ஸ்வரூப பேதம் நிஷேத இல்லை என்ப தாலும் தத்வத்ரயம்.

(a) அந்தர் யாமித்வம் பகவானுக்கு—சாரீரத்வம் இரண் டாலும் நியந்தாவாகிறான் ஆதார ஆதேயம் சம்பந்தம்.

(b) தத்வதிரயம் - சேதன அசேதன - ஈஸ்வரன்—மூன்று தத்வங்கள்.

இந்திரன், பிரும்மா, சிவன் இவர்களை பரதத்வமாகச் சொல்லலாகாது. அவர்களுக்கு நாராயண மகிமையைக் கொடுக் கிறது. ஆகாசம், பிராணன் சப்தங்கள் கேவலம் பிராணன்-பிர ஸித்த ஆகாசத்தைக் குறிக்காது. ஆகாசத்திற்கு அந்தர்யாம், அது போல பிராணனுக்கு அந்தர்யாமியாகிற நாராயணனே. ஆகாச சரீரபரமாத்மா.

நாராயணனுக்கும் ஜகத்துக்குமுள்ள சம்பந்தம் சரீர ஆத்ம பாவத்தாலே-ஜகத் பரமாத்மாவாகச் சொல்லப்படும். பகவானு டைய அவதாரம் ஸ்வ இச்சையினாலே. சுத்தஸத்வத்தினாலே யேற் பட்டது பூதஸங்காசத்தினால் ஏற்பட்டதல்ல. அவதாரம் ஸத்யம் அவருக்கு எல்லா சக்திகளும் அவதார காலத்தில் உண்டு. கர்ம வச்ய பிறப்பு பிரும்மா முதலியவர்களுக்கு யேற்படுகிறது. பிரும்மமே ஜகத்துக்கு உபாதான நிமித்தகாரணம் என்றார் சூத்ரக்காரர். பிரும்ம சூத்ரம் 1-1-2; 1-4-23; 3-2-30; 3-2-31; 3-2-32; 33-36.

கீதையும் தத்வத்ரயத்தை உபதேசிக்கிறது - ஏகதத்வமில்லை. பகவானே சுபாஸ்ரயம் புருஷோத்தம யோகத்தில்,பகவான்சேதன

சேதனர்களைவிட விலக்ஷணன்-பிரளயத்தில் விசிஷ்டம் ஒன்றாக விருந்தான். அப்போது சித் அசித் சூக்ஷ்ம அவஸ்தையி லிருந்தன. ஸ்ருஷ்டி சமயம் - அவை ஸ்தூலசேதன அசேதன விசிஷ்ட பிரும்மம் என்று சொல்லும்படி ஆயிற்று. சரீரத்வார மாறுதல் ஏற்பட்டாலும் பிரும்மத்துக்கு ஒருக்காலும் மாறுதல் இல்லை. பிரளய சமயம் சிறகு ஒடிந்த பக்ஷி மாதிரி யிருந்தது. ஜீவனுக்கு பிராகிருத சரீரமில்லை. பிரகிருதி யும், கர்மாவும் அனாதி. பகவான் கருணைகொண்டு அவர்களுக்கு கர்ணகளேபரங்களைக் கொடுத்து, ஸ்ருஷ்டி செய்தான். நல்வாழ் வுக்காக-வேதம் முதலியவைகளை அருளிச்செய்தான். ஆகவே ஜகத் ஸத்யம். அஸத்துக்கு அபாவம் (இல்லாத தன்மை) இல்லை. ஸத்துக்கு பாவமில்லை. குதிரை கொம்பு-ஆகாசத்தாமரை போல வில்லை, பிரும்மத்துக்கு எக்காலத்திலும் ஸ்வரூப ஸ்வபாவமாறுதல் இல்லை. சேதன அசேதனத்திற்கு அவஸ்தாபேதம். ஸ்வபாவங்கள் மாறுதல் உண்டு. ஜாயதே ம்ரியதே என்கிற வசனங்கள் தேகத் தைக் குறிக்கும், ஆத்மாவைக் குறிக்காது.

கீதையில் 2-ம் அத்யாயத்தில் தேக ஆத்ம விபாகம் சொல்லப் படுகிறது. ஜீவன் ஞானகுணகக் குணமாக-ஞான விசிஷ்டனாக விருக்கிறான். நாம் ஒரு ஞானம் நமக்கு இருப்பது தர்மபூதஞானம் தர்மபூத ஞானம் ஸங்கோச விகாசத்தை அடையும். பாபபுண்யங் களுக்கு ஏற்ப அவை மாறுதலை அடைகிறது.

ஜீவர்களுள் நித்யன்-முக்தன்-பத்தன் என மூவகையுண்டு. பத்தன் நித்ய ஸம்சாரி, முக்தன் சம்சார விடுதலை அடைந்து - பகவத் பிராப்தியை அடைந்தவன். நித்யன் பகவானிடம் நித்ய கைங்கர்யம் செய்பவன். ஜீவன் அணுஸ்வரூபம். அதனால் இங்கு மங்கும் வியாப்தி-சஞ்சரிக்கிறான். ஜீவன் பிரமாதா-அறிபவனாகவும் அறியப்படும் பொருளாயுமிருக்கிறான். அசித் அறியப்படும் பொருளாகவிருக்கின்றது. சேதனனுக்கு போக்ய வஸ்துவாக விருக்கிறது எப்போதும் மாறுதலை அடைந்துகொண் டிருப்பது. இது ஜடமாதலால், சரீரத்திற்கு இருப்பிடமாயும் ஞானாஸ்ரயத்தை ஜீவன் கொடுக்கிறான். நெருப்பு தேகத்தை அழித்தாலும் ஆத்மாவை அழிக்காது. ஞாத்ருத்வத்தை உடைய தாலே - போக்த்ருத்வம் ஜீவனுக்கு உண்டு. அதனால் அவன் தர்மியாயும் தர்மமாகவுமிருக்கிறான்.

பிரகிருதி முக்குணங்களால் ஏற்பட்டது. அது அநாதி. அதே போல காலமும் கர்மமும் சுத்த ஸத்வமும் அசேதனம். ஜீவன் பூத ஸம்காசத்திஞல் (சேர்க்கையினுல்) யேற்பட்டவன். ஞானம் ஸ்வரூபமாகவிருப்பினும், அவனுக்கு சேஷத்வம் அந்தரங்க நிருபணம். தத்வதிரயத்தின் ஸாரம் இதுதான். சாஸ்திர அறிவிஞல்தான் பகவானிடம் சேஷத்வபுத்தி அறியப்படும். அதற்கு அவன் முயற்சிக்க வேண்டும்.

ஜீவன் கர்த்தாவல்ல. கர்மானுகுணமாக ஜீவன் தொழில் செய்கிருன். ஒவ்வொரு காரியத்துக்கும் ஈஸ்வரன் அனுமந்தா. ஜீவன் பிரயத்னம் செய்கிருன். பலத்தைக் கொடுப்பவன் பரமாத்மா. அதனுல் கீதையில பகவான் அர்ஜுனனைக் குறித்து '' நிமித்தமாத்ரம பவஸவ்யசாசி''சேஷத்வ ஞானத்திஞல் ''நான் பகவானுக்கே உரியன் மற்றவர்களுக்கு அடிமையில்லே. நான் எனக்கும் ஆட்படமாட்டேன்.'' अत: अहमपि सेवक: பெரியாழ்வார் சொல்லியது போல - நானும் உனக்கு பழவடியேன். இதனுல் ஒரு ஜீவன் மற்ருெரு ஜீவனே அழிக்க முடியாது-அழிக்க சக்தியற்றது.

நாம பிரபாவம்.—பகவானேப்போல - பகவானுடைய நாமமும்-பிரபலமுள்ளது. வாக்ய பிரபாவம் போல, வாக்கபிரபாவமும் உண்டு நாமத்தின் பெருமை சொல்லப்படுகிறது. கோவிந்த நாமம் திரெளபதிக்கும், ஆய்பாடிச் சிறுமிகளுக்கும் உதவியது. சிசுபாலனுக்கு நாமம் மோக்ஷத்தை அளித்தது.

ஜீவன் கரத்தாவா? கீதையில் 2-ம் அத்யாயத்தில்-பகவான் அர்ஜுனனே வியாஜமாக வைத்து, கர்மாவைச் செய்-லாபாலாபங்களே சிந்தியாதே என்று உபதேசித்தார். ஆகவே பகவான் ஸர்வ பலப்ரதன். சுகதுக்கங்களே சமமாக நினே. திருமாலே 38-ல் காம் பறத்தலே சிரைத்து உன் கடைத்தலேயிலிருந்து வாழும் சோம்பரை யுகத்திபோலும் சூழ்புனல் அரங்கத்தானே. பிரபத்தி செய்ய வேண்டியது என்பதை ஸ்மரிக்கவும்.

பக்தியோகம்:—கிருஷ்ணன் ஞான கர்மயோகத்தைச் சொன்னபின்பு-ஏழு, எட்டு அத்யாயங்களில் பகவானே உபாஸிக்கத்தகுந்தவர்-அவரே ஸர்வ சப்தவாச்யன். அவரைச் சரணமடைந்தே பக்தி செய்து பூஜிக்கவேண்டும் என்ருர்.

புண்யங்களின் தாரதம்யத்திஞல் ஐஸ்வரியம், கைவல்யம் பகவானே அடைதல் ஏற்படுகின்றன. இவற்றை ஆசைப்படுவ

**தினல், பக்தர்கள் நான்கு வகைப்பட்டவர்கள் என்றும்; ஞானி** (ஏகாந்தி-பகவானையே விரும்புகிறவன்) **எல்லோரிலும் மேம்பட்டவன்** என்று அருளினர். பக்தி, தியானம் செய்வது ஒன்றையே பரமபுருஷாரத்தமாகக் கருதுபவர்கள். அவர்களுக்கு நான் என்னை அடைதல் என்கிற புருஷாரத்தத்தையும், மோக்ஷத்தையும் அளிக்கிறேன். புநர்ஜன்மமில்லாமையாகிற க்ஷேமத்தையும் கொடுக்கிறேன். ஆதலால் மந்மநாபவ, மத்பக்தோ - மத்யாஜி மாம் நமஸ்குரு. மாமே வைஷ்யஸியுக்த வைவம் ஆத்மானம் மத்பராயண; இதன் அர்த்தம் - ஸர்வேஸ்வரனிடம் பக்தி செய். அந்த ஸ்ரவேஸ்வரன் ஸகுணபிரும்மம். நிகில ஹேயப்ரத்யனீகன். ஸர்வக்ஞ, சத்யஸஸ்கல்பாதி குணங்களை உடையவன். மத்யாஜி- ஆராதனை செய். ஸர்வஸ்வாமியாகிற அவனுக்கே நான் உரியவன் என்று பக்தியையே பிரயோசனமாகக் கொண்ட உபாஸனையாகும்.

*11*-ம் அத்யாயத்தில் எல்லாசேதன அசெதனங்கள் அவனுக்கு சரீரம். எல்லாம்பகவத் அதீனம். அஸங்க்யேய கல்யாணகுண நிதியான தனது விராட்ருபத்தை (விஸ்வ ரூபத்தைக்) காண்பித்தார். அதைக்கண்டு அர்ஜீனன் ஸ்தம்பித்துப்பொக - கண்ணன் அருளினன். "பக்த்யாது அநந்யயா சக்ய: அஹம் ஏவம் விதோ அர்ஜீன! ஞாதும் திரஷ்டும்

சதத்வேந பிரவேஷ்டும் ச பரமிதப. எப்படி கடவல்லியில் "யமேவைஷவ்ருணதே தேநலப்ய: ! தஸ்யை ஷ ஆத்மாவிவ்ருணுதே* தநூம் ஸ்யாம் - இந்த ஆத்மாமனனம் பண்ணுவதாலோ த்யானம் சிரவணம் செய்வதாலோ, அடையத் தக்கவனல்ல. பகவான் எவனைவரிக்கிருனே-அவனுலே அடையத் தக்கவன். அவனுக்கு பகவான் தன் ரூபத்தை விசதமாகக் காட்டுகிருர்.

மற்ற தெய்வங்களின் சம்பந்தமோ வேறு பலன்களில் இச்சையோ இல்லாமல், பகவான் ஒருவனிடமே பக்தி செய்ய வேண்டும். சாரீரக சாஸ்திரத்தில் பகவான் ஸர்வபலப்ரதன் என்பது "பலம் அத: உபபத்தே:" என்கிற சூத்திரத்தில் சொல்லப்பட்டது.

**சர்ம ஸ்லோகம்:**—சர்ம ஸ்லோகத்தின் அர்த்தம் - ஜீவன் பிறர் அறியும்படி நன்பொருளாக ஆகிருன். தான் ஈஸ்வரனுக்கு அடிமை என்று உணர்ந்து, உபாஸனை (பக்தி) மூலமாக ஈஸ்வரனை

திருப்தி செய்து, அவனை அனுக்ரஹ சங்கல்பனாக மாற்றுகிறான். பிரபத்தி செய்து பகவானின் கிருபையை அடைகிறான்.

கீதையில் சர்மஸ்லோகம் முக்யமானது. 18-66 सर्व धर्मान् கர்ம ஞான பக்திகளாகிற உபாயந்திரங்களை செய்யமுடியாத அசக்தன் சரணாகதிக்கு அதிகாரி உன் அகிஞ்சனத்தைவிட்டு - சரணமடைதல், பகவானே உபாயமும் ப்ராப்யமும் ஆகும். இதையே பல சுலோகங்களால் காட்டப்பட்டது. " மாமேவயே பிரபத்யந்தே மாயாமேதாம் தரந்திதே"; மாமுபேத்ய துகௌந் தேய புநர்ஜன்ம நவித்யதே; யத்கரோஷி.. தத்குருஷ்வ மதர்பணம் மந்மநாபவ மத்பக்தோ மத்யாஜிமாம் நமஸ்குரு பக்தி செய்யப் பட முடியாதபோனால் - பிரபத்தி செய்யலாம். பக்தியோகத்தின் ஸ்தானத்திலே பகவானையே சரணமடைந்து, உபாயமாக வேண்டுதலாகும். உபாயமாகிற பக்தியின் விரோதி பாவத்தைப் போக்கி, பக்தியை அனுஷ்டிக்கும்படி செய்வது. காரணம் अहं-मां-एकं ஸர்வசக்தியுள்ள நான் (தயைமிகவுமுள்ள என்னை)- ஆஸ்ரிதவாத்ஸல்யனை சரணமாகப்பற்று - என்று கண்ணன் அர்ஜுனனுக்கு உபதேசித்தான். "நான் உன்னை எல்லாப் பாபங்களிலிருந்து விடுவிக்கிறேன்" கவலையைவிடு மாசுச என்றார் பகவான்.

இதேபடி ஸ்ரீ ஆண்டாளும் திருப்பாவை மூலம் நமக்கு உபதேசித்தாள் எனத் தெரியவும்.

இவ்விதமாக பகவான் ஸ்வரூபத்திலே எல்லையில்லாத மேன்மையுள்ளவனாகவும், ஞானபலஐஸ்வர்யாதி கல்யாண குணங்களை உடைய புருஷோத்தமனாகவும் ஸ்ரீபாஷ்யத்திலே— ஆனந்தமயாதிகரணம், ஆரம்பணாதிகரணம் இத்யாதிகளிலும் ஆஸ்ரமதர்மங்களாலும், முப்பத்திரண்டு வித்யைகளாலும், உபாஸிக்கப்படுகிறவனாகவும், பரமாத்மாவின் ப்ரீதியே ஸ்வயம் பிரயோசனமாக கொண்டு செய்யப்படும் நித்யநைமித்திக கர்மாக்களால் ஆராதிக்கப்படுகிறவனாயும் தாந்தசம முதலிய ஆத்மகுணங்களை விருத்தி பண்ணுகிறவனாகவும், தன்னை வந்து அடிபணியும் சரணாகதர்களை ரக்ஷிப்பதில் ஊக்கம் உள்ளவனாயும்-

**கேவலம் வாக்ய ஜன்ய ஞானமின்றி - உபாஸனாத்மக ஞானம் (பக்தி - பிரபத்தி இத்யாதிகளால்) ஒன்றினாலே அடையத்தக்க வனாயும் - ஸ்ரீகீதையிலும் திருப்பாவையிலும் விவரிக்கப் பட்டனவாம்.**

**திருப்பாவையில்** *(பாட்டுக்களின் நிர். காட்டப்பட்டிருக்கிறது).*

1. *நாராயணனே பரதத்வம் - நாராயணனே நமக்கே ஸகுணபிரும்மமே* **உபாஸ்யம்:-** *பறைதருவான். (2) உய்யு மாறெண்ணி-(2) ஆழி மழைக்கண்ணா - (4); (3) அரி யென்று பேரரவம் (4) கேசவனைப் பாடவும் 5. தேவாத்தேவனை (8) மாமாயன் வைகுந்தன் 9. சங்கொடுசக்கரமேந்தும் தடக்கையன் (9) பங்கயக் கண்ணனை. (10) முப்பத்துமூவர் அமரர்க்குமுன் சென்று (20) 11. ஊற்றமுடையாய் பெரியாய். 12. அன்றிவ் வுலகமளந்தாய். 13. கோவிந்தா உன்தன்னைப் பாடி. (14) குறைவொன்றுமில்லாத கோவிந்தா-15. இறைவா நீ தாராய். 16. வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனை. ராமகிருஷ்ண அவதாரங்கள் ஸத்யம்-அர்ச்சை யும் ஸத்யம் அவதாரங்களிலும் அர்ச்சையிலும் அதே சக்தியுடனிருக்கிறான்-குறைவின்றி இருக்கிறான்.*

2. **தத்வதிரயம்:**—*சரீர ஆத்ம பாவம்ஜீவன் - அசேதனம்- ஈஸ்வரன்.*

1. *நாமும் நம்பாவைக்குச் செய்யும் கிரிசைகள் கேளீரோ.*
2. *நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்.*
3. *நாராயணன் மூர்த்தி கேசவனைப் பாடவும்.*
4. *மனத்துக்கினியானை.*
5. *புள்ளின் வாய்கீண்டானை.*
6. *சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையன்.*
7. *போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோ ரெம்பாவாய்.*
8. *சீரிய சிங்காதனத்திருந்து காரியம் ஆராய்ந்தருளு—*
9. *கோவிந்தா-பல்கலனும் யாமணிவோம்.*
10. **கோவிந்தா - உன்தன்னோடு** *உறவேல் நமக்கு இங்கு* **ஒழிக்க ஒழியாது**

### ஸ்ரீ உபாயம் (பக்தி ப்ரபத்தி)

1. தூயோமாய் வந்து நாம் தூமலர்த்தூவித்தொழுது வாயினுல் பாடி...... தீயினில் தூசாகும்.
2. தேவாதிதேவனைச் சென்று நாம் சேவித்தால்,
3. எத்தனையேலும் பிரிவாற்றகில்லையால்
4. அன்றிவ்வுலக மளந்தாய்-அடிபோற்றி கழல்போற்றி-யாம்வந்தோம்
5. இறைவா-நீ தாராய்பறையேலோ ரெம்பாவாய்.

### புருஷார்த்தம்

1. நாராயணனே நமக்கே பறைதருவான் (1) (கைங்கர்யம்) இற்றைப் பறைகொள்வான் (29)
2. சேவகமும் யாம்பாடி வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய். (25)
3. போயபிழையும் புகுதருவான் நின்றனவும் (5)
4. அருளேலோ ரெம்பாவாய். (8)
5. கூடியிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய். (27)
6. கோவிந்தா-உன் தன்னோடு உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது. (28)
7. எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உனக்கே நாமாட் செய்வோம் மற்றை நங்காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்.
8. செங்கண்திரு முகத்துச் செல்வத் திருமாலால், எங்கும் திருவருள் பெற்று இன்புறுவ ரெம்பாவாய்,

The following books were consulted for preparation of the commentaries:—

1. 3000 Padi (Peria Vachan Pillai)
2. 6000 Padi (Azgahia Manavala Perumal Nayanar)
3. Mukkur Azhagiya Singhar's Arul Mozhigal
4. Srirangam Srimad Andavan's Kalek shepam discourses.
5. Parakala Jeer's commentary
6. Sri P. B. Annangarachariya's Thiruppavai commentary
7. Uttamoor Sri T. Veera Raghavacharyar Swamy's commentaries
8. Sri Ranga Ramanuja Swamy's Commentary
9. Srivilliputtur Devasthanam's Publication (Thiruppavai)
10. Vishnuchittam & (Amuktha Malika (Krishna Devaraya)
11. Geetha Govindam (Jayadev)
12. 4000 Verses - Twelve Alwar's Prabhandam.

and other works of Acharyas like Sri Vedantha Desika and other Acharyas.



ஸ்ரீ



ஆழ்வார் எம்பெருமானுர் தேசிகன் திருவடிகளே சரணம்

ஆண்டாள் திருவடிகளே சரணம்

அழகிய சிங்கர் திருவடிகளே சரணம்

# திருப்பாவை

## அவதாரிகை

ஆண்டாள் திருப்பாவை—யாவரும் இன்புறும்படி எல்லா வ்யாக்யானங்களேயும் (பெரியவாச்சான் பிள்ளேயின் மூவாயிரப்படி-அழகிய மணவாளப் பெருமாள்நாயினாரின் ஆராயிரப்படி உபநிஷத்பாஷ்யகாரர் ஸ்ரீரங்கராமானுஜ ஸ்வாமிகளின் வ்யாக் யானம்-பரகால ஸ்வாமியின் உரை-ஸ்ரீரங்கநாத ஸ்வாமிகளின் உரை-உத்தமூர் வீரராகவாச்சாரியார் ஸ்வாமிகளின் உரை, ஸ்ரீமத் ஆண்டவன், முக்கூர் அழகிய சிங்கரின்கருத்துக்கள் கொண்ட உரை-P.B. அண்ணங்கராச்சாரியாரின் உரை-கீத கோவிந்தம், கிருஷ்ணதேவராயரின் விஷ்ணு சித்தம், ஸ்ரீ வில்லி புத்தூர் தேவஸ்தான வெளியீடு-இவைகளின் உதவியால் எழுதி-முடிக்கப் பெற்றேன். இத்துடன் வேதாந்த தேசிகரின் கோதா ஸ்துதியும் அனுபவிக்கும் பாக்யம் நேர்ந்தது. திருப்பாவைக்கு ஸ்வரம்-வர்ண மெட்டுகளும் போடப்பட்டு-இத்துடன் இணைக்கப் பட்டிருக்கிறது.' இதை யாவரும் வாசித்து பகவத் பாகவத, கடாக்ஷம் பெறவேண்டும் என்று பெருமாளேப் பிரார்த்திக்கிறேன். சுபம்.

சென்னை

26th June 1986

சீனிவாஸ ஜகந்நாராயணன்

ஸ்ரீதேசிகள் அருளிச் செய்த பிரபந்த சாரத்தில் 10–வது பாசுரம்
வேயர்புகழ் வில்லிபுத்தூராடிப்பூரம்
மேன்மே லுமிக விளங்கவிட்டு சித்தன்
தூய திருமகளாய் வந்தரங்கனுர்க்குத்
துழாய்மாலை முடி சூடிக்கொடுத்தமாதே!
நேயமுடன் திருப்பாவை பாட்டாறைந்து
நீயுரைத்ததையொரு திங்கட்பாமாலை
ஆயபுகழ் நூற்றுநாற்பத்து மூன்றும்
அன்புடனே அடியேனுக்கருள் செய் நீயே.

## சூடிக்கொடுத்த நாச்சியார் எனப்படும் ஆண்டாளின் வைபவம்

ஆழ்வார்களுள் மதுரகவிகளை நம்மாழ்வாரிலும், ஆண்டாளைப் பெரியாழ்வாரிலும் உள்ளடக்கி, அபிநவதசாவதாரம் என்று பெரியோர்கள் சொல்வார்கள். ஆயினும் ஆழ்வார்கள் பன்னிருவர் ஆவர். பொய்கை முனி, பூதத்தார், பேயாழ்வார் திருமழிசைப் பிரான், நம்மாழ்வார், மதுரகவி குலசேகரன், விட்டுசித்தர், ஆண்டாள், தொண்டரடிப்பொடி திருப்பாணர், கலியன் எனப்படும் திருமங்கை ஆழ்வார் உள்பட பன்னிருவராகும். ஆண்டாள் பூமிப்பிராட்டியின் அம்சம் என்று வைணவ சம்பிரதாயத்தில்ஒப்புக்கொள்ளப்படுகிறது.

ஸ்ரீவில்லிபுத்தூரிலே வடபெரும்கோயிலுடையானுக்குப் பெரியாழ்வார் தினமும் மாலை ஸமர்ப்பித்து வந்தபோது, ஒருநாள் ஆண்டாள் பிராட்டியார் சிறுகுழந்தையாகத் திருத்துழாய் தோட்டத்திலே அவதரித்தனள். கோதை எனப்பெயரிட்டுப் பரிவுடன் வளர்க்கப் பட்டாள். கோதா-பூமியைப் பிளந்து எழுந்தவள்; பூமியால் கொடுக்கப்பட்டவள். ஜனகராஜனுக்கு பெரியபிராட்டி சீதையாக எவ்விதம் தோன்றினாளோ அதுபோல; கோதை என்னும் திருநாமத்திற்கு ஏற்ப தன் வாக்கைப் பகவானுக்கு அளித்தவள் எனவும் கொள்ளலாம்!

ஆண்டாள்தான் பூமிப்பிராட்டியின் அவதாரமானபடியால், எம்பெருமானையே சிறுவயதிலிருந்து காதலுற்று, அவனுடைய உகப்பிற்க்காகவே தன்னை அலங்கரித்துக் கொண்டு-அவனுக்குச் சாத்துவதற்காக தன் தகப்பனுர் தொடுத்திருந்த திருத்துழாய் மாலையை முடியில் அணிந்து, தமது அழகைப்பார்த்து ரசித்துக் கொண்டிருக்க, ஒருநாள் தகப்பனுரான பெரியாழ்வார் அதனைக் கண்டு, அவள்மீது வெகுண்டு; இதை எங்கனம் பெருமாளுக்குச் சாத்துவது; இப்பெண் அறியாது சூட்டிக்கொண்டாளே; என்று அனுதபித்து நிற்க; அன்றையதினம் வெறுமனேயிருந்துவிட, இரவில்

எம்பெருமான் ஆழ்வாரின் கனவில் தோன்றி—"ஆழ்வீர், உமது பெண் சூடிக்கொடுத்த மாலையே நமக்குப்போக்யம்" என நியமிக்க; ஆழ்வார் பெரும் மகிழ்ச்சியுடன் சூடிக்கொடுத்த மாலையைப் பெருமாளுக்கு தினமும் அளித்து வந்தார். ஆகவே ஸ்ரீதேசிகன் "துழாய் மாலை முடி சூடிக்கொடுத்தமாதே" என அருளிச் செய்தது காண்க

இங்ஙனம் பூமாலையிலே கட்டுண்டவனுக்கு-ஆண்டாள். பாமாலைகளையும் ஸமர்ப்பித்தாள். ஆழ்வார்களிடம் பகவான் தானாகவே வந்து-அவர்களை உணர்த்த, ஆண்டாள் விஷயத்திலே சிறுவயதிலே ஊறின காதல் பெருக்கோடு, வளரவளர திருத்துழாய் போன்ற பூமாலைகளையும் கொடுத்து, அதுமட்டுமன்றி இவள்தானே அவ்வெம்பெருமான் ஸந்நிதியிற் சென்று, "உம்பர் கோமானே, உறங்காது எழுந்திராய்", என்று பகவானையே உணர்த்தினள். அன்றியும் அவள் பகவானிடம் கொண்ட காதல் - ஆழ்வார்களின் காமம் போல மேட்டுமடையாயிருக்கை-அதுபோல வல்லாமல், இவளுடைய காதல், பெண் சுபாவத்திற்கு ஏற்ப பள்ளமடையாயிற்று. இவளுக்கு ஆழ்வார்களைப்போல, பெண் உடை உடுத்தவோ—ஆரோபித்துக் கொள்ளவோ-அவசியமில்லை. இதனால் ஆண்டாள் ஆழ்வார்களின் பக்திக்காதலை மிஞ்சிவிட்டாள் எனலாம்.

ஸ்ரீவில்லிப்புத்தூரில் எழுந்தருளியிரா நின்ற வடபெருங் கோயிலுடையானிடம் அன்பு வளரப்பெற-அது ஒருநாள் இவ்விதமாக வளர்ந்தது நாளடைவிலே, எம்பெருமானுக்குத் தன் திருமேனியைக் கொடுக்க இசைந்து விட்டனள், என ஆகிற்று! அவனையே மாலையிட்டு மணக்க திருவுள்ளமிட்டாள். இந்த பாக்யம் திருவரங்கம் ஸ்ரீரங்கநாதனுக்கு கிடைத்தது. ஸ்ரீ ஆண்டாள் பெரியாழ்வாருடன் ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளி பகவானுக்கு மாலையைச்சூட்டி மணந்து கொண்டாள்; பதிபத்னி பாவத்தால், ஆண்டாள் பெருமானை அடைந்தாள் என்பது சரித்திர வரலாறு.

"மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்ற அவளது திருவாக்கின்படி, வேறு ஒருவருக்கும் ஆளாகாமல், வேங்கடவற்கே (ஸ்ரீரங்கநாதனுக்கே) தன்னை ஆக்கிக் கொண்டது ஸ்ரீஆண்டாளின் சிறப்பு அம்சமாகும். இவளுடைய விரஹதாபங்களை இவளால் இயற்றப்பட்ட நாச்சியார் திருமொழியில் காணலாம். இவளுடைய இன்னொரு பிரபந்தமான திருப்பாவையில்கண்ணனைக் கணவனைகப் பெறுவதற்கே, முன்பு கோபிகைகள் கண்ணனை தங்கள் பதியாக அடைய எவ்விதம் நோன்பு நோற்றனர்களோ,

அதுபோல ஆண்டாளும் தன் சகிமார்களுடன் இந்த காத்யாயனி விரதத்தை அனுஷ்டித்தாள். கண்ணன் கோபிகைகளுக்குத் தன்னைக் கொடுத்ததுமன்றி—மழையை வியாஜமாகக் கொண்டு விரதத்தை அனுஷ்டித்த கோபிகைகளுக்கு, அவர்களுடைய யோக க்ஷேமத்தில் பற்றுக் கொண்டவனாக - தானாகவே மழையைப் பெய்வித்தான். அதை நினைந்த ஸ்ரீஆண்டாளும் 'ஆழிமழைக் கண்ணா,'' என்று விளித்து, ''மேலையார் செய்வனகள் வேண்டு வனக் கேட்டியேல்'' என்று பெரியோர்கள் அனுஷ்டித்தவழி அடியொற்றியே - நானும் செய்தேன் - எனப் பொருள்படும்படி கண்ணனைக் கணவனாக அடைய வேண்டுமென்பதற்காக நோன்பு நோற்றுதன் ஆசையை நிறைவேறக்கண்டனள் எனக்கொள்ளலாம். அதோடுமாத்திரமன்றி - ''காண் கோவிந்தா, எற்றைக்கும் ஏழேற் பிறவிக்கும் உன் தன்னோடுற்றோமேயாவோம்''—என்றும் கடைக் கட்டினாள்.

ஆண்டாளின் பிடிவாதமனத்தை-அதாவது வேறுயாரையும் மணந்து கொள்ள விரும்பாததை பெரியாழ்வார்தாமே சொல்கிறார்.

நாடுமூருமறியவே போய் நல்ல துழாயலங்கல்
சூடி நாரணன் போமிடமெல்லாம் சோதித்துழிதருகின்றாள்
கேடுவேண்டுகின்றார் பலருளர் கேசவனோடிவளைப்
பாடுகாவலிடுமினென்றென்று பார் தடுமாறினதே
(பெரியா. 3-7-5.)

எஸ். ஜெகந்நாராயணன்

**ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே**

**ஸ்ரீமதே நாராயணாய நம:**

# முன்னுரை

பெரியாழ்வார் திருமொழிக்கு மேல் முதலாயிரத்துள் சேர்ந்துள்ளது திருப்பாவை. ஆண்டாள் அருளிச் செய்த இரண்டு பிரபந்தங்களுக்குள் முதன்மையானது. இதற்குத் தனியன்கள் மூன்று. (இரண்டு பிரபந்தங்கள் நாச்சியார் திருமொழி-திருப்பாவையாகும்)

நீளாதுங்கஸ்தனகிரித டீஸுப்த முத்போத்ய க்ருஷ்ணம்
பாரார்த்தயம் ஸ்வம்ச்ருதி சத சிரஸ்ஸித்த மத்யாபயந்தீ !
ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் யா பலாத் க்ருத்ய
புங்க்தே
கோதாதஸ்யை நம இதமிதம் பூய ஏவாஸ்து பூய: !!

இது ஸ்ரீபராசரபட்டர் அருளிச் செய்தது. இது ஸம்ஸ்கிருதத்தில் திருப்பாவையின் ஸாரத்தை வெளியிடுவதாக இருப்பதாலும் உய்யக்கொண்டார் இதன் ஸாரார்த்தத்தை வெளியிடுவதாக நினைத்து-தமிழ்த்தனியனை அருளிச் செய்தார். ஆகவே அதற்கு முந்தி இது அனுஸந்திக்கப்படுகிறது.

**அர்த்தம்** : (கோதைப் பிராட்டி என்கிற பூதேவி, நீளை நப்பின்னையாக அவதரித்து அவளுடைய உயர் கிரி-(மலைக்குன்று போன்ற முலைகளின் தடத்திலே-உறங்கினவனை கண்ணனை-எழுப்பி-நூற்றுக்கணக்கான சுருதி வசனங்களுக்கு தலைபோன்று விளங்கும் உபநிஷத்துக்களிலே தேர்ந்துள்ள தனது சேஷத்வத்தை அறிவிக்கிறவளாய் (பாரார்த்தியம் அத்யாபயந்தி): பலாத்காரம் செய்து, தன்னால் சூடிக்களையப் பெற்ற பூமாலையிலே விலங்கிடப் பட்ட (ஸ்ரஜிநிகளிதம்) அந்த ஸ்ரீரங்கநாதனை'-நாராயணனை கோவிந்தனை (கோதை) புங்க்தே அனுபவிக்கிறாள். அந்த பிராட்டிக்காக இதம் இதம் நம: இப்படி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். பூயஏவபூய: மறுபடியும் அடிக்கடி ஆகக்கடவது. சுக்ருதபிரணாமம் அடிக்கடி யிருக்கட்டும்.

இதற்கு முக்கிய நோக்கம் - பூமாலையில் அவன் (பரமாத்ம ) சிக்குண்டது. எதனால் ஸ்தனகிரிகளில் உறங்கினவனைப்போல நடிப்பதால்-அதனால் சூடிக்கொடுத்த நாச்சியார் என்கிற திருநாமம்

அவளுக்கு ஊர்ஜிதமாயிற்று. எப்படி? பெரியாழ்வாரின் சொப்பனத்தில் "உமது பெண் சூடிக்கொடுத்த மாலையே நமக்குப் போக்யம். அதையே கொணர்ந்து எமக்கு அணிவிப்பீர்"- என்று பெரிய பெருமாள் கடாக்ஷித்ததும்-அதனால் வேதாந்த தேசிகர் "துழாய் மாலை சூடிக் கொடுத்த மாதே"- என்று ஸம்போதனம் செய்வதும்-அதனால் கோதை பூமாலையோடு-பாமாலை செய்பவளாய்-தனது சேஷத்வத்தை-பகவானிடம் நிரந்தரம் காதல் கொண்டு-தன்னையே அர்ப்பித்தவளாம்.

ஆதலால் ஆண்டாளின் காதல் பிரபன்னஜன கூடஸ்தரான பராங்குச நாயகியாகிற நம்மாழ்வாரின் காதலுக்கு உவமை சொல்லப்படலாமா? ஆம் சொல்லலாம்-ஒரளவின்படி. ஆனால் ஆண்டாளின் காதல் ஆழ்வாரின் காதலைவிட ஒரு விதத்தில் தனிச் சிறப்பு பெற்றதாம். "மாண்குறள் கோலவடிவுகாட்டி மண்ணும் விண்ணும் நிறையமலர்ந்த; தேவப்பிரார்க்கு என் நிறைவினோடு நாண் கொடுத்தேன்-இனி என்னை கொடுக்கேன் என்னுடைய?" (நம்மாழ்வார்) "பெண்ணின் வருத்தம் தெரியாதே-அரையில் பீதக வண்ண வாடை கொண்டு-என்னை வாட்டம் தணிய வீசிரே; நெஞ்சு சூடு உருவலே உண்டு நிலையும் தளர்ந்து நைவேன் என்னை 'அஞ்சேல்' என்னான்; (யார்.) அவன் ஒருவன்-அவன் மார்வணிந்த வனமாலை-வஞ்சியாதே (எனக்கு) தருமாகில்-மார்பில் கொணர்ந்து புரட்டீரே"-என்றாள்கோதை.

"கற்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ-திருப்பவளச் செவ்வாய் தான் தித்திக்குமோ"-என்று அவள் சொல்ல; அவன் "நான் மருப்பொசித்தவன் - குவலயாபீடத்தின் தந்தத்தை ஓடித்தவன்" என்று மாற்றம் உரைக்க;-வாய் சுவையும் (இது ஆண்டாளுடைய முலைக்காம்பு சொல்லியதாம்) "நாற்றமும் நான் விருப்புற்று கேட்பேன்- சொல்-ஆழிவெண் சங்கே." என்றனள்.

"செங்கண்மால் தன்னுடைய வாய்தீர்த்தம் பாய்ந்து ஆடவல்லாய்-வலம் புரியே-" இப்படி விரகம் அதிகரிக்க இங்குத்தை வாழ்வைவையொழியவே போய் எமுனைக்கரைக்கென்னை உய்த்திடுமின்;"

"கொள்ளும் பயன் ஒன்றில்லாத கொங்கை தன்னைக் கிழங்கோடும் அள்ளிப்பறித்திட்ட வன்மார் விலெறிந்து என்னழலைத் தீர்வேனே;" என்றாள் அப்பிராட்டியார்.

அவளது திருத்தகப்பனார்—பெரியாழ்வாரோ தமது திருமொழியில் - "எல்லியம் போதினிதிருத்தல் இருந்ததோரிட வகையில்-மல்லிகைமாமாலை கொண்டு அங்காரித்தது மோரடையாளம்-(சீதை ராமனை மாலை கொண்டு சிறைவைத்தாள்-இது அவள் அனுமனுக்குச் சொல்லிய அடையாளம்) ஆனால் - (ஆண்டாள்) இவள் மாலை-பூமாலை-பாமாலை இருவகையாக அன்பில் சிறை வைத்தனள்)-அதனால் பெரியாழ்வார்.

"ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால் தான் கொண்டு போனான்
பெருமகளாய்க் குடிவாழ்ந்து பெரும் பிள்ளை பெற்ற யசோதை
மருமகளைக்கண்டுகந்து மணாட்டுப் புறஞ் செய்யுங்கோலோ" என்றனர்.

"நாடுமூரும் அறியவே போய் நல்ல துழாய் அலங்கல்
சூடி-நாரணன் போமிடமெல்லாம் சோதித்துழி தருகின்றாள்
கேடுவேண்டு நின்றார் பலருளர் கேசவனோடிவளை
பாடுகாவலிடுமினென்றென்று பார்தடுமாறினதே-"

இதனால் திருத்தகப்பனார் தமது திருமொழியை ஆண்டாளுக்காகவே இயற்றினார் எனலாம்.

ஆண்டாளுடைய பூமாலையைப் போல அவளது பாமாலையும் சிறந்தது. இதனை அனுபவிக்கும் பெருமாளுக்கு "இவள் நம்மை பர்த்தாவாகப் பெற்றாள். இவளுடைய திருக்குழல் சம்பந்தம் பெற்ற பூமாலையைச் சூடியதால்",-ஸர்வ கந்தனான பரமாத்மாவுக்கு ஒரு புதிய நறுமணம் சீராக அமைந்தது. இவளுடைய அபிமதத்தாலே பெருமாள் யோகு செய்யும் போதும்-இவளுடைய திசையைக்-கடாக்ஷித்துக் கொண்டு- இவளுடைய பிறந்த ஊர் ஸ்ரீவில்லிபுத்தூர்மேலே கண்வைத்தவராய் இன்றும் ஸ்ரீரங்கத்தில் விளங்குகிறார் அன்றோ? இன்றும் அன்றும்! "மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல் மேல் நுழைந்த வண்டு" என்றாள். வண்டு என்பது பகவானைச் சொல்லியது.

நம்மாழ்வார் நானொலி சங்கின் ஒலியைப் புகழ்ந்ததுபோல-இவளும் இரண்டினாலும் தன்னை அனுக்ரஹிக்க வேண்டும் என்று அனுஸந்தித்தாள், இவளுடைய பூமாலையையே பெருமாள் தமது திருமுடியிலே சூட்டிக்கொண்டார். "என்னை விதியென்ற இம் மாற்றம் அவனையே நாடிச்சென்று வேங்கடவற்கு விதிக்கிறாயே"-என்று பிரார்த்தித்து அந்த அனுபவத்தில் குறை ஒன்றுமில்லாமல்

ஸதா அனுபவிக்கும்படி யோக்யதை உள்ளக் கடவேன் - என்று பிரார்த்தித்தாள் ஆண்டாள். அவளுடைய பக்திக்காதல் சுத்த பிரேமையின் காதலே.

நம்மாழ்வாரும் இவ்விதமே பகவானிடம் காமுற்று சாக்ஷாத் மன்மத: மன்மத; எனப்படும் ஸ்ரீகிருஷ்ணவதாரத்தின் ரூபத்தில் சிருங்கார ரஸபூர்ணராக ஈடுபட்டார். ஆழ்வார்காமுற்று ஸ்திரித் வத்தையேறிட்டுக் கொண்டு பூர்ணமாக அடைய ஆசைகொண்டு அனுபவிப்பதற்கும், - ஆண்டாளுக்கோ இயற்கையாகவுள்ள ஸ்திரித் வமே! அவளின் அனுபவம் விசேஷணமாகுமே எனச்சொல்லலாம் அல்லவா? நம்மாழ்வாரின் பக்திக்காதல்—

திருவாய்மொழி 6-2-7,

"கன்மமன்று எங்கள் கையில் பாவை பறிப்பது கடல் ஞாலம் உண்டிட்ட
நின்மலா, நெடியாய், உனக்கேலும் பிழை பிழையே;
வன்மமே சொல்லி எம்மைநீ விளையாடுதி அது கேட்கி லென்னைமார்
தன்மபாவமென்னர் ஒரு நான்றுதடிபிணக்கே."

என்கிற ஆழ்வாரின் மனோபாவத்தை ஆண்டாள் கொண்டாள் நாச்சியார் திருமொழியில் (2-9)

முற்றுத் தூடுபுகுந்து நின் முகங்காட்டிப் புன்முறுவல் செய்து
சிற்றிலோடெங்கள் சிந்தையும் சிதைக்கக்கடவையோ கோவிந்தா
முற்றமண்ணிடம் தாவி விண்ணுற நீண்டளந்து கொண் டாய், எம்மைப்
பற்றி மெய்பிணக்கிட்டக்கால் இந்தப் பக்கம் நின்றவர் என் சொல்லார்.

2) உள்ளேயுருகி நைவேனை உளளோ விலளோ வென்னாத
கொள்ளை கொள்ளிக் குறும்பனைக் கோவர்த்தனனைக் கண்டக்கால்
கொள்ளும் பயனொன்றில்லாத கொங்கை தன்னைக் கிழங்கோடும்
அள்ளிப் பறித்திட்டவன் மார்விலெறிந்து என்னழலைத் தீர்வேனே

இவைகளால் அவளுடைய காதலுற்ற ஸ்திரத்வத்ம் மிக்கப் பொருத்தமே.

நம்மாழ்வாரது விஷயத்திற்கு ஒரு பாதுகாஸஹஸ்ரம் அமைந்தது போல - கோதாஸ்துதியும் ஆண்டாளுக்காகத் தேசிகர் இயற்றினர். "ஞாலம் அறியப்பழிசுமந்தேன்" (ஆழ்வார்) - இம்மைப்பிறவி செய்யாதே இனிப்போய் செய்யும் தவம்தான் என்? செம்மையுடைய (அன்பு உடைய) திருமால் திருமார்பில் சேர்த்தான், வில்லைத் தொலைத்த புருவத்தாளை — அதாவது ஆண்டாளை.

**பலாத்கிருத்ய** : வாமமார்க்கத்தில் கண்ணனிடம் காதல் கொண்டு - அவனைப் பேறாக அடைந்தனள்.

கீதகோவிந்தம் முதலிய காவியங்களில் ராதையின் காதல் பிரசித்தம் "நாயகியின்," அஷ்டநாயிகா அவஸ்தைகளாக ஆகி-கடைசியில் கண்ணனை அடைந்து சுகத்தை அனுபவித்தாள் ராதை. அதுபோல ஆண்டாளும்-நப்பின்னையும் எனலாம்

இதுமாதிரி கிருஷ்ணதேவராயரின் விஷ்ணு சித்தம் என்கிற நூலிலும் மிக்கச் சிறப்பாக ஆண்டாளின் காதலைப் பேசிற்று, கோதை-பூமியைப் பிளந்து வெளிக்கிளம்பினள் என்று அர்த்தம். '**ஆண்டாள்**' - எல்லோருக்கும் புருஷகாரம் செய்பவளும்-அர்ச்சையில் எம்பெருமானை நாயகனாக அடைந்து ஆண்டவள் ஆனதால் ஸம்ஸ்லேஷதசையில் அடைந்த பெயர் -பகவத்காதலில் ஆழ்ந்தவள் என்று பெயர் பெற்றவள்.— இவ்விதம் பல பொருள்கள் ஆண்டாளுக்குக் கூறலாம்.

2) உய்யங்கொண்டார் அருளியது

அன்வையற் புதுவையாண்டாளரங்கற்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதிகம்— இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள் நற்பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்.

நல் பாமாலை இன் இசையால் பாடிக்கொடுத்தாள்; பூமாலை(யும்)தான் சூடிக்களைந்து, கொடுத்தாளைச் சொல் என்பது முக்கியமானசொற்களாம்.

3) பிறகு அவளது அனுக்ரஹம் பெற - அவர் அருள்கினர்

மீண்டும்:—

> சூடிக்கொடுத்த சுடர் கொடியே! தொல்பாவை
> பாடியருள வல்ல பல்வளையாய்! - நாடி நீ
> வேங்கடவற்கு என்னை விதியென்ற விம்மாற்றம்
> நாங்கடவா வண்ணமே நல்கு.

சுடர்கொடி - ஸம்போதனம் - அறிவுச்சுடர் கொடியே - பல்வளை யாய் —நீ சூடிக் கொடுத்த மாலை பெருமாளுக்குப் பரம போக்யமாக விருந்தது (ஆச்சரியம்!) வேங்கடவற்கு என்னை விதியென்ற இம் மாற்றம் - அதாவது நான் பகவானுக்காகவே படைக்கப்பட்டேன். அனன்யார்ஹ சேஷத்வம்; விதி - கட்டளை- காமதேவா - நீ என்னை வேங்கடவற்கே விதிப்பாய், வாழ்க்கைப் படுத்துவாய். சேஷமாக்கு வாய். இதுதான் பொருள்.

**திருப்பாவையின் ப்ரவேசம்**

திருப்பாவை- பாவை என்னும் பதத்திற்கு நோன்பு எனப் பொருள் திரு லஷ்மி கடாக்ஷத்தை அறிவிக்கும் நோன்பு.

பழமையான நோன்பு- நோற்றவிதம் இங்கு கூறப்படுகிறது. மார்கழி மாதத்தில் பொழுது விடிவதற்கு முன்பு- சிறுகாலையில்- பல கோபிகை கன்னிகைகளுடன் ஆண்டாள் அனுஷ்டித்த நோன்பா மிது, திருவாய்ப்பாடியிலே பல ஆயர் சிறுமிகள் ஒன்று சேர்ந்து- காத்யாயினியைப் பூஜை செய்து கண்ணனை தங்களுக்குப் பதியாக அடைய வேண்டும் என்கிற நோக்கத்துடன் செய்யப்பட்ட நோன் பாகும். இங்கு ஆண்டாள் தக்க வயது வந்ததும் ஞான பக்திகளில் சிறப்புற்றவளாய்-ஸ்ரீவில்லிபுத்தூரில் எழுந்தருளியிருக்கும் வடபெருங் கோயிலுடையானுடனே தழுவி மனம் ஆறலாம் என்று அங்கு செல்ல; அப்பெருமாளும் முகம் காட்டாமல் நிற்க-ஆண்டாள் மனம் தளர்ந்து இந்த எம்பெருமானோடு யாரேனும் முன் கலவி பெற்று களித்தார்களோ – என்று சிந்திக்க; ஆம்! அவள் மனத்தில் முன்பு கண்ணன் துவாபரயுகத்தில் அவதரித்த காலத்தில் அஞ்சுல க்ஷம் குடி ஆயர் மங்கைகள் இவனுடன் கலந்து களிப்பு பெற்றனர் என உணர்ந்து காலாந்தரத்தில் நடந்த இந்த பேரின்பக்காதல் நமக்கு இப்பொழுது எப்படிகிடைக்கும் என்று சிந்திக்குமளவும் தானும் கண்ணனும் அவனது மங்கைமார்களும் உலாவப் போன யமுனை நதிக்கரையில் அவன கோநிறைகாக்க எடுத்த கோவர்த்தன கிரியும் கிடந்தவளவில், ஆம் ஆச்சரியத்துடன்-சரி இவைகளைச்

சொல்லி நாமும் உயிர்தரிப்போம் - என்று பகவத் விரஹத்தாலே உடல் மெலிந்த ஆண்டாள் மீண்டும் அவ்வாய்ச்சிகளைப் போல காத்யாயினி நோன்பு நோற்று கண்ணன் கைகளைப் பற்றுவேன் என்று சங்கல்பித்து அத்தகைய நோன்பு ஒரு மாதம் நோற்றின விதத்தைக் கூறுவதாம் திருப்பாவை. முப்பது பாட்டுக்கள் கொண்டவை. முக்கியமாக மார்கழி மாதத்தில் சிறுகாலையில் அநுஸந்திக்கத் தக்கவை. நம்மால் தினமுமே அநுஸந்திக்கப்பட வேண்டியவை. ஆண்டாள் அநுஸந்தித்து பலனையடைந்தாள். ஆகவே நாமும் அநுஸந்தித்து நன்மை பெறலாம்-இந்த திருப்பாவையை அநுஸந்தித்தால் என்பது திரண்ட பொருள்.

பாவை என்பது பொதுப்பதமாகையால் பெருமாளைப் போல பிராட்டியும் ஆராதிக்கத்தகுந்தவளாதலால் - எம்பாவாய் - எமது பிராட்டி மஹாலக்ஷ்மியே-உன்னைக்குறித்து நாங்கள் செய்யும் விரதத்தைப் பூர்த்தி செய்வாய், மஹாலக்ஷ்மியே என்று ஸ்ரீ பரகால ஜீயர் ஸ்வாமி அருளுவார். ஒவ்வொரு பாசுரத்திலும் எம்பாவாய்-ரெம்பாவாய்-ஏலோ ரொம்பாவாய்-கடைப் பாசுரத்தில் மட்டும் ஏலோர் என்பதில்லை என்று சொல்லப்பட்டிருப்பதால் ஆண்டாள் பரநிலையிலும் தன்நிலையிலும் சொந்த சொற்களோடும் தன் தோழிகளை நோக்கிக் கூறின வார்த்தைகள்-நமக்காகச் சொல்லப்பட்ட உபதேச வார்த்தைகளாம். இந்த பிரபந்தத்தை ஆண்டாள் இயற்றும் பொது தான் ஒரு கோபக்கன்னி, கூடவிருக்கும் தோழிகள் திருவாய்ப்பாடி கோபகன்னிகைகள்-ஸ்ரீவில்லிபுத்தூர் திருவாய்ப்பாடி அங்கு கோயில் கொண்டிருக்கும் ஆலினிலையானே கணண்ன் என்று நினைத்து பாவனா பிரகர்ஷத்தினால் பாடினாள். மொத்தம் 30 பாட்டுக்கள்-ஆறு ஐந்துக்கள் என்று கூறு வகுக்கலாம்.

முதல் ஐந்து பாட்டுக்களில் நோன்பு விஷயம் கலவியில்லாத புதுப்பெண்களை எழுப்புதல் உரைக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது ஐந்தில் கண்ணனிடம் கலவி கொண்டுள்ளவர்கள் - ஆனால் பிரிந்து போனவர்கள் - அவர்களுக்கு மீண்டும் கிருஷ்ண பிரேமை யேற்பட கிருஷ்ணனை ஆசைப்பட்டு புதிததாகக் காதல் கொண்ட இளங்கன்னிகைகளைப்போல எழுப்புதல், மூன்றும் ஐந்தில் கண்ணனிடம் முன்பாகவே காதலுற்று இப்போதும் அனுபவிப்பவர்கள் பெருங் கன்னிகைகளை அழைப்பது. நான்காம் ஐந்தில் கண்ணன் திருமாளிகையிலுள்ளாரை - நந்தகோபன் முதல் நப்பின்னைவரையிலுள்ளோரை எழுப்புதல் ஐந்தாம் ஐந்தில் கண்ணனையே எழுப்பி அவனைத்தங்கள் ;கோரிக்கைகளைக் கேட்கும்படி நிலை நிறுத்தல். கடைசி ஆறுவது ஐந்தில் தங்கள் கோரிக்கை இது என்று விண்

ணப்பம் செய்தல்-பயனையடைதல். ஆகவே ஜீயரும் கோதைத் தமிழ் ஐயைந்து மைந்தும் என்றார். பகவத் கீதையின் ஸாரம் என்றும் சொல்கிறார்கள் இதை. கிருஷ்ணனே பரதத்வம்; அவனைப் பூஜித்து - அவனது உகப்பே பரம புருஷார்த்தமாகும். இதனால் உபாஸனை, பிரபத்தி மார்க்கம் இரண்டும் சொல்லப்பட்ட தாகும்.

திருப்பாவையில் வேறு பொருளும் இருப்பது நோக்கத் தக்கது. இவைகளை பூர்வாசாரியார்கள் விவரித்துள்ளனர். (நாமும். இங்கு ஆங்காங்கு கூறியுள்ளோம்) ஆத்மீக உட்பொருளைக் கூறுவதை -ஸ்வாபதேசம் என்றும் முதலில் தோன்றும் பொருளைக் மேம்பொருளை அந்யாபதேசம் எனப்பெயரிட்டிருக் கின்றனர். திருப்பாவை வைணவ ஸத்ஸம்பிரதாயத்திற்கு வழி காட்டி நூலாக அமைந்திருப்பதால் இன்றும் சாற்று முறையில் அனுஷ்டிக்கப்படுகிறது.

அழகிய சிங்கரின் கருந்து - திருப்பாவை அர்ச்சாவதார ஸேவையைப் பற்றி ஆண்டாள் சமாதி நிலையில் அத்தக் காலசம்ப வங்களை தேவகி வசுதேவர்களுக்கு ஸேவைஸாதித்தபடி செந் தமிழால் - தன்னையும் நம்மையும் ஆனந்தப்படுத்துகிறாள்.

நாம் இனித் திருப்பாவையை கவனிப்போம்

முதற்பாட்டு

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர்! போதுமினோ நேரிழையீர்!
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம்போல் முகத்தான்
நாராயணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்.

கருத்து:—

நாம் கண்ணபிரானைப் பதியாக அடைய விரும்புவதால்:மார்கழி என்னும் மாதத்திலே பூர்ண சந்திரனைப் பெற்றுள்ள இந்த சுபமான நாளில் நம்முடைய நோன்பைச்சேர்ந்து செய்ய நீராட்டத்திற்காக யமுனை நதிக்கரைக்குச் செல்வோம், வாருங்கள்'' என்று ஆண்டாள் தன் சகிகளாகவிருக்கும் ஆயர்பாடிச் சிறுமிகளைக் கூப்பிட்டு "புன லாடல்" செய்ய அழைக்கிறாள். போதுவீர் போதுமினோ - வருகிற

வர்கள் எல்லோரும் வரலாம்; கண்ணபிரான் நோன்பிற்கு விஷய மாக உள்ள பரதேவதை (அவன்) எப்படிப்பட்டவன் என்றும் - அவனை நோன்பு நூற்றுதலால், பலன் யாதுயென்றும் சொல்லப்பட் டிருக்கின்றன - கண்ணன் நந்த கோபனின் குமரன் - கொடுந் தொழிலன் நந்தகோபன சதா தன் பிள்ளைக்கு ஆபத்து வராமல் காப்பதற்கு கூர்மையான வேலைத்தாங்கிக் கொண்டு இந்த ஒரு காரி யத்திலேயே மனம் ஊன்றியிருப்பதால் - தயை தாக்ஷிண்யம் பாரா தவன்; அது மாத்திரமா- ஏர் ஆர்ந்தகண்ணி ,மிக்க அழகுள்ள முலைக்காம்புகளையும் கண்களையுடைய) யசோதையின் இளம் சிங்கம் இங்கு யசோதையின் பெருமை கோஷிக்கப்படுகிறது. "என்ன தவம் செய்தனளோ- நோன்பு நோற்றனளோ-" இந்தசிங்கக் குட்டிக் கண்ணனை மகனைப் பேறு பெற்றவள்; பெற்றவள் தேவகி ஆனால் வளர்ப்பவள் யசோதை- ஆக இம்மகனை- இப்படி யசோதை மகன் எனக்கூறலாமோவெனில், ஆம், திருவினையில்லாத தேவகி- பெற்றாள் வாஸ்தவம். வளர்த்த தாய்க்கு அல்லவோ பெரும்பாக்கி யம் கிட்டியது- பெற்ற தாய்க்கு கிடைக்கவில்லையே அத்தகைய பாக் யம்! அத்தகைய பாக்யம் யாது? தவிழ்ந்தெழுந்து தளர்ந்ததோர் நடையைக் கண்டவள்; வடிவுகொள் அஞ்சனத்தினால் எழுது செம் மலர்க்கண் மருவிமேல் இனிது ஒன்றினை (வஸ்துவை)- நோக்கி- சேஅடிமலர் சிறுகருந்தாள் முடக்கி, செம்சிறுவிரல் அனைத்தும் அடக்கி ஆர அங்கையோடு அணைந்து பொலியும் நீர்முகில் குழவி போல (ஓர்) ஆனை கிடந்த கிடக்கையைக்- கண்டவள் ரசித்தவள் யசோதை! கண் அழகுள்ளவள்-முலைக்காம்பின் அழகு சொட்டியது. முலைகொடுத்து அன்பை ஊட்டினவள் யசோதைதானே! ஆனால் கவிக்கு மனம் வராமல் இளஞ்சிங்கம் என்று க்ஷத்திரியஸ்திரிகள் சொல்லும் வார்த்தையை-யசோதையின் இளஞ்சிங்கம் என்றனளே. கம்ஸனுக்கு பிரதிகூலமாய்-வசுதேவருக்கு மிக்கஅடங்கியபிள்ளையாய் ரோஹிணி பலராமாதிகளைக் காத்துவந்த நந்தகோபன்-மமபக்தேஷு ப்ரீதிரம்யதிகோபவேத்-என்கிறபடி-வசுதேவரைக் காட்டிலும்நந்தன் யசோதையிடம்எம்பெருமானின்கடாக்ஷம் அதிகமாயிற்றேஎனலாம். எங்கனமெனில் கண்ணன் புழுதி படிந்த திருமேனியுடன் ஓடிவந்து தன்வண்ணசெஞ்சிறு கைவிரலனைத்தும் யசோதைசாப்பிடும்போது அவளது மார்வில் மன்னி- பின்பு- அவள் பார்க்கும்போது தன் கை விரல்கள அனைத்தும் இலையில் வைத்து- வாரிவாய் கொண்டு சாப்பிடு வாளும்- அந்த அடிசிலின் எச்சிலை யசோதைதானே உண்ணபாக்யம் பெற்றவளானாள்- தேவகிக்கு இல்லையே! கண்ணன் வாயிலே கோம ளமான யசோதையின் கொங்கை மன்னிக்கிடக்க அந்தச்சிறுவன் ஒருகையால் ஒருமுலைமுகம் நெருடா, வாயிலே முலையிருக்க இடை இடை மழலை மெல் நகை அருள்கொண்டு எழில் கொள்

வகை தன் திருக்கண் இணைகளால்யசோதையின்முகத்தையல்லவோ கடாக்ஷித்தான். ஆகவே திருப்பவளத்தை நெளிப்பதும்- அவன் (யசோதைக்கு) அஞ்சி அவள் கால்களைக் கட்டித்தொழுதும், (நம்மாழ்வார், இதுகண்டு அல்லவோ ஆறுமாதம் மூச்சுபேச்சின்றி கிடந்தனரே) அந்தக் காட்சியைக் கண்ட யசோதை "தொல்லை இன்பத்து இறுதிகண்டாளே." தேவகியோ "கடைப்பட்டேன் தாயார் வர்க்கங்களில் கடைசியாயினேன். வெறிதே முலைசுமந்து— தஞ்சம் ஏல் ஒன்றும் இலேன்- உய்ந்திருந்தேன் (இதுவரை பிழைத்துக்கொண்டிருக்கிறேன்) நல்லதாயை பெற்றாயே-கண்ணா-இது உனக்குத் தக்கது- என்று சொல்லும்படி-யசோதை இளஞ்சிங்கம் என விளங்கினானன்றோ!

அந்த சிறுமதலை-சாதாரண மானிடக்குழவியா இல்லைஅவாப்த ஸமஸ்தகாமனான பரபிரும்மமே- குறள் உருவாய்-தேவகிவயிற்றில் அவதரித்து- யசோதையின் மடியில் வளர்ந்ததே. நாராயணனே- என்கிறதில் ஏகாரம் பிரிநிலை பொருளதாய்- பிரிநிலை- அவதாரணம் அடியார்களுக்குக் காரியம் செய்யுமிடத்து சாதனம் ஒன்றையும் அபேக்ஷியாமல்- தலைக்கட்டுபவன்- அவன் நமக்கு ரக்ஷகன் என்பதாம். அத்யமே ஸபலம் ஜந்ம ஸுப்ரபாதசமேநிசா- அக்ரூரன் கம்ஸனால் ஆகிஞையிடப்பட்டவனாக- "கோகுலத்திற்குச் செல்லவேண்டும்- இந்த இருபாலகர்களை மதுரைக்கு அழைத்து நீ வரவேண்டும்"-என்று சொல்லப்பட்டபோது-அக்ரூரனின் மனத்தில் "இதுவல்லவோ எனது 'பாக்கியம்' என்று ஓடிய எண்ணமே இந்த ஆண்டாளுக்கும் (ஆய்ப்பாடி சிறுமிகளுக்கும்) தோன்றியதாம்- இங்ஙனே நல்விடிவு நமக்கும் உண்டாகப் பெறுவதே -என்றான் அக்ரூரன். அதேபோல மார்கழி மாதத்தை கொண்டாடி- மதி நிறைந்த நன்னாளில்- இவர்களுக்குள்ளத் த்வரையை - ஆசையை-வெள்ளமென்று சொல்வதா- பிராப்யருசியைப் பற்றிப்புகழ்வதா?

கிருஷ்ண விரஹத்தால் துடிக்கும் தாபம் ஆறும்படி குளிர்ந்த நீரில், குளிர்ந்த சிறுகாலையில் குளிக்க- சுனையாடல் செய்ய-தங்கள் பிராப்யத்தைச் சொல்வதாம். அடையவேண்டிய இடத்தைச் சொல்லி, தோழிகளை அழைத்தாள் ஆண்டாள். சரி,ஆண்டாளுக்கு கண்ணன் வேண்டும்- மற்ற கன்னிகைகளுக்கும், வேண்டுமோ- பகவானிடம் அபிமுகமுள்ளவர்களைத்தானே தன்னுடன் கூட்டிப் போகணும். ஆகவே இஷ்டமிருந்தால் வாருங்கள்- போதுவீர் போதியினோ வரலாம்-

இங்கு சீர்மல்கும் ஆய்ப்பாடி சிறுமிகளாச்சுதே- ஒன்றும்

அவர்களுக்குத் தெரியாதா? பிராப்ய ருசியின் கனம் அதாவது கிருஷ்ணனுடையபெருமை கதிர்மதியம் போல் முகத்தான் சசீசூரிய நேத்ரம் கொண்ட வேங்கடவன்; தாஸர்களை அருள் நோக்கி செய்பவனும்; எதிரிகளை கடுமையாக தபிப்பவனும் அன்றோ அத்தகைய நாராயணனே-நமக்கே பறை தருவான். ஆகவே இந்த சிறுமிகள் ஆண்டாளைப்போலபெருங்காதல்கொண்டவர்கள்அன்றோ இந்த் பராத்பரனுகிற பெருமாளும்- அவர்கள் சிரிப்பதையும்- கேலி செய்வதையும்- நாண் நகையோடு- கண்டு அனுபவிக்கவித் தமாக விருக்க, ஒரு ஜடவஸ்துவைப் போலத்தன்னை ஆக்கிக் கொண்டு- அவர்களின் நியாம்யத்திற்கு (கட்டளைக்கு) ஏங்கி நிற்கும் நாராயணன் ஆனும். சௌ லப்யத்தின் எல்லை நிலம் ஆதலால் நீங்கள் செல்வசிறுமீர்காள் லஷ்மிஸம்பந்நர்- அவர் களுடைய ஜஸ்வரியம் "கிருஷ்ணன்" என்கிற சிறு குழந்தைதானே. துல்ய சீல வயவ்ருத்தர்கள்- இடக்கையும் வலக்கையும் அறியாத கோபால கன்னிகைகள்- இவனுடைய அங்கீ கரித்தலால்- அவர்கள் மேன்மையுற்றனரே; உத்தவர்- நாரத வ்யாஸாதிகள் போன்ற மகான்கள்- இவர்கள் நடமாடிய பிருந்தா வனத்திலே, ஒரு செடி கொடியாக நாம் பிறக்கமாட்டோமா?" என்று ஏங்கினவர்களாயிற்றே- இந்த மகான்கள். இதற்குக் காரணம்- கோவிந்தனுக் கல்லால் நாம் வாழோம்."அன்று காளியன் மடுவில் கண்ணன் குதித்துவிட்டான்" என்று செய்தி கேட்டளவில் நாம் எதற்காக வாழவேண்டும்? நாமும் ஏன் காளிங்கமடுவில் குதித்து விடக்கூடாது? ரிஷபம் இல்லாமல் பசுக்களுக்கு ஏது வாழ்வு? சூரியன் இல்லாவிடில் தினம்யேற்படுமா? ஆகவே ராமனையோ-கண்ணனையோ கண்டவர்கள் வித்யைமய மானவர்கள் கர்மமயமானவர்களல்ல- அந்த வித்யையினால்- கர்மங்களால் யேற்பட்ட ஞானத்தாலே, நித்யாநித்யவஸ்து விவேகத்தால், எல்லாப்பொருள்களுக்கும் மாறுதல் உண்டு, இந்த பகவான் ஒரு வனுக்கே மாறுதல் இல்லை. சாஸ்வதம், ஸநாதனம்- என்று வித்வான்கள் அறிகிறுர்கள். இதைத்தானே இந்த ஆண்டாளும்- கோபிகைகளும் நமக்கு உபதேசித்து- அவர்கள் பட்ட இன்பதுன் பங்களை நாம் பாடுவதால்- திருப்பாவையை தினமும் அனுஸந் திப்பதால் சகல புருஷார்த்தங்களும் நமக்குக்கைக்கூடும்-பாபபுண் யங்கள் கழிந்து- வைகுண்டபதத்தை அடைவிடுக்கும். அங்கு "நமக்கும் உனக்குமிருக்கும் உறவு ஒழிக்க ஒழியாது" எங்கள் பிழைகளை பொறுத்திடுவீர்- இம்மையிலும் மறுமையிலும் உமக்கே- உன்தனோடு (அதாவது ஸாலோக, ஸாரூப்ய ஸாயுஜ்ய ஸாமீப்ய இத்யாதிகளால்) உற்றோமே ஆவோம்." ஆள் செய்வோம.- பசுக்களை மேய்க்கும் குலத்தில் நீயும் நாங்களும்

பிறந்தோம். பிறந்ததிலிருந்து உம்மை மறவோம். நீரும் எங்கள் குற்றங்களை மறந்து எங்கள் அடிமைத்தனத்தை அங்கீகரித்திடுவீர்:- உமது நியமனப்படி நாங்கள் செய்வதைக் கொள்ளாமல் (மனதில் நினைக்காமல், போகாது-எங்களுடைய மற்றைய (உன்னைத்தவிர) காமங்களை மாற்றி - உமக்கே அனுகூலர்களாக வாழக்கிடவோம். அதனால் நாங்கள் செல்வத் திருமாலின் திருவருள் பெற்று இன்புறுவோம்.

பிரும்மசூத்ரம் நான்காம் அத்யாய இறுதியில் சொல்லப்பட்ட விகாராவர்த்திச் ததாஹிஸ்திதிமாஹ பிரும்மத்தின் அனவதிகாதிசய ஆனந்தந்தை- முக்தாத்மாவும் பயமில்லாதவனாக அனுபவிக்கிறவனுக- அதாவது எந்த எந்த தேவதைகள் எந்த எந்த உலகங்களில் அதிகாரிகளாக இருக்கிறார்களோ-அந்த உலகங்களிலுள்ள போகங்களை ஜகத் வியாபாரம் நீங்கலாக-அனுபவிக்கிறன்- என்று சொல்லப்பட்டிருக்கிறது. பிரும்மத்திற்கு அனுகூலனாகவே வாழ்கிறான். ஆகவே இங்கு ஆச்ரயணீயனின் போக்யம் மேன்மை முத்தாத்மாவின் அனுபவம்வரை சொல்லப்பட்டதாகும்.

பறை -நோன்புக்கு சாதனமான ஒரு வாத்திய விசேஷம் - "சிற்றஞ்சிறுகாலே" எனும் பாட்டில்–பறை என்பதில் இப்போது எடுத்துக்கொண்டு போகும்பறை என்றபடி-கைங்கர்யம் செய்வதில் விருப்பம் எனக்கொள்ளலாம். அனன்யார்ஹ சேஷத்வம்- அனன்ய் சேஷத்வம் -கைங்கர்யம் இத்யாதி பேசப்படும். எம்பாவாய்–தோழி பெண்ணே - ஏல்ஓர்- இதை ஏற்றுக்கொள் அறிந்துக்கொள்.

மொத்த அர்த்தம்-மார்கழி நீராட்டமென்ற நோன்பை நோற்க வேண்டுமென்று திருவாய்பாடியில் யேற்பட்டிருந்த துர்பிக்ஷத்தைத் தீர்க்க கண்ணனைப் பதியாக அடைய இடையர்களால் தூண்டப்பட்ட ஆய்ச்சிறுமிகளைப் பார்த்த- ஆண்டாள் போல தலைவியாய் ஒருத்தி, மற்றவர்களை நியமிக்கின்றாள்.

(மார்கழித்திங்கள்) அழகிய சிங்கரின் கருத்து- திருப்பாவை-கீதையின் ஸாரம் என்றுர். எங்கனமெனில் ஒருத்தி மகனாகப் பிறந்து-ஒருத்தி மகனுக வளருபவன் நாராயணனே என்று ஆண்டாள் அறுதியிடுகிருள் அதன் காரணம்-எங்கும் நிறைந்த தேஜஸ் – பரம்ஜ்யோதி – பிரும்மானைப் படைத்தவன் - தாமரைக் கண்கள், சங்கு சக்கரம் வனமாலை மஹாலக்ஷ்மியுடன் கூடிநித்ய ஸ்ரீயுடன் இருப்பவன், முமச்சோதியாய் உபய விபூதி நாதனாய் - அஞ்சனபுஞ்சத்துச்யாமநிறத்தவன் - வாயைத் திறந்து அம்மாவுக்கு விஸ்வ ரூபம் காட்டினான். கீதையில் திருவாய்

மலர்ந்தருளினானே-மந் மநாபவ-மத் பக்தோ-மத்யாஜி மாம்நமஸ் குரு-அத்தகைய பரதத்வமாக விளங்குபவன். இத்தகைய பகவதனுப வம் அர்ச்சையில் கிடைப்பது சௌலப்யத்தின் காஷ்டையாகும். பறை தருவான்- மோக்ஷப்ரதன் (கொடுப்பவன்) ஆராதிக்க சக்தியில்லாவிடில்- சரணம்வ்ரஜ- பரந்நியாஸம் செய்து கொள்.

பாட்டின் மொத்த அர்த்தம்- நீங்கள்யாவரும் நீராடவாருங்கள்-யமுனையில் ஸ்நானம் செய்த பின்பு- பகவத் ஆராதனம் செய்து வைகுண்ட லோகத்தை இங்கேயே அனுபவிக்கலாம் எனக்கருத்துப் பட ஆண்டாள் தோழிகளை அழைக்கிறாள். புருஷன்-புந்நாம-பகவான்ஹரி :-ஸ்திரிபிராயம் இந்த ஜகத்- மற்றவர்கள் ஸ்திரிகளைப் போலப் பக்தி செய்யுங்கள்—புருஷனுகிற பகவான் ஹரியிடம்.

ஸ்ரீமத் ஆண்டவன் அருளிச் செய்தது :—

(1) நாராயணன்—நாரங்களின் (நித்யவஸ்துக்களின்) திரளின் கூட்டம் - தத்வங்களின் ஸமஷ்டி - அயனம் என்ருல்யிருப்பிடம். ஜன்மா த்யஸ்ய யத: எதிலிருந்து எல்லாம் பிறந்து வாழ்ந்து ஒடுங்கு கின்றதோ- அது நாராயணன். நந்தகோபன் ஆசாரியராயும் யசோ தையை திருமந்திரத்துக்கு அறிகுறியாகவும்-பின்னுல் வரும்பாட்டுக் களில் சொல்லப்படப் போவதால்-ஸ்ரீமந்நாராயணனுடைய ஸ்வரூப ஞானம் ஆசாரியனுல் காக்கப்பட்டு-திருமந்திரத்தில் விளங்குகிறது. ஞானபக்தி வைராக்யங்களையே தமது ஆபரணாமகக் கொண்ட பாகவதச்ரேஷ்டர்கள்-வாருங்கள் என்று அதிகாரிகளைக் கூப் பிடுதல் – காமாதிகாரிகளுக்கு சாதனமாயும் நிஷ்காம்யர்களுக்கு நித்யமாயும் பிரபன்னர்களுக்கு கைங்கரியமாகவிருக்கும் இந் நோன்பு, நோன்பு, என்கிற முகாந்திரத்தை மேலிட்டுக் கொண்டு வேதசாரமானதும வேதசம் மதமான பிரபத்தி வழியை உபதேசிக் கிருள் 'நம்மையாண்டாள்' சேஷபூதர்களான நாம் உஜ்ஜிவிக்க-அவள் நோன்பு நூற்ருள். அதனுல் ஆண்டாள். பெருமாளுக்கு ஆச்சரியமளித்தாள். அவளது உச்சிஷ்டம் (மாலை) பகவானுக்குப் போக்யமாகவிருந்தது.

திருப்பாவைக்கு அப்புறம் தான் எல்லாம் ஸேவிக்கப்படுகிறது-வேதம் ராமாயணம்-இத்யாதி; மொத்தம் 143 பாட்டுக்கள். இதனுல் வஸ்து வைலக்ஷண்யம் - விஷயவைலக்ஷண்யம்-சொல்லுகிறவளின் மேன்மை எல்லாம சொல்லப்பட்டது. கோதா ஸ்துதியில்தேசிகன் ஆண்டாளை உசத்திச் சொல்கிருர். பூமி பிராட்டியின் அவதாரம். சீர்மல்கும் ஆய்ப்பாடியில்-பகவானுடைய சௌலப்யத்தின் உச்ச நிலை சொல்லப்படுகிறது. அடிவாங்குவது, பயப்படுவது-கட்டுண் ணப்படுவது எல்லாம்-பரமபத வாழ்க்கையை பரிகசிப்பதாகும்.

கூர்வேல் கொடுந்தொழிலன் - மங்களாசாஸனம் ஆழ்வார்கள்

பண்ணுவது போல-ஸ்ரீ ஆண்டாளும் தன் பிதாவுக்குப் பண்ணினுள்.
2-ம் பாட்டு-வையத்து வாழ்வீர்காள் :

வையத்து வாழ்வீர்காள்! நாமும் நம்பாவைக்குச்
செய்யும் கிரிசைகள் கேளீரோ பாற்கடலுள்
பையத் துயின்ற பரமன் அடிபாடி
நெய்யுண்ணேம் பாலுண்ணேம் நாட்காலே நீராடி
மையிட்டுஎழுதோம் மலரிட்டு நாம்முடியோம்
செய்யாதன செய்யோம் தீக்குறளைச் சென்றோதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
உய்யுமாறு எண்ணி உகந்தேலோ ரெம்பாவாய்.

இதில்- நாம் எதைப்பற்ற வேண்டும். -எதை விடவேண்டும் என்பதையும் ஆராதனைக்குத்தருந்த அதிகாரியின் லக்ஷணங்களை யும்சொல்லும் பாட்டு- மூவாயிரப்படியில்- அல்பமாயும் அஸ்திரமு மாய் ஹேய(நீச) முமாயிருக்கிற விஷயங்களைத்தள்ளி-ஸமஸ்த கல்யாண குணாத்மகனான பரமாத்மாவைப் பற்றவேண்டும். மாம்நமஸ்குரு- என்பதின் நோக்கம் இதுதான். முதல் பாட்டில் ப்ராப்யன்- நாரயணன். இதில் அடைபவனின் (ப்ராபக) ஸ்வரூபத் தையும், அதிகாரி லக்ஷணங்களையும் சொல்லிற்று. அதாவது அதிகாரிக்கு ஏற்படும் ஸ்வபாவங்கள்-

வையத்து வாழ்வீர்கள்-பரமாத்மா திருவாய்ப்பாடியில் அவதரித் திருக்கிற சமயம்-சமகாலத்திலே அவனோடு பழகுகிறவர்களான படியால்-ஆயச்சியர்களான நீங்கள்தான் பாக்யசாலிகள்-வாழப் பிறந்தவர்கள். இதற்கு பரமபதமும் ஸத்ருசமன்று. அங்கு மேன்மைகாணலாம். இங்கு ஸௌலப்யாதிவால்லப்யம்-மேலானவன் தாழ்ந்தவனிடம் பழகும் நீர்மை காணலாம். அங்கு போக்தாக்கள் விகாஸமான ஞானபரிபக்குவமுள்ளவர்கள். இங்கு (அவித்யை கர்மாக்களால் குறைக்கப்பட்ட) ஸங்குசமடைந்த ஞானமுள்ள வர்கள்—அதனுல் தயை இங்கு நீதியாகச் செலுத்தப்படும். வடமதுரை—அயோத்தியைப்போல வில்லாமல்-ப்ருந்தாவனக்காடு, தண்டகாரண்யம் போலிருந்தாலும் அயோத்தியில் பிறக்கப்பெற்ற பகவான்-வலுவில்தானே அரண்யத்தை கடந்து தன்பக்தர்களிடம் போகும் காட்சி-வைகுண்டத்திலிருந்து அயோத்திக்கும்-அயோத்தி யிலிருந்து-தண்டகவனத்திற்கும் சென்றதுபோல்-இங்கு வடமதுரை யிலிருந்து கோகுலம் வந்திருக்கும் கண்ணன்- தனால் இடம் பெரிதல்ல. வஸ்துதான் பெரிது என்று காட்டப்பட்டது.

இதனால் வையத்துள்ளாரகளை-விண்ணுளாரிலும் சீரியரே-ஏன்?—யசோதையும் (ஆண்டாளும்) தொல் இன்பத்தின் இறுதி கண்டாளே-மருபூமியில் தண்ணீருக்குப் பதிலாக-அம்ருதம் கிடைக்கப் பெற்றதே-யசோதை அனுபவித்த இன்பங்களை ஆண்டாளும் அனுபவிக்கப் பெற்றாள். அர்ச்சையின் இன்பங்களை நாமும் பெறுவோம்-நீங்களும் பெறுங்கள்—அதனால் வையத்து வாழ்வீர்காள். எங்கு கிருஷ்ணன் வசிக்கிறானோ-அதுதானே வைகுண்டம். அதுமாத்திரமா-அவர்கள் அனுபவிப்பதை-ரஸமாக்கிப் பிறர்களுக்குத் தருகிறார்களே-பகவத் நீர்மை ஒருபக்கம்-பாகவதநீர்மை மற்றொருபக்கம். ஸ்நேகம் முதலில் உண்டாகி-பக்தியாக மலர்ந்து-பரபக்தி, பரஞான பரமபக்தி உண்டாவதற்கு-நாமும் அத்தலையாலே பேறு என்று இருக்கிற நாமும். கிருஷ்ணனாலே பேறு-ருசி இவர்களுக்கும் நமக்கும் கிடைக்கிறதல்லவா? அதனால் நாமும் (சம்சாரத்திலிருப்பவர்களான நாமும்) பேறு பெறுவோம் என்பதே.

சரி—நம்பாவைக்கு—நம்முடைய நோன்புக்கு-நீ என்ன செய்கிறாய்?— நாங்கள் என்ன செய்யவேண்டும்—என்று தோழிகள் ஆண்டாளைக் கேட்க- "நாமெல்லாம் சேர்ந்து செய்யவேண்டிய-செய்யும் கிரிசைகள்—பண்ணக்கூடிய காரியங்கள்—யாது?" என்று வினவ; அதாவது ஒரு சேதனன் உய்யவேண்டுமானால் பகவத் குணங்களில் இழிந்து-ஆசாரியன் மூலம் அனுபவித்து அவைகளை அனுஸந்திக்கவேண்டும்—பிரும்மசூத்ரத்தில்-ஆயுள் பரியந்தம்-வித்யை அனுஷ்டிக்கப்படவேணடும் என்று சொல்லப்பட்டிருப்பதால்; பத்தும் பத்தாகச் செய்திடவேணும்-மடல் போலக் காட்டிவிடுவதல்ல. கேளீரோ-ச்ரவணம்தானே முதலில் யேற்படுவது, பின்புதான் மனனம்-நிதித்தியாஸம். நாராயணனே நமக்குப்பறை தருவான் என்பதாலே—அவனுக்கு கந்த கிரியைகளைச் செய்தால் தானே நலம்—பிராப்யபிராபகம் (அடைய வேண்டியது—புருஷார்த்தம்—அடைவிப்பது அவனேயாதலால்-அவனைத் திருப்தி செய்துவைப்பது யாது? ) உபாஸனைக்கு-அஸக்குத் ஆவிருத்தி செய்யவேண்டும்· திரும்பத்திரும்ப சித்திக்கிறவரை-செய்தல் வேண்டும் பலிக்கும் வரை வித்யை அனுஷ்டிக்கப்படவேண்டும். பிறப்பிற்குக் காரணமாகிற கர்மங்களின் மோக்ஷமே பிரும்மானுபவம் யேற்படக் காரணம். பாபம்போல புண்யமும் நசிக்கவேண்டும் இவைகள் தடங்கலான படியால் உபாஸனை அவைகளை நீக்குவதற்காக உபயோகப்படுகின்றது. இடைவிடாது பிரும்மத்தை நினைக்கவேண்டும். சமதமாதி குணங்கள் வேண்டும். ஆஸ்ரமதர்மங்கள் செய்யப்படவேண்டும். உபாஸிப்பவன் தன் சரீரத்திற்கு தான் ஆத்மாவாகவிருத்தல் போல-அந்த ஆத்மாவும் பகவானுக்கு சரீரமாகவிருக்கிறது—

என்று ர்ராமானுஜர் கருதுவதால்-சரீர ஆத்ம சம்பந்தம் என்று கொண்டு தன் ஆத்மசரீர பரமாத்மாவை உபாஸிக்கவேண்டும். சங்கரரின் கருத்து ஸ்வரூப ஐக்யமே-பிரும்மமே ஜீவனாக உபாதியினால் ஆவது அந்த உபாதி நீங்கவே ஜீவன் பிரும்மமாகி விடுகிறான். பிரும்ம வேத பிரும்மைபவதி எவன் பிரும்மத்தை அறிகிறானோ - அவன் பிரும்மமாகிறான். (ஸ்வே-உப-2-8) ஞாத்வா தேவ முச்யதே ஸர்வ பாசை; பிரும்மத்தை அறிந்த பின்பு-பாபங்களிலிருந்தும் புண்யங்களிலி ருந்தும் விடுபடுகிறான். விஷ்ணு புராணத்தில்-அவனை உபாஸித் தலுக்கு-ஆறு அங்கங்கள் சொல்லப்படுகின்றன-யோகம், யம (தன்னடக்கம்) நியமம் (விரதம்) ஆஸனம் (உட்கார்ந்தே செய்ய வேண்டும்), பிராணாயாமம் (மூச்சு அடக்குதல்) பிரத்யாகாரம் (விஷயங்களிலிருந்து நிவிருத்தி-வைராக்யம்) தாரணம்; ஸமாதி ஒரே மாதிரி ஆகி-அதிலேயே மூழ்கி-இழிதல். வஸ்துவும்-தியானிப் பவனும் ஒரே மாதிரியாதல். ஆகவே வேதனம் (உபாஸனம்) திரும்பச் திரும்பச் செய்யவேண்டியது, என்பது சாஸ்திர அர்த்தம்) நஸ்மிருதி மாத்திரம் ஒருதடவை ஸ்மரித்தல் அல்ல, நெல்குத்துவது உமி நீங்கும்வரை-அரிசிக்காக. அதுபோல் உபாஸனை பலிக்கும் வரை, அதாவது சாக்ஷாத்காரம் யேற்படும் வரை-என அர்த்தம். இப்பேற்பட்டவனை பரமாத்மாவே வலிய வந்து தன்னுடைய லாபம் எனப்பொறுக்குகிறான். ஆசிரம தர்மங்களும் ஒழுங்காக நடைபெற வேண்டும். இந்த ஆத்மா விப்ருணுதே தநூா்ஸ்வாம் கடவல்லியில் யமைவைஷ - வ்ருணுதே தேந லப்ய: தஸ்யைஷ ஆத்மா ஸ்வாம். கருத்துடன் சொல்லப்பட்டது. பரமாத்மா தனக்கு வேண்டியவனை தானே பொறுக்கிக் கொள்கிறான். மௌனமும்-மனனமும் ஒன்றாகும் அதாவது-பகவத் ஸ்வரூபத்தை நினைப்பது. தத்பாவனுரூபம் பாவநாபிரகர்ஷம் என்பதாகும்.

அத்தகைய நாராயணனாகிற பரபிரும்மத்தை – எப்படிச் சொல்லக்கூடும்? என்றால்-பாற்கடலுள் பையத்துயின்ற–பரம பதத்தில் ஆர்த்தர்களை ரக்ஷிக்கும் பொருட்டு வைகுந்தத்திலிருந்து திருப்பாற்கடல் வந்தடைந்து—அங்கிருந்து வடமதுரை வந்து அவதாரம் செய்து—அங்கிருந்து கோகுலம் வந்து சேர்ந்தவனை—பையத்துயின்ற கள்ளநித்திரை -கொள்ளுபவன். பிருகுமகரிஷி தூங்குகின்றவனைப் போல நடிக்கும் அவனது மார்பை உதைத்த போது - எழுந்திருந்து அவருடைய கால்களைப் பிடித்து "நலிவு பெற்றதோ - சுவாமி மன்னிக்க வேண்டும்" என்று வேண்டிய சுத்த ஸத்வ திருவேங்கடவன்-ஆராலேயாருக்கு என்ன நலிவு வருகிறதோ-என்று அவகாஹிக்கிறவன். சாய்ந்தபடி-யோகநித்ரை செய்பவன்-தமோகுண நித்ரையல்ல. உலகவ்யாபார நன்மைகளை ஆராய யோகு செய்யும்—பரமன்—ஹேயகுணங்களில்

லாதவன் - ஸர்வ கல்யாண குணங்களுக்கு நிதி - உபயலிங் காதி-ஜகத்காரணன், ரக்ஷகன்-அப்படிப்பட்டவன் கிருஷ்ணனுக வந்துள்ளதால்-அவனைப்பாடி-அவனுக்காக நோன்பு நோற்க-ஏஷ நாராயணன்: ஸ்ரீமான் க்ஷீரார்ணவ நிகேதனஹ் நாகபர்யந்தமுத் ஸ்ருஜ்யஹ்யாகதோ-மதுராபுரீம்-என்னக்கடவதிறே.

(ஆடிப்பாடி-அகலகில் லேனிறையுமென்று) அலர் மேல் மங்கை உறைமார்பா-புகல்ஒன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந் தேனே-என்றும்; சரணமாகும் தனதாளடைந்தவர்க்கெல்லாம் மரணமானல் வைகுந்தம்கொடுக்கும் பிரான்-நம:- சப்தார்த் தத்தைச் சொல்லி-சிறிய உபாயமாகிற நமஸ்காரம் - பாடுதல் போன்ற கிரியைகளை வியாஜமாக வைத்து வெறிதேயருள் செய்வர் செய்வார் கட்கு கந்து யமேவைஷவ்ருணதே-தான் விஷயகரிக்க நினைந்தோர்க்குதந்தாமென்றுசெய்வார்க்கெனில்-வெறிதே-நிர்ஹேது கமாக அருள்என்றால் ஒரு ஹேது வேண்டாவோ? வேண்டாமோ-உகப்பாயிற்று ஹேது அவன் சங்கல்பித்தான். நான் இசைந்தேன் இவர் பெறுகிறர். சிறிய உபாயத்தை வ்யாஜமாகக் கொண்டு-பகவான் அருளுகிறன். நான் இசைந்தேன் என்பதே- (8-7-8) திருவாய் மொழி நம்மாழ்வார்; எனபக்கத்திலுள்ள அபிநிவேசத் தாலே (ப்ரீதியாலே)-தன்னைத் தானே தந்தான்-அவன் எனக்கு மற்றைய புருஷார்த்தங்களைக்கொடுப்பானகில்-மிக மிக உயர்ந்த புருஷார்த்தமாகிற தன்னை யாருக்குக் கொடுப்பான்?

> பாடி நெய்யுண்ணேம்-பாலுண்ணேம்-
> போக்யங்களில் ஆசையில்லாமல் - நிராகாரமாக
> உபவாஸபுத்தியுடனே-நமோ நாராயண என்று
> சொல்லாத நாள் உன் பாதம் நண்ணு நாள்-அவை
> பட்டினி நாளே என்றும் :

நாட்காலே நீராடி -கோபிகை நீராடும் சமயம்-''அவன்'' ஒரு வேளை குளிக்கும் போது வந்துவிட்டால்-அப்புறம் குளிப்பு ஏது? அதற் காகப் பயந்து-விடிவதற்கு முன்பே குளித்து விடுவோம்-எதில் ஸ்வர க்ஷணம் என்பது யேற்படுமோ, அப்போது பரமாத்மாவுக்கு அவத்ய மன்றோ-கெடுதலன்றோ? தங்கள் த்வரையில் (அவசரத்திலே-ஆசையின் தீவிரத்திலே மூழ்கி) பகவான் தலையில் உபாய பாரத்தை வைத்து அழிக்கிறர்கள். முறைகேடாக ஆண்டானை சேஷியாகவும், தான் சேஷ பூதனுகவும் பரிமாறுகை-இங்கு சொல் லப்பட்டதாகும்.

ஓதிநாமங் குளித்துச்-சிதன்னாலொளிமா மலயர் பாதம் நாளும் பணிவோம்-நமக்கே நலமாதலில்-ஐயமும்-கொடையையும் - ஆந்

தன்னையும் கேட்கும் பொருளை கொடுப்பது; தீக்குறள் பிறரைக் கோட்ச்சொல்லுதல்–செய்யமாட்டோம். கைகாட்டி–அப்பளித்துச் செய்து-மையிட்டெழுதோம்-முதலில்மை கண்ணுள் ஆனபடியால், இனி அஞ்சனமெடுதல் மங்களார்த்தமாம். இதைச் செய்யவேண்டா மோ? அவனுக்கு அவகாசப்ரதானம் (சந்தர்ப்பம் கொடுப்பதற்கு)–பண்ணக்கடவோமல்லோம் நாமே செய்துவிடுவோம். உய்யும் ஆறு வழி என்பது இது தான் என்று உவந்து (செய்ய); மன நிம்மதியுடன் இருப்போம் என்கிறுர்கள். சேஷிக்கு உகப்பில்லாத போளுல் சேஷத்வமில்லை. அவன் ஒன்றும் வேண்டாத நிரபேக்ஷனு கையாலே-ஏதாவது கேட்பான் என்பதற்கிடமில்லை. இவள் ஸ்வரூப லாபத்திற்காகவே-அவன் ஸாபேக்ஷரைப் போல-இவர்களை கிஞ்சித் காரம் கொள்ளக் கடவன். ஏதாவதை வ்யாஜமாக வைத்து ஸ்வீகரிப்பவன். அங்கீகாரம் செய்பவன். மலரிட்டு நாம் முடியோம்-“குழல் சுரும்பார் கோதையிறே” - அப்போதலர்ந்த செவ்விப் பூவினின்றும் வண்டுகள் கால்வாங்கி இவள் குழலில் புகுமே-அதனுல் திருக்குழலிற் செவ்வியிருப்பது. இவள் மாலை சூடாதே போனுல்-அவன் வந்து மாலை சூட்டுவான், அலங்கரிப்பான். அதுக்கு அவனுக்கு அவகாசம் வையோம் என்கை, நாம் முடியோம்-அவன் தானே இவர்களுக்கு வந்து சூட்டல் செய்ய வேண்டும் என்பதே நோக்கமாம். செய்யாதெனச் செய் யோம் எங்கள் குலத்தவர்கள் பூர்வமாகச் செய்யப்பட்ட தர்மங் களையும் கர்மங்களையும் விஹித கர்மங்களைச் செய்வோம். அவைகள் பகவானுக்கு உகப்பு யேற்படுவதே ஒழிய - புதியதாகச் செய்து-அவனுடைய நிக்ரஹத்துக்குப் பாத்திரமாக மாட்டோம். இவ்விதம் பெண்கள் தங்களுக்குள்ளே சொல்லிக் கொண்டும் — பிறரை எழுப்பும் போது சொல்லிக் கொண்டும் — நாம் எல்லோரும் கூடி யல்லது கிருஷ்ணனைக் கிட்டக் கடவோம்.

தீக்குறளை சென்றோதோம்-எங்கள் காரியத்தைச் சாதிப்பதற்கு பொய் போன்ற தீய வழிகளை நாம் கடைப்பற்ற மாட்டோம். பிறர் களுக்கு தீங்கு நேறுமாறு பொய் சொல்ல மாட்டோம். பின்புறணி-மறைவிலே இகழ்வது. ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி யோக்யமான வ்யக்திகளுக்கு தானம் செய்தல். இங்கே தானம் செய்யப்படுவது- கிருஷ்ணனுபவம் - பண்ணுவோம் என்பார்க்கு-அவனையனுபவிப்பதும் இவையெல்லாம் செய்தாலும் - ஒன்றும் செய்யப் பெற்றிலோம். கிருஷ்ணர்ப்பணம்- யத்கரோஷி யதஸ்நாஸி மதர்ப்பணம் என்றிருக்கையும். பல போக்தா அவனே;

பிச்சை-ஆத்மஞானம் ஆந்தனையும் ஆகும்வரையிலும, சக்தி யிருக்கும்வரை கொடுப்பது கைகாட்டி-நம்மையாசிக்க வந்தவர்

களுக்கு நம்மையால் அளித்து பிறகு கொடுப்பவர்களையும் கை காட்டி உய்யும் ஆறு (வகையை) எண்ணி உகந்து இருப்போம். சிந்தித்து களித்திருப்போம்.

அதாவது சாஸ்திரத்திலே விதித்தபடிக்கும் குலத்தினரால் அனுஷ்டித்து வந்ததும்-ப்ரீதபூர்வமாக உனக்கு திருப்தியேற்படும் வரை செய்ய வேண்டியதைச் - செய்வோம் எல்லாம் பகவத்சம் பந்தம் நிறைந்த கிரிசைகளையும் செய்வோம்.

பரமன் என்பதற்கு ஜகத்காரணத்வம் – மோக்ஷ ப்ரதத்வம் முக்தபோக்யத்வம்.

உட்பொருள் - வையத்துவாழ்வீர்காள் பகவானை அறிவதே ஞானம் மற்றதெருள் மருளே. அதாவது ஏகாந் தியின் வாழ்க்கை. அவனடிபாடி-த்வய மந்திரத்தை அநுஸந்திப்பது நெய்யுண்ணோம் – நிஷித்தங்களை விலக்கி–பாலுண்ணோம்–தீக் குறளை செய்யோம் உனக்கு மலரிட்டு, ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் முடியோம்–ஐயமாவது பகவத்வைபவம்பிச்சையாவது பாகவதவைபவம் இரண்டும் வேண்டும். கைகாட்டி – கிரஹஸ்த தர்மங்களாகிற பிச்சை இடுகையை யதாசக்தி செய்து, உகந்து செய்வோம் என்பதாம். இவை எல்லாம் பிரபன்ன அதிகாரியின் விசேஷமாம். பரமபுருஷார்த்தம்–மோக்ஷம் அதிலேயே மனம் ஊன்றி நிற்பதாம். வர்ணாஸ்ரம தர்மங்களைச் செய்தல் அனுஷ் டிக்கக்கடவன. ஐஸ்வர்யகாமிகளில்லை, அது போல கைவல்யமும் வேண்டாம்.

அழகிய சிங்கர் :– இங்கு ஆராதனைக்குத் தகுந்த அதிகாரியின் லக்ஷணங்களைச் சொல்கிறுள். அர்ச்சை நிறைந்த பூலோகம், யசோதையின் இளம் சிங்கம்—ஸ்வரூப கிருஷ்ண அனுராகம், பார் கடலுள் பரமனடி பாடி—யோகு நித்ரை செய்பவன்—ரக்ஷணை சிந்தனையுள்ளவன்.

மையிட்டெழுதோம் இத்யாதி– யத்கரோஷி "மதர்ப்பணம்— கிருஷ்ணர்ப்பணம். ஐயமும் பிச்சையும் கைகாட்டி—தர்மிஷ் டர்களைக் காட்டி.

ஸ்ரீமத் ஆண்டவன் அருளிச் செய்தது:- நோன்பு நூற்கும் விதம், நியமம் சொல்லப்படுகிறது. அதாவது, செய்யத்தகாததை விலக்கி, பிறர் நோவும்படி பேசாமல், ஐயமும் பிச்சையும் நாம் கொடுத்தோம் என்கிற அஹங்காரமின்றி, நாம் உய்யும் வகையை எண்ணி மகிழ்தல். ஆகவே அவதார காலத்தில் பிறப்பு 'எடுத்தால்- ஒரு வாய்ப்பு; அதனுல் வையத்து வாழ்வீர்காள்:' ஐயம் வேறு, 'பிச்சை' வேறு. ஐயம் தகுதியானவர்களுக்கு (பிரும்மசாரி, சந்யாஸி) வேண்டிய அளவு கொடுப்பது.

கீட்டுவோருள் இறைவனின் நிஜஸ்வரூப, ரூபகுண, விஷய ஞானம்; பிச்சை-ஆத்ம ஸ்வரூப ஞானம் என்று பெரியவாச்சான் பிள்ளை அருளியுள்ளார். ஐயம்-இறைவனின் வைபவம், பிச்சை-அடியார் களின் வைபவம். இவற்றை நாம் பிறர்களுக்கு உபதேசிப்பது. நாராயணன்-இங்கு பரத்வ நிலை. பாற்கடலில் யோகு நித்திரை செய்வது - ஜகத்ரக்ஷணத்தை சிந்தைசெய்தல். இறைவனிடம் ஈடுபாடுள்ள அடியார்களை அழைத்து, புருஷார்த்தத்தையுடைய சான்றோர்களால் விதிக்கப்பட்ட பிரவிருத்தி நிவிருத்திதர்மங்களை உபதேசித்தல் வேண்டும். உபதேசம் பெற வேண்டும் ஆசார்யர் களிடமிருந்து,

> ஓங்கியுலகு அளந்த உத்தமன் பேர்பாடி
> நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்
> தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து
> ஓங்குபெருஞ் செந்நெலூடு கயல்உகள
> பூங்குவளைப்போதில் பொறிவண்டு கண்படுப்பத்
> தேங்காதே புக்கிருந்து சீர்த்தமுலைபற்றி
> வாங்கக்குடம் நிறைக்கும் வள்ளற் பெரும்பசுக்கள்
> நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய். 3

புருஷோத்தமனுடைய கீர்த்திகளை இசையுடன் பாடி. நமது விரதத்திற்கு என்று சங்கல்பித்து நீராடினால்-மழை நன்றாகப் பெய்து அதனால் செழிப்புற்ற பூமி நெற்பயிர்களுடன் விளங்க-உதாரமான பசுக்கள் பாலை அளவுக்கு மீறிப் பொழிய-சீர்த்த முலைபற்றி எடுத்துவாங்க-குடங்கள் நிறையப்பாலைத் தரும் என்பதாம்.

இந்தப்பாட்டில் (3-ம்பாட்டு) முக்கியமான சப்தம்-உத்தமன்-உத்-புகவான் (சா. உப்) அவனது அருளாலே சேதனர்கள் உத் ஆவர்கள்-ஜீவர்களாகிற பத்தன், முக்தன் நித்ய சூரிகளை விட மேலான புருஷோத்தமன், சுத்தஸத்வமுள்ளவன். த்வாவிமௌ புருஷௌலோகே க்ஷரச்சாக்ஷர, ஏவச-உத்தம: புருஷஸ்த்வந்ய:-பரமாத்மேத்யுதாஹ்ருத: (ஞானபலம் சக்தி ஐஸ்வர்யம் வீர்யம் தேஜஸ்-ஷட்குணங்கள் நிறம்பினவன்-வைஜயந்தியில்-பிரும்மா சிவனுக்கு உபதேசித்தார் - "இவன் தான் நமக்கும் பிதா-ரக்ஷகன் இவனைத்தான் நாம் வணங்கவேண்டுமென்று" (மஹா பாரதம்), ராமனாக அவதரித்த போது ஆந்ருசம்ஸ்யமனுக்ரோச: க்ஷமாஸத்யம் தம: சம: ராகவம்-சோபயந்தே ஷட்குணா புருஷோத் தம: ஆண்டாளின் அபிப்ராயத்திலே ஓங்கி உலகளந்தவனே உத்தமன். மற்றைய அவதாரங்களில் ஸாது பரித்ராணார்த்தம் அவதரித்தவன். திருவிக்ரம அவதாரத்தில் பிரபஞ்சம் முழு வதையும் அளந்து தன் திருவடியில் யாவரையும் உய்யச் செய்தனன்

"யாவரையும்" என்பது சித் அசித் வஸ்துக்கள் யாவற்றையும்- வித்யையை அப்யாஸிக்காதவர்களும் அவனது திருவடிசம்பந்தத் தால் உய்ந்து போயினர். வாமனன் பொய்பேசினான் என்று நமுசி முதலியர் குற்றம் சாட்டினர் - தேகம்தானே வளருகின்றது. தேகத்திற்கு மாறுதல் உண்டல்லவோ என்று வாதித்து, அவர்களை நிரஸனம் செய்தவன்- அவனைப்பாடினால்-மழைபெய்யும்-உலகும் ஜீவகளையுடன் சுபிக்ஷமாக விளங்கும்-கங்கை உற்பத்தி ஸ்தானம் அவனது திருவடியேயாதலால்-அவனே மஹாதீர்த்தனாகும். நம் மாழ்வார் – தீர்த்தனுக்கற்றபின் மற்றோர் சரணில்லையென் றெண்ணி; தீர்த்தனுக்கே தீர்த்தமனத்தனன்ஞகி திரு. (7-10-11). ஈடு தன்னுடைய போக்யதாதிசயத்தாலே தன்னை யொழிந்த விஷயங்களிலுண்டான ருசியைக் கழித்தவனுக்கு-அற்றபின் என்று மாம். மற்றோர் (அவனை ஒழிய மற்றோர்) சரணில்லை (ரக்ஷக ரில்லை) என்று தெளிந்தாயிற்று. தீர்த்தனுக்கே தீர்த்தமனத் தனனாகி-பாஹ்ய விஷயங்களில் ருசியைப் போக்கினவனுக்கே முழு மனதையும் எழுதிக்கொடுத்தபடி-தன் பக்கலிலே நெஞ்சுவைத்தால்– அவனது அழகினாலே புறம்போக வொட்டான்–அத்தனை சௌந் தர்ய குண அழகுகளாம்–அவைகளின் மகிமைகளாம்-திருமாலைப் பாடினால்-மழை மும்மாரி பெய்து ஊடுகயலுகள–தேங்காத (தேங்காதபடி - ஒட்டப்-பாலைக்கறக்கலாம் என்று பயப்படாமல்) சீர்த்தமுலைப் பற்றி வாங்க–பால் நிரம்பியதால் பருத்தமுலை களுடன் கூடிய பசுக்கள்–பக்தியும் கைங்கர்யமும் சேர்ந்து அவனே பார்த்துக் கொள்வான் என்பதாம்.

ஆண்டாள்–ஸ்ரீமந்நாராயணனையே நீங்காத செல்வம் என் கிறாள்-ஏனெனில் அவன் தன்னைத்தந்த கற்பகம்–உறங்குகிற பிரஜையை தாய் அணைத்துத் தூங்குவது போல-ஸர்வபிராணிகள் பக்கலிலும் திருவிக்ரமன் தன் தூய திருவடிகளை வைத்து- அணைத்துக் கொண்டான். இவர்கள் அபேக்ஷிதமின்றி யிருக்கச் செய்தேயும்-இவனுடைய பாதஸ்பரிசத்தால் உய்விக் கிறான்-அவனும் உகக்கிறான். இரு தரப்பிலும் ஆனந்தமாகும்.

உத்தமன் :- தன் அழிவைப் பொருட்படுத்தாமல் பிறர் ஜீவிக்க வேண்டுமென்று, நினைப்பவன். அது நாரணன் தான் என் கிறாள். ஆண்டாள், பரமன் என்பதால் குண பூர்த்தியுள்ளவன்.

திரு நெடு : 4ல்- மந்திரத்தால் என்று மந்திரத்தைச் சொல்லி- அநந்திரத்திலே அதில் உத்தமமான வ்யாப்திக்கு- திரைவிக்ரம அவதாரத்தை அடுத்தப்பாட்டில் அருளிச் செய்தார் திருமங்கை ஆழ்வார்.(அதாவது-மந்திரத்தைப்போல ரகசியமாக உபதேசிக்கப்பட வேண்டிய மந்திரமே இவன். இவன் தன்னை நினைப்பவனைத் தான் காக்கிறான்-என்பது இதன் பொருள்–

நரனாய்-அகில ஹேயப்ரத்யனீகனாய்-நாரங்கள் எல்லாவற்றிற்கும் முதல்வனாய் அந்த நாரங்களுக்கும் உள்ளும் வெளியிலும் இருப்பதால்-அந்தரத்தில் என்று கூறப்பட்டவனாய்-அயனமாய் நாராயணன் என்ற போது நாராயண மந்திரம் முழுமையும் உரைக்கப் பட்டதாகும், மந்திரத்தால் (மந்தரத்தை) என்றும் மறவாது வாழுதியேல்-மடநெஞ்சமே என்றும் வாழல்ஆம்-மறவாது என்பதற்கு மறக்காமல் நினைத்த வண்ணம் திருவஷ்டாக்ஷரத்தில் வாழ்கின்றுயாகில் நாம் இருவரும் (மடநெஞ்சமும் ஆழ்வாரும்-மற்றவரும்) வாழ்வது கூடும். மறப்பது என்பது கூடாதாகையால் அனுஸந்திப்பது-அதனால் யேற்படும் பலன் பகவத் ரக்ஷணம்-ஸ்வரக்ஷணத்தோடு-ஜகத்வ்யாபாரத்தோடு வாசியில்லையிறே- ("ஒண்மிதியிற் புனலுருவி" - திருநெடுந்தாண்டகம்-5-) (இதில்) திரிவிக்ரம அவதாரம் (பின்னால்) சொல்லப் போயிற்று.

நாங்கள் உத்தமன் பேர்பாடி-திருநாமத்தைச் சொல்லி-நம் பாவைக்குச் சாற்றி (நோன்புக்கு)-இது ஒரு வியாஜம்-கிருஷ்ண ஸம்ஸ்லேஷம் நோக்கு அதாவது பலன்-பலப்ரதா தாவான உலகளந்தவனின் படியைப்பாடுக என்பதாகும்.

தீங்கின்றி நாடெல்லாம்-துர்பிக்ஷம் போய் மும்மாரிபெட்து-அதனால் செந்நெல்திருவிக்ரமனைப் போல ஓங்கி பெருமையுடன் வளர்ந்ததாம்.

ஏது திருவிக்ரமனின் புகழை இப்படி பரக்கச் சொல்லியது-? காரணம் யாதெனில் பகவான் செய்யும் ஆனைத் தொழில்களுக்கெல்லாம் ஆஸ்ரிதர்களான (தேவர்களிடம்) பக்ஷபாதமும்-வடிவழகும், வாத்ஸல்யமும் அவனொரு கிருஷ்ணன் ஊருக்கு கையாளுனாப்போலே இந்த திருவிக்ரமன் (ஒரு நாட்டுக்காக) எளியனான படியலுமாக அமைந்திருக்கையாலே சொல்லுகிறார்கள்.

பேர்பாடி மங்களாசாஸனம் செய்து வாழ்த்துதல். திருநாமம் சொல்லி-நாமம் சொல்வதற்கு யாருக்கும் அதிகாரமுண்டு-ஜாதி-வயது-ஸ்திரிபுருஷன் என்கிற நியமமில்லை. கட்டிப் பொன்போல் அவன்; பணிப்பொன் போல அவனது திருநாமம். அவன் நாமத்தைச் சொன்னால்-ஸத்தை உண்டாக்கும், பகவத் விஷயத்தில் விரோதித்தவர்க்கும் திருநாமம் சொல்ல ப்ராப்தியுண்டு-கர்மயோக நிஷ்டனுக்கு பாபக்ஷயமாக நாமம் சொல்ல வேண்டும். பிரபன்னனுக்கு அதுவே தேஹயாத்திரையாம். கிருஷ்ணனைப் பிரகாரியாக (ஆத்மாவாக) ஸ்மரிப்பான்-தளிர்புரையும் திருவடியே வணங்கினேன் என்பான் திருமங்கை யாழ்வாரைப் போல (திருநெடு—1).

வாங்கக்குடம் நிறைக்க-இட்ட குடங்கள் வாங்க வாங்க நிறைக்குமென்னுதல்-பசுமாட்டின் வளர்ச்சியினால் - பாலும் வளர்ச்சி பெற்றது. பால் போல்-வள்ளல் தன்மை கொண்ட பெரும் பசுக்கள்-குழந்தைகளும் கறக்கலாம் என்றபடி

புல்லும் தண்ணீரும் அன்றி-கிருஷ்ண ஸ்பர்சம் பெற்ற பசுக்கள்-நீங்காத செல்வம்-அழிவில்லாத செல்வம்-மனிதனால் உண்டாக்கப்பட்ட செல்வமல்லவே-ஸர்வேஸ்வரனடியாக வந்த ஸம்பத்து ஊற்றைப் போலப் பெருகிக் கொண்டிருக்கும். வள்ளுவர்-அருட் செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம் பூரியார் கண்ணு முன் - (பரிமேலழகர்) - அருளால் வரும் செல்வமானது நிரந்தரம்-உயிர்களை ஓம்பி அவ்வறத்தான் மேம் படுதல் என்றது-நினைக்கத் தகும்-மற்ற செல்வம் பேதமையாம்.

உட்பொருள்—உலக விஷயங்களில் இழியாமல் ஸர்வவிதத்திலும் பந்துவான பரமாத்மாவிடம் அவனைப் பற்றி பாடுவதே புருஷார்த்த மென்று-அவனது கைங்கர்யமாக எல்லாக் கர்மங்களையும்-பலனையும் அபேக்ஷிக்காமல்-அவனுடைய திருப்திக்காகச் செய்ய வேண்டும். மனிதனுக்குப் பிரமம் பலவகை. அதில் ஸ்வதந்தராத்ம பிரம (தானே தனக்கு ரக்ஷகன் என்கிற நினைவு) சகல பாபங்களுக்கும் காரணமாகையால்-அதை நீக்க-அஷ்டாக்ஷரம் உபதேசம் பெற்று-அர்ச்சாவதார சேவைகளைச் செய்து-நற்குணம் நிரம்பியவனாக எல்லாச்-செல்வங்களுடன் ஞானச் செல்வமும் நீங்காது நிறைந்து நிற்கும் எனக்கூறப் பெற்றது. எம்பெருமானையே ஸர்வ போக்யம் என்று கொள்ள வேண்டியது. ஸ்வாமி அண்ணங்கராச்சாரியார் "ஐயமாவது பகவத் வைபவம் எனவும்—பிச்சை யாவது, பாகவத வைபவம் என்பர். பகவத் ஸந்நிதியில்-பாகவத வைபவத்தையும் பாகவத ஸந்நிதியில் பகவத்வைபவத்தையும் யதா சக்தி சொல்ல வேண்டியது" என்பார்.

பகவந்நாம சங்கீர்த்தனம் பண்ணி-பகவதனுபவம் பண்ணினால் இவ்வுலகம் செழிக்கும். ஆகாரத்ரயம்-அதாவது அனன்யார்ஹ சேஷத்வம், அனந்யசரணத்வம் அனந்யபோக்யத்வம்—ஆகிய ஆகாரத்ரய ஞானம் யேற்படுமாம். ஞானிகளுடைய பாதங்களை வணங்கினால், அவர்கள் தத்வஞானத்தை போதிப்பார், அதனால் பகவத் குணானுபவம் யேற்படும். அதனால் நீங்காத திரு (செல்வம்) ஏற்படும். எல்லாம் கண்ணன், உண்ணும் சோறு பருகும் நீர் தின்னும் - வெற்றிலையுமெல்லாம் என் கண்ணன்"—ஸகல போக்யமயனான எம்பெருமான் அடிபாடுதலையே உண்கையாகவும் திருவாகவும்-ஜீவயாத்திரையாகவும்-இப்படி வாய்க்கும் நிலைமை வாய்ந்தமை தோற்றும் என்கிறார்கள்.

நோன்புநூற்றுதல், ஆடிப்பாடி-அவன் புகழைப்பாடுதல்-இவை யாவும் உபாயமாகுமோ, வென்றால்-உபாயபலமாய் உபேயாந்தர்ப் பூதமாயிருக்குமது உபாயபிரதி பந்தகமாகாது என்கிற ஸ்ரீவசன பூஷண சூக்தியை நினைக்கவும்.பகவானே-அதாவது பிராட்டியுடன் கூடிய பகவானே உபாயம். நானும் ஒன்று செய்தேன்-என்று சொலுமாப்போலே-அது ஒரு வியாஜமாகமாகமாட்டாது. பகவத் கிருபைதான் வேண்டும்-ஸ்ரீவசனபூஷணத்தில் அப்ராப்த விஷயங்களிலே சக்தனானவன் அது லபிக்கவேண்டுமென்றிரா நின்றால் ப்ராப்த விஷயபரவணனுக்குச் சொல்ல வேண்டாவிறே அனுஷ்டானமும் அனனுஷ்டானமும் உபாயகோடியில் அன்வியாது. அனன்யோபாயத்வமும் அனன்யோபேயத்வமும்-அநன்யகதித்துவமும் குலையும்படியான பிரவிருத்தி காண நின்றோம்-இது ஒருவித அக்ஞானமே பகவானே எல்லாம் என்றிருப்பார்க்கு-இருள்தருமா ஞாலத்தில் ஞானவிபாகமாக கரர்யமாகிற ஒருவ்யாஜம் அக்ஞானத்தினாலே யேற்படுமாகில்-அது அடிக்கழஞ்சுபெறும்-அவனையும் கிருதகிருத்யனாக ஆக்கும். இல்லாத போனால் வேதவசனங்கள்-உபாஸனையைப் பற்றிய வசனங்கள்-யாகங்கள்-தர்மங்கள்-ஜபதபாதிகள்-தானதர்மங்கள் - நிதித்யாஸங்கள் எல்லாம் வீணாகிவிடும். ஆகவே பகவானையே சித்தஸாத்ய உபாயமாக நம்பியவர்களுக்கு திரு என்பது இதுவே

இத்தகைய கர்மங்கள். அடங்கிய பகவத் பக்தி பிராவாண்யமே - அனவரதமும் பகவத் திருப்தியையே குறிக்கோளாக வைத்து - ஜீவயாத்திரையை நடத்துவதுதான் திருத்தக்க செல்வமாம். மற்றைய திரு (செல்வங்கள்) காலத்தால்-போகத்தினால்-இதர ஆபத்துக்களால் அழிவுயேற்படும் எல்லாக் கர்மங்களும் பகவானிடம் அர்ப்பிக்கப்படாமல் போனால் மனம் சுத்தமடையாது. மனம் சுத்தமின்றி தவத்தையோ-ஞானத்தையோ அடையமுடியாது. அஞ்ஞானத்தினால் கர்மம் கெட்டு விடுகின்றது பொருள் தர்மத்திற்காகவும்-ஈட்டப்படுகிறது. விரயமின்றி சேர்த்து வைக்கப்படும் அர்த்தமும் தோஷத்தையடைகிறது. ஆகவே தானமும் பயனற்றது தான். ஆகவே நாரதர் உத்தவர்-கோபிகைகள்-ஆண்டாள்-ராமானுஜர் போன்ற மகான்கள் கலியில் ராமநாமமும்-கிருஷ்ண நாமமும் கிருஷ்ணனுஸ்மரணமும் தான் சிறந்தது என்று தலைக்கட்டினார்கள். நோன்பு நோற்றுதல் நாமத்தின் ஒரு விபாகமே (பிரிவே) யாதலால் அதனால் அடையப்படுவது பகவத் பக்திப்ராவாண்யமே.

**உட்பொருள்:** பகவத்நாமம் செல்வது-நாமசங்கீர்த்தனம் பண்ணப் பண்ண-பகவத் குணானுபவம் ஏற்படும்-தேகாபிமானம் அழிந்து-ஸ்வதந்த்ர ஆத்மபிரமம் ஒழிந்து-பக்தி பிராவாண்யம் ஏற்பட்டு-அன்னயார்ஹசேஷத்வம், அனன்ய சரணத்வமும் அனன்யபோக்யத்வமும் யேற்படுமாம். இதனால் எம்பெருமானே என்நெஞ்சில் குடியுள்ளான்-இது விதியால் பகவத்கிருபையால் எனக்கு யேற்பட்டது, என்கிற பெருமித மகிழ்ச்சியேற்பட்டு-இடைவிடாத பகவத் குணானுபவமாகிற திருத்தக்க செல்வம்-யேற்பட்டு-அதனால் ஆசாரிய பக்தியும் பாகவதபக்தியும்-மலர்ந்து பூர்ணமாக விகஸிக்க-நிறைந்த மனத்தினனார்களாக வாழ்வோம்-என்று ஆண்டாள் தலைக்கட்டினாள்.

அழகிய சிங்கர்:- வாமனவதாரப் பொருள் கொண்ட பாட்டு உத்தமன்-பொய் பேசியவனைச் சொல்லி - நாங்கள் மோக்ஷ மடைவோம்! "மூன்றுவது அடியைக் கொடு" என்று கேட்ட வாமனன்-உலகளந்ததால் உத்தமன் - நாம சங்கீர்த்தன மகிமை சொல்லப் பெற்றது. எல்லாஸ்திரிகளும் ஆண்டாளை "நீங்காத செல்வம்" எது என்று கேட்க-ஸ்ரீமந் நாராயணன் தான் என்கிறுள். தன்னைத் தந்த கற்பகம் அன்றே (நாம்மாழ்வார்).

ஸ்ரீமத் ஆண்டவன் அருளிச் செய்தது :— இதில் பெருமாளின் திருவடி ஏறறம் சொல்லப்பட்டதாகும். ஸ்ரீதேசிகனின் "ஒருச் சகடமுதைத்து"-என்கிற பாசுரம் நினைக்கத்தக்கது.

**மாதம் மும்மாரி-** ஒரு நாள் மழை; 9 நாட்கள் வெயில்; மறுபடி ஒரு நாள் மழை-9 நாட்கள் வெயில்; இதே போல மழையும்வெயிலும் விட்டு விட்டு-மும்மாரி பெய்திடும். இதனுல் நோன்பின் இம்மைப் பயனுகிற சுபிக்ஷம்-மழையினுல் யேற்படுவது-நல்லார் ஒருவர் உள ரேல், அவர் பொருட்டு எல்லோர்க்கும் பெய்யும் மழை; நாடு செழிப்பு எவ்விதமெனில்-தீங்குகள் விலகுவது. பஞ்சம், நோய்-அதிவிருஷ்டி அநாவிருஷ்டிகளால் தீயபலன் யாவையுமின்றி எங்கும் சுபிக்ஷம். பண்டைக் காலத்தில் தமிழர் "தை நீராடல்"-என்பதைக்கொண்டு மழை பொழிதல் வேண்டும். இதற்கு கன்னிப் பெண்கள் தக்க கணவன்மார்களையடைய, நோன்பு நூற்றுதல், பரிபாடல் போன்ற சங்க நூல்களில் இதைக் காணலாம்.

**உள் அர்த்தம்:-** பாகவதர்கள் காமக்ரோதம் முதலியவைகளை விலக்கி, தீங்குகள் அடையாமல், பக்குவமான நிலையில், இருத்தல். மும்மாரி-அனன்யார்ஹசேஷத்வம் (இறைவனுக்கே அடிமை பூண்டு ஒழிதல்); அனன்யபோக்யத்வம் (இறைவனையே போக்யமாக கருதுதல்); அனன்யசரண்யத்வம் (பகவானையே ஸர்வசேஷியாகவும், தேவதாந்திரங்களையும் - மற்றயாவர்களையும் ரக்ஷகனாகக் கொள்

ளாமல், பகவானையே ரக்ஷகனுகக் கருதுவது. ஆகாரத்ரயம் என்பதாம்.

களிப்புற்ற பிரபன்னர்கள், கயல் மீன்களைப் போல செந்நெலூடு கயலுகள திகழ்வார்கள். இத்தகைய பிரபன்னர்கள் ஆசார்யாரிடம் சென்று, சேவித்து காலைப் பற்றி, கரவைகளைக் கரப்பது போல, குடங்களாகிற தங்கள் மனத்தில், ஆசார்ய உபதேசங்களைப் பெற்று பாலாகிற ஞானத்தை நிரப்புவார்கள். இதனால் ஞானச் செல்வம் பெருகும்.

ஸ்ரீமத் ஆண்டவன் அருளிச் செய்தது:— முதற் பாட்டில் ஸ்ரீமந்நாரயணன், இரண்டாவதில் பாற்கடலில் பள்ளி கொண்டவன், மூன்றுவதில்-உலகளந்த உத்தமன் • இதனால் வ்யூஹவிபவ அவதாரங்கள் சொலிற்று. யார் உத்தமன்? தன்னை அழித்துக் கொண்டு, பிறரைக் காப்பவன். பலியின் கைகளிலிருந்து தண்ணீர் பட்டதும், வாமனன் ஓங்கி வளர்ந்தான். ஆகவே "வாமன" நாமம் அனுஸந்திக்கத்தக்கது. திருமங்கை ஆழ்வார் 'ஒரு குறளாயிரு நிலம் மூவடி மண் வேண்டி உலகனைத்துமீரடியா லொடுக்கி சீராம விண்ணகரரே சேர்மினீரே.

புள்ளுப் பிள்ளைக் கிரைதேடும் புள்ளம் பூதங்குடிதானே ஆசாரியர்களிடமிருந்து பெறும் ஞானம் தான் பெரும் செல்வம்.

ஆழிமழைக் கண்ணு ஒன்றுநீ கைகரவேல்
ஆழியுட்புக்கு முகநதுகொடு ஆர்த்துஏறி
ஊழிமுதல்வன உருவம்போல் மெய்கறுத்து
பாழியந்தோளுடைப் பற்பநாபன் கையில்
ஆழிபோல்மின்னி வலம்புரிபோல் நின்றுஅதிர்ந்து
தாழாதேசார்ங்கம் உதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழிநீர் ஆட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய். 4

பகவானைப் பக்தி பூர்வமாக-மழைக்கு அபிமானி தேவதையான பர்ஜன்யனே-நாங்கள் நோன்பு நோற்கிறோம்- அது ஒரு வியாஜம்தான்-பூர்ண தபஸ்ஸாகாது-அதனாலே நீயும் கிருபைக் கொண்டு எங்களையும் எங்கள் நாட்டு மக்களையும் அனுக்ரஹிக்க-நீ ஆர்த்துக் கொண்டு (கர்ஜனை செய்து கொண்டு) ஆகாயத்தில் ஏறி-பாணவர்ஷம் போல-சரம்மழை போல் நாங்கள் மகிழ்ந்து மார்கழி நீராட்டம் செய்ய, தாழாதே-தாமதம் செய்யாமல்-மழையைப் பெய்திடுவாய்-ஏல் ஓர் எம்பாவாய்.

மழை என்றால்-ஆண்டாளுக்கு கருமுகில் நடுவே மின்னல் போலப் பிரகாசிக்கும் லக்ஷ்மி நாராயணன் மனத்தில் தோன்ற-

பர்ஜன்ய தேவதையே-லக்ஷ்மி நாராயணன்-ஸ்ரீமன் நாராயணனே ஊழி முதல்வன் ஆம்-முதல்தனிவித்து. அவன் தான் பத்மநாபன் -தோள்களில் உடைய சாரங்கம் என்கிற வில்லும்-அவனது திருக் கரங்களில் பிரகாசிக்கும் ஆழிபோல் மின்னி-'திருவாழி-என்பது சக்கரம்போல, வலதுகையில்சுடர் கொள்பொலிந்து நிற்கும்சுதர்சன ஆழ்வானும்) இடக்கையில் வலம்புரி (பாஞ்சஜன்யாழ்வானைப் போல) அதிர்ந்து-நிலை நின்று முழங்கும்படி-மழைகர்ச்சனை களுடன் செய்வாயாக-அதனால் சுபிக்ஷம் யேற்பட்டு நாங்களும் கைம்மாறு எதிர் பாரா மகிழ்ந்து நீராடப் பெறுவோம்.

கம்பராமாயணம் நாகபாசபடலத்தில்கம்பன் கருடனையும்-சடையப்ப வள்ளலைச் சேர்த்துச் சொல்லும் போது-கைமாறு எதிர்பாராத கருடன்-பசிப்பிணியை நீக்க வள்ளல்தனம் கொண்ட சடையப்ப வள்ளல் என்றனன். இங்கே நோன்பு நோற்று தலுக்காகவோ—அல்லது பகவத்கிருபைக்காகவோ—பலன் உடனேயே ஏற்படவேண்டியது. இது ஒரு பிரார்த்தனையாகும். மழை சடசட வென்று பெய்ய வேண்டும். அதற்கு பர்ஜன்ய-மழைக்கு நிர்வா ஹகன்-மேகம் என்றவாறு-அவனைக் கூப்பிட்டழைக்கிறார்கள். பஞ்சாக்னிவித்யைக்கு-பர்ஜன்யன் முக்கியமான தேவதையாகும். சாந்தோக்யத்தில் ஐந்து அக்னிகளான ஸ்வர்க்கம், மேகம், ப்ருத்வி புருஷன் ஸ்திரி என்றவை. இவ்விதம் சம்சரிக்கும் ஆத்மாவின் உள் நிலையை-அதாவது ஆத்மாவேறு-புலன்கள் வேறு-என்று அறிந்து ஆத்மோ பாஸனை செய்பவர்கள் மற்றும் அரண்யத்தில் பிரும் மத்தையே உபாஸிப்பவரும் அர்ச்சிராதி மார்க்கத்தாலே-பிரும் மத்தைப் பெறுகிறார்கள். இது தேனவயானமார்க்கம்-அக்னி, பகல், சுக்லபக்ஷம் ஷண்மாதம், ஸம்வத்ஸரம், சூர்யன், சந்திரன், மேகத்தில் காணப்படும் மின்னற்புருஷன்-என்று குறித்து-வித்யுத் புருஷனே-அமானவனே-முக்தாத்மாவை பரமாத்மாவிடம் அடை விக்கிறான் என்பதாம். ஆகவே பர்ஜன்யன்-என்று சம்போதனம் செய்யப்பட்டது-ஸ்ரீமத்ராமானுஜ சித்தாந்தப்படி எம்பெருமானே பிரகாரியானபடியால் அவனை அழைத்ததாகும். பித்ருயான மார்க் கத்திலும் "மழை" சொல்லப்படுகிறது. புகை, இரவு கிருஷ்ணபக்ஷம் தக்ஷிணாயனம், பித்ரு லோகம்-ஆகாசம், சந்திரன் என்ற முறையில் அமர்ந்த பித்ருயானம் - பித்ருலோகத்திலிருந்து திரும்பிவரும் ஜீவன்-ஆகாசம், வாயு, புகை, மேகம், மழை, ஒஷதி புருஷன்—ஸ்திரி-அல்லது புருஷனிடம் அவனவனது கர்மத்திற்கு யேற்ப தாமதம் ஏற்பட்டு-முன் கர்மபிரகாரம்—அவனவனது கீழான ஜன்மங்களும் ஏற்படும். இதேபடி-வைஸ்வாநர வித்யையிலும் ஆறு பேர்கள் வருகின்றனர். த்யுலோகம் ஆதித்யன்-வாயு-ஆகாயம்-ஜலம்-பிருத்வி என்புவற்றில்-ஒவ்வொன்றையும் வைஸ்வாநராத் மாவாக உபாஸிப்பதாகச் சொன்னார்கள். இவைகளெல்லாம்

வைஸ்வாநர ஆத்மாவின் அவயவங்கள். இவைகளாலே-வைஸ்வ நானின் தலை-கண்-பிராணன்-உடல்-நீர்ப்பை பாதங்கள்-என்று வைஸ்வா நராத்மாவை-பகவானை உபாஸிப்பவன்-விச்வருபவைஸ்வா நரோபாஸனம் செய்பவன்-பிரும்மத்தினுடைய அவயவங் களைத் தன் உடலின் அவயவங்களில் ஏறிட்டு-தன் உடலிலுள்ள பாகங்களை அக்னிஹோத்ரத்தின் கருவிகளாகக்கருதி - வயிற்றி லிருக்கும் ஜாட ராக்னி-வைஸ்வ நராக்னியிலே (பிராணாக்னி ஹோத்ரத்தைச்) செய்கிறான். அன்னத்தில் ஐந்து பிரணா ஹுதிகளை அவற்றிற்குள்ள முறைப்படி செய்தால்-பஞ்ச பிராணன் களும் அவற்றின் வாயிலாக இந்திரியங்களும்-அவற்றை நிய மிக்கும் தேவர்களும், அவர்களைச் சார்ந்த உலகங்களும் திருப்தி பெறும். இங்ஙனம் உபாஸிப்பவனுக்குப் பெரும் பாபங்கள் எல்லாம் அழிந்து இறந்த பின்பு அர்ச்சிராதி கதி கிடைக்கும் என்பதாம் - விஷ்ணுஸஹஸ்ர நாம பாஷ்யத்தில் பர்ஜன்யர்-மூன்று தாபங்களைப் போக்கும் மேகங்களாயிருப்பவன் பகவான் விஷ்ணு, சங்கரரோ விரும்பினவற்றை அளிப்பவன் என்றார்.

ஆகவே பர்ஜன்யன், ஊழிமுதல்வன், பத்மநாபன்-சங்கு சாரங்கபாணி என்று பலவிதமாகக் காட்டப்பட்டது. ஆழிமழை கண்ணா-பிரும்ம ருத்ராதிகளுக்கும் நிர்வாஹகனே, மழைக்கு கைம்மாறு எதிர்ப்பாரா-மழையைப் பெய்விப்பவன். மனிதனின் தாரதம்யம் பார்க்கமாட்டான்-சுக்ருதம் பண்ணினவன் இருந்த விடத்தே வர்ஷித்தும்-பாபம் செய்வாரிடத்தே வர்ஷியாமையும் இல்லையே மழை பொதுவாக எவருக்கும் பெய்கிறது.

பாபா நாம் வா சுபா நாம் வா-என்கிறபடி எங்களுக்கு நீ ஆக வேண்டும். இப்படியான உத்தம அதிகாரிகள் இவ்விதம் சொல்ல லாமோவெனில்-இவரகள் பகவானையே உபாயம் என்று நம்பி யிருப்பவர்கள்-உபாய விரோதியைத் தொலைத்தவர்கள். பாலைகள் -பகவானையன்றி வேறு ஒன்றையும் சொல்லவறியார்கள்-அனவ ரதமும் கிருபைக்குத் தங்களை யோக்ய பாத்திரங்களாகச் செய்யும் ஆர்வமுள்ளவர்கள். சரி-பகவானை ஆஸ்ரயித்தவர்கள் இதர தேவதைகளை ஆஸ்ரயணம் செய்யத் தான் வேண்டுமோ? சோறும் தண்ணீரும் தாரகமென்றிருப்பார்க்கு நான்பிரபு. அல்ல ஸ்ரீவைஷ் ணவர் தான் என் பிரபுக்கள், தன்னைப் போல இதர தெய்வங் களையும் பரதத்துவநினைவின்றி ப்ரகாரி விஷயமாக தங்களை ஒத்த பாகவத பக்தசிரோண்மணிகளாக நினைப்பவர்கள். பகவானிடம் தன்னைப் போல அளவிடாக் காதல் கொண்டவர்கள். மஹா பாரதத்தில் பகவான் அநுகீதையில் சொன்னாரே :

தேவதா! பிராம்மணுதீ நாஸ் தஸ்மாத் விப்ராஸ்து தேவதா:!
ருத்ரம் ஸமாஸ்ரிதா தேவா ருத்ரோ பிரும்மாணுமாஸ்ரித:!
பிரும்மா மமாஸ்ரிதோ ராஜந் நாஹம் கஞ்சிது பாஸ்ரித்:!
மமாஸ்ரயோ நகஸ் சித்து ஸர்வேஷா மாஸ்ரயோ ஹ்யஹம்
ஏவ மேதந்மயா ப்ரோக்தம் ரஹஸ் யமித முத்தமம் (பாரதம் வைஷ்ணவ தர்மம்)

ஆகையால் பிராம்மணர்களே, தேவதைகளே ஒன்றை ஆஸ்ர யிக்காமல் மேன்மை கிடைப்பதில்லை. ஆகவே முக்யமான ஆதா ரத்தைப் பற்ற வேண்டும். தேவர்கள் ருத்ரரை ஆஸ்ரயித்திருக் கின்றனர் - ருத்ரர் பிரும்மாவை ஆஸ்ரயித்திருக்கிருர். பிரும்மா என்னை ஆஸ்ரயித்திருக்கிருர். நான் ஒருவனையும் ஆஸ்ரயித்த வனல்லன். எனக்கு ஒருவனும் ஆஸ்ரயமல்லன். எல்லோருக்கும் நானே ஆஸ்ரயமாகவிருக்கிறேன் என்ருர் பகவான்.

ஒன்று நீ கைகரவேல் - நீ எப்பொழுதும் உதார குணத்துடன் இருக்கிருய், அந்த உதாரகுணம் எங்களிடம்மாருக இருக்கவேண் டும். ஸதா அனுக்ரஹசீலனுக எங்கள் பாபபுண்யங்களை நோக்கா மல் - ஈஸ்வர கோஷ்டியைப் பார்த்துப்பேய் விஷயமாக வர்ஷியாதே பாபமே பச்சையாக இருக்கும் எங்களிடம் அனுதாபம் காட்டி-நீ மழை வர்ஷிக்கவேண்டும். "இந்த வார்த்தைகள் பர்ஜன்ய தேவ தையை நோக்கிச் சொல்லும் யோக்ய அதிகாரிகள், அவர்கள் இவ் விதம் ஈஸ்வர கோஷ்டியைச் சொல்லலாமோவெனில் மழை எல்லோ ருக்கும் பொதுவானது. ஆகிலும்மறந்தும்புறந்தொழாமாந்தர் தேவ தாந்தர ஸ்பர்சமே - வாசனையேயில்லாத ஏகாந்திகள் இவ்விதம் சொல்வது தகுமாவெனில்-பகவத் கிருபை கர்மமடியால் வருவதல்ல, கிருபா மார்க்கமாக வருகிறது. பாபிகளும் பகவத் கிருபைக்கு இலக்காக வேண்டும் என்றே உதாரகுணத்தாலே-சொல்லியதாம்.

உதாரன் யார்? அபராதம் செய்தவரிடமும் கருணை செலுத்து பவன். பெரியாழ்வார் திருமொழி 5—1—2—பிழைப்பாராகிலும் தம் மடியார் சொல் பொறுப்பது பெரியோர் கடனன்றே; பகவான் உதாரனுமிற்றே - அவனை விட பிராட்டி புருஷகார பலத்தினாலும்- உபாய பூதத்தாலும் பெரியவளே-என்பதால் (4—9—2—பெரியாழ் வார்) தன்னடியார்திறத்தகத்துத் தாமரையாளாகிலுஞ் சிதகுரைக்கு மேல் - என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார் என்பர் போலும் - என்பதாலே - பிராட்டி சிதகுரைத்தாலும் குணத்தை தோஷமாகப் பிரமித்தாயோ-என்றிறே அவன் பாசுரம். ஆஸ்ரிதரின் பக்ஷபாத அதிசயம் சொல்லப்படுகிறது' 'என்னடியார் அது செய்யார் என்பதிலும்-சிதகுரைக்கும்'' என்பதே உத்தேஸ்யம் கைவிடாமைக்குச் சொல்லும் வார்த்தை.

அடியார் என்பது சேஷியும் - உபாயமும் உபேயமும் பகவான் என்று நம்பி பகவானின் தாள்களைப் பற்றி னவர்கள். அடியார் நிருபகம், குலவர்ண கோத்ராதிகள் மற்றவர் களுக்கு, ஆனால் பகவத் அடியார்களுக்கு இது தேவையல்ல, பகவத் பக்தியே நிருபகம் மித்ரபாவேந-உகந்த தோழனாகக் கருது என்று ராவணனுக்குசீதைஉபதேசித்தது-அபிமுக்யம்தான்தேவை.காட்டிக் கொடுக்க மாட்டாள் தாய். வெந்நீரைக் குளிர்ந்த நீராக்குபவள். அந்த பகவானும் தான் ஸத்தைப் பெறுவது அவளுடைய சம்பந்தத் தாலே. ஆகவே பிராட்டியின் பிரணயித்வத்துக்கு ஒரு நமஸ்காரம் செய்தல் வேண்டும். ஆகவே பிராட்டியின் ஸ்வரூபம் இங்கு சொல்ல லாயிற்று. அது இரண்டு வகைப்பட்டது. பெருமாள் சம்பந்தம் விரும்பும் போது-நஜீவேயம் க்ஷணமபி என்பது ஒருதலை, இறையும் அகல கில்லேனென்பதும் ஒருதலை, அடியார்களைக் காக்கும் போது- சேதன அபராதத்தைப் பொறுக்க வேண்டும் என்பது அவள் பகவானிடம் பிரார்த்திப்பது. இவனை (சேதனனை) உபதேசத் தாலும் - பகவானை அழகாலும் அனுபவத்தாலும் திருத்துபவள் - தோஷத்தைக் குணமாகக் கொள்வது எப்படி? தோஷத்தை செய் தாராகிலும், அவர்கள் உன்அடியாரன்றே-என்னடியாராகிறார்.உன் அடியாராகில் ஆஸ்ரயணத்திற்கு பின்பு யேற்படுவது. ஆஸ்ரயணத் திற்கு முன்பு-ஆஸ்ரயண ஆபிமுக்யம் யேற்பட-இவள் வாதிப்பவள்

மன்றுடும் சேதனனிடம்- அழகினுல் பகவானிடம், பின்பு அவன் மன்றுடும். செய்தாரேல் நன்று செய்தார் - நாமுண்டு என்றும் ஒரு பிரமாணம் உண்டு. நாம் பொறுப்போம் என்று நினைத்து அழகிய தாகச் செய்வார்கள். விபீஷண சரணுகதியில் – அபயபிரதானம் அளிக்கும்போது குற்றமுண்டு என்ற மஹாராஜரையும் (சுக்ரீவனை), குற்றமில்லை என்ற திருவடி (அனுமான்) யையும், இளைய பெரு மாளையும் பூர்வபக்ஷமாக்கி, "குற்றமுண்டு ஆயினும் - நான் கைக் கொள்ளக்கடவேன்" என்று சொல்லிய ராகவன்—தோஷோயத்யபி ஸ்யாத். வீபிஷணன் விஷயத்தில், சிதகுறைக்கும் என்பது மஹா ராஜர் கோஷ்டி. என்னடியார் அது செய்யார் என்பது திருவடி இளையபெருமாள் கோஷ்டி. பிராட்டி பெருமாளுடையது-சிதகுரைக் கை புருஷகாரகிருத்யம். அடியார்அது செய்யார் சரணுகத கிருத்யம் (செயல்). நன்று செய்தார்-சரண்யகிருத்யம். சரணமடைந்தவர்- களைக் காத்தல் பெருமாள் கடமை. ஆகவே சிதைகுரைத்தார் ஸ்ரீரங்க நாச்சியார் "நன்று செய்தார்" என மன்றுடினுர். பெரிய பெருமாளும் ஆட்கொள்வார் ஆருரே! ஆட்கொள்வான மருமூரணி யரங்கம் என்று ஆருரே! இந்த நோக்கால் பர்ஜன்ய தேவதையை நோக்கி அருளினுள். "ஒன்று நீ கை கரவேல்-பக்ஷபாதமின்றி ஔதார்யத்துடன் இரு, நன்ருக வர்ஷி. யாவருக்கும்! ஆழியுட்புக்கு- உனக்கு ஜன்மம் சமுத்திரம். அதில் புகுந்து நீர் மொண்டு ஆர்த்து பெரிய கோலாகலமாக பேரிறைச்சலுடன் கம்பிரத்வனி யினுல்-நாங்கள் உன் வடிவழகைக் கேட்டும் கண்டும் உகக்குமாறு-மதயானையைப் போல அமிர்தமாகிற ஜலத்தை- உதங்கமேகம் பாலை நிலத்தில் வீசுவது போல வர்ஷியுங்கள்".

ஊழிமுதல்வன்-ஜகத்காரணன்-பஹுஸ்யாம்- ப்ரஜாயேய-என்று சங்கல்பித்து – மெய்கருத்து, ஒரு கர்பிணியைப் போல - அகவாயில் நீர்மை உங்களால் உண்டாக்க வொண்ணுது-வர்ஷித்தால்அனந் திரம், வெளுத்துப் போமவையிறே இவை.

சிறிய திருவத்யயன் உத்ஸவத்தில் "நாச்சியார் முழு முழுக்க ஒண்ணுதாப் போலே (ஆராயிரப்படி) உன் உருவம் பெண் உருவும் இல்லை'என்று பட்டர் பெருமாளின் நாச்சியார் திருக்கோலம் பூண்டு மோகினி உருவத்தைச் சொன்னுரே. அஸிதேக்ஷிணு - அந்த

உருவத்தைப் போல மெய் கருத்து. சியாமநிறம், நாச்சியாரின் வேஷத்தை ஏறிட்டுக் கொண்டத்தனையொழிய (நீ) அவள் போல விழிவிழிக்க உன்னாலாகாது-என்கிற ஐதிஹ்யத்தை ஞாபகம் செய்துக் கொள்ள வேண்டியது. கண்ணனின் திருமேனி நிறத்தைக் காண விருப்பமுடைய ஆண்டாள் - அதன் போலியைக் கூடக் கண்டுகளிக்க ஆசைப்படும் விதத்தைச் சொல்வதாம். அத்தனை காதல் அவளுக்கு! ஜலஹீனமான மேகம்-கருமேகம் அல்ல கன்ஸ்யாம பாழி அம்தோள்-வலிமை, அழகும் கொண்ட (பூமியை) பாழியைச்சுமந்த யக்ஞவராகனின் தோள்கள், ரக்ஷகத்வம்-போக்யத்வம்-இரண்டும் கொண்ட இரு தோள்களாம். பரத்வத்தினுடைய அடையாளங்கள் பிரகாசிக்க - அத்துடன் மென்மையும், வடிவழகும் கொண்டதாம். வடிவு ஆர்சோதிவலத்து (வலது பக்கத்தில்) உறையும் சுடர் ஆழியும் படைபோர் (யுத்தங்களிலும்) புக்கு முழங்கும் (மேகத்தைப்போல கர்ஜிக்கும்) அபாஞ்சசன்னியமும் - பல்லாண்டே" என்றார்போல - தன் கண் எச்சில் பெருமாளுடைய சுகுமாரத் திருமேனிக்கு வரக்கூடாது என்பதற்காக - முகத்தைத் திருப்பிக்கொண்டு பரோக்ஷமாகச் சொன்னாரே. "அந்த பாஞ்சஜனியமே" என்றாள். மேலும் அந்த பரதத்வத்திற்கு ஸ்வரூப நிருபகமாக பிராட்டியின் யோனியாகிற மூலத்தாமரை அவனது வயிற்றில் விளங்க-பத்மநாபன்-போல் மின்னி, நான்கு திருக்கைகளிலும் நான்கு ஆயுதங்களும் நந்தகம் என்கிறவாள் மடியிலும்-மூலத்தாமரை தொப்பூளிலும்-சாரங்கம் என்னும் வில் தோளிலும் பிரகாசிக்க-தோள்கள் மல்ஆண்டதிண்தோள்-சாணூர மல்லன் - போன்ற மல்லர்களின் பலத்தை அடக்கிய திண்தோள்களும் - விளங்க-எல்லா அங்கங்களையும் விவரித்தாள்.

நாபிகமலத்தில் வ்யஷ்டிஸ்ருஷ்டிக்குக் காரணபூதரானபிரும்மாவை பெற்றுவைத்து திருத்தோள்களிலே அவனுக்கு ரக்ஷகமாய் ஆயுதங்களும் விருந்தன.

பத்மநாபரின் ஸ்வரூபம் யாது? ஆயிரம் கதிரவர்கள் ஒரே காலத்தில் எழுந்தாற்போல - ஜகஜ்ஜோதியாய் - தனது நான்கு திருக்கரங்களில் சக்கரம் சங்கு வாள் வில் தண்டு என்கிற பஞ்சா

யுதங்கள் பிரகாசிக்க – விஸ்வேஸ்வரர் ஆகிய பிரபு-காலரூபமான கமலத்தைத் தரிக்க – அதில் பிரும்மா வசிக்க – அந்தக் காரண கமலமும் அஷ்டதளங்களோடு விருப்பதால்-அஷ்டாக்ஷரத்தை கமல ரூபகமாக வகிக்கும் பத்மநாபர்–அவருடைய நாபிக்கமலம்-உலகத் திற்குக் காரணமானபடியால்-பூகர்ப்பர் என்றும், பதினான்கு உலகங்களையும் தனது நாபியில் தாங்கி கமலம் போலிருக்கும் மஹாலட்சுமியை மார்பில் அணைப்பதால்-ஸ்ரீகர்ப்பர் என்றும்– போகங்களிலும் லீலைகளிலும் திருமகளை விடடுப் பிரியாமல்– சேர்த்தியுடன் அவர்கள் இருப்பதால் ஸ்ரீகர்ப்பர் என்றும் சொல்லப் படுகிறார்.

உமக்கேயேற்பட்டுள்ள லக்ஷணங்கள் ஸ்ரீயப்பதித்வம், வேதங் களைக் காப்பாற்றுதல், ஸர்வ சேஷியாக விளங்குதல், தர்மம் என்கிற ஆசரணையினால் எல்லோரையும் வசப்படுத்துதல், பக்தி பிரபத்தி மார்க்கங்களில் வருபவர்களை ரக்ஷித்தல்-ஸனகாதி முனி வர்களால்-கடுமையான விரதங்களால் ஆராதிக்கப்படும் திவ்ய மங்கள மூர்த்தியாம்.

சரவரிஷம்போல–ஸ்ரீசார்ங்கம் உதைத்த திருமழைபோல. ஒன்று பத்து, பத்து–நூறு, நூறு-ஆயிரம், ஆயிரம்-பல ஆயிரங்களாகவும் சதவ்ருஷ்டி-சக்கரவர்த்தி திருமகனின் செயலை சொல்லியதாம். ராமபாணத்திற்கு அழிக்கிற சக்தியுமுண்டு. காக்கும் சக்தியுமுண் டாம். மூல பலவதத்தின்போது, ராமனுடைய வில்லின் மணிகள் ஒரு-முகூர்த்த நேரம் ஒலித்துக் கொண்டிருக்க, அசோக வனத்தில் வாழ்ந்துவந்த பிராட்டிக்கு அந்த நாணின் ஒலியும்–மணிகளின் சப்தமும்-கோலாஹலமாக முழங்க–"என் பிரபு உயிருடனிருக் கிறார். எதிரிகளை அழிக்கிறார்" என்கிற சிந்தனையால் சீதைக்கு மிருதசஞ்சீவினியாக விருந்தது. இரண்டாவதாக - லக்ஷ்மணன் மூர்ச்சையடைந்து விழுந்த சமயம் ராவணனும் இந்திரஜித்தும் சந்தோஷத்தால் ஆர்த்து சப்தமிட–அந்த சமயம் கோபம் கொண்ட ராமனின் பாணவரஷங்கள் மேக கர்ஜனையைப்போல சப்திக்க லக்ஷ்மணன் அந்த சப்தம் கேட்டு–மூர்ச்சை தெளிந்தான். அதனால் தியாகராஜர் "நான் என்ன சொல்வேன்?

ராமபாணத்ராண சௌர்யமே மனிதேநல புதுரா-ஓ-மனஸா என்றார். சௌர்யத்துடன் காப்பாற்றுகிற சக்தியும் உண்டாம். அதுபோல இந்த பர்ஜன்யனின் சரவர்ஷம் உலகங்களை வாழ வைக்கும் என்பதாம். அது போல சங்கொலியும் ருக்மிணிக்குத் தன்னை அழைத்துப் போகவே பகவான் வந்து விட்டார என்று தைர்யம் பிறந்ததாம். ஆகையால் திண்தோள் மணிவண்ணு-

என்றும், கொப்பூழிலெழுகமலப் பூவழகர் என்றும், பத்மநாபா வென்றும்–நம்மாழ்வாரைக் கூப்பிடப் பண்ணிற்றே. அங்கைத் தலத்திடையாழி கொண்டான், என்று சொல்லும் படியாயிற்று. ஆழி போல மின்னி-வலம்புரி போல நின்ற திர்ந்து ஆண்டா ளுடைய ஸ்திர்த்வத்திற்கு முலைகளைப் போல, அவனுடைய பும் ஸத்வத்திற்கு திவ்யாயுதங்களாம். தாழாதே-தாமதித்தல்; ஆஸ்ரி தர்களின் துன்பம் அதிகரிக்கும். ஏஷகால. (மஞ்சு சமயமிதுரா)– என்று சொல்கிறார். வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும் மகிழ்ந்து, இந்த சரவர்ஷத்தால் எல்லோருக்கும் லாபம். உனக்கும் (பர்ஜ்ன்ய தேவதையே) பிரியகரமான கிருஷ்ணனும் நாங்களும் மகிழ்ந்து குளிக்கிறோம்-என்பதாம்.

**உட்பொருள்**

உபநிஷத்ஆகிற பெரிய பாற்கடலைக் கடைந்து–அம்ருதமாகிற விக்ஞான சக்தியை நீ கிரஹித்து-சரவர்ஷம்போல எங்களுக்குக் கொடுக்கவேண்டும். அந்த விக்ஞான சக்தியினால் ஊழிமுதல் வனும், ஆழிபோல் மின்னி-வலம்புரிபோல் நின்றதிர்ந்து–நாங்களும் மார்கழி நீராட மகிழ்ந்து-சரமழையைப்போல பெய்திடாய்,'' நோன்பு நோற்பவர்களுக்கு–கோபாலர்கள் முன்பு – மேகத்தை மழைக்காக யாசித்து நீராட்டம் செய்து நோன்பு நோற்க வேண்டும் என்கிற கருத்தாம். எங்களுடைய கிருஷ்ணஸம்ஸ்லேஷத்தால் உலகமே மகிழும் என்பதாம்.

**அழகிய சிங்கரின் கருத்து :–**

• இப்பாட்டில் ஆண்டாள் பகவத் அனுக்ரஹத்தை தங்கள் நோன்பிற்கு வேண்டுகிறாள். அதாவது பர்ஜன்ய தேவதையின் அருள். லோக க்ஷேமார்த்தம் மழை பெய்யவேண்டும்–என்பது மேலிருந்த பொருள். உள் அர்த்தம் யாதெனில்–பகவத்குணானு ஸந்தானம். உபயலிங்காதி கரணம் (ஸ்ரீபாஷ்யத்தில்). பகவானுக்கு கல்யாண குணங்கள் உண்டு. ஹேய குணங்கள் இல்லை.)

ஆழிமழைக் கண்ணா - வருணனைப் பிரார்த்திக்கிறாள். கண்ணனையே வேண்டுகிறாள் என உள் அர்த்தம்-சரீர ஆத்ம பாவத்தினாலும்-கண்ணனே வருணனுக்கு அந்தர்யாமியாகவிருப்ப தாலும்-இந்த ஆழிமழைக் கண்ணா- ஸம்போதனம் கண்ணனையே சேரும். புஷ்கராக்ஷ : ; ஊழி முதல்வன்–கண்ணனே-கிருஷ்ணன் கோபிகைகளைக் கேட்கிறான்-நீங்கள் ஆசார்யனை அடையுங்கள். அதற்கு ஆண்டாளின் பதில்–நீயே எங்களுக்கு ஆசாரியன் ! !

ஸ்ரீமதாண்டவன் அருளிச் செய்தது:-ஆழிமழைக்கண்ணா-இங்கு ஆசார்யன் என்று அர்த்தம். பிரஹஸ்பதியிடம் இந்திரனும் விரோசனனும் ஆத்மஞானம் பெற பதின்மூன்று வருஷங்கள் தங்கி அவருக்கு ஸேவை செய்து பெற்றனர். அது போல மழைக் கடவுள் ஆழ்வார்களையும், ஆசாரயர்களையும் சொல்வது. இவர்கள் தாமும் அனுபவித்து பிறர்களையும் அனுபவிக்கச் செய்கிறார்கள். இதனால் ஆசார்யவைபவம் கூறப்பட்டது. ஊழிமுதல்வன்-பெருமாள், ஆதிப் பிரான் ஊழியில் யாவரையும் படைத்தவனும், சாஸ்திரங்களால் நிலைத்திருப்பவன்.

இதுவரை திருப்பாவைக்கு முகவுரை முற்றியது எனலாம்.

மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத்
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர்குலத்தினில் தோன்றும் அணி விளக்கைத்
தாயைக் குடல்விளக்கம் செய்த தாமோதரனைத்
தூயோமாய் வந்துநாம் தூமலர் தூவித்தொழுது
வாயினால்பாடி மனத்தினால் சிந்திக்கப்
போயபிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசு ஆகும் செப்பேலோ ரெம்பாவாய்.

இப்படி ஆண்டாளுடன் கூடிய பல சகிமார்கள் விருக்க - அவர்களில் ஒருத்தி (தோழிப் பாசுரமாகவும்) - நாயகி அவளைப்பார்த்து (நாயகிப் பாசுரமாகவும்) சொல்லலாம்.

பிரும்ம சூத்திரத்தில் சொல்லப்பட்டது - நாயம்ாத்மா பிரவசநேந - தஸ்யை வ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்.

ஒருவனும் ஆத்மாவை எளிதில் அடையமுடியாது. பிரவசனத்தினால் மனனத்தினால் மேதையினால் - நித்தியாஸனத்தினால் - (அடிக்கடி நினைப்பதினால்) அவனைப்பற்றிக் கேட்பதால் - சுருதிகளிலே அடைய முடியாது - ஆனால் எவனை அந்த பரமாத்மா அடைய விரும்பிப் பொறுக்குகிறானோ - அவனால்தான் பரமாத்மா அடையப்படுகிறான்.

இதற்கு உள் அர்த்தம் கேவலம் சிரவணம் - மனனம் நித்தியாஸாதிகளால் பகவானை அடைய முடியாது. அவன் பகவானால் வரணீயனாகவிருக்கவேண்டும்; தேர்ந்து பொறுக்கி எடுக்கப்படவேண்டும். அதாவது பகவானுக்கு அவன் பிரயதமனாக ஆகவேண்டும். கீதையில் பகவானே திருவாய் மலர்ந்திருக்கிறார். “தேஷாம்

ஸததயுக்தாநாம் மாமுபயாந்திதே" கீதை 10-10, எவர்களுக்கு என்னிடம் சேர்க்கை - ஸம்பந்தம் வேண்டும் என்கிற விருப்பமிருக்கிறதோ - அப்படியே-என்னை ஸதா உபாஸிக்கிறார்களோ நான் என்னுடைய அன்பைக் கொடுத்து அவனுக்குப் பக்தியோகத்தையும் கொடுக்கிறேன். அதனால் அவன் என்னை வந்தடைகிறான். பிரியோஹி ஞாநிநோ அத்யய மஹம் ஸ : ச மம பிரிய : (கீதை 7-17) " நான் ஞானியிடம் அதிக அன்புடையவனாகவிருக்கிறேன். அவன் எனக்கும் நேசிக்கும்படி - நெருங்கியிருக்கிறேன். ஆகையால் சாக்ஷாத்கார ரூபத்தினால் என் ஸ்மிருதி - நினைவு அந்தப் பொருள் - சொல்ல முடியாதபடி அளவில் நேசிக்கும்படியாகிற காரணத்தினால் - அவனே பகவானால் தேர்ந்து எடுத்துக் கொள்ளப்படுகிறான்.

இத்தகைய பாக்யசாலிகளாம் ஆண்டாள் போன்ற ஸ்திரிகள் ஏன்-? அவர்கள் ஆயர்குலத்தில் தோன்றினாலும் - மாயனை மன்னுவடமதுரை மைந்தனைத் தூய பெருநீர் யமுனைத் துறைவனை ஆயர்குலத்தினின்று தோன்றும் அணிவிளக்கைத் தாயைக் குடல்விளக்கம் செய்த (தாயாகிய தேவகியின் வயிற்றை (அணிவிளக்காக) விளங்கச் செய்தவனுமான தாமோதரனை வாயினால் செப்பி (பெயர் – நாமம் சொல்லி) அதனால் - தூயமாக ஆகி - தூ மலர்கள் தூவி - வாயினால் தொழுது - மனத்தினால் சிந்திக்க - போய (பழைய - சேஷ சேஷீ பாவம்யேற்படு முன்பு - ஸஞ்சித பாவங்கள் – புகுதருவான்–இவனை அறியாமல் வரக்கூடிய எதிர்கால பாபங்களையும் தீயினுல் தூசு (உருமாய்ந்து பஞ்சு தீயினால் அழிவதுபோல) ஆனபின்பு - அந்நாமங்களை செப்பு-சொல் - என்கிறாள் - ஒருத்தி - அல்லது ஆண்டாளே - வழிகாட்டுகிறாள் தன் தோழிமார்களுக்கு, அதாவது பகவத்நாம சங்கீர்த்தனம் செய்யச்செய்ய - முன்பு பண்ணின பாபங்கள் அழியும் - பரமாத்மாவை கிட்டமுடியாத தடைகளாகவிருந்த இவை அழிந்த பிறகு - பகவத் ஸாக்ஷாத்காரம்யேற்படும்.

இங்கே பாக்யமடைந்த ஆயர்பாடி சிறுமிகள் கண்ணனை - எப்பேற்றப்பட்ட கண்ணனை – பரமபதநாதன் மோக்ஷபிரதன் - கண் அழகு உள்ளவன் – அவனை மாயனை (என்றாள்) விசித்திரமான அற்புதமான செய்கைகளைச் செய்பவன் – சிறு மதலையாகவிருக்கும் போது பூதனையைக் கொன்றவன்-சகடாசுரன் – சாணூர முஷ்டிகனை வென்றவன் – காளியனின் கொட்டத்தை அடக்கி

யவன், கோவர்த்தன கிரிதாரி-அத்தகைய மாயன் இட்ட ஆள்மாதிரி போல – ஆயர்சிறுமிகளுக்கு விளங்கினான். அதெப்படி? அப்பா அம்மாவின் (தேவகி வசுதேவரின்) சிறையை விடுவித்தவன். வெண் ணெய் களவு செய்து ஆப்புண்டவன்–கஞ்சனின் கொடும் அரசைத் தீர்த்தனன்-அது மட்டுமா? பசுக்களையும் மேய்ப்பவன் – யாருக்கு? இடையர்கள் இடைச்சிகள்-உடலை நீக்கித் தலையையும் தலையை நீக்கி உடலையும் கழுவுமவர்களான இடைச்சிகள். இடையற்களோ ஆறு மாதத்திற்கு ஒரு தடவை குளிப்பவர்கள். அத்தகைய இடக்கை வலக்கை அறியாத ஆயர்கள். - அவர்களின் சிறுமிகள்– தூ மலர்கள் தூவி தொழுது, பாடி சிந்திக்க - எல்லாப் பிழைகளும் பாபங்களும் தொலைய, ஞானவிகாஸம்யேற்பட்டு விமோகம், (ஆசையற்ற தன்மை) அப்யாஸம் - கிரியை - கல்யாண (மங்களகர மான) அனஸாத (மனம் தளர்ந்து போகாமலிருத்தல்) அனுத் தர்ஷம் (அதிகமாக உத்ஸாகம் கொள்ளாதிருத்தல்) இத்தகைய நற்பண்புகள் பாபங்கள் கழிந்த பின்பு ஒருவனுக்கு யேற்படும்– ஆகார சுத்தியினால் ஸத்வ சுத்தியேற்பட்டு சுத்த சீல நடத்தையேற் பட்டு – ஸதாதத் பாவ பாவித: பரமாத்மாவினுடைய ரூபத்திலே ஆழ்ந்து இழிந்துபோய்-சாந்தோதமர்களாக பிரும்மத்தை அடை கிறார்கள். ஞானோத்பத்திக்குத் தடங்களான புண்ய பாபங்கள் நீங்க, ரஜஸ்தமஸ்ஸாதிகள் விலக - ஸத்வாத் ஸம்ஜாயதே ஞானம் (கீதை 14–17) என்கிறபடி -பாபபுண்யங்களாகிற பகவத் பிராப்ய விரோதிகள் நாசமடைய பிருமத்தை அடைவிக்கும் ஞானம் தீர் மானமாக ஏற்படுகின்றது. இதுவும் பகவானின் திருவிளையாடலே- கௌ.உப. 2-3-65. ஏஷ ஏவா ஸாது கர்ம காரயதி தம், யமதோ நிநீ ஷதி-எவனை மேலான கதிக்கு அடைய இச்சிக்கிறானோ பரமாத் மாதானேஅவனைத் தூண்டுகிறான். எவனைக்கீழே தள்ள விரும்பு கிறானோ – அவனைக் கெட்ட கர்மங்களைச் செல்யத் தூண்டு கிறான். இவ்விதம் பகவானாலே பலவிடங்களில் சொல்லப் பட்டது.

கர்மங்களைச் செய்யச் செய்ய, ஞானம் பிரகாசமாகி பிரும் மத்தை அடைய ஆசைகொண்டு, முயற்சி எடுத்து - பல ஜன்மங் களில் அப்யஸித்து, ஏதாவது ஒரு ஜன்மத்தில் பகவத் கிருபை யால் மோக்ஷம் அடைகிறான். இத்தகைய பாக்யம் ஆயர்சிறுமி களுக்கு - அவர்களின் குலத்தில் அவதாரம் செய்த – தோன்றிய கண்ணனால் அளிக்கப்பட்டது, அதனால் அவர்கள் பகவத் உபாஸனையைச் செய்து கிருத கிருத்யர்களாக ஆனார்கள்.

தூயோமாய் (பாபங்கள் கழிந்து) தூ மலர்கள் தூவி (அர்ச்சயன்) த்யாயந் - ஸ்துவந் - நமஸ்யந் - யஜமானஸ்தமே வச - என்கிறபடி தொழுது - வாயினால் பாடி - மனத்தினால் சிந்தித்து - கடந்த பாபங்கள் (ஸஞ்சிதம்), வரப்போகும் பாபங்கள் (ஆகாம்ய பாபங்கள்) இரண்டும் கழிந்து – பொன் தீயில் சுத்தமாக்கப் படுவதுபோல, தீயினில் பஞ்சுபொதி எரிந்து உருமாய்ந்து போவதுபோல எல்லாப் பாபங்களும் கழிந்து - பகவத் கிருபைக்கும் பாத்திரமாகுகிறார்கள் - அதனாலே எம்பெருமான் நாமங்களைச் செப்பு என்கிறார்கள். கிருத கிருத்யர்களாக ஆகிறார்கள் என்பதாகும்.

மாயனை மாயையாவது மூலபிரகிருதி - இது அசேதனம். பகவான் உபாதான காரணமாவதால் - பிரக்ருதி அவனுடைய ஆக்ஞையினால்தான் எல்லாக் காரியங்களையும் செய்கிறது. சங்கரரின் மதத்தில் மாயாவிசிஷ்ட பிரும்மம் எல்லாம் செய்கிறது என்றார். சாங்கியனை நிரஸித்ததாகும், சாங்கியனுக்கு பிரகிருதிதான் காரியங்களைச் செய்கிறது. புருஷன் போக்தா என்றான். சில சுருதிகள் பிரகிருதி அசேதனப் பொருள்களுக்கும் சேதனப் பொருள்களுக்கும் மேலானது பிரும்மம் என்றன. அதற்கு போக்யத்வமுண்டு : போக்திருத்வமுண்டு. ஈஸ்வரன் என்கிற பாகுபாட்டுக்களையும் சொல்கின்றன. பிருகிருதியில் இருவகை - அஹங்காராதிகள் கீழ்ப் பட்டது. மேல்பட்ட பிரகிருதிசேதனம். இரண்டும் சேர்ந்து - என்னால் தாங்கப்படுகிறது என்றார் பகவான். ஜீவப்ருதாம் மஹா பாஹோயயேதம் தார்யதே ஜகத் (கீதை 6-7-6) ; மயா அத்யக்ஷேண பிரவிருத்தி: ஸீயதே ஸசராசரம்–என்னுடைய தலைமையினால் பிரகிருதி-சராசரமனைத்தையும் உற்பத்தி செய்கிறது. மத்கிருதா (பகவானால் செய்யப்பட்ட) சேதன அசேதன சேர்க்கையால் சிதசித் ஸம்ஸர்காத்தேவாதி ஸ்தாவராந்தாநா மசின்மிஸ்ராணம் ஸர்வபதா நாம் பவதீத்யர்த்த : ஜகத்தேவமனுஷ்யாதி உற்பத்தியாகின்றன. இவை பரம புருஷனுக்குச் சரீரமாகையால் - அவனால் நியமிக்கப்படுவதால் – பிரிக்கமுடியாதபடி ஸ்திதியில் இருப்பதால் - பரமாத்மாவை விட்டு - அவைகளுக்கு ஸ்வதந்திரமாக இருப்பு என்பது இல்லை - இடமில்லை-பொருளின் தன்மையில்லை- எல்லா - அவஸ்தைகளிலும் - போக்ய போக்திருரூபேண அவஸ்தைகளிலும்–இந்தசித் அசித்பரமபுருஷனுக்குச்சரீரம்,அவனுக்கு அடங்கினவை – யாப்ருதிவ்யாம் திஷ்டந்பிருதிவ்யோ அந்தரோயம் பிருத்ந்

வீம் நவேத......யமயதி (பிரு-5-7-1). எந்த பரமாத்மா பிருத்வியி லுள்ளே வசிப்பவராகவும் - எவரை அந்த பிருதிவிக்குத் தெரி யாதோ - எவருக்கு பிருத்வி சரீரமோ - எவர்பி ருத்வியினுள்ளே யிருந்துகொண்டு எல்லாவற்றையும் நியமிக்கிறாரோ - அந்த பர பிரும்மம் - தான் மாயன். எல்லாம் செய்துவிட்டு ஒன்றும் தெரியா தவன்போல நடிக்கிறவன் - அத்புத செய்கைகளை உடையவன், மாயன் - பிரகிருதிக்கு அத்யக்ஷன் சங்கல்ப விசேஷத்தாலே எல்லா வற்றையும் நடத்துகிறான். பாற்கடலில் தோன்றினான் - சகல தேவதைகளை அனுக்கிரஹிக்க, வாமனனாய்ந் தோன்றி உலகளந்து தன்மாயையை வெளிப்படுத்தி,ஓங்கியதிருவிக்ரமரூபத்தில்உணர்த்தி னான். கண்ணன் அவதரிப்பதற்கு முன்பு - மாயையை தேவகியின் வயிற்றினின்று உரோஹிணியின் வயிற்றினுள் கர்ப்பத் தைச் சேர்த்து அவளை யசோதையின் பெண்ணாகப் பிறக்க ஏவினான் - என்றபடி.

மன்னுவடமதுரை - வடமதுரையை தன் இருப்பிடமாகக் கொண்டு - கண்ணனாகவும் - அதற்கு முந்தி - வாமனாவதாரத் திலேயும் தவம் செய்தவனாயும் - சத்ருக்னன் லவணாசுரனைத் தொலைத்து மதுரையை மாநகராக்கினான், பகவத் ஸாந்நித்யம் கொண்டதால் ஏழு ஊர்களில் மதுரா - மாயா - அவந்தி இத்யாதி களில் முதல் ஸ்தானம் வகிக்கிறது. ஆண்டாள் - வடமதுரை மைந்தனை - (தலைவனை) என்றாள் - அதற்கேற்றம் - யமுனை யினால் - அயோத்திக்கு ஸ்ரயூபோல - காளிந்தி - கங்காம் சரஸ் வதிம் நந்தாம் - (அளகநந்தை), காளிந்திம் என்று காலையில் நினைக்கவேண்டிய நதிகளாகும், (பாகவதம் - கஜேந்திரமோக்ஷம்) ராதையோ களி நடனம் செய்ததும் - கோபிகாகீதம் பாடின இடம்தான் காளிந்தி. காளியனின் பலத்தை ஒடுக்கி - அவனை சமுத்திரத்திற்கு அனுப்பியது. வடமதுரை - தென்மதுரை - இரு மதுரை - தென் மதுரையில் பெரியாழ்வாருக்குத் தரிசனம் அளித்த பெருமாள் - வடமதுரையில் நப்பின்னை பிராட்டியின் (ராதையின்) வ்யாமோஹங்கள் - யேற்பட்டது - காளிந்தி (நதியும்) ஆயர் குலத்தினில் தோன்றியபடியாலும் சியாம நிறமுள்ள யமுனை-சூர்ய னின் புத்திரி - யமனுடைய சஹோதரி. கண்ணன் சிறு குழந்தை யாக விருக்கும்போது - வசுதேவரை கோகுலத்திற்குப் போக - தண்ணீரில் வழிவிட்ட தெய்வநதி - கங்கைக்கும் மேலான ஆழ முள்ளது.

யமுனைத்துறைவன் - யமுனையை வழியாகக் கொண்டவன் - அதிபன் - கண்ணன் ஆகும். மதுராநாம் - நலமந்த மில்லதோர் நாடு.

ஆயர்குலத்தில் தோன்றும் - அரசர் குலத்திலே பிறந்து ஆயர் குலத்திலே வளர்வதற்காக ஆவிர்பவித்தான். பரமாத்மாவின் பிறப்பு-அகர்மவச்யனானபடியால் இச்சையால் யேற்படுகிறது. ஆயர்குலத்திற்கு வந்து சேர்ந்து - அது மாதிரி ஒவ்வொரு இடையர் வீட்டிலும் தோன்றினவன், - "எத்திறம்" என்று நம்மாழ்வார் மோஹித்துப் போய் - ஆறு மாதம் மெய்மறந்திருந்தாரே - நித்ய சூரிகளுக்கும், நேர்நின்று பார்க்கமுடியாதபடி - நிரங்குசைஸ்வர் யத்தை உடையவன் - அவதரித்தான் - ஆச்சரியத்தைச் சொல் வதற்கு முன்னே ஆழங்கால்படும்படி - அத்புதச் செய்கைகளை உடையவன் - சௌலப்யத்தினால் ஒரு தாம்பினால் கட்டுண்ணப் பட்ட மாயன் - அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் சொல்வார், மாயனை - ஸமஸ்த கல்யாண குணங்கள் கொண்ட குணாத்மகனாய் - நிரதிசயா நத்தபரிபூர்ணனுய் - உபயவிபூதியு க்தனாய் - ஸ்ரீயப்பதியாய் - ஏகார்ணவம்போல நித்ய விபூதியிலிருக் கும் இருப்பைச் சொல்லும் - அகடிதடிகநா சக்தியை உடையவன். அணிவிளக்கை - வைகுண்டத்திலிருப்பது போல - ஸ்ரீ மதுரையிலும் உஜ்ஜவலனாய்போல் தாயைக் குடல் விளக்கம் செய்த - வயிற்றில் கட்டின தழும்பாலே - கயிற்றின் தழும்பாலே ஒருத்திக்கு ஒரு பிள்ளை கட்டலாம்படி - பவ்யனாவதே - என்று யசோதைபிராட்டியை விளங்கப் பண்ணினவனே -எப்படி - கௌ சல்யா சுசுபே - ராமனைப்பெற்ற வயிறுடையாள் - நோன்பு நோற்றுல் கொல்லோ என்பது போல :

தாமோதரனே - தாமங்கள் எனப்படும் உலகங்களனைத்தும் வயிற்றில் வைத்திருப்பவர், தமம் - என்றுல் சுகம் - இதை உதரர் - வெளிப்படுத்துகிறவர்; யசோதையினுல் வயிற்றில் கயிற்றினுல் உரலோடு கட்டப்பட்டவர் - கயிறு கட்டப்படும்போது அசைவற்று நின்று எளிமையைப் பிரகடனம் செய்வது. அந்த கட்டுதலை நினைப்பார்க்கு-பந்தத்தை அவிழ்ப்பவர் - அதாவது நம் பந்தம் நம்மால் அறுக்கவொண்ணுது அவன் காலில் விழ - அதுதீரும். ஆகவே அவனுடைய பந்தத்தை அனுஸந்திக்க - ஸம்சார பந்தமறும். பணைகளிலே தாவினபோது உடை நழுவத் தழும்பைக் கண்டு - இடைச்சிகள் சிரித்தார்கள். அத்தழும்பு தோன்ருமைக்கிறே - நம்பெருமாள் கணையம்மேல் சாத்து கிறது - என்றுர் ஜீயர். தாமோதரன் என்கிற நாமம் - யதாசருது நியாயத்திற்கு விரோதம் என்றுர் தேசிகர் - யாதவாப்யுதயம்.

தூயமாய் - இடைச்சிகளானவர்கள் தலையிருக்க உடம்பு கழுவியும் - உடம்பிருக்க தலைகழுவியும் போருவார்கள். பாவனஸ் சர்வலோகாநாம் - என்பதால் பகவத் சம்பந்தம் அவர்கள் பெற்ற தால் சுத்தமாகி விட்டனர். விபீஷணன் கடலில் முழுக்குப் போட்டு ராமனிடம் சரணமடையவில்லை -அர்ஜுனன் முழுக்கிட் டன்றியே யுத்தநடுவே சர்மசுலோகம் கேட்டது. திரௌபதி முழுகி யன்றே - அசௌசமரயிருக்கும் போதே - ப்ரபத்திபண்ணிற்று. பிரபத்திக்கு நின்றநிலையில் அதிகாரம் அமையும். பகவத் குணங் களே அதைச் சிரவணம் செய்வதே - சுத்தம் வேத்தி - ஆர்த்திக ளுடைய த்வரையே - முறை பார்த்திருக்கவொட்டாதபடி - மிகமுக் கியம். அதாவது ஸ்நானம் முதலிய வெளிஅங்கங்கள் சுத்தமில்லா விடினும் - மனது சுத்தமானுல் அது ஒன்றேபோதும் எனலாம்.

மலர் தூவுதல் - அர்ச்சனை செய்தால் - வாயால்பாடி மனத் தால் நினைத்து கைகளால் அர்ச்சித்து - கைகால்களால் நமஸ் கரித்து - மனம் காயம் வாக்கு மூன்றும் பகவத் அதீனம் - ஆகவே சிந்திக்க - பக்தி அவிச்சின்ன பக்தி பிரபத்தியாம். தியானம்- மனனம் - மௌனம் - (வித்யையைப்பெற்று - சிந்தனையில் மூழ்கி யிருத்தல் - இது தாமோதரனைப்போய் சேரும் - என்று அன்வயித் தால்-அவன் சௌலப்யாதி நிறைந்த சுலபன் - என்று உயர்ந்த 'தத்கிருது - நியாயம்'. தாமோதரன் திருமேனியிலெங்கும் கட்டுண் டதை நினைப்பதால் நம்கட்டு நீங்குவது. அர்ச்சையிலே - ஆகவே விபவத்தைவிட அர்ச்சைமேல்.

போயபிழையும் புகுதருவான் நின்றனவும் - உத்தரபூர்வ பாவங்கள் - பால்குடித்து வியாதியைப் போக்குமாப் போலவே - இனியது அனுபவிக்க - இன்னுதது குலையும். பூர்வபாவங்கள்- ஞானோத்பத்திக்கு முன்பு - புத்தி பூர்வமாகச் செய்யப்படடவை; உத்தர - பகவத் ஆஸ்ரயணத்திற்குப் பின்பு - பிரகிருதிவாசனை யினுல் ப்ரமாதிகமாக - பொய்யாகச் செய்யும் - அவை ப்ராசீனு நீ பாபாநிகிரியமாணுந் - கரிஷ்யமாணுநிச என்பதாம். தீயினுல்-தூசு ஆகும். தீயில் இடப்பட்ட பஞ்சுபோல உருமாய்ந்துவிடும். இது வேதத்தில் சொன்ன அர்த்தம். செப்பு - வாங்மனது காயத்தினுல் அனுபவிக்க வேணுமென்றது. அதாவது பகவான் "நான் பொறுத் தேன்" என்று சொல்வதால் தீரும்.

தூயமாய்வந்து நாம் தூ மலர் தூவித்தொழுது வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க-போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்.

மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத்தூயப் பெருநீர் யமுனைத் துறைவனை ஆயர்குலத்தில் தோன்றும் அணிவிளக்கைத் தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனைச் செப்பு-என்று படிக்க வேண்டியது.

பிரும்மசூத். 4-1-ல் வித்யைக்கு எல்லா பாபங்களுக்கும் பிராய சித்தமாகவிருக்கும் ஆன்மீயம் உண்டு. பிராரப்தம் அநுபவிக்க அழியும். அல்லது பிரபத்தியினால் கழியும்.

உள் பொருள்:- தத்துவ ஹிதம் புருஷார்த்தம் முதல் இரண்டு, மேல் இரண்டு, கடை இரண்டு - அடிகளில் கூறப்பட்டன. வெளிப் பொருளே உள்பொருளாம். முதல் இரண்டில் அஷ்டாக்ஷரம் - இரண்டாவது இரண்டில் த்வயம்-மூன்றாவது இரண்டில் சர்மஸ்லோகம் கருதப்பட்டுள்ளது. நீயும் நல்லபாத்திரம் அகப்பட்டால்-உலகத்தை உய்விக்க-செப்பு- என்று ஆசார்யன் சிஷ்யனைச் சொல்வது போலமைந்தது.

முந்திசொல்லப் பட்ட விஷயம்-எல்லோரும் நோன்பு நோற்கப் புறப்படவேண்டும்- எப்படி நோன்பு செய்ய வேண்டும்-நோற்றால் மழை வந்து சுபிக்ஷம் பெருகும். அதற்காக பிரார்த்தனை செய்ய வேண்டியது. இதற்காக கன்னிகைகள் ஒன்று சேர வேண்டும். சில கன்னிகைகள் போகும் வழியிலிருப்பதால்-அவர்களை எழுப்பி-கலந்து கொள்ள வேண்டுவது. எதற்கு தோழிகள் அவசியம்-அவர்கள் கூடவிருந்தால் சகாயமாக விருக்கும். அம்ருதம் போன்ற பகவானைக் கூடிச்சேர்ந்து அனுபவித்தலே இன்பம் தரும். ஏக : ஸ்வாது நபுஞ்ஜீத - ஒருவனாக நல்லதை சாப்பிடக்கூடாது.

அழகிய சிங்கரின் கருத்து:- கண்ணன் சொல்வது-என்னை சரண்மடையுங்கள். நான் பாபங்களைப் போக்குவேன். அவன் மாயன்-உபயவிபூதிநாதன். மாயை என்கிற பிரகிருதியைத் தன் வசம் வைத்திருப்பவன். மாயை என்கிற பிரகிருதியை உடலாகக் கொண்டு உலகை ஸ்ருஷ்டிக்கிறான். பிரகிருதி மஹாந்-ஸாத்விக் ராஜ ஸதாமஸ் அஹங்காரங்கள்-கண், காது இத்யாதி ஐந்து கர்மேந்திரியங்கள்-பதினொன்று இந்திரியங்கள் (ஞான இந்திரியங்கள்-ஐந்து மனம் பதினொன்றாவது). இவைகளால் அநேக ஜீவாத்மாக்களை-

அவரவர் பாபபுண்யங்களுக்கு ஏற்ப, பிறப்பு எடுக்கும்படி சங்கல்பித்து, பிரும்மாண்டத்தையும் நான்முகனையும் ஸ்ருஷ்டி செய்து அவன்மூலம் இந்த பிரும்மாண்ட சித்அசித் பொருள்களை அந்த அந்த தேகங்களில் பிரவர்த்திக்கும்படி செய்து-தானும் உள் நுழைந்து, ஒவ்வொன்றையும் நியமிக்கிறான். மாயன்-அத்புத செயல்களை உடையவன்-தன் சங்கல்பத்தால் ரக்ஷிக்கக் கூடியவன்-உதாரணம் திரௌபதி மான ஸம்ரக்ஷணம். அதிமானுஷ சக்தியுள்ளவன். யமுனைத்துறைவன்-கண்ணன். அணிவிளக்கை-ரத்ன தீபம், ரகுகுல-யதுகுல ரத்ன தீபம். தாயைக்குடல் விளக்கம்-கண்ணனுக்கு மூன்று தாய், தேவகி-யசோதை-பூதனை.

பகவானைச் சரணமடைதல் - மனம் வாக்கு காயம்-இதனால் பாபங்கள் பஞ்சு போல வெந்துவிடும். தின்றனவும் - சரணாகதி சமயம். இதனால் பிராரப்த கர்மாக்களும் நாசமடைகின்றன.

ஸ்ரீமத் ஆண்டவன் அருளிச் செய்தது :- இந்தப் பாட்டு நாமஜபத்தின் பெருமையை விளக்குகிறது. யாவரும் (விரோதிகளும் கூட-சிசுபாலாதிகள் கூட) நாமஜபத்துக்கு அதிகாரிகள். ஆனால் பிரபந்நனுக்கு இதுவே தேக யாத்திரை, சிஷ்யர்களின் நியமம் இதனால் சிக்ஷிக்கப்படுகிறது. தூயமாய்-அகத்தூய்மை புறத்தூய்மை இரண்டினாலும் எல்லாப் பாபங்களும் அழிதல். தேசிகரின் பரமார்த்தஸ்துதி நினைவுபடுத்திக் கொள்க. திருமங்கை ஆழ்வாரின்; நானும்சொன்னேன் நமருமுரைமின் நமோ நாராயணமே;(6-10-6)- "விண்ணவர்த்தங்கள் பெருமான் திருமார்வன்...கண்ணபுரத்தெம் பெருமான்...வந்தூதாய் கோல்தும்பீ (8-4-1) மற்றெல்லாம் பேசிலும் நின்திருவெட்டெழுத்தும் (8-10-3) இங்கு மாயனை என்னும் பதத்தாலே பரத்வம் பேசிற்று. மாயனின் செயலாகிற வெண்ணையைத் திருடுதல்-வெண்ணை என்பதற்கு மோக்ஷம் எனப் பொருள். ததிபாண்டன் கதை நினைக்கவும். ஆச்சர்யகரமான செயல்களைச் செய்பவன். தமது ஏழாம் வயதில் கம்சனைக் கொன்றான். குரு தக்ஷிணைக்காக, இறந்த குழந்தைகளை மீட்டுக் கொண்ர்தல்; அதே பாலகனான ஸ்ரீராமன் சிவதனுஷ்ஷை பங்கம் செய்தல்.

மனத்தினால் சிந்திக்க :- ஸ்ரீரங்கநாதனின் திருவடிகளையும் பாதுகைகளின் ஏற்றமும் சிந்திக்கத்தக்கது. யமுனைவெள்ளம் குழந்தை கிருஷ்ணனுடைய பாதங்களை ஸ்பர்சித்து-வழிவிட்டது. அதனால் யமுனைக்கு ஏற்றம்-வட மதுரை மைந்தனை-தூய பெரு நீர் யமுனைத் துறைவனை என்பதாம். ஆனால் கோதாவரி நதி ராவணனுக்குப் பயந்து சீதையைப் பற்றி ராமனிடம் ஒன்றும் சொல்லவில்லை.

நம்மாழ்வார் - இருள்தரும்மா ஞாலத்திலே, கண்ணனுடைய அனுபவம் எத்திறம் என்று மெய்மறந்தார்.

## 6-ஆம்பாட்டு :

புள்ளும்சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில்
வெள்ளைவிளி சங்கின்பேர் அரவம் கேட்டிலையோ ?
பிள்ளாய்! எழுந்திராய் பேய்முலை நஞ்சுண்டு
கள்ளச்சகடம் கலக்கழியக் காலோச்சி
வெள்ளத்தரவில் துயில்அமர்ந்த வித்தினை
உள்ளத்துக்கொண்டு முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந்து அரியென்ற பேரரவம்
உள்ளம்புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்

உபோத்காதம் மேற்படி முற்றியது(புள்ளும்)பிள்ளாய்-புள்ளும் சிலம்பின பக்ஷிகள் சப்திக்கின்றன. புள்அரையன் (கருடனுடைய) கோயிலில் வெள்ளை விளி (அழைப்பதான) சங்கின் ஒலியை கேட்க வில்லையா? படுக்கையை விட்டு எழுந்திரு. (எதற்கு அந்தக் காரணம் இது தான்) பேய்ச்சி (பூதனையின்), முலை உண்டு - கள்ளம் சகடம் கலக்கு (அமைப்பு) அழிய - (தன்) கால் ஒச்சி (உயரச் செலுத்தி) வெள்ளத்து (பாற்கடலின் நடுவே) அரவின் (சேஷனின்) துயில் அமர்ந்தவித்தினை (நாராயணனை - ஜகத்காரணனை) (முனிவர்களும் யோகிகளும் உள்ளதது 'கொண்டு- மெள்ள எழுந்து அரி (ஹரி ஹரி) என்று சொல்லிக் கொண்டு எழுந்திருக்கும் பேர் அரவம் (திருநாமகோஷம்) குளிர்ந்து எங்கள்-உள்ளம் புகுந்து பெற்றுள்ளோம் – ஏல் ஒர் எம்பாவாய்.

ஹரி என்று சப்தம் கேட்டதுமே-பிராப்யருசி உடனே நாம் ஏன் ஹரியிடம் செல்லக்கூடாது எனத் தோன்றி- மனிதனைத் தூண்டுமாம். அதற்கு விடிந்ததற்கு சில அடையாளங்கள் கூறப் பட்டன. புள்ளின் சப்தங்கள், புள் அரையின் கோவிலில் ஊதப் பட்ட சங்கத்வனி, ஹரி ஹரி என்கிற சப்தம் இவைகள் எழும்பும் சப்தங்கள்.

முலை நஞ்சு :- பூதனை தன் முலையின்மீது நஞ்சைத் தடவினாள். அதனால் உயிர்ப் பரிப்பூண்டாள். இது அவளுக்கு அனுக்ரஹ மாகவே முடிந்தது-அவன் அதை பரம போக்யமாக உண்டான்.

விட்டு நீ பூச்சி தீயில் ஓடிவந்து - மாள்வதைப்போல மாண்டனள். ஆனால் அவளுக்கு வைகுண்டம் கிடைத்தது. ஏனெனில் பகவான் அவளை மாதாவாக ஸ்வீகரித்தான் - அவள் உடல் எரிந்தபொழுது சந்தன மணம் வெகு தூரம் பரவியது - என்பதால்.

அழியக்காலோச்சி - அவன் காலைத் தூக்கி உதைக்க கள்ளச் சகடாசுரனும் ஒழிந்தான் - இவனுக்கும் சங்குசக்கரம் பத்மம்-யவம் சித்நங்கள் கொண்ட பாதம் - பலிக்குத்தலையில் வைத்தாற்போல, கொடிய அரக்கனான இவனுக்கும் பாதஸ்பர்சம் கிடைத்தது.

இங்கு இரண்டு ஆபத்துக்களைச் சொல்லியதன் நோக்கு என்ன? ஸர்வேஸ்வரனுக்கு என்ன புதிய தீங்கு நேரிடுமோ - நேரிடவிருக்கின்றதோ என்கிற பயத்தினால் கேட்டவள் பதைபதைத்து படுக்கையை விட்டு எழுந்திருந்து ஓடிவருவாளாம்.

வெள்ளத்தரவில் துயிலமர்ந்தவித்தினை - பாற்கடல் அவதாரங்களுக்கு இருப்பிடம் - வித்தினை - தனிவித்தை - நம்மாழ்வார் - ஆதிப்பிரானை தனி வித்தேயோ - என்றார் அல்லாதார்க்கு வெளியிடாதேயிருந்து. எனக்குத்தன் வடிவை பரமகாருணிகத்தினால் வெளியிட்டவனே.

என் தனிப் பேருயிரான உன்னைப் பெற்று இனிப் போக்குவனோ? அதாவது ஜகத்காரணனாயிருக்கிற விருப்பை - முதல் - நிமித்தகாரணம் - தனி ஸஹகாரி காரணம், வித்து - உபாதான காரணம் - எல்லாமும் பகவானே ஆகும். தாநிஸர்வாணி தத்வபு: யஸ்யாத்மாசரீரம் யஸ்யப்ருதிவீசரீரம்-தத்ஸர்வம்வை ஹரேஸ்தநு: என்னும்படி - எங்கும் முகம்காட்டலாம்படி. ஜகத் சரீரனாயிருக்கிற இருப்பைக் காட்டித்தந்தோமிறே. திரிவிதகாரணமானவரே - போக மோக்ஷங்களாகிற வாழ்ச்சிக்கு விளைநிலமான மூலப் ப்ரகிருதிக்கு ஆத்மாவானவனே என்று சப்தார்த்தம்.

இதற்கு உபோத்காதம் - மூவாயிரப்படியில் சொல்லியபடி-முதல் பாட்டு - பகவத் சேர்க்கை ப்ராப்யம் - இதற்கு உபாயமும் அவனே (ஸாதனமும் அவனே) 2) அதிகாரி யோக்யதை 3) பகவத் அனுபவ ஸஹகாரிகள் பக்கல் உபகாரஸ்ம்ருதியாலே-அவர்களுடைய அபேக்ஷிதங்கள் 4) தேவதாந்திர ஸ்பர்ஸம் ரஹிதராய் - பகவத் ஏகப்ரவணராய் - அதன் அனுபவமே ஜீவயாத்திரையாம் 5) பகவத் அனுபவத்தாலே - அனுபவ விரோதிகள் கெடும். இவ்விதம் சொல்லியபிறகு - ஆறிலிருந்து மேல் பத்துப் பாட்டாலே அந்த உபகரணங்களைக் கொண்டு அனுபவிக்குமவர்களை யெழுப்புகிறது. அவர்களை

எப்படி - எதனுல் எழுப்புவது?பகவானுடைய அழகே பிரதானமான காரணமாகும். அதை - நினைப்பதாலேயே - காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும்-என்றும் ஆழியொடு பொன் ஆர் சார்ங்க முடையவடிகளை யின்னுரென்றறியேன் - என்று பலவாறு புலம்புதலும் அத்துடன் அவனுடைய நீர்மையும் - ஸௌலப்ய வாத்ஸல்யாதி குணங்களும் நினைவுப்பட; ஆகா - ஆழ்வார் அனுபவித்தாரே "எத்திறம்"- என்று மோஹித்துப்போகும்படி காண் ! இத்தகைய உணர்ச்சியை எழுப்ப, கிருஷ்ணசேர்க்கைக்கு - ஒருத்தி புதியவளை எழுப்பி-போது விடிந்ததுகாண் - என்று சொல்லி எழுப்புகிருர்கள். இந்த வஸ்துவை அனுபவிக்கைக்கு ருசியுடையவர்களாயிருக்குமவர்களை - எழுப்புகிருர்கள். ததீயரையொழிய அனுபவிக்கமாட்டார்கள். இவள் புதியதான ஒருத்தி - கிருஷ்ண ஸம்ஸ்லேஷத்தில் ஆசைப்பட்டவள். அவளை எழுப்புவதுபோல - புள்ளின் சப்தங்களும் விளிசங்கின் ஒலியும் - நீ கேட்டிலையோ - என்கிற இவைகளின் த்வனிகளும் சேர்ந்து -"பிள்ளாய் எழுந்திராய்" - நாங்களும் உன்னைப் பார்க்க ஆசை கொண்டும்; - நீயும் எங்களைக் காண ஆசைப்படடவேண்டாமோ - என்பதாம்.

உன்னை எழுப்பியபிறகு - நாங்கள் பாற்கடலிலே துயில் செய்யும் – ஜகத்ரக்ஷணத்தை சிந்தை செய்யும், யோகு புணர்ச்சி செய்யும் வித்தினை நாராயணனை; பேய்முலை நஞ்சுண்டு - கள்ளச் சகடம் கலக்கு அழிய காலை (மேலே) ஓச்சி தூக்கினவன் இந்த இரண்டுபேர்களும் ஒருவனே - நாராயணனே - கண்ணனுக அவதரித்துள்ளான். அவனைப் பாடிடுவோம். வாராய். முனிவர்களும் யோகிகளும் அவர்களும் தங்கள் தங்கள் படுக்கைகளை விட்டு எழுந்திருந்து"ஹரி ஹரி" என்றுசப்திப்பதாலே ஹரிர்ஹரதி பாபாநி-பகவத் அனுபவவிரோதிகளைப்போக்கி யருள வேண்டுமென்கை, இங்கு இவர்களுக்கு யாதுமன்றோ பாவம்?கிருஷ்ணனுக்குத் தீங்கு யேற்பட்டால் அத்தை அவன் தானே போக்கித் தீர்க்கவேண்டியது. எப்படி - இவர்கள் மங்களாசாஸனம் செய்வதால் திருப்பல்லாண்டுஇவர்கள் பாடுவார்கள்.கிருஷ்ணனுக்கு அசுரர்களால் தீங்கு வராதபடி, பகவத் சம்பந்த ஞானம் பிறப்பதற்குமுன்பு - இழவு-பேறுகள் அவனளவிலேயே இருக்கவேண்டியது பேரரவம் பெரிய த்வனி பஞ்சலக்ஷம் குடியிருப்பார்களும் சேர்ந்து பகவானை வாழ்த்துவார்கள். அதையும் (உன்) உள்ளம் புகுந்து - குளிர்ந்து - திருநாமம் செவ்வழியே புகுந்து நெஞ்சில்பதிந்து கிருஷ்ண விரஹத்தாலே - பிளந்துகிடக்கிற நெஞ்சிலே புகுந்து இவர்களை ஆனந்திப்பதாம். அதற்கு உன் வரவு முக்கியம் - எழுந்திராய் என்கிருர்கள். திருவாய்ப்பாடி முழுவதும் ஹரிசப்தத்தினுல் நிரம்பிப் போய் உள்ளம் புகுந்து கிருஷ்ணவிரகத்தாலே துடிக்கும் நெஞ்சுக்கு

ஒரு நீர்பாய்ச்சிறுற்போல - குளிர்ச்சி செய்யும் இறைவனின் திரு நாமம். பிள்ளாய் எழுந்திராய். இங்கு உபாஸிக்கப்படும் தெய்வம் - ஹார்தம் - உள்ளத்தில் உறைத்துவிடப்பது - அந்தர்யாமியை.

உட்பொருள் :- தூங்கும் தோழிகளை எழுப்ப - பத்துப் பாசுரங் களில் இதுமுதல் - ஆண்டாள் இதற்கு தன்னோடு ஒத்த ஆழ்வார் களுடன் பதின் பதின்மருக்கு திருப்பள்ளி யெழுச்சி பாடுவதாக பெரியோர்கள் சொல்வார்கள். சில ஆழ்வார்கள் ஆண்டாளுக்குப் பின்பு அவதரித்தவர்கள். சிலர் முன்பேயிருந்தவர்கள். ஸர்வஜ்ஞை யான ஆண்டாள் இதுயேற்படக்கூடும் என்று சொல்வதாளுள். வானமாமலை ஜீயர் ஆழ்வார்களின் திருப்பள்ளி எழுச்சியைவிவரித்து ஸ்வாபதேசவ்யாக்யானமாய் சொல்லியுள்ளார். இன்னும் சிலர் பத்து இந்திரியங்களைப் பத்து பாசுரங்களால் எழுப்புவதாகக் கொள் ளலாம் என்றனர். உட்பொருளைக் கொள்வது - மொத்தமாக - முடிந்தமட்டில் கொள்வது. (பதினைந்தாம் பாட்டின் இறுதியிலுள்ள எமது அனுபந்தத்தையும் பார்க்கவும்).

ஆகவே நாம் சொல்வது ஸ்ரீதேசிகன் அருளிச்செய்தபடி பிரபத்தி செய்து - பரமபதத்தில் கிடைக்கப்பெறும் கைங்கரிய ஆனந்தத்தை- அங்குப்போல் இங்கும் இந்த பிரகிருதி மண்டலத்திலே - அவன் அனு பவமாகிற பேரின்பம் பெற்று வாழ வேண்டுமென்கிறுள். இதில் பகவத் பக்தியை தனியாகவும் கூடியிருந்தும் செய்ய வேண்டும். சேராத சிலரை எழுப்பி- அவர்களையும் சேர்த்துக்கொள்ளவேண்டும் என்னும் பெருநோக்கால்.

இது பெரியாழ்வாரை எழுப்பும் பாசுரம் - பிள்ளாய், பகவானு டைய ஸர்வரக்ஷகத்வத்தை மறந்து-பகவானுக்கு மங்களா சாசனம் இட்டவர் இவர். ஸ்ரீவசனபூஷணத்தில் ஞான விபாக கார்யமான அக் ஞானத்தினுலே வரும் அவை எல்லாம் அடிக்கழஞ்சு பெறும் - அக்ஞானமே, மங்களாசாஸனத்திற்கு மூலகாரணம் எனக் கொள்ள லாம். புள்ளரையன் - கருடனின் அம்சமான இவர்.

இவர் பாட்டில் வெள்ளை விளிசங்கு என்கிற சொல் பெரியாழ் வார் திருமொழி 4-1-7ல் காண்க. அதைப்போல பேய்முலை நஞ்சுண்டு என்பதும் சீதக்கடலில் என்னும் பாட்டுக்களில்; பிறங்கிய பேய்ச்சி முலை சுவைத்துண்டிட்டு - என்பதாலும தெரியும்; சகடாசுரவதம் - வெள்ளத்தரவில் என்கிற பதங்களும் உபயோகப்படுத்தப்பட்டன. பனிக்கடலில் பள்ளி கோளை என்கிற பாசுரங்களின் தாத்பரியம் - இங்கு சொல்வதுண்டு (நாள்களோர் நாலைந்து) திங்களளவிலே தானே நிமிர்ந்துச் சகடத்தைச் சாடிப்போய்;

மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல் மேல் நுழைந்தவண்டு
இன்னிசைக்கும் வில்லிபுத்தூர் இனிதமர்ந்தாயுன்னைக்கண்டார்
என்ன நோன்புநோற்றாள் கொலோ-இவனைப்பெற்றவயிறுடையாள்
என்னும் வார்த்தை யெய்துவித்த இருடிகேசா முலையுணாயே.
(பெரி. திரு. 2-2-6)

பெரியாழ்வார் தன்புதல்வியாகிற ஆண்டாளை மனத்தில் வைத்து கண்ணனுக்கு யசோதா பிராட்டி லீலாவிபூதிக்கு யேற்பட மானிடக் குழந்தையாகப் படுத்திருக்கும் கண்ணனை - உண்ணும்பிள்ளையைத் தாயறியும் என்கிறபடி - அம்மமுண்ணத் துயிலெழாயே - நிர்ப்பந் தித்து - முலையூட்டின பாசுரத்தைப்போல தாமனுபவிக்க ஆசைப் பட்டார். ஆண்டாளுக்கு சூக்ஷ்மமான இடை. விரி குழல்மேல் (மது பானத்திலே இழிந்துபோன) வண்டு - ஸ்ரீவில்லிபுத்தூரில் இனிது அமர்ந்தாய் - உன்னைக் கண்டார் என்ன நோன்பு நோற்றாள் கொலோ - நாட்டில் இருக்கும் பிள்ளை பெண்டுகள் போலன்றி ரூப குண சேஷ்டிதங்களில் நீ வேறுபட்டவள்.? உன்னைக் கண்டவர்கள் உன்னைப்போல பெண்டுகளை எங்கு பெறுவார்? இத்தகைய புகழை எனக்கு உண்டாக்கித்தந்த இருடிகேசா வைலக்ஷண்யத்தை உடைய வனே (கண்ணன் யசோதைக்கு; பெரியாழ்வாருக்கு ஆண்டாள்) தாய்ப்பாசுரமாகச் சொல்லும் வார்த்தை இது.) வண்டு என்பது பெருமாளைக் குறிக்கும்.

2) இல்லம் புகுந்து என் மகளைக் கூவிக்கையில் வளையைக் கழற் றிக்கொண்டு கொல்லையினின்றும் கொணர்ந்து விற்ற அங்கு ஒருத் திக்கு அவ்வளை கொடுத்து-நல்லன நாவற்பழம் கொண்டு நானல்லே னென்று சிரிக்கின்றானே; (பெ. தி. 2-9-10)

ஒரு மகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்தபுகழால்
திருமகள்போல வளர்த்தேன் செங்கண்மால்தான்கொண்டுபோனான்
பெருமகளாய்க்குடி வாழ்ந்து பெரும்பிள்ளை பெற்ற யசோதை
மருமகளைக்கண்டு கந்து மணாட்டுப்புறம் செய்யுங் கொலோ.
(பெ. தி. 3-8-4)

ஒரு மகள்-அத்விதியளாகவிருப்பாள் ஒரு பெண் பிள்ளையை. உடை யேன் – இவளைப் புத்ரியாக பெற்றதால் தனக்கு யேற்றமும்- அவளு டைய ஏற்றமும் சேர்ந்து சொல்லப்பட்டது. காரணம் - உலகம் நிறைந்த புகழால் – இவள் குணங்களைச் சொல்லி ஸ்லாகிப்பதால் - திருமகள் போல வளர்த்தேன். பிறந்து உடனே பகவானுக்கு அர்ப் பணம் என்று செய்துவிட்டேன்-எல்லோருக்கும் வைலக்ஷண்யத்துக்கு இவள் தான் உபமானம் - பூமியாய் - புருஷகாரத்வயுக்தையான இவளை - செல்வமாக வளர்த்தேன் – செங்கண்மால் தான் கொண்டு

போனான் - இவனை அடிக்கடி நோக்குவதால் அவன் செங்கண்மால் ஆனான்-இந்த வியாமோகமே அவனுக்கு நிரூபகம்.

ஆழ்வான் திருநாட்டுக்கு எழுந்தருளியபோது- எம்பெருமானார் விஸ்லேஷம் பொறுக்கமாட்டாமல் கதறினார். ஒரு மகள் தன்னை யுடையேன்-உலகம் நிறைந்த புகழால்-திருமகள் போலவளர்த்தேன்-செங்கண்மால் தானவனைக் கொண்டுபோனான்-என்று அருளிச்செய்தது -பிரஸித்தம். பெரிய பெண்பிள்ளையாய்க் குடிவாழ்ந்து- பெருமகள்-குடிவாழ்ந்து ரூப குண ஆத்ம குணத்தாலும் பரிபூரணனாய், என்ன நோன்பு நோற்றாள் கொலோ - இவனைப்பெற்ற வயிறுடையாள் - பெரும்பிள்ளை-தானும் பெருமகள்; பெற்றதும் பெரும்பிள்ளைக் காண்மின். மருமகனைக் கண்டு பிரியப்பட்டு - அவன் கொண்டு போனான் - முறை உறவு சொல்லி மருமகன் - என்று சொல்லி குறைதீர்க்கிறார். பெரும்பேறு பெற்றோம். இன்று இவள் வரலாற்றை இயம்பி இயம்பி காலம் கழிப்போம். அதுவே இவருக்கு ஜீவயாத்திரையாம். மற்றவருக்குச் சொல்லிக் காலத்தைக் கழிப்போம்.

ஸ்ரீமதழகியசிங்கர் அருளியது :—

பரம பக்தி கொண்ட ஒரு பெண்ணை எழுப்புகிறாள். எழுந்திரு. தூங்காதே. பெருமாள் ஒரு பக்ஷியைப்போல இந்த சரீரத்தில் விருந்து கொண்டு – ஒன்றையும் அனுபவியாமல் - பார்த்துக்கொண்டிருக்கிறான். த்வா ஸுபர்ணா என்கிற சுருதி. ஒன்று கர்ம பலத்தைப் புஜிக்கிறது. இது ஜீவன் மரம் என்பது தேகம். இன்னொரு பக்ஷி - ஈஸ்வரன். தான் ஒன்றையும் அனுபவியாமல் - பார்த்துக்கொண்டிருக்கிறது, பரமாத்மா இன்னொன்று. அது கர்ம சம்பந்தமில்லாத பரமாத்மா-எல்லாவற்றையும் (சாக்ஷியைப்போல) பார்த்துக்கொண்டிருக்கிறான்.

வெள்ளத்தரவில் துயில் அமர்ந்த கிருஷ்ணன் - அவனே யமுனையில் காளியனை அடங்கியது.

ராஸக்ரீடை - அங்கனா - மங்கனா - என்று இரு பெண்களுக்கு நடுவில் ஒரு கிருஷ்ணன் - சங்கநாமந்தரே மாதவோ - மாதவம் மாதவம் சாந்தரே சாங்கனா பாகவதம் (ராஸக்ரீடை) இதை ஸ்மரிப்பது - இவனே ஆதிவித்து. பகவத் சம்பந்தமும் இதில் சொல்லப்படுகிறது - அவளும் எழுந்திருந்தாள்.

ஸ்ரீமதாண்டவன் அருளியது :—

இது முதல் 15வது பாட்டு வரை, ஆய்ச்சிகளை எழுப்புதல். முதல் ஐந்து - நோன்புக்குத் தேவையான உபகரணங்கள்; பின் 10 பாட்டுக்களில் - உபகரணங்களை அனுபவிப்பவர்களை எழுப்புதல்.

எல்லோரும் கூடிச் சேர்ந்து அனுபவித்தல். அடியார்களின் குழாங்களை உடன் காட்டுவது என்று கொலோ! இதனால் சூசிக்கப்படுவது- வெவ்வேறு படிகளில் நிற்கும் அதிகாரிகள் என்பதாம் - பக்தியிலும் பகவத் அனுபவத்திலும் இருப்பவர்கள். வானமாமலை ஜீயர் இந்தப் பத்துப் பாட்டுக்களால், பத்து ஆழ்வார்களை எழுமதல் என்பர்.

புள்ளரையன் - இதில் புள் - ஞான அனுஷ்டானமுள்ளவர்களைப் பேசிற்று.

விளிசங்கின் - சங்கு திருமந்திரத்திலுள்ள பிரணவம்- இறைவன் கோயில் திருமந்திரம். பேய் முலை நஞ்சு - இதால் பிரகிருதியின் விளைவுகள்- மமகாரம், காமக்ரோதம் இத்யாதி. திருமந்திரத்தை வழிபட இவைகள் நீங்கும்.

ஏழாம்பாட்டு

கீசுகீசென்றெங்கு மானைச்சாத்தன் கலந்து*
பேசின பேச்சரவங் கேட்டிலையோ பேய்ப்பெண்ணே*
காசும் பிறப்புங் கலகலப்பக் கைபேர்த்து*
வாச நறுங்குழ லாய்ச்சியர்* மத்தினால்
ஓசைபடுத்த தயி ரரவங் கேட்டிலையோ*
நாயகப் பெண்பிள்ளாய் நாராயணன் மூர்த்தி*
கேசவனைப் பாடவும்நீ கேட்டே கிடத்தியோ?*
தேசமுடையாய் திறவேலோ ரெம்பாவாய் 7

மூவாயிரப்படி :- பகவத் விஷயத்தில் சுவடறிந்தே மறந்து உறங்குகிறாள் ஒருத்தியை எழுப்புகிறார்கள்.

போது விடிந்தது. எழுந்திராய் - என்ன விடிந்தமைக்கு அடையாளம்-என்ன என்ன? ஆனைச்சாத்தான் கீசு கீசு என்கிறது. அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை - என்று சொல்லுகிறபடி - இக் குழாத்திலினிமையுண்டானால் - அங்கும் இனிமையுண்டாகவது. (ஐதிஹ்ய) பகவத் விஷயத்தில் மெய்யே ருசி உண்டு என்று இருக்கையாவது - பாகவதர்களைக் கண்டால் உகக்குமென்று காணும் - என்று

நஞ்சீயருக்கு (ஆட்கொண்ட வில்லிதாஸர் அருளியது) இதனால் ஒருத்தி வாசலிலே சென்று "போது விடிந்துவிட்டது. எழுந்திராய்" என்ன விடிந்தமைக்கு அடையாளம் என்ன? ஆனைச் சாத்தனும் கத்துகிறது. இந்த த்வனி அடையாளம் என்கிறார்கள். முன் சொல்லப்பட்ட முனிவர்களும் யோகிகளும் - என்றதோடு - ஆனைச்சாத்தன் எனகிற பட்சி (வலியன்கள்) என்றதோடு - அவர்கள் ஹரி ஹரி என்றதோடு இவை கீச கீசு என்றதோடு வாசியற எல்லாம் உத்தேஸ்ய மாயிருந்தபடி - எல்லாம் கலந்து பேசினபடி - நீ கேட்கவில்லையா?

பேய்ப் பெண்ணே - மதிகேடி - பகவத் விஷயம் நன்று என்று அறியாமல் - பேசாமல் படுக்கையில் கிடக்காயே - எழுந்திரு. பட்சிகள் தன் குட்டிகளை நோக்கி - இரை தேடப் போகவேண்டும் என்று எழுப்புமாற்போல - இந்த பகவத் விஷயத்தில் ப்ரவீணர்களில் ஒருவனை எழுப்பு;-விரைவில் வருவாய் என்று சொல்வது போலவாம். இங்கு ஸ்ரீமத்ராமாயணத்தில் சுந்தரக்காண்டத்தில் வால்மீகி சொன்னார். "கரேணுஹஸ்தபிரதிம: ஸ்வயஸ்சோருரனுத்தம: வேபமான: ஸூசயதி ராகவம் புரத: ஸ்திதம் | பக்ஷீச சாகாநிலய: பிரஹ்ருஷ்ட புந:புந: சோத்தம ஸாந்த்வவாதி|| ஸீஸ்வாகதாம் வாசமுதீரயாண: புந:புந: சோதயதீவஹ்ருஷ்ட:"திரிஜடை தான் கண்டஸ்வப்ன விருத்தாந்தத்தை தன தோழிகளான ராக்ஷசிகளிடம் சொல்லி "ராக்ஷசிகளே, எந்த சீதை துக்கத்தை அடைந்திருக்கையில் - இம்மாதிரி ஸ்வப்னம் தெரிகிறதோ - அந்த சீதையைக் கடூரமான வார்த்தைகளால் சொல்வது பிரயோசனம் யாதுமில்லை. ப்ரணிபாதப்ரஸன்னு ஹிமைதிலி ஜனகாத்மஜா - அலமேஷாபரித்ராதும் ராக்ஷஸ்யோ மஹதோபயாத் - இந்த மிதிலைசகுமாரி ஒரு நமஸ்காரத்தினால் நம்மிடம் கோபம் தணிந்தவளாக ஆகிவிடுவாள். பெரும்பயத்திலிருந்து நம்மைக் காப்பதற்கு இவள் சக்திவாய்ந்தவள் - என்று சொல்லி முடிக்கும்போது - கிளையிலுள்ள கூட்டில்களில் வசிக்கும் காக்கை முதலிய பட்சிகள் மயிர்கூச்சலுடன் கூடி சப்திக்க - "அந்த ஸ்ரீராமன் வந்துவிட்டான், நீ எதிர்கொண்டு அழைத்து வா - சீதையை ஏவுவதுபோல விருக்கிறது"- என்றார் வால்மீகி. விடியற்காலையில் பட்சிகள் க்ரூரமாக சப்திக்காமல் அழகிய குரலுடன் சப்தித்தால் - நல்ல சகுனம் எனக் கருதப்படுகிறது. திரிஜடை ஸ்ரீராம தூதனாகிற ஹனுமான் ராமன் வருவதை ஊஹித்ததாகக் கருத்து. ஆகவே இந்தப் பாட்டில்பட்சிகளின் சப்தங்கள் நல்ல சகுனத்தையும் - கிருஷ்ண ஸம்ஸ்லேஷத்தையும் குறிக்கும்.

காசும்பிறப்பும் இடைப்பெண்களின் கழுத்தின் ஆபரணங்கள் அச்சுத் தாலியும் - பிறப்பும் ஆமைத்தாலியும் - கல கல வென்று ஓசைப் படுத்துகின்றன. இந்த ஆய்ச்சியர்கள் கைகளை அசைத்து - மத்தினால் தயிரைக் கடைவதின் சப்தமும் கேட்கப்படவில்லையா? நாயகப் பெண்பிள்ளாய், தலைநாயகமாக விருக்கும் பெண்ணே - நாராயணனின் மூர்த்தி அவதாரமான - கேசவனை (கண்ணனை) பாடவும் நீ கேட்டே கிடத்தியோ-இன்னும் உறங்குவாயோ? நாயகியாகவிருந்து எங்களை கிருஷ்ணனிடம் அழைத்துச் செல். தேசமுடையாய்- தேஜஸ் ஒளிநிறம்பினவளே - எழுந்து வந்து திற - கதவைத் திற - ஏல்·ஓர் எம்பாவாய்.

இங்கு சொல்லப்படும் விஷயம் கிருஷ்ண ஸமாதியில் யாவரும் மூழ்கியிருக்க - தயிர் கடையும்போதும் - தெருவில் விற்கும்போதும், "கிருஷ்ணனை வாங்கவில்லையோ" - என்று தயிரை விற்றுக்கொண்டு போக - தெருவின் வழியே கிருஷ்ண ஸ்மரணையில் மூழ்கியிருப்பார்கள். தயிர் என்று கூவுவதற்குப்பதிலாக - கோவிந்தன் - கிருஷ்ணன் என்று ஆத்மஸமாதியில் மறந்தவர்களாகக் கூவுவார்கள். (தீர்க்க சிந்தயிந்தியைப்போல) நாராயணன் - கேசவன் - ஆதிமூர்த்தி - வாத்ஸல்யத்தினால் ரக்ஷிக்கக்கடவன் - ஆச்ரிதவிரோதி நிரஸனம் செய்பவன். இந்த கோபிகன்னிகைகளையே அவனும் ஸதா நினைத்திருப்பான். தீர்க்க சிந்தயிந்தியைப்போல இவனும் அவர்களையே நினைப்பவன் - காமுறுகன். கோபிகைகள் நினைப்பது அவனுடைய அருள் அருளே யல்லது மற்றது அருளல்ல. ஆனால் அந்த அருள் சீக்கிரம் கிட்டமாட்டேன்கிறது. அதுவரை ஆவியும் தரிக்கமாட்டேன்கிறது நான் என்ன செய்வேன்? நம்மாழ்வார் 10-3 கண்ணு உன்னைக் காணுமல் பகல் ஆயிரம் ஊழியாகிறது. நீ வந்ததும் எங்களை தாமரைக் கண்களால் நோக்கும்போது - கொலை செய்வதைக் காட்டிலும்-பிரிந்துபோவது நன்று காண் என்கிறாள்." தகவிலை தகவிலையே கண்ணு" என்கிறாள். கண்ணபிரான் அருகேயிருக்கும்போதே-'இப்படி அலற்றலாமா?' என்று கண்ணன் கேட்டால் "நீ இப்படி கூடியிருக்கிறாய். சிறிது நேரத்தில் பிரியப்போகிறாய். ஆகவே இப்போது கூடியிருப்பது ஸம்ஸ்லேஷமாக எண்ணத்தகுமோ?" வரப்போகும் பிரிவை நினைத்துப்பார்த்தாலே - விரகவேதனை தாங்கமாட்டாமல் - பிராட்டி புலம்பி - அழ - கண்ணன் அவளைத் தேற்றித் தழுவுகிறான். "இப்படி அணைக்கையும் பிரிதலுக்கு" என்று அவள் சொல்லி அழ, கண்ணன் "ஒரு பகல் பொழுதுதானே - நான் பிரிகிறேன்" என்று கண்ணன் சொல்ல—"அந்தத் தனிமையே எங்களைக் கொல்லுமே, பொல்லாதது—பொறுக்கமுடியாதது". என்றனள். கண்ணன் - இதென்ன அப்படிச் சொல்கிறாய்.

"நானும் உன்னை விட்டுப் பிரிந்தால் உயிர் தரிப்பேனோ - உங்களால் ஒருவேளை முடியும் - என்னால் பிரிவைத் தாங்கமுடியாது", என்று பிரணயத்தின்மேல் எல்லை நிலத்தில் நிற்க - நாயகி "இந்த கள்ளப் பணி மொழிகள் தாம் எம்மை நீராய் உருக்கி - கரையப் பண்ணுகின்றன. சரி - கண்ணா - நீ போ. போகுமுன் உன் திருக் கைகளை எங்கள் தலைமீது வைப்பாய். கடல்போல விருக்கிற கண்களால் எங்களைக் குளிர நோக்கு;" கண்ணன், "நான் பசு மேய்க்கப் போகவேண்டாமா?"

கோபிகை :— செந்தாமரை போன்ற உன் கண்களையும் வாயையும் - நடையழகுகளையும் காட்டி - வலையில் அகப்படாதவர்களையும் அகப்படவைக்கிறாய் - என்னை விட்டு வேறொரு பெண்ணிடம் அபிமானித்தாயாகில் எனக்கு அது பொறுக்கவொண்ணாத துக்கமாயினும் அதை நான் துக்கமாக பாவிப்பதில்லை. கானகத்திலே அசுரர்களால் உனக்கு ஆபத்து நேரிடும். ஆகவே நீ உகக்கும் ஆய்ச்சிமார்களோடு திரிந்து - உன் தனி திருவுள்ளம் ஆனந்திக்குமளவில் நாங்கள் வியக்க இன்புறுதும் (ஆனந்தப்படுகிறோம்). பிறரைக் காதலிக்குமளவில் பொறாமையேற்படும்படியான பெண்மையை உடையோமல்லோம் - உன் உகப்பிற்கு புறம்பாய் வரும் ஸ்திரீத்வம் எங்களுக்கு வேண்டாம். நீ உகந்தாரை உகப்பவர்களேயன்றி உன்னை உகக்குமவர்கள்ளல்லோங்காண்".

மணவாளமுனிகள் ! இங்கு சொல்லப்பட்ட புருஷார்த்தத்தைச் சொன்னால் - மூன்றில் சுணுக்கியவைந்தையும் என்கிற சூர்ணிகையில் (211 ஆசா. ஹ்ரு) - எம்மாவொழிவில் நெடுவேயென்கிற ஸ்ரீசூக்த்தி அனுசந்திக்கத்தக்கது. "உன்தன் திருவுள்ளமிடர் கெடுந்தோறும் நாங்கள் வியக்க - இன்புறுதும் எம்பெண்மையாற்றோம்." அதாவது உனக்கு அபிமனதகளானவர்களோடு திரிந்து உன் திருவுள்ளத்துக்கு அனுகூலர்களாக ஆவோம். வேறு சிலரோடு சேர்க்கையிருத்தல் - அதனால் எங்களுக்கு பொறுக்கமாட்டாத பெண்மை வேண்டாம்.

கண்ணன் : "பெண்ணே! நான் ஒரு காமுகன் என்று சொல்கிறாயோ ?—

நாயகி : "நீ காமுகனோ இல்லையோ எங்களுக்குத் தெரியாது. அசுரர்களால் ஆபத்து வந்தால் நீ பிணங்குவாய், நீயோ தனிமையாகவிருக்கிறாய்."

கண்ணன் : தான் போனால் அன்றோ இவள் இப்படி பயப்பட வேண்டும். இதென்ன அன்புதான் என்று வியந்து நின்றான்.

மங்கையராய்ச்சியராய்ந்தமாலை அவனோடும் பிரிவதற்கிரங்கி, தையல் அங்கவன் பகநிறையேய்ப்பொழிப்பான் உரைத்தன இவையும் பத்து அவற்றின் சார்வே என்றார் (நம்மாழ்வார் 10-3-11) திருவாய்மொழி.

ஸ்வாபதேசம் (உட்பொருள்)- பெரியாழ்வாருக்கு அடுத்து முந்தி னவரான குலசேகராழ்வாரை உணர்த்தும் பாசுரம் - மூன்று விளிகளால் அதாவது- பேய்ப் பெண்ணே; நாயகப்பெண் பிள்ளாய், தேசமுடையாம் - என்பதாம். பெருமாள் திருமொழி 3ல் 8ம் பாட்டு - "மெய்யில் வாழ்க்கைப் பதிகத்தில்-பேயரே எனக்கு யாவரும் யானுமோர் - பேயனே எவர்க்கு மீது பேசியென்? ஆயனே அரங்கா, என்றழைக்கின்றேன் - பேயனாயொழிந்தேன் எம்பிரானுக்கே- அற்ப பலன்களை எம்பெருமானிடம் நாடுபவர் பேயரே - மதிகெட்டவரே. இப்படிப்பட்ட கும்பலில் நானும் ஒரு பேயனே - இப்படி நானே என்னைச் சொல்லிக் கொள்வதால் யாது பயன்? ஆயனே - அரங்கா - என்று அழைக்கிறேன். எம்பிரானுக்கே பேயனாய் ஒழிந்தேன் - பித்தேறி கிடக்கிறேன்" என்றார். நான் பிறர் ஏசும்படி-மதிகேடனாய் பேயனாகிலும் - எம்பிரானிடம் பித்துக் கொண்டதால்மட்டும் பேயனாகிறேன்.

நாயகப் பெண் பிள்ளாய். இந்த குலசேகராழ்வார் ஆழ்வார்களுள் நாயகமாக - சிறப்புற்று இருப்பதற்குக் காரணம் (1) அவதார பிரயோசனம் (பெரு.தி. 1-10) வன்பெருவானக முய்ய அமரரும் உய்ய மண்ணுய்ய - மண் உலகில் மனிதர் உய்ய — துன்பமிகு துயரகலயர் வொன்றில்லாச் சுகம் வளர—அகமகிழும் தொண்டர்வாழ - என்றார். (2) தாஸ்ய விருத்தியே பெரும் சம்பத்து என்றார். காதல் செய் தொண்டர்க்கு எப்பிறப்பிலும் காதல் செய்யும் என் நெஞ்சமே-(3) தாஸ்யவிரோதிகள் எப்படி ஒழியும்? தாஸ்யர்களோடு கூடுவதினால்; உண்டியே உடையே உகந்தோடும். இம்மண்டலத்தொடும் கூடுவதில்லையான். பேயரே எனக்கு யாவரும் யானுமோர் பேயனே அரங்கா என்று அழைக்கின்றேன். பேயனாய் ஒழிந்தேன். எம்பிரானுக்கே (4) பெருமாள் ஸம்பந்தம் பெரிது - கோனேரி வாழும் குருகாய்ப்பிறப்பேனே - அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்து இயங்கும்படியாய் கிடந்து உன்பவளவாய் காண்பேனே - வேங்கடப்பெருமாள் சம்பந்தம் வேண்டினார். (5) பகவானை அனுபவிப்பதில் பல சம்பந்தங்களை

வேண்டினவர். தாய் எம்பெருமான் - தான் குழந்தை - கணவன் மனைவி - அரசன் பிரஜை, வைத்யன் நோயாளி - மரக்கலம் பறவை - சூர்யன் தாமரை - காளமேகம் பயிர் - கடல் நதி-ஸ்வாமி தாஸன் நின்னையேதான் வேண்டி நீள் செல்வம் வேண்டாதான் – நிற்பனடியேனே - (6) சிருங்காரரஸத்தில் பிரணய ரோஷம் கொண்ட கோபிகைகள் கிருஷ்ணன் வரவுபார்த்ததுபோல. (7) தேவகியின் புலம்புதல் - யசோதை கிருஷ்ணனை வளர்த்ததற்கு - திருவினையில்லாததாயாரில் கடையாயினதாயே - எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்றாளே-யசோதை தொல்லை இன்பத்தின் இறுதியைக் கண்டாளே; தவழ்ந்தெழுந்து தளர்ந்ததோர் நடையதை கண்டாளே இத்யாதிகளால் கடைப்பட்டேன். "வெறிதேமுலை சுமந்தேன்". (8) கௌஸல்யையாக ராமனைச் சீராட்டுதல் (9) வனம்போன ராமனைக் குறித்து கௌஸல்யையின் புலம்பல் - (10) ராமாயணம் முழுவதையும் பதினொரு பாட்டுக்களால் - தில்லை நகர் திருச்சித்திர கூடம் தன்னுள் திறல்விளங்குமாருதியோடமர்ந்தான் தன்னை, கோழியர் கோன்குடைக்குல சேகரன் சொல்" என்று முடித்தார்.

ஆழ்வாரின் வரிசையில் முதல் ஐவர் - பொய்கை-பூதத்தார்-பேயாழ்வார் மழிசையர் மாறன்; பட்டநாதன், கோதை தொண்டரடி - பாண்பெருமாள் - கலியன் என்பின்னே ஐவர் - இந்த இரு ஐவர்களுக்கும் நடுவே குலசேகரன் - ஆகவே நடுநாயகம்.

தேசுஉடையாய் பிறப்பில் க்ஷத்திரிய பலத்தையும் வளர்ப்பில் பகவத் பாகவத சம்பந்தத்தினால் பிரஹ்ம ஜன்மமும் இரண்டும் கூடியவர். பகவத் பாகவத சேஷத்திற்கு அனுகூலமான பிறப்பே தேஜஸ் என்று சொல்லப்படுகிறது. ஆசார்ய ஹ்ருதயம், மண்ணாட்டிலாராகி வெவ்விழிவிற்றானாலும். ஆழியங்கை பேராயற்கு ஆளாம் பிறப்பு - உண்ணாட்டுத்தேசன்றே- என்கிற சூர்ணிகையில்-உண்ணாட்டுத் தேசன்றே - என்ற பெரிய திருவந்தாதிப்பாசுரப்படியும் பகவத் சேஷத்வத்துக்கு அனுகூலமான வாழ்க்கை தேஜஸ் என்பதாம். மண்ணாட்டிலாராகிவெவ்விழிவிற்றானாலும். ஆழியங்கைப் பேராயற்கு ஆளாம்பிறப்பு- உண்ணாட்டுத்தேசன்றே என்று பெரிய திருவந்தாதி 79ஆம் பாட்டு - ஆழியங்கைப்பேராயற்கு ஆளாம்பிறப்பு என்பது காண்க. கேசவன் - கேசியைக் கொன்றவன் - கிருஷ்ணனாய் வந்து அவதரித்தவிடத்திலே கேசிவந்து நலியப்புக அவனை கிருஷ்ணன் கொன்றான் என்று சொல்லியும் - அதுக்கும் அவள் பேசாதே கிடந்தாள். "நீ கேட்டேகிடத்தியோ" என்றனர். போதும்-எழுந்திருந்து உன் வடிவைக் காட்டி- எங்களை அனுபவிக்கப் பாராய்.

*ஸ்ரீமதழகியசிங்கர் அருளியது :-*

*எழுந்து வந்த பெண்ணுடன் அவன் அடுத்த வீட்டில் உள்ள இன்னொரு பெண்ணை எழுப்புகிருள். பக்ஷியின் கூக்குரல் கேட்கப்படுகிறது. இதனைக் கிருஷ்ணனே வந்திருப்பதாக எண்ணி - இதர பெண்கள் சொல்கிருர்கள் - "நீ உடனே எழுந்திரு - பேய்ப் பெண்ணே இதென்ன பேய் தூக்கம்" என்கிருர்கள்.*

*ஸ்ரீமதாண்டவன் அருளியது :-*

*ஆனைச்சாத்தான்-பொய்கை ஆழ்வாரைக் குறிப்பது இப்பாட்டு தேசிகர் - காஞ்சி வரதனை மங்களாசாஸனம் செய்திட்ட தேவராஜ பஞ்சாஸதியை நினைப்பது. கேசவன் - கேசியைக் கொன்றவன். தலைமயிர் அழகையுடையவன். பாற்கடல் கடையும்போது - அந்தக் குழல் அழகு தெரிந்தது. திருமங்கை ஆழ்வாரின் பாசுரம் ஸ்மரிப்பது (திருநெடுந்தாண்டகம் 21ம் பாட்டு); மை வண்ண நறுங்குஞ்சிக் குழல் பின் தாழ, மகரம் சேர் குழையிருபாடிலங்கியாட, மேலும்; திருப்பார்த்தன் பள்ளி பாடுவாளே - (தாய்மொழிந்த மாற்றம்) என்கிற பாசுரங்களையும் நினைப்பது "தேவதேவன் என்று ஓதி, பல்வளையாள் என் மடந்தை" (பெ தி. 4-8 4)*

*பேய்ப் பெண்ணே - தேசமுடையாய் என்று அழைப்பதால் பகவத் விஷயம் நன்கு தெரிந்தவள். தலைவியாகவிருக்க யோக்யதை பெற்றவள். அவள் தூங்குகிருள். அதாவது ஆர்வமுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களைச் சொல்லுதல். அத்தகைய பெண்ணுகிய நீ எழுந்திருந்து எங்களை உய்விக்க வேண்டும். பேய்ப்பெண்ணே - கூரத்தாழ்வானையும் சொல்லும். யாதவாப்யுதயத்தில் அக்ரூர விஜயத்தையும் பார்க்கவும். திருவடிகளைச் சேவித்தல் மிக்க பலனையளிக்கும்.*

எட்டாம் பாட்டு

கீழ்வானம் வெள்ளென் றெருமை சிறுவீடு*
மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்*
போவான் போகின்றுரைப் போகாமற் காத்து *உன்னைக்
கூவுவான் வந்துநின்ரேம்* கோதுகலமுடைய

பாவா யெழுந்திராய் பாடிப் பறைகொண்டு*
மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய*
தேவாதி தேவனைச் சென்றுநாஞ் சேவித்தால்*
ஆவாவென் றாராய்ந் தருளேலோ ரெம்பாவாய். 8

இதுவரை சொன்ன பெண்கள் கிருஷ்ணனிடம் மையல்கொண்டவர்கள். எட்டாம் பாட்டில் எல்லோரும் வந்து அழைக்கும்படி கிருஷ்ணனுலே வலுவில் வந்து வேண்டத்தக்க - மேம்பாடுடையவளான (செல்வக்கிடப்பு) வேறு ஒருத்தியை எழுப்புகிறார்கள் (மூவாயிரப்படி).

கீழ்வானம் வெளுத்துவிட்டது. அந்த ஒளி உங்கள் முகத்திலும் பிரதிபலிக்கையாலே கிழக்கு அதிக வெளுத்ததாகதாயிற்று - இன்னொரு அடையாளம் பொழுது விடிந்ததற்கு - எருமை சிறுவீடு மேய்வான் பரந்தனகாண் - எருமைகள் பனிப்புல் மேய்க்காலத்தில்விட்டு வயல்கள் எங்குல் பரந்தன எங்கும் - சிறுக விடப்பட்டதால் இந்த எருமைகள் ஓடிப்போயின. கண்ணன் வீடு செல்லும் எங்களைவிட்டு மற்ற பெண்களையும் நம்மை விட்டுப்போகாமே - காத்து (தடுத்து) உன்னைக் கூவி அழைப்பதற்காக உன் வாசலில் சேர்ந்து நின்று கொண்டிருக்கிறோம். கோது கலமுடைய (பெரிய அவா பெற்றிருந்தும் - வெளிக்காட்டாமல் – பதுமை போன்றிருப்பவளே); எழுந்திராய், நாம் பாடி - பறையைக் காரணமாகக் கொண்டு - மாவாய் பிளந்தானை (கேசி என்னும் குதிரையைப் பிளந்தவன்) மல்லரை மாட்டிய (மாளச்செய்த) தேவாதிதேவனை நாம்போய் அவனிடம் சென்று அவனை-மாவாய் பிளந்தானை - கேசவனை; மல்லரைமாட்டிய கிருஷ்ணனை - தேவாதிதேவனை, நாராயணனைச் சென்று சேவித்தால் -"ஹா, ஹா, நீங்களா வந்தீர்கள் என்று கோலாஹலமாய் எதிர்கொண்டு திரவிசாரித்து எங்களுக்கு என்ன வேண்டுமென்று ஆராய்ந்து அருள் செய்வான்" என்றார்கள்.

இந்தப் பாசுரத்தில் கிருஷ்ணனுக்கு அந்தரங்கையான ஒருத்தியை உணர்த்தும் பாசுரம் - அதனால் கோதுகலமுடைய (கண்ணபிரானுடைய ஆசையைத் தன்னிடத்துப் பெற்றுள்ள என்றபடி); பகவான் ஒருக்காலும் பக்தனைக் கைவிடான்-அதற்குள் பக்தனுக்குப் பொறுக்கும் சக்தியில்லை. அச்சமயம் அவன் பொறுத்திருமல்-பகவானிருக்குமிடம் சென்று சேவித்தால், நாம் பயன்பெறலாம். அதனால் போவான் போகின்றாரை - பகவானை அடைய அதே ஜீவயாத்திரை

யாகக் கொண்ட, பிரயோஜனமாகக் கொண்ட - எல்லாப் பிள்ளை களும் கூடிவந்து உன் வாசலில் வந்து நின்றோம். நீ எழுந்திராய். எங்கள் புருஷார்த்தம் நீ வந்தால்தான் நிறைவேறும். விபீஷணன் பெருமாள் பக்கம் சென்று காரியம் கொண்டான். அர்ஜுனனும் துவாரகைக்கு எழுந்தருளி கண்ணனை வேண்டி தன் சாரதியாக ஆக் கிக்கொண்டான். நீயும் வந்தாயாகில் - நாம் எல்லோரும் ஒன்று சேர்ந்து, பாடிப்பறைகொண்டு - மாவாய் (கேசியைப்) பிளந்தானை - தேவாதிதேவனை சென்று சேவித்தால் - நாம் வந்திருக்கிறோம், என்று ஆராய்ந்து-நம் குறைகளைப் போக்குவான். அருளும்-என்றனர் உன்னை முன்னிட்டுக்கொண்டு கிருஷ்ணனிடம் சென்றால் - எங்கள் காரியம் நிறைவேறும். ஏனெனில் நீ கிருஷ்ணனுக்குப் பிரியமான வள் அன்றோ?

தேவாதிதேவனை - அபலைகளிடம் தயை காட்டுவானோ என்று சந்தேகம் வேண்டாம். ஜகத்காரணபூதன் என்றும் சரீரஆத்மா பாவத்தினால் உபாஸ்யம் செய்யத்தக்கது. அதனால் அவனிருப்பிடம் செல்வோம். பரதாழ்வான் பட்டபாடு நாம் படுவோம்—அவன் காரியம் செய்யாதுபோனால், செய்தானாகில், "காகத்துக்கு இரங்கின வன், நமக்கும் இரங்குவான்" என நினைப்போம். கோபிகைகள் சிருங்காரவழியில் கிருஷ்ணனை அடைய முயன்றனர் - பிரணயித்வம் போனாலும், ஆர்த்த ரக்ஷணம் தவிராது. ஆகவே எழுந்திரு.

உட்பொருள் : - கோதுகலமுடைய - ஆசையையுடைய எம் பெருமானுக்கு இவளிடம் ஆசை அதிகம் என்பது. அதை, அதாவது எம்பெருமானிடத்தில் ஆசையையுடைய, எனக் கொள்வதைக் காட்டிலும் - எம்பெருமானுக்கு இவளிடம் ஆசை அதிகம் என்று கொள்வதுமேல். ஏனெனில் சேதனலாபம் எம்பெருமானுக்குபெரிய லாபமாகும். இந்த பாட்டு நம்மாழ்வாரை உணர்த்தும் பாசுரம். பட்டர் "கிருஷ்ண குதூஹலமே நம்மாழ்வாராக வடிவெடுத்தது" என்றார் - ரிஷிம் ஜுஷாமஹே கிருஷ்ண திருஷ்ணாதத்வமிவோதிதம் - என்றார். சேதனலாபம் எம்பெருமானுக்கே - தன் சொத்து தவறிப் போனால் அதைப் பெறுவதற்கு ஸ்வாமி அல்லவோ முயலவேண்டும். சொத்து ஸ்வாமியைத் தேடவோ! அடியார்களை ரக்ஷிப்பது பகவத் கடமை. ஸர்வஸ்வதந்திரரான பகவான் தன் பெருமையை தாழவிட் டுக்கொண்டு - என்னிடம் வரவேண்டும். நான் உன்னைக் கூப்பிட்டு வரவழைப்பது - உன் மேன்மைக்குத் தகுதியோ? பகவான் முயற்சி செய்தால்தான், சேதனன் உஜ்ஜீவிக்கிறான். மழை கதிர்களைத் தேடிச் செல்லும். கதிர்கள் மழையை நாடிச்செல்லுமோ! இதற்குக் காரணம் பகவத் ஸ்வரூபம் கருணை. நம்மாழ்வார் சொன்னார்,

"பிரபோ - பரமபதத்திலிருந்து நீ பூமிக்கு வந்தாய். வானமாமலையி லிருந்து திருப்புளிங்குடி வந்தாய். அங்கிருந்து என் நெஞ்சில் புகுந் தாய். நீ அனுஷ்டித்தமான உபாயம். மாதா பிதா போன்றவன், அன்று ஏழு உலகம் உண்டு ரக்ஷித்தாய். இன்று என் நெஞ்சுக்கு அவனைத் தவிர வேறு விஷயமில்லை'' கருளப்புட்கொடி - சக்கரம் படை கொண்ட வானநாட - கார்முகில் வண்ணா, பொருளல்லாத என்னைப் பொருளாக்கி அடிமை கொண்டாய். தெருள்கொள் நான் மறைவல்லவர் பலர் வாழ்ச்சிரீவர மங்கல நகர்க்கு. அருள்செய் தங்கிருந்தாயறி யேனொருகைம்மாறே; பெருமானுடைய பெருமைக்கு-கருடக்கொடி-சக்கரம் சங்குபடை. இவருடைய தாழ் மை - பொருளல்லாத என்னைப் பொருளாக்கி ஆட்கொண்டாய், பொருள் - வஸ்து.

இவருடைய ஆத்ம வஸ்து முன்பே உண்டாய்-அதற்கு ஒரு உத் கர்ஷம் (ஏற்றம்) பண்ணிவிட்டாயோ? காரணம்-உன் விஷயீகாரம்- விஷயீகாரத்திற்குமுன்பு அஸந்நேவபவதி - விஷயீகாரத்திற்குப் பின்பு - ஸந்தமேநம் என்று உஜ்ஜீவிக்கும்படி பண்ணினாய். நித்திய சித்தர் செய்யக்கூடிய கைங்கர்யத்தை யன்றோ-என்னைக்கொண்டது. அடிமை கொண்டாய் - பொருளாக உண்டாக்கினாய். பெருமக்களுள் ளவர் - நித்யசூரிகள் செய்யும் கைங்கரியத்தை அன்றோ-என்னைக் கொண்டது! அதனால் பகவான் கார்முகில், பிரதிஉபகாரம் நான் அறியேன். மேலும் செய்யப்படவேண்டியதை நீயே செய்ய வேண் டும். ஹேதுவில்லை. நீர் (என் நெஞ்சில்) உள்ளீராகையாலே - செய் தோம் - என்றும் சொல்லாகவதில்லை. உன்னால் – பொருளில்லாத என்னைப் பொருளாக்கியிரே அடிமை கொண்டது. அறியேன் ஒரு கைம்மாறே-நான் உனக்கு ஒன்று செய்தேனாக அறிகிறேலேன்,முன்பு என்னை ஆட்கொண்டதற்கு ஹேதுவில்லை. இனிச் செய்யப்போகும் தன்மைகளுக்கும் ஹேதுவில்லை. அவ்விதமிருப்பது - உன் ஸ்வரூபம். என் ஸ்வரூபம் உனக்கு கைங்கர்யம் செய்வது அதனால் ஆழ்வார் சொன்னார், "உன் திருவடிகளே சரணம்" என்றிருக்கும்படி என்னை பண்ணியருளின மஹாஉபகாரத்திற்கு கைம்மாறு (பிரதி உப காரம்) இல்லை என்றார்.

ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய் உனக் கோர் கைம்மாறு நானொன்றிலேன் எனதாவியுமுனதே - தெய்வ நாயகனே (தேவாதி தேவனே). ஆறு - உபாயம். உபாயம் உபேயம் இவை இரண்டிலும் உன் திருவடிகளே ஸ்வபாவமாகவே யாம்படி பண்ணித் தந்தாயே, என்று பிள்ளான் பணிக்கும். இவை இரண்டா லும் - உபாயத்தையேசொல்கிறது என்பார் பட்டர்.

நோற்ற நோன்பிலேன் என்று தொடங்கி - உபாயாந்தர சூன்யதையை முன்னிட்டு - உபாய நிஷ்கர்ஷம் பண்ணுகிற திருவாய்மொழியாகையாலே அத்தையே நிகமிக்கிறது. சரி, உமது ஆவியைத் தாருமே எனில் - ஆவியும் உனதே! ஆத்ம ஸமர்ப்பணம்; கள்வா? "என்னது" என்று அபிமானித்து பெருமாளிடம் கொடுத்தால் களவு - உம்மதான ஆத்மாவைத் தந்தால் என்ன? நின்பாதமே - எனதாவியுமுனதே என்று ஆப்பான் திருவழுந்தூர் அரையர் 'நின்பாதமே' என்று சபதமாக்கி நிர்வஹிப்பர். அப்போது ஆறெனக்கு - சரணுக - திருவடிகளாக - எனக்கு உபாயம் திருவடிகளாக - என்பர். நம்பிள்ளை "பகவானே, நீயோ பரிபூர்ணன்,கைநீட்டி பிரதிக்ரஹம் செய்யுமாப் போலே, உனக்கு ஒன்று செய்து தலைக்கட்டிப்போமோ?" அதாவது நான் அடையவேண்டியது அடையச்செய்யவேண்டியது உன்திருவடிகளே. இதனுல் ஆபிமுக்யம் அவசியம். எம்பெருமானுக்கு இதுவே "கிருஷிபலித்ததாம்". அனுமதியும் இச்சையும் பகவத் விஷயத்தில் ஹேதுவினுலாயேற்படுகிறது? பகவானுடைய அனுக்ரஹத்தாலே தான். (நம்மா., திருவா. 1-7-7) யாஞெட்டி யென்னுவிருத்துவம் என்றிலேன். பகவத் சேஷத்வம் ஆத்மஸ்வரூபம், பாகவத கைங்கரியம் பரமபுருஷார்த்தமாம். திருமங்கைமன்னன் சொல்வார்,உற்றது முன்னடியார்க்கடிமை (8-10-3) நோற்றநோன்பிலேன் (திருவாய் 5-7-1) என்பதில் விளக்கம் ஈட்டில் பார்க்கவும். வெகு அழகு.

பொருளல்லாத வென்னைப் பொருளாக்கி அடிமைகொண்டாய் என்கிற நம்மாழ்வாரின் பாசுரம் (திருவா. 5-7-3)ம் ஆற்றகிற்கின்றிலேன்; உனக்கோர் கைம்மாறு நான் ஒன்றிலேன் என்பதையும்; (இவரை அடிமை கொண்டால் அவன் பேறுயிருக்கும்) என்பதையும் நோக்கவும்; "திருமங்கை 4-9-7ம் எந்தை தந்தை— தொண்டரோர்க்கே" என்பதையும் காண்க.

கைம்மா றுன் பொழித்தாயென்று கைதலைபூசலிட்டே, மெய்ம்மாலா யொழிந்தேன் எம்பிரானுமென்மேலானே என்கிற பாசுரத்தினுல் நம்மாழ்வார் சொல்கிருர் - திருஷ்ணை இருவகைப்படும் - கிருஷ்ணனிடம் ஆசை; கிருஷ்ணனுடைய திருஷ்ணை (ஆசை). பகவான் வெளியிட்டார் கீதையிலும் "ப்ரியோஹிஞானிநோத்யர்த்தமஹம்".

"நான் பெருமாளிடம் குதூகலம் கொண்டேன். பெருமாளும் என்னிடம் குதூகலம் கொண்டான். ஆனுல் அவனது குதூகலம் எனதைவிட மிகமிகப் பெரிதே" என்று அருளிச் செய்தார் நம்மாழ்வார்.

பாவாய் : நாயாகியாகவிருந்த நம்மாழ்வாருக்குப் பொருந்தும். திருவாய்மொழியில் 'சூழ்வினையாட்டியேன் பாவையே- என்பாவை போயினித் தண்பழனத்திருக்கோளூர்க்கே-என்று தம்மையே பாவையாகச் சொல்லிக் கொண்டார். (6-7-3)

எழுந்திராய் : வீற்றிருந்த திருக்கோலம். அர்ச்சையில் ஆழ்வாருக்கு - உட்கார்ந்திருப்பவரை - எழுந்திராய் என்பது.

கீழ்வானம் : வெள்ளென்று - வகுளபூஷணபாஸ்கர உதயமாதலால் - கலியின் உதயகாலத்தில் அவதரித்தவராதலால் கீழ்வானம் என்றபோதே.

மேல்வானமும் : நினைவுக்கு வரும். அதாவது - உபயவிபூதி - நித்ய - லீலா விபூதி. ஓராயிரத்துளிப்பத்து உரைக்க வல்லார்க்கு வைகுந்தமாகும். விண்ணுமாள்வார் மண்ணூடே என்பதுபோல. (5-3-11)

வீடு - மோக்ஷம். சிறுவீடு - கைவல்யம். 4-1-10 குறுகமிக உணர்வத்தோடு நோக்கி, என்கிற பாசுரத்தில் ஆராயிரப்படி சொல்லியது, 'அஸ்திரத்வாதிதோஷாஸம்பிந்நமான கைவல்யத்தைபிராப்யமாகப் பற்றினுலோ எனின் - பிராக்கிருத விஷய வைராக்யபூர்வமாக ஞானயோக நிஷ்டனானவனுக்கும் எம்பெருமானை ஆஸ்ரயித்தாலல்லது ஆத்மாவலோகநம் விரோதி கர்மம் போகாது. பகவத் ஸமாஸ்ரயணத்தாலே ஆத்மாவலோகனம் பிறப்பது. பிறந்தாலும் அந்திமஸ்ஸ்திதியில் பகவத் அனுஸந்தானம் பண்ணி, பிரதிபந்தகத்தை போக்காது ஒழியில் - பின்னை ஆத்மயாதாத்மய ஆவிர்பாவ லக்ஷண மோக்ஷம் சித்தியாது. முக்யமான மோக்ஷமாகிறதும், அந்த பகவத் கைங்கர்யமே - இப்படி கைவல்ய உபாயத்திலும், பகவத் ஸமாஸ்ரயணம் பண்ண வேண்டுகையாலும் பகவத் கைங்கர்யத்தாலே - பரமமோக்ஷமாகையாலும், அந்த பகவத் கைங்கர்யம் - என்கிற ஆசையில், அத்யற்ப சுகமான கைவல்யத்தை விட்டு-பகவத் கைங்கர்யமே பரமபிராப்யமாகப் பற்றுங்கள்'' என்றார்

மொத்த அர்த்தம், ஐஸ்வர்யம்-ஸ்வர்க்கானுபவம் நிலையற்றது. இதுபோல ஆத்மானுபவமும். அது நிலைநின்ற அனுபவம் யென்றாலும், பகவத் ஆனந்தத்தை பெற, இது அதிலும் விடச்சிறியபுருஷார்த்தமாகும். ஆகவே பகவானைப் பற்றப்பாருங்கள். ஆத்மானுபவம் என்பதாவது, பாஹ்ய விஷயங்களிலிருந்து மனத்தை திருப்பி பிரத்யாகாத்மாவிடம் செலுத்துவது. கண்ணையிட்டுக்கண்ணைப் பார்த்தார்போலயிருப்பது பகவத் உபாஸனமில்லையாகில்-ஆத்மா

னுஸந்தானம் பண்ணக்கூடாது உபாஸனம்தான் சுகரூபமாதலால், பயனுகும். தேவோஹம் மனுஷ்யோஹம் என்கிற புத்தியுண்டாகும். தர்மபூத ஞானத்தினுலே ஞானஸ்வரூபமான ஆத்மாவை அறிதல். கடைசியாகப் பற்றவேண்டியது ச்ரியப்பதி. ஈஸ்வரனளவு போகாதே - அணுவான ஆத்மா விஷயத்தில் இழிந்திருப்பது.

பாவாய்-பதுமைபோலப் படுத்திருக்கிருயே.

ஆண்டாள் கண்ணனின் கடாக்ஷத்தைப் பெற முன், அவனது அன்புக்குப் பாத்திரமாயிருந்த கோபஸ்திரிகளை தன் தோழிகளாக நினைத்து இப்பிரபந்தம் அருளிச்செய்கிருளாகையால்- முன்னமிருந்த கோபஸ்திரிகள் தானுகவும்-தன் தோழிகளாகவும் மறுபிறவி எடுத்து கண்ணனை நோன்பு மூலம் ஆராதிப்பதாக நினைத்து - காலத்திற்கு முன் நடந்த எல்லாச் செயல்களையும் அர்ச்சையில் அனுபவிக்கிருன்.

தேவாதிதேவன் :- நித்யசூரிகளுக்கிறைவன்.

உட்பொருள் :— (உத்தமூர் ஸ்வாமி) தன்னேடு காலக்ஷேபம் செய்யும் ஒரு அதிகாரியை - ஆசார்யனிடம் வந்து சேரச் சொல்லு தல். ஆசார்யன் கடாக்ஷிப்பது - விடியற்காலமாம்.

பாடி ஆசார்யனின் தனியனைப்பாடி - பகவான் தயைபுரிவார். இந்த பாசுரத்தில் பக்தியோக நிஷ்டர்களைப்பற்றிச் சொல்லியதாம். ஆசார்யன் மூலம் பக்தியோகத்தை அறிந்து ஸ்ரீகிருஷ்ணனை சேவித் தால் - அவன் ஆராய்ந்தருளுவான் என்பதாம் நோக்கம்.

பகவத் விஷயத்தை சிரவணம் செய்து - பின்பு பகவத் பாகவத நியமனப்படி காரியம் செய்வது - இத்தகைய நற்குணமுள்ள பெண்ணை எழுப்புகிருள். மல்லரை - பீஷ்மத்ரோணுதிகளைவாட்டிய பிணக்கு செய்யும் ஜீவர்களின் கெட்ட புத்தியை நீக்கி - நல்லதைச் செய்யச் செய்வதால் - தேவாதிதேவன். பேறு உனதானபின்பு - கிருஷியும் உனதாகவேண்டாவோ? பேறு அவனுல் ஆனுல் இழவும் அவனுல் என்னலாமிறே. ஸ்தன்ய பிரஜைகிணற்றில் விழுந்தால், தாயார் தள்ளினுள் என்னுமாப்போலே - எல்லாம் உனதாக வேண் டும். ஸதாஸந்நிஹித்வம் வேண்டும்.

ஸ்ரீமதழகியசிங்கர் அருளியது :—

பகவத் விஷயம் சிரவணத்தால் முதலில் அறிந்து - பிறகு மனனம் (அதையே சிந்தித்து) - நிதித்யாஸம் - ஸாக்ஷாத்காரம்

வரும்வரை அதே சிந்தனையை ஆவிருத்தி செய்து அப்யாஸிப்பது - இது ஸ்ரீபாஷ்யத்தில் லகுசித்தாந்தத்தில் முதல் அதிகரணத்தில் சொல்லப்படுகிறது

பகவத் பாகவத நியமனப்படி காரியம் செய்வது இத்தகைய நற்குணமுள்ள பெண்ணை எழுப்புகிருள், ஆண்டாள். பாவாய் - அழகியே. கீழ்வானம் வெளுத்தது - கோது கலமுடைய பாவாய் எழுந்திரு. உன்னை எழுப்புவதற்கே வந்து நின்றோம். போவான் போகின்றார்மிக்குள்ள.... காத்து - நீ யாரை அழைத்துக்கொண்டு போகவேண்டும், எவர்களுக்காக நீ அழைத்துக்கொள்ளாமல் நீ பூஜை செய்யவேண்டியது. இதை முடிவு செய்ய-எழுந்திராய். மாவாய் பிளந்தானை-மல்லரை மாட்டிய - பிணக்கும் செய்யும் ஜீவர்களை - பீஷ்மத்ரோணாதிகளை அழித்தவனே; தேவாதிதேவா- கெட்ட புத்தியை ஒழித்து - நல்லதை எங்களுக்குச் செய்வாய்.

ஸ்ரீமதாண்டவன் அருளியது :—

தேவாதிதேவன் - வரதராஜனை. காமக்ரோதங்களைப் போக்க வல்ல தேவாதிதேவனைச் சேவித்தல். உங்களுக்குக் கிடைத்த பகவத் அனுபவம் எங்களுக்கும் கிட்டுமாறு அருள் செய்ய வேண்டும். "பாகவதரை முன்னிட்டு அல்லால், திருவடித் தொழக்கடவோமல்லோம்" என்கிற நியமம் சொல்லிற்று. உதாரணம் - அக்ரகண்ய பூஜை ஸஹதேவன் கண்ணனுக்கு அக்ரபூஜை - என்று சபதமிடும் போது - புஷ்பவிருஷ்டி ஏற்பட்டது. தேவாதிதேவன் - திருச்சித்ரக் கூடம், திருக்குடந்தை, திருப்பார்த்தன்பள்ளி பற்றி திருமங்கை ஆழ்வாரின் பாசுரங்களை நினைப்பது. மதுரகவியாரின் பாசுரம் 'அருள் கண்டீர் ! எனபதையும் நினைப்பது. மல்லரை மாட்டிய - அகங்கார மமகாரங்களை ஒழித்தல். இதற்கு அறிகுறி - தமோ குணம் விலகி - ஸத்வம் நிலைக்கப்பெற்றது, அதனால் பகவத் திருவருள் - உம்போன்றவரை முன்னிட்டுச் செல்லவேண்டும் என்கிற நியமத்தாலே, அதாவது நீர் சேர்ந்தால், தேவாதிதேவன் எங்களை மன்னிப்பான். இது பேயாழ்வாரைப்பற்றிய பாட்டு. ஸ்வாபதேசம் - ஞானம் (தீபம்). அனுஷ்டானம் (தூபம் கமழ);

ஒன்பதாம் பாட்டு

தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய*
தூபங் கமழத் துயிலணைமேற் கண்வளரும்*

மாமான் மகளே மணிக்கதவந் தாள் திறவாய்*
மாமீ ரவளை யெழுப்பீரோ* உன்மகள்தான்
ஊமையோ அன்றிச் செவிடோ ,வனந்தலோ*
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ*
மாமாயன் மாதவன் வைகுந்த னென்றென்று*
நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய். 9

இந்தப் பாட்டில் இம்மை இன்பங்களில் ஈடுபட்ட ஒருத்தியை எழுப்புகின்றனர். ஒரு பெரிய மாளிகையில் - எங்கு பார்த்தாலும் ரத்ன தீபங்கள் ஜ்வலிப்பதுபோல் விளக்கும். எரிந்துகொண்டு - அகில் சந்தன வாஸனை த்ரவியங்களின் புகையும் எழும்பி நிற்க-துயில் அணைமேல்கண்வளரும்-நித்ரை செய்யும் - ஒருத்தி மாமான் மகளே- மாமனின் மகளோ - (ஒருவேளை ராதை என்னும் பெண்ணுயிருக்குமோ?- ஏன்? அதற்குப் பல காரணங்கள் உள. அந்த ராதையை நோக்கி) - "பெண்ணே -கதவைத்திற மாமீர், அவளுடைய தாயை (கலாவதியை) நோக்கி 'அவளை எழுப்பமாட்டீரோ' உன் மகள் இன்பக் கனவு - கிருஷ்ணனுடன் சேர்ந்து அனுபவிக்கும் ஸம்ஸ்லேஷ தசையில் இருக்கிறள் -அவள் ஊமையளோ - அல்லது செவிடியோ- அனந்தலோ - (மதத்தவளோ - மதம் கொண்டு ஏகபோக சக்கிரவர்த்தினியாக கனவிலே கிருஷ்ண ஸம்ஸ்லேஷம் பெற்றிருக்கிறளோ.

தூங்குகிறவளை எழுப்பினல் எழுந்திடுவாள் - ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டாளோ - மிக்க களிப்பாலே கிருஷ்ண மயக்கம் கொண்டிருக்கிறள். இதற்கு கிருஷ்ணனும் ஒரு காரணம்தான். அவன் மாயன் - மாமாயன் - மாயையைத் தனக்கு ஆதீனமாக உள்ளபடியால் - எல்லோரிடமும் தயைகாட்டுபவனைப் போலநடித்து இவளிடம் மாத்திரம் தனிப் பிரேமை கொண்டுள்ளான். இருக்கட்டும். அவனும் அவளும் சுகமாய் வாழட்டும். ஸ்ரிய:ப்பதி -மாதவன் - வைகுந்தன் என்கிற பெயர்களுக்கு ஏற்ப - லக்ஷ்மிஸம்பந்தன். இவளும் சோலமலர்பாவையைப்போல அவனுக்கு இனியவள். இவர்கள் பெயர்களை நாம் அனுஸந்தானம் செய்வோம். இந்தப் பெயர்களைக் கேட்டவுடனே - அவளாக எழுந்துவருவாள் என நம்புகிறேம். ஆகையால் இந்த நாமங்களை எங்கள் பாபங்கள்தீர-நோன்பு பலிக்க நாங்கள் அனுஸந்தானம் செய்வோம் எல் ஓர் எம்பாவாய்!

மாமன் மகளே - ராதை என்று உரையிட்டோம். ராதையும் பிரும்மாண்ட புராணத்தின் பிரகாரம் நோன்பு நோற்றுத்தான் கண்ணனைப் பதியாக அடைந்தாள். கீதகோவிந்தத்தில் ராதா-மாத வனின் ராஸலீலைக்களைப்பற்றி விபரமாகச் சொல்லப்பட்டிருக் கின்றன. நாயகிகளில் எட்டு பிரிவுகள் உண்டு. ஸ்வாதீனபதிகா உத்கண்டிதை - வாஸகஸஜ்ஜா கண்டிதை - கலஹாந்திரகா - பிரோ சிதபதிகை - விப்ரலப்தை- அபிஸாரிகை என்ற அஷ்ட நாயகிகளின் அவஸ்தைகளை ராதை அனுபவித்து - இறுதியாக - கிருஷ்ணனை அடைந்தாள். கிருஷ்ணனும் இவள் விஷயத்தில் மோகமடைந்து உதாசீனனாக நடிக்க, ராதையின் காதல் வளர ஆரம்பித்து-கடைசி யில் அவள் உயிருக்கே ஆபத்து வரும்படி நேரிட்டது! அச்சமயம் கிருஷ்ணனே நேரில் மிருதசஞ்சீவினியாக வந்து "நீ கோபம் கொள் ளாதே - நீதான் எனக்கு ஆபரணம் - ஜீவனம், பிராணதாரணம், தந்வீ! காந்தே! பிரியே-உன் கமலசரணங்களை என்சிரமண்டலத்தில் சிரோபூஷணமாக வைத்து அலங்கரிப்பாய் - அதனால் எனது காமஜ் வரம் நாசமடையும். "மமசிரஸமண்டனம் தேஹி பதபல்லவ முதாரம்" - இந்த வசனங்களை கிருஷ்ணனே ஜயதேவர்வடிவாக வந்து எழுதினதாக ஐதிகம். இந்தவிதமாக ஸர்வோத்கிருஷ்ட பத்மாவதீரமணன் ஜயதேவகவிபாரதியினால் ரஞ்சனம் செய்யப் பட்ட கீதம் - கீதகோவிந்தம். சாருமுரவைரி - ஸ்ரீகிருஷ்ணனுடைய ராதிகாம் - "ராதிகாகீதம்" - ராதைக்கு ஏற்றாப்போல சொல்லப் பட்ட பிரியவாக்யயுக்தம். அதனால் ச்ரியஃப்பதி - மாதவன் வைகுந் தன் என்கிற நாமாக்களை அவர்கள் சொல்கிறார்கள்.

(இங்கு ஞாபகத்திற்கு வருவது - துளசி ராமாயணத்தில் ஒரு கட்டம், ராமன் சீதை லக்ஷ்மணன் மூவரும் சித்ரக் கூடம் வந்து சேரு கிறார்கள். அவர்கள் வரும் வழியில் களைத்துப்போய் ஒரு மரத்தின் நிழலில் ஒதுங்க - அந்த மூவர்களுக்கும் வனயாத்திரையில் ஏதாவது ஒரு கைங்கர்யம் செய்ய நினைத்து ஆசைப்பட்ட ஒருவன், ஒரு வ்யக்தி, பேர் ஊர் தெரியாதவன் - "அவனே" - என்கிறார் துளசி. "அவன் ஒரு மண்கூஜாவில் குளிர்ந்த ஜலத்தைக் கொண்டுவந்து- ஸமர்ப்பித்து - வணங்கிநின்றான்" என்றார். அதுபோல இங்கு ராதையை ஒருத்தி - மாமன் மகளே - விருஷபானுவின் - கலாவதி யின் ஒரே மகள் - ராதா - கிருஷ்ணபிரேமரஸம் கொண்டவள்.)

இந்த செய்யுளை ஒட்டி ஒரு வரலாறும் பெரியோர்கள் சொல் வர். "இவள் இப்படி உறங்குவது-மற்றப்பெண்கள் உறக்கமற்றிருப் பது - கூடினபடி எங்ஙனே? என்று எம்பெருமானார் பெரியநம்பி

களைக் கேட்க - பெரிய நம்பிகள் 'பதினெட்டுத் தடவைகள் திருக்கோஷ்டியூர் நம்பியை அனுஸரித்த உம்மையே கொண்டு, தெளிவீர்'' - என்று சொன்னாராம். இதன் கருத்து - இவள் கண்ணனிடம் சரணாகதையானுள் - நிர்பரையாய் - கவலையின்றி கிடந்து உறங்கினள் - என்பதாம். அவளை எழுப்பிக் கொண்டுகூடச் சென்றுள் - அவள் முகத்தைப் பார்த்து, ''கண்ணன் எங்களை அனுக்ரஹிப்பான்'' என்பதாம். இதனால் தேறுவது - ஆசார்யனின் ஸ்தானத்தில் -அவருடைய பிள்ளையையோ - அல்லது ஆசாரியனால் அபிமானிக்கப் பட்ட சிஷ்யனோ - ஒருவனை வேதாந்த விமர்சனம் செய்ய அழைக்க வேண்டும் என்பதாம். மாதவன் - அல்லிமலர் மகளை இறையும் கலவொண்ணாதபடி- மார்பில் அழுந்திக்கொண்டுள்ளவன். திருவேங் கடவன்

ஸ்வாபதேசம் நம்மாழ்வாருக்கு அடுத்த முந்தினவரான திருமழிசைப் பிரானை உணர்த்தும் பாசுரம் - இங்கு படுக்கையில் படுத்துக்கிடந்தவனைப்போல. திருமழிசை பிரான் திருக்குடந்தை வாழ்ஆராவமுதனை - கிடந்த கோலத்தை -''நடந்த கால்கள் நொந்தவோ - நடுங்க ஞாலமேனமாய் இடந்தமெய்க்குலுங்கவோ-விலங்கு ால் வரைச்சுரம் கடந்த கால்பரந்த காவிரைக்கரை குடந்தையுள் கிடந்தவாறெழுந்திருந்து பேசு வாழி கேசனே''-என்றார். (திருச்-61)

2) அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன் நின்றது மிருந்ததும் கிடந்ததும் என் நெஞ்சுள்ளே. தி-வி-64)

3) பிரபத்திமார்க்கத்தினால்தான் பகவானை அடையமுடியும் - அன்பிலன்றியாழியானை யாவர் காணவல்லரே! (76-ம்பாட்டு)

பி) எட்டெழுத்து மோதுவார்கள்-வல்லர் வானமாளவே (77ம்)

ஸி) நின் இலங்குபாதமன்றி மற்றோர் பற்றிலேனெம் மீசனே.90

டி) நாயினேன் செய்த குற்றம் நற்றமாகவே கொள் ஞாலநாதனே. (111ம் பாட்டு)

இ) அத்தனாகியன்னையாகி ஆளுமெம் பிரானுமாய்
ஒத்தொவ்வாதபல்பிறப்பொழித்து நம்மை யாட்கொள்வான்
மூத்தனார் முகுந்தனார் புகுந்து நம்முள் மேவினார்
எத்தினாலிடர்க்கடல் கிடத்தியேழை நெஞ்சமே.

(திருச்சந்தவிருத்தம் - 115)

ஊமையோ:- வாய்திறவாமல் ஹஸ்தசேஷ்டையாலே அந்தணர் களுக்கு அவர்களால் மறந்துபோன வேதவாக்யத்தை - அதாவது கறுப்பு நெற்களை கைநகத்தாலே இடந்துபோட - அவர்களுக்கு " கிருஷ்ணநாம வ்ரீஹீணும் - நகநிர்பிந்தம் -என்கிற அடி ஞாபகத் திற்கு வந்தது. (திருமழிசைபிரான்)

அனந்தல் - மந்திரப்பட்டாளோ - அஷ்டாக்ஷர வித்யைக்கு அடிமைகொண்டதால் - பரமைகாந்தி - பாஹ்யவிஷயங்களில் எண்ணம் போகாதிருத்தல்.

மூவாயிரப்படி - துயிலணை மேல் கண்வளரும் - கிருஷ்ணவிரஹத் தையும் ஆற்றவற்றுனபடுக்கையிலே உறங்குகிற எங்களுக்கு அந்தப் படுக்கை வெ ிபள்ளியாயிருக்க உனக்குப் படுக்கை பொருந்தி கண் உறங்குவதே. ஏமம் -காவல்.

எழுந்திராமைக்கு காவல் இட்டாரோ அல்லது மந்திரவாதம் பண்ணினுருண்டோ? ச்ரியபப்பதி - மேன்மைக்கு உரிய ஸ்ரீயப்பதி- பெண்களுக்கு எளியனுன நீர்மை - மேன்மை நீர்மைக்கடியான திருநாமங்களும் - ஒரு ஸ்ரீஸஹஸ்ரநாமத்துக்குப் போடும் திருநாமங் களாம்!

உட்கருத்து :- (ஆராயிரப்படி) அபியதலாபம் அவனுல் செய்ய லாகில் இவர்கள் பதறுகிற தென்னே - என்று இருந்தாள் அவள் - உறங்கினுள். இவர்களோ (தோழிகளோ) அவனே உபேய (பலன்) மாகில் - இவள் கிடந்து உறங்குவது ஏன்?—என்ன காரணத்தினுல்? என்று இவர்களிருந்தார்கள்.

ஆத்மாவுக்கு ஞான ஆனந்தங்களன்று நிருபகம். சேஷத்வம் தான். அதனுல் அவளை எழுப்பி - துயிலின் ஆனந்தத்திலிருந்து கலைத்து - எங்களைப்போல அவளும் கைங்கர்யம் செய்ய - உன் மகள் தான் ஊமையோ - ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டாளோ என்கிற படி எழுப்புவதாம். கண்வளரவிடக்கூடாது என்பதாம். அவர்களின் கோபம் அதுவரை சென்றது.

நாமசங்கீர்த்தனம் செய்வதால் பாகவதசேவையாகிற புருஷார்த் தமும் - பகவத் அனுக்ரஹமும் கிடைக்குமாம்.

ஸ்ரீமதழகியசிங்கர் அருளியது :—

மற்றை வீட்டுப் பெண்களை அழைத்து வந்து - இவர்களுடன் இன்னொருத்தியை அழைக்கிருள். அவளுடைய வீட்டின் லக்ஷணம் சொல்லப்படுகிறது. தூமணிமாடத்து சுற்றும் விளக்கு எரிகிறது. சரி - இவளுக்கு கிருஷ்ணனுடைய ஸம்போகம் முந்தின இரவில்

பேதப்பட்டிருக்க வேண்டும் - இதனால் இவள் தூங்குகிறாள். அதனால் அவளை "மாமன் மகளே" என்று கூப்பிடுகிறார்கள். இவள் தூக்கத்தில் கூட கிருஷ்ணனையே ஆலிங்கனம் செய்வதால் சந்தோஷப்படுகிறாள் - தூக்கத்தில் ஹ்ருதயத்துக்குள்ளே இருக்கிற எந்த வஸ்துக்களையும் இவள் அறிகிறாளில்லை. तत्त्वमसि —அந்த பிரும்மத்தை ஆத்மாவாகவுடைய நீ - இருக்கிறாய் - எழுந்திரு என்றாள்.

*ஸ்ரீமதாண்டவன் அருளியது :—*

இப்பாட்டில் குறிக்கப்படுகின்றவர் - ஞானயோகிகளான அதிகாரிகள். சுற்றும் விளக்கெரிதல் - ஞான ஒளி பிரகாசிப்பதைக் கூறுதல். ஞானானுபவத்தில் ஆழ்ந்து, பிரபஞ்ச அவஸ்தைகள் யாவும் ஒடுங்கி, ஊமை செவிடுபோல, பெருந்துயில் மந்திரத்தால் கட்டுண்டதுபோலவிருக்கும் அதிகாரியை விளித்து - "ஐயா உம்முடைய ஞான ஒளியாலே எங்களுடைய சரீர அபிமானத்தைப் போக்க வேண்டும். சமாதி நிஷ்டை கலையாமலிருந்தால், அவருடைய அனன்யோபாய ஸ்வரூப ஞானத்தை தாமும் உணர்ந்து, பரமாத்மாவை அடைய, பரமாத்மாவின்றி வேறு ஸாதனமில்லை எனத் தெளிந்து, இறைவனின் திருநாமங்களை அநுஸந்திக்கத் தொடங்கினார்கள். அனந்தல் - சோர்வு. இரவு முழுவதும் கிருஷ்ணானுபவம் செய்து சோர்ந்துபோயினாள். தன் செயலால் யாதொன்றும் இல்லை. கண்ணன் வரும்போது தான்வருகிறான் என்று நினைத்திருப்பவளை தோழிகளுடன் ஆண்டாள் எழுப்புகிறாள். பெரும் துயில் செய்கிறாயே, என்று கேலி செய்வது போலிருக்கிறது. இது திருமழிசை ஆழ்வாரைச் சொல்லும். "நின் இலங்கு பாதமன்றி மற்றோர் பற்றிலேனெம்மீசனே - பிரபத்தி ஸித்த ஸாத்ய உபாயம். (90-ம் பாட்டு) என்பிலெள்கி நெஞ்சுருகி உள் கனிந்தெழுந்ததோர் அன்பிலன்றியாழியானையாவர்காணவல்லரே - பிரபத்தியே உபாயம். (திருச். வி. 76). "அடைக்கலம் புகுந்த வென்னை அஞ்சலென்ன வேண்டுமே (92).

நம்மாழ்வாரும் "அரியை அரனை அரற்றி என்றார். ரஹஸ்யத்ரயஸாரம் மூல மந்திரம், த்வயம் சர்மஸ்லோகம் நோக்கவும். ஸ்வாபதேசத்தில் - பிரபத்தி பண்ணி பெருமானை அனுபவிப்பவர்களைச் சொல்லியது. அர்ச்சா - மந்திர ரூபம் நேரில் பகவானை அனுபவிப்பதைவிட அர்ச்சை உயர்ந்தது. நம்மாழ்வாரின் திருக்குடந்தை பாசுரங்களை நோக்கவும். அதில் 5–8–8ல் - களைவாய் துன்பங்களை... இளையாதுனதாளொருங்கப்பிடித்துப் போதவிசை நீயே - என்றார். பிரபத்தி ஸித்தஸாத்ய உபாயம்.

**பத்தாம் பாட்டு**

**நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற வம்மனாய்!***
**மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்***
**நாற்றத் துழாய்முடி நாராயணன் நம்மால்**
**போற்றப் பறைதரும் புண்ணியனால்* பண்டொருநாள்**
**கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்பகரணனும்***
**தோற்று முனக்கே பெருந்துயில்தான் தந்தானோ***
**ஆற்ற வனந்த லுடையா யருங்கலமே***
**தேற்றமாய் வந்து திறவேலோ ரெம்பாவாய். 10**

*மூவாயிரப்படி கிருஷ்ணனையே நினைத்து இன்பம் அனுபவிக்கும் ஒருத்தியை - ஒரு போகியாக அனுபவிக்கிறாள் இவள் - என்று இருப்பாள் ஒருத்தியை எழுப்புவதாம்.*

*நோற்றுசுவர்க்கம் புகுகின்ற அம்மனாய் (அல்லது அம்மனா) - இந்த வார்த்தை படுத்துறங்கும் ஒரு தோழியைக் குறிக்கும் - அல்லது அவளது தாய் தகப்பனாரையும் குறிக்கும். நோன்பு நூற்று சுவர்க்கம் அடைய முயன்று வரும் - பெண்ணின் அன்னை போன்ற பெரியோர்களே, படுத்துறங்கும் தோழியைக் குறிக்குமென்றோலோ, அவள் கவலையற்று தூங்குகிறாள் - சாதன அனுஷ்டானம் செய்தாகிவிட்டது - பலன் கொடுப்பது நாராயணனே! நோன்பின் பலம் கைபுகுந்தவளிறே இவள் என்றார் ஆராயிரப்படியில் அழகிய மணவாளப்பெருமாள் நாயனார்.*

*நோற்று - ஸித்த ஸாதனையாலையாலே - உபாயம் சத்தில் நிர்ப்பரையாக விருந்தாள், அவள் என்றார். அதாவது அவனுடைய ரக்ஷகத்வத்தை உணர்ந்தால் - தனக்கு யத்னம் பண்ணப்பிராப்தியில்லை. தன்சேஷத்வதை உணர்ந்தாலும்-பிராப்தியில்லையிறே! இவள் இப்படி உறங்கினால், எழுப்புகிறவர்களின் ஸ்வரூபம் யாது?பகவான் ஸித்தோபாயம் என்று நம்பியிருப்பவர்களுக்கு, காலவிளம்பஹேது இருக்கக்கூடாமையால்-பிராப்யத்தில், (அதாவது பகவானையடைவதில்) த்வரையில் அடையவேண்டிய பலத்தை உடனேயே பெற வேண்டும் என்கிற அவசரம் அவர்களுக்கு; பிராப்யருசி அவ்விதம் அவர்களைப் பிச்சையேறப் பெறுகிறது. ஞானம் ஸ்வரூபத்திலே படுத்துறங்குபவர்களுக்கு - அதனால் அவள் கவலையற்று தூங்குகிறாள். இவர்களுக்கோ பக்தி ஸ்வரூபம். பக்தி பிராப்யருசியில் கொண்டு போய்விடும்.*

''ஸ்வர்க்கம்'' - ஸாக்ஷாத்சுக சப்தம் வாச்ய னான ஸ்ரீகிருஷ்ணன். கிருஷ்ணானுபவம் சுகஸ்வரூபம் - கிருஷ்ணனே ஆனந்த ரூபனாய் - ஆனந்தகுணகனாய்- விளங்குகிறான். இவர்கள் வரப்போகும் கிருஷ்ண ஸம்ஸ்லேஷத்தை நினைப்பவர்கள். இருவகையினரும் - மாற்றமும் (வாய்பேச்சும் - மறுமொழியும்) தாராரோ? அவள் பேசாமலிருக்க மீண்டும் அவள் பெயரைச் சொல்லிக் கூப்பிட - ஆற்ற (ஆழ்ந்த) அனந்தலுடையாய் - நாற்றம் (வாசனை) கமழும் திருத்துழாய் முடிநாராயணன் - அவன் யார்? நம்மால் (நம்மிடம் ஆசைகொண்ட வர்) போற்ற (அதனால் நாமெல்லாரும் சேர்ந்து துதிக்க) - பறை - தரும்புண்ணியனால் - மோக்ஷருசியைக் காண்பித்து - பிறகு அதை அடைய விரும்பும் ஆசைப்படும் - நாம் செய்த பாக்யத்தின் பயனாக இருப்பவன் அவன்! அந்த கிருஷ்ணன்!

பண்டு ஒருநாள் கூற்றத்தின் (யமனின்) வாய் வீழ்ந்த (வாயில் இரையாக விழுந்திட்ட) கும்பகர்ணனும் உனக்கு தூக்கத்தில் தோற்றுவிட்டானும்- அப்படி தன் சொந்தமாகிய தூக்கத்தை அவன் உனக்கு தந்திட்டமையால் - பெரும் துயில்தான் தந்தானோ? அருங்கலமே - ஆபரணம் போல அழகும் பிரியமும் உள்ளவளே, தேற்றமாய் (தெளிவாக) வந்து கதவைத் திறப்பாய். இங்கு சீதை யஸ்த்வயா ஸஹஸ்வர்க்கோநிரயோயஸ் த்வயா வினா - சீதை ராமனிடம் வனம் போகும்போது சொல்லிய வார்த்தைகளை நினைப்பது - அர்த்தம், ஸ்வர்க்கம் உன்னைவிட்டு எனக்கு வேண்டாம். உன்னோடு நான் நர கத்திலே இருக்கப் பெறின் - அதுவே சுவர்க்கமாகும். ஆகவே இந்த தோழிக்கு கிருஷ்ணானுபவம் - சுகம், அம்மனாய், ரக்ஷகனானவனே.

நாற்றத்துழாய்முடி - ஸ்வரூப நிரூபகம் தர்மம். வனமாலை - துழாய்முடி. கோயில் சாந்தை ஒளிக்கப்போமோ - அதுபோல - துளசியின் பரிமளம் நிற்குமே. ஆசைப்பட்டாரைக் காப்பதில் விரத தீக்ஷையைப் பண்ணினாப்போலே, தோள்மாலையிட்டிருக்கிறவன் என் னூர் அழகிய மணவாளப்பெருமாள் நாயனார். ஸ்வர்க்கம் - மோக்ஷம் கடவல்லி - கேந உபநிஷத்வாக்யம் - நம்மால் போற்றத்தகுந்தவன்- பறைதரும் புண்ணியன் - இடைச்சேரிகளுக்கும் சென்று ஆஸ்ரயிக் கும்படி தார்மிகன். கிருஷ்ணம் தர்மம் ஸநாதநம் - இவர்களுக்கு உபாயம் அவன்தான். இவர்களுடைய ஆஸ்ரயணம் உபாயமன்று. ருசியாலே கதறுகிறார்கள்.

ஆகவே நீ (தோழியை) கதவைத் திறவாது போனால் - உன் பேச்சையாவது தரமாட்டாயோ? மாற்றமும் தாராயோ வாசல் திறவாதாய். சரி, இவ்விதம் சொல்லவும் - தோழி சொன்னாள் -

''சகிகளே - கிருஷ்ணன் இங்கில்லையே'' - அதற்கு தோழிகள் மறு மொழி கூறுகிறார்கள் - ''துளசியின் பரிமளம் வீசுகிறதே - அதற்கு அவள் இது வாடின பழைய துளசி. கிருஷ்ணன் இங்கு காவலைத் தாண்டி எப்படி நுழைவான்?'' அதற்கு பதிலாக தோழிகள் சொன்னார்கள், ''நாராயணன் அவன்''. வனமாலை - ஸர்வகலபன் - எங்கும் வியாபித்திருப்பவன். ஸ்வரூப நிரூபக தர்மங்களை உடையவன். அதற்கு பதில் உரைக்காமல் பேசாது அவள் இருக்க, அவர்கள் தூக்கத்தில் - ''கும்பகர்ணனும் உனக்குத் தோற்று தன் தூக்கத்தை உனக்கே பரிசாகத் தந்தொழிந்தான். (ஆராயிரப்படியில்) பரசு ராமனை வென்ற அயோத்தி ராமன், அவன் கையிலிருந்து வில்லை வாங்கி - தன்னுடையதாக செய்தாற்போல - நீயும் கும்பகர்ணனை வென்று, நித்ரையைக் கைக்கொண்டாயோ?'' பண்டொருநாள் கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்பகர்ணன் - கூற்றம் ராமன் அவனு டைய வில்லுக்கு இரையாக வந்திட்டான். ஆனல் அந்த ராமனே புண்ணியன். போற்றத்தரும் புண்ணியன் - பாக்கியத்தின் பலனு மான கண்ணன் காரணமாய், தோழி தூங்குவதுபோல நடிக்க, மற்றையவர்கள் கதற, புண்ணியன் மாரீசன்கூட ராமனை விக்ரஹ வாந்தர்ம:என்றான். கண்ணனைக் கூறும்போது, நம்புண்ணியன் - புண் யா நாம்பி புண்யோ அவௌ என்றான். புண்ணியங்களுக்கெல்லாம் புண்ணியன் என்றால் - பிராணனுக்குப் பிராணன் - கண்ணுக்குக் கண் - என்பதால் பலதாதா இவன்தான்; எல்லாப் பலன்களை அளிப்பவன் இவன். ஆகஸித்தோபாயமாயிருப்பவன் என்று ஆயிற்று.

உத்தமூர் ஸ்வாமி இன்னொரு ரஸோக்தி-கும்பகர்ணன் நோன்பு நோற்று உறக்கத்தை வரமாகப் பெற்றான். அதுபோல நீயும் நோன்பு நோற்று அவனும் தோற்கும்படி உறக்கத்தை அடைந் தாயோ,தோற்றும் உனக்கே பெரும் துயில் தந்தானோ-ஆற்ற(மிக்க) அனந்தல் (உறக்கத்தை) உடையாய் - (ஸீஷ்ப்தியில் மூழ்கிப்போன வளே) அதனால் தேற்றமாய் வந்து திற'' என்றார்கள்.

நித்திரை தடுமாற்றம் இல்லாமல் - தெளிந்து-ஊராகத்திரண்டு கிடக்கிறது. அவர்களிலே உன்னையும் நியமிக்கவல்லாருண்டு. ஆகவே உன்னைப் பேணிக்கொண்டு தைலையாய் - வந்து கதவைத் திற'' (ஆராயிரப்).

அருங்கலமே - கிருஷ்ணனுடைய பூஷணம் - கீதகோவிந்தம் ''மமபூஷணம் - மமஜீவனம்''. ராதையிடம் கிருஷ்ணன் புகழ்ந்து சொல்லி மன்னிப்பு கேட்டுக்கொண்டது.

உட்பொருள் :— ஸித்த ஸாதந ஸ்வீகாரம் பண்ணிய ஒருத்தியை - எழுப்புதல். இது பேயாழ்வாரை உணர்த்தும் பாசுரம். "திருக்கண்டேன் -பொன்மேனிகண்டேன்" என்றார். திருக்கோவிலூர் இடையில் பொய்கையார்-பூதத்தார் - பேயார் மூவரும் ஒன்றுசேர - மழையை உண்டுபண்ணின பெருமாள் அவர்களைக் கூடவைத்து காட்சி - பேயாழ்வாருக்கு, "வாசல் திறவாதார்" மிகப் பொருத்தம். நாற்றத்துழாய் என்பதற்கு மலரான் தனத்துள்ளான் தண்டுழாய் தார்வாழ் வரை மார்பன். அதுபோல முடிவு பாசுரத்திலும் தண்டுழாய்த்தார்-வாழ்வரை மார்பன்" என்றார். திருத்துழாயையும் கண்ணனையும் சேர்த்துப் பாடினார் அவர். நாமம் பல சொல்லி நாராயணாவென்றுசொல்லி - வண்டறையும் தண்டுழாய் - கண்ணனையே காண்க. நங்கண் (8) (மூன்றும் திருவந்தாதி-8) கடைசிப் பாட்டில் தண்டுழாய்த்தார்வாழ்வரை மார்பன் தான் முயங்கும் பகவத் பக்தியில்லாத நாட்கள் வீணாகக் கழிந்துபோன நாட்கள். அது ஆழ்ந்த நித்திரையைப்போல - சுஷுப்தியில் வீழ்ந்து கிடக்கும் ஒருவனின் அனுபவத்தை கேட்கமுடியாது. ஸ்வப்னத்திற்கு திரும்பி வந்ததும் அனுபவமிருக்கலாம் - அதை உணர்த்து" என்றார்கள்.

ஸ்ரீமதழகியசிங்கர் அருளியது :

இதில் பகவத் பக்தியுள்ள அனுபவ ரசிகையை கோதை எழுப்புகிறாள். இவளைப் பார்த்ததும் - இவள், முக்தன் பகவானை அனுபவிப்பது போல அனுபவிக்கிறாள் என்று கண்டுகொண்டு - அவளை எழுப்புகிறாள். முக்த அனுபவம் ஸ்ரீபாஷ்யத்தில் நான்காம் அத்யாயம் 4ம் பாதத்திலும்-கௌஷீதகி உபநிஷத்திலும் - திருவாய் மொழியில் பத்தாம் பத்து - 8, 9, 10 பத்துக்களில் கூறப்படுகிறது.

ஸ்ரீமதாண்டவன் அருளியது :

பூர்வ ஜன்ம புண்யம் முதிர்ந்தாள் ஒருத்தியை விளித்து - "உன் சேர்க்கை எங்களுக்கு ஆபரணம் போன்றது. உன் தொடர்பால் இறைவனின் அருள் கிடைக்கும். இதில் உபாய நிஷ்டரை எழுப்புகிறார்கள். பெரும் துயில் என்பதுதன் சொந்த ஆனந்த அனுபவம், வெளிப் பிரபஞ்சத்தில் யாதொரு பற்றுமின்றி கிருஷ்ண சைதன்யம் பூர்வ புண்யத்தினால் இவளுக்குக் கிடைத்துவிட்டபடியால், புதிதாகச் செய்யவேண்டிய அனுஷ்டானம் யாதுமில்லை. உபாயமுமில்லை. ஸித்த ஸாதனராய் இருப்பார்க்கு கர்த்தவ்யம் ஒழிகிறது. எங்ஙனெனில், அவனுடைய ரக்ஷகத்வத்தை உணர்ந்தால், தனக்கு யத்னம் செய்யப் பிராப்தியில்லை. தனது சேஷத்வத்தை உணர்ந்தாலும்

ப்ராப்தியில்லை. இதர உபாயங்களும், அவனுடைய பிரஸாதத்தையே நம்பியிருப்பதால் - ஒன்றும் செய்யப் ப்ராப்தியில்லை. ஸ்ரீமந் நாராயணனே - அவன் உபாயபாவத்தை அனுபவித்து விடுவோமே - எழுந்து குளிரக்கடவதே என்றிருக்கிறுள். (ஆராயிரப்படி). வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே (நம்மாழ்வார்)

பதினொன்றும் பாட்டு

கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து*
செற்ருர் திறலழியச் சென்று செருச்செய்யும்*
குற்றமொன்றில்லாத கோவலர்தம் பொற்கொடியே*
புற்றர வல்குற் புனமயிலே போதராய்*
சுற்றத்துத் தோழிமாரெல்லாரும் வந்து* நின்
முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாடச்*
சிற்ருதே பேசாதே செல்வப்பெண்டாட்டி* நீ
எற்றுக் குறங்கும் பொருளேலோ ரெம்பாவாய், 11

கிருஷ்ணனுக்கு மிக்கப்பிடித்தவளான ஒருத்தியை கண்ணுக்கு மயிலின் சாயலைப்போலவிருந்து, அணைப்பதற்கு மூங்கில் போன்ற தோள்களையும், பரந்த வக்ஷஸ்தலம், பெருத்த நிதம்பம் ஆழ்ந்த நாபி தீர்க்க பாஹுக்கள், ,கைவிரல்கள் மெத்தெனவும் நீண்டும் - பொற்கொடி வந்து நின்ருளோ என்று சொல்லும்படி - தங்க நிறமுள்ள ஒரு சிறுயுவதி, புற்று அரவு போல அல்குலும் – சாட்டை போன்ற மயிர் கொத்தும் - இவள் பிறந்த குலத்துக்கும் - கிருஷ்ண குலத்துக்கும் செல்வப் பெண்டாட்டி. பெண் பிள்ளை – சாமுத்திரிகா லட்சணங்களின்படி மிக்க அழகுள்ளவளான ஒருத்தியை எழுப்புகிருர்கள். அவள் பிறந்த குடி நல்வீரர்களின் மரபு பொலிந்த குடியாதலால், கன்றுகளுடன் கூடிய பசுக்களை பலகணங்களாக (திரள்களாக) கறப்பவர்களும், செற்ருர் (எதிரிகள்) வந்து யுத்தம் செய்ய நேரிட்டால் - நவகோடி நாராயணர்கள் எனப் புகழ்பெற்ற வீரர்களாகப் போகும், சத்ருக்களின் திறல்-மதம், அழிய, கூண்டுக்குள்ளே (குகைக்குள்ளே) பயமின்றி சென்று சிங்கத்துடன் சண்டை செய்வாரைப்போல சத்ருக்களின் இடத்தை வலுவில் சென்று செரு (போர்) செய்யும் கோபாலர்களுடைய பிறந்த குலமும் ஒரு குற்றமும் இல்

லாத நல்குடியாகும். உறங்கும் அவனைச் சுற்றி எல்லோரும் சூழ்ந்து கொண்டு, நின் முற்றம் புகுந்து - திருமாளிகையில் (பிரவேசித்து) கிருஷ்ணநாமசங்கீர்த்தனம் (முகில் வண்ணன்பேர் பாட) நீயும் (கோபம்சொல்லாது) - சிற்றாது - (சலியாமல்) பேசாது (மறுமொழி பேசாமல்) (படுத்துறங்குவது) உறங்கும் பொருள் (என்ன பிரயோ சனத்திற்காக) - எற்றுக்கு (எதற்கு என்று நாம் அறியோம்) ஏல் ஓர் எம்பாவாய் - என்றனர்.

ஆராயிரப்படி வியாக்யனத்தில் - அந்த பெண் பிள்ளை கண்ணுக்கு, மணிபோல - ஊருக்கு ஒரு பெண் பிள்ளையாய், கிருஷ்ணனை மாப்பிள்ளையாகப் பெறுகைக்கு, நான் நோற்பேனோ? - அவன் தான் வேணுமாகில் - ஜனகராஜனின் மகளைத் தேடிவந்த சக்கர வர்த்தி திருக்குமாரனைப்போல - நோற்று வரட்டும். என் பெண் பிள்ளையை வந்து மணக்கட்டும், என்று பெருமிதம் கொள்ளும் தாயாரின் செல்வப் பெண்பிள்ளை. பொற்கொடி - ஒருத்தி - கிடக் கிறாள் - அவளை எழுப்புகிறார்கள்.

கிருஷ்ணனுடைய ஸ்பர்சத்தாலே-வளர்ந்த கன்றுக்கள் பசுக்கள். மூலைச்சரிந்தாரைப் பாராத ராஜ குமாரனைப்போல, பசுக்களைப் பாரான். கன்றுகளைத்தான் கவனிப்பான். கன்றுகளும் கண்ணன் கவனத்திற்கு வர, அதனால் உவப்பையடைந்த பசுக்களும் மேய்த்து உகக்கும். அதனால் பசு ஸம்ருத்தி. பகவத் குணங்களுக்கு ஒரு எல்லை யுண்டாகிலும், பசுக்களின் எண்ணிக்கைக்கு எல்லையில்லை. அவை முலைக்கடுப்புக்கெட கறந்தனவாம்.

செற்றார் - கிருஷ்ணனுக்கு விரோதிகள் - கோபாலர்களுக்கும் விரோதிகளாம். கம்ஸாதிகள் மாத்திரமல்ல. ஜராசந்தன் போன்ற அரசர்களும், இந்திரன் போன்ற தேவர்களும். பகவத்ஸம்ருத்தி பொறாதவர்கள் - பாகவதர்களுக்கும் சத்ருக்கள் ஆதாவது பாகவத ஸம்ருத்தி பொறாதவர்கள். பாகவத சத்ருக்கள். அதனால் தேவேந்திர னும் - பிரும்மாவும் ருத்ரனும், இதில் அடங்கினவர்களே. பாணாசுர யுத்தத்தில் குறைவுபெற்ற ருத்ரனும் - கோவர்த்தனகிரியைத் தூக் கும்போது தோல்வியுற்ற இந்திரனும், கன்றுகளையும் பசுக்களையும் கோபாலர்களையும் குகைச்சிறையில் வைத்த சதுர்முக பிரும்மாவும், இவர்களுக்கு எதிரிகளாம் அவ்விதமிருப்பதால் பகவத் ஸந்துஷ்டி - "செய்தாரேல் நன்று செய்தார்" என்னும்படி, குற்றம் குறையில்லா தவர்கள். தேவதாந்திர பஜனையினால் ஏற்படும் குற்றமும் அவர்களை விரோதிப்பதால் வரும் பாகவத குற்றமும் அவர்களுக்கில்லையாம். கஞ்சன் - சாதுசனத்தை நலியும் கஞ்சன். பொற்கொடி ஸமுதாயச் சேர்க்கை. சோபை கொண்ட (அவயவஅழகுள்ள) பெண் யுவதி.

"ஜனகாநாம்குலே கீர்த்தி மாஹரிஷ்யதி மேஸதா" என்கிறபடி ஜனகுலத்திற்குப் புகழ்படைத்தவளைப்போல, இவளும் கோவலர் குடிக்குப் புகழ் செய்பவளாம். எப்படி கம்பரின் ராமாயணத்தில் கண்ணிற் காண்பரேல் ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய், பெண்டிரும் ஆண்மைவெஃகிப்பேதுறு முலையினுள் (சீவகசிந்தாமணி) திருவரங்கத்தந்தாதியில்- வாராய்வாமனனே, அரங்கா, வட்டநேமி யானே - உன் வடிவுகண்டால் மன்மதனும் மடவராக ஆதரஞ்செய் வான். பெருமாள்-"பும்ஸாம்திருஷ்டி சித்தாபஹாரிணம்",என்கிறுப் போல கிருஷ்ணனுடைய சமுதாய சோபைக்கு ஏற்ற பேரழகியாம் இவள். ஆண்களையும் பெண்ணுடை உடுக்கப் பண்ணுமாப்போல - பெண்களை ஆண்களாக்குகிறது இவளுடைய அல்குல் (ஆராயிரப்படி) புனமயிலே - மயில்தோகை போன்ற அளகாபாரத்தை உடைய வளே,

போதராய், நீ படுக்கையை விட்டு எழுந்திரு எங்களுக்குமுன்னே நடந்துபோனல், இவள் நடையழகைக் கண்டு, நாங்களும் உன்னைப் போல முகில் வண்ணன் பேர் பாடிக்கொண்டு பின்னே செல்வோம்.

கன்றுகள் கறவைகளோடு உயிர் பிழைத்தன - மூன்றுதடவை கள் - அகாசுரன் பாம்பின் ரூபமடைந்து அவைகளை விழுங்க - கண்ணன் பாம்பின் வாயிற்புகுந்து பாம்பை வெட்டி - கறவைகளை யும் கன்றுகளையும் காத்தான். அதுபோல பிரும்மதேவன் கன்றுகளை யும் கறவைகளையும் ஒளிக்க - கண்ணன் தானே கன்றுகளாகவும் கறவைகளாகவும் ஆகி - பிரும்மதேவனைப்போல இன்னொரு பிரும்ம தேவனையும் சிருஷ்டித்து - அவனை வாயிற்காப்பாரைக்கொண்டு தடுத்து விரட்டிட - நிஜ பிரும்மாவும் மன்னிப்புக் கேட்டு - சரண் அடைந்தான். கன்றுகளும் கறவைகளும் மீட்கப்பட்டன. மூன்ருவ தாக கோவர்த்தன மலையை எடுத்து பெரும் வெள்ளத்திலிருந்து அவைகளைக் காப்பாற்றினுன்.

புற்றரவு அல்குல் புனமயில் - மடிபிரதேசம் - நிதம்பம் அரவு ஒக்கவிருந்தது. அத்துடன் தலையின் கூந்தல் அழகும் மயிலின் சாயல் போலவிருந்தது. அல்குலையும் கூந்தலையும் சேர்த்து கூறக் காரணம் - நித்ராவஸ்தையில் அவளுடைய ஆடை நெகிழ்ந்திருக்க - அல்குலும் தெரிந்ததும், கூந்தல் கலைந்தாயுமிருந்தது. இந்த தோற்றம் - இவள் ஒருவேளை கண்ணனிடம் கலவிகொண்டாளோ வென்று சந்தேகப் படும்படி - தோழிகளுக்கிருந்தது.

தேசிகன் மயிலின் கழுத்துநிறமுள்ளவனும் - தோகைகளுடன் விளங்கும் கண்ணனைக் கண்டு கோபிகள் காதல்கொண்டனர். ஸ்ரீதேசிகன் ஹ்ருதிமுகிறசிகண்ட மண்டநோ விகித கேதமமைஷ

சிஃபிதா: மதநாதுர வல்லவாங்நாவதநாக்போஜ திவாகரோயுவா- என்றார் கோபாலம்சதியில். மயில் என்றவுடன் - முகில் நினைவால் -முகில்வண்ணன் வரும். பொற்கொடியான நீ கொள்கொடியைக் கொண்டுதானே வரவேண்டும். அதுபோல மின்னற்கொடி முகிலோடு சேரும். அதனால் பொற்கொடியே - என்றார்.

உட்பொருள் : கற்று - ஸத் ஸம்பிரதாயமடியாக கற்க வேண்டியவற்றை கற்க. பகுப்ய : சிரோதவ்யம் - பஹுதாச்ரோதவ்யம் - கற்றுக் கறவைகள் - பல சிஷ்யர்களுடன் கூடிய ஆசாரியர்.

செற்றார் : வேத பாஹ்யர்களும் - குத்ருஷ்டிகளும் - தோல்வியுற, சென்று வாதம்புரியும். இப்படி வித்யா மதத்தினால் பிறரை அழிக்கப் புறப்படலாமோ வெனில் - குற்றமொன்றும் இல்லாத- அவர்களை அழிக்காமல், அவர்களின் துர்புத்தியைமட்டும் அழிப்பது.

கோவலர்-வேதங்களை அங்கங்களோடு காப்பது. முகில் வண்ணனைப் பாடுவது ஜீவனம் - தேகயாத்திரை.

எற்றுக் குறங்கும் பொருள், "நீயே எங்களுக்கு நிதி - உமது அருளிச் செயலே எங்கள் தனம். பொருளாகிய நீர் உறங்கலேர எங்களோடு சேர்ந்து நீரும் உமது அனுபவத்தின் குணதோஷங்களைச் சொல்வீர்" - என்று படித்த பெண்ணை எழுப்புகிறார்கள். திரளாக அனுபவிக்க ஆசையாம். இந்தப் பாட்டு பேயார்க்கு முந்தின பூதத்தாழ்வாரை உணர்த்தும் பாசுரம். குற்றம் ஒன்றுமில்லாத கோவலர்தம் பொற்கொடியே - பூதத்தார் - கோவலர்-முதலாழ்வார்கள். கோல்தேடி ஓடுங்கொழுந்தே போன்றதே மால் தேடியோடும் மனம் - என்கிற பாசுரத்தினால் தம்மை ஒரு கொடியாகப் பாவித்துக்கொண்டவர்.

பூதத்தார் பக்தியாகிற அன்பே தகளியா (தட்டாகவும்) ஆர்வமே நெய்யாக - இன்பு (எலும்பு) உருகு சிந்தை இடுதிரி ஆ (பகவத் விஷயத்திலே கனிந்து - விளக்குத் திரிபோல) நன்பு உருக (ஆத்மாவும் உருகப் பெற்று) ஞானம் சுடர் விளக்கேற்றினேன் என்றார். யார்? ஞானத்தமிழ் புரிந்த நான், கடைசிப் பாட்டில் - என் தன் அளவு அன்றால் யானுடைய வன்பு - உன்னிடமுள்ள என் பக்தி என் அளவில் அடங்கவில்லை. பெரிய காரியங்கள் எனக்காக நீ ஒன்றும் செய்யவேண்டாம் ஆனால் என் பக்திக் காதலை நீ அடக்கித் தந்தாயாகில் அதுவே பரம உபகாரமாகும். என்னை ஸ்வீகரித்துக்கொள்ளும். மற்றுமாரி பெய்கிறபார் யார்? மழை பெய்வது பகவத் சங்கல்பத்தாலே. - மழையை பெய்யும்படி செய்விக்க வல்லவர்கள் யார்?

யார் ? அதாவது பிராப்யருசியிருந்தால் - மற்றப்படி பேற்றுக்கு உபாயமாக நாம் முயற்சி செய்ய வேண்டியது ஒன்றில்லை என்கிற சாஸ்திரப் பொருளை வெளியிட்டவர் இவர். அதாவது கர்த்தவ்யங்களைச் செய்துகொண்டு - அவைகளை உபாயத்வ புத்தியின்றி அனுஷ்டித்தால், பகவத் நிர்ஹேது கிருபையை பிரார்த்திப்பது ஸ்வயம் பிரயோசனமாக கருமங்களைச் செய்வதால் - குற்றமொன்றில்லாத கோவலர். இதனால் பிரபத்தி அவசியமில்லையா? என்கிற கேள்வி எழுமே. ஒருவன் பெரிய ரத்னத்தை விற்காமல் தன் சொந்த உபயோகத்திற்கே ஸ்வயம் பிரயோசனமாகக் கொண்டதை - அதுபோல பிரபத்தியை ஸ்வயம் புருஷார்த்தமாகக் கொண்டு வர்த்திப்பார்கள். சந்தனம், பழம் - இவைகளைத் தன் போகத்துக்கே வைத்திருப்பாரைப்போல, ஸாதன அனுஷ்டானமின்றி ஸாத்யம் கைகூடுமோ? அதற்கு "தனக்கு அடிமைபட்டது தான் அறியான் ஏலும் - (இந்த சேதனன் தான் சேஷன் என்று அறியாத போனாலும்) மனத்தடைய வைப்பதாம் மாலே (திருமாலே) (இவ்வளவு ருசியேற்பட்டதும் - பகவானே பிரதிபந்தகத்தைப் போக்குவான். அது எப்படி? வனம் திடரை ஏர்ஆம் வண்ணம் இயற்றும் இது அல்லால் (பெய்யும் மழை நீரை - ஏரியாக வெட்டிச் செய்வதன்றி - பின்னும் மழையைப் பெய்கிறபார் யார்? (மழையை இவர்கள் பெய்யும்படி செய்ய சக்தியுள்ளவர்களா?) அதுபோல முகில் வண்ணன் பேர்பாட அவன் வரும்போது வருவான் என்றுமுயற்சி செய்யாமல் பேசாது- உறங்குபவனைப்போல- பேசாமலிருக்கவேண்டும்-பொறுமையுடனிருக்க வேண்டும். எண்டிசையும் பேர்த்த கரம் நான்குடையான் பேர் ஓதிபேதைகாள் தீர்த்தகரராமின்திரிந்து -

புற்றரவல்குல் - இடைஅழகு - ஸ்வாபதேசத்தில் இடை அழகு பக்தியின் பெருமையாம். ஞானம் பக்தி விரக்தி இம்மூன்றில் பக்தி இடை அழகாம். தமது பக்தியை முதல் பாட்டிலே விளக்கினார். கடைசிப் பாட்டிலும் சொன்னார்.

சுற்றத்து தோழிமார் - பொய்கையாரும் - பேயாழ்வாரும் சுற்றம், மற்ற ஆழ்வார்கள் தோழிகளாவர். முகில் வண்ணன் - உலகேழும் முற்றும் விளங்கும் முகில் வண்ணனை ஏத்தும் என் நெஞ்சு. கோவலர் திருக்கோவிலூரைச் சொல்லலாம். வழுவின்றி நாரணன் தன் நாமங்கள் நன்குணர்ந்து நன்கேத்தும் காரணங்கள் தாமுடையார்தாம் - இவர்கள் பழிபாவங்களை நீக்கி - உன்னைவழிபட்டு - வாழ்வார்.

3. எம்பெருமானே ஒருவனை சம்சாரத்தில் பிரவர்த்திக்கச் செய்வதும்—அதிலிருந்து மீட்டுக்கொள்வதும் - அவனே. "மாமேவ யே ப்ரபத்யந்தே மாயா மேதாம் தரந்தி தே –" (கீதை).

4. எம்பெருமானை வணங்கினால் - இன்றே நல்விடிவு - (பெருபுலரி என்று). நாள்தோறும் செழுபோதுகொண்டு (புஷ்பங்களைக்கொண்டு) பூசிக்கவேண்டும். இன்று என்னைப் பொருளாக்கி தன்னை என்னுள் வைத்தான் - எந்நன்றி செய்தேனோ என் நெஞ்சில் திகழ்வதுவே? உன்னை மருவித்தொழும் மனமே தந்தாய்-அத்தா என்று பேர்பாடி.

5. இனி நான் என் பாக்கியத்தால் உனக்கு அடிமைப் பட்டேன். பகவத்தர்சனம் கிடைபபதும் – அடிமை படுவதும் - பாக்யம் என்றார் (34); அதற்கு சுக்ருதங்கள் என்று சொல்ல– பகவானே பரமசுக்ருதம் என்றார் திருநறையூர் அரையர். பகவத் விஷயமே - அதில் ருசிபிறப்பதும் - பகவத் கடாக்ஷத்தைப் பெறுவதும் - எதனாலே? பகவத் கடாக்ஷத்தாலேதான் பதில். தேசிகர்–உபாயஸ்வபராப்தேருபநிஷதத்த: ஸ பகவான் பிரஸத்தயை தல்லோக்தே ப்ரபதந நிதித்யால ந கதீ ததா ரோஹ: , பும்ஸாம் ஸிக்ருத பரிபாகே ந மஹதா நிதானம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாணநிபுண : (ரஹஸ்யத்ரியஸாரம்). இதையே நம்மாழ்வார்-ஏதிர் சூழல் புக்கு எனைத்தோர் பிறப்பும் எனக்கே அருளிகென் செய்ய விதிசூழ்ந்ததால் எனக்கேலம்மான் திரிவிக்ரமனையே-எம்பெருமான் திரிவிக்ரமனாகவந்தது என்னைக் கைப்பற்றிக்கொள்வதற்காகவே - அவரும் இதையே சொன்னார்.

6. பெருமாளிடம் பக்தி செய்வது – நின்பெருமை சிறிது வேட்பர் ஏல, சேமம்நீர் ஆகும் (எல்லா நிலையிலும் ரக்ஷகமாகும்) நின்பாதங்கள் ஏத்திபணியுரயேல் எமக்குப் பல்பிறப்பும் எல்லாம் ஏதங்களே (பயனற்றவையே) நமக்கு என்றும் மாதவனே என்னும் மனம்படைத்து மற்று அவன் பேர் ஓதுவதே நாவினால் ஓத்து மற்ற தனங்கள் தனங்கள் இல்லை. இரு நிதியும் எமக்கு என்று ஏமாந்திராதே என்கிறார் (நெஞ்சைப் பார்த்து). இதுபோல் நம்மாழ்வாரும் ஒரு நாயகமாய் - பிச்சைதாம் கொள்வர் என்றார்.

மாதவன் பேர் சொல்லுவதே ஒத்தின் (வேதத்தின்) சுருக்கு (ஸாரம்) ஒத்தின் பொருள் முடிவும் இத்தனையே-உத்தமன் பேர் ஏத்தும் திறம் அறிமின். கீதையில் ஸர்வவேதங்களாலும் அறியப்படுபவன் நானே என்றார்-வேதை: ஸர்வைரஹமேவவேத்ய: இதற்கு "ஸர்வவேதை:" என்கிற அர்த்தம். பேதஅபேதகடக ஸ்ருதிகளாகும்.

8. அவனாலே கிடைக்கப் பெறாதது யாது இருக்கிறது? காமமா அர்த்தமா – மோக்ஷமா? அருளான் அறம் அருளும் அன்றே- அருளாலே மாமறையோர்க்கு ஈந்த (மோக்ஷமளித்த) மணி வண்ணன் பாதமே, நெஞ்சே நீமறவேல் - நினை.

9. பக்தி செய்தால் பிறப்பு ஒன்றும் நேரார் (அடையமாட்டார்கள்) பேர் இன்பம் எல்லாம் (சம்சார இன்பம்) துறந்தார் ஆவர்: வைராக்கியம் கிட்டும். உதாரணம் - ஆட்கொல்லிவில்லிதாஸர்.

10. திருவேங்கடம் - திருமாலிருஞ்சோலை - இரண்டிலும் நீ (பரமாத்மா), எவ்விதம் உகப்பாயோ-அதுபோல என் நெஞ்சமும் நீ மதிக்கும் நீர்மைபோல உளம்கோயில் நிற்பு என்று உள்ளம் வைத்து வெள்ளத்து இளகோயில் கைவிடேல் என்று உன்னினேன்- என்றவர் (54) என்றும் உன்னை மறந்தறியேன் இன்பக்கடல் ஆழி (உமது இன்பஸாகரத்தை) அருளிக்காண். (55)

கருமாணியாய் (பிரமசாரியாய்) இரந்தகள்வா (வாமனா) உன்னைப் பிரமாணித்தார் (நம்பினவர்களைப்) பெற்றபேறு - ஆஸ்ரிதபாரதந்திரியம் - மாவலியை வஞ்சித்தும், தூதுபோயும் சாரத்யம் பண்ணியதும் - அவனைத் தொழுதால் – பிரதிபந்தகம் நீங்கும். பகவானைப் பாடுவதாலே - யானே தவம் செய்தேன் என்றார். அதுபோல - ஒண்கமலம் தன்னால் (புஷ்பங்களை) சாத்தி – ஏத்தி-பணிந்து - அவன்பேர் ஈர் ஐந்நூறு எப்பொழுதும் உரைத்தல் தவம் – உறும்கண்டாய் (77), (80) ஆர்ந்த அடிக்கோலம் கண்டவர்க்கு (திருவடிகளைச் சேவிக்கப் பெற்றவர்களுக்கு) பழி கோலம கண்ட முன்னைப்பகல்என கொல் - திருமேனியின் அழகை சேவிக்கப்பெற்ற முற்காலம் சிறந்ததாகுமோ? இதனால் திருமேனி ஸேவையிற் காட்டிலும் திருவடி சேவையே மேல் என்பதாம். பகவத் சம்பந்தம் ஏற்பட்டால் நல்விடிவு என்பதுபோல பகல் கண்டேன். சோதிவடிவும் கண்டேன் (பரமபதத்தில்-திகழும் உருவம் இங்கு சேவிக்கக் கண்டேன்).

இந்த போக்யதை அளவிற் பெரியது. அளவின்மை ஏந்து சொன்னவாறு கிண்ணகத்தில் (வெள்ளத்தில்)இழியுமாபோலே-எல்லோரும் திரளஅனுபவிக்க வேண்டும். கோலத்தால் குறையில்லை (எத்தனை பேர்கள், தடவைகள் அனுபவித்தாலும் - அழகில் குறை யில்லை. எம்பெருமானுடைய அழகு அளவற்றது) அடிக்கோலி (பூமிபிராட்டி - ஏங்கிக்கொண்டு) நலம்புரிந்தது – (பிராட்டியைய்

[illegible] வைத்தது, எங்கோலோ? எதற்கு? அதற்குப்பதில், கோலத்தால் (எவ்வளவு பேர்கள், தடவைகள் அனுபவித்தாலும்) குறையில்லை (பெருமாளுக்குமில்லை - பூமிபிராட்டிக்கும் இல்லை என்றதாம்).

குறையாக வெஞ்சொற்கள் கூறினேன் கூறி மறை ஆங்கு என உரைத்த மாலை என்றார். இறையேனும் (சிறிது பலனேயாகிலும்- சிறிது காலமாகிலும்) ஈயும் கொல் என்றே (கொடுக்குமா-என்று [illegible] எதிர்பார்த்துக்கொண்டு) எனப் பகலும் இருந்தேன் (83).

பகவானுடைய நீர்மை - அமுது என்றும், தேன் என்றும், அனுபவிப்பான் - ஆழியான் என்றும் உகந்தான் என்றும். உகந்தான் - பகவானின் ஆனந்தம் அதிகம் - அமுது என்று கொண்டு உகந்தான்.

**அழகியசிங்கரின் அருளுரை :**

எல்லா வகைகளிலும் உயர்வு பெற்றிருக்கும் பெண் ஒருத்தியை எழுப்பும் பாசுரம் இது. அடைமொழிகளே-சான்று (பொற்கொடி செல்வப் பெண்டாட்டி - இத்யாதி) - முகில் வண்ணன் - வேதவேத்யன். சுருதி சொல்கிறது-ஹிரண்யஸ் மஸ்ருர் ஹிரண்ய கேச : ஆம்ரணகாத் ஸர்வயேவ ஸீவர்ண : - தங்கத்திருமேனியின் காந்தி - பளபளப்பு - தேஜோமயம் - ஹிரண்யமயவபு:

சாந்தோக்யத்தில், ஆதித்ய மண்டலத்தினுள்ளிருக்கும் ஹிரண்மயதிவ்யமங்கள விக்ரஹனுகபுண்டரீகாக்ஷன் விளங்குகிறார். பொன்மயமான புருஷன்—குழலும் - தாடி முதலாக உடல் மயிர் எல்லாம் பொன்மயம் ; நகத்தின் நுனி வரையிலாக முழுமையும் பொன்னேயாவான்; ஆனால் கண்கள் மட்டும் செந்தாமரைப் பூ போன்றவை.

இந்த உறங்கும் பெண்ணுக்கு — கிருஷ்ணாராதநம்தான் சிந்தனை—என்கிறாள்.

**ஸ்ரீமதாண்டவன் அருளிச் செய்த உரை :**

எல்லாச் சிறப்புகளும் பெற்ற ஒருத்தியை எழுப்புகிறார்கள் அவளுக்குக் கொடுத்திருக்கும் அடைமொழிகளே—அழகிய செல்வப் பொற்கொடி சான்று. முகில் வண்ணன் பேர்பாடவும், இவள் மயில் போல ஆடாமல் இன்னும் தூங்கிக் கொண்டிருக்கிறாளே! இது விந்தைதான்.

**ஸ்வாபதேசம :**

கறவைகள் — சிஷ்யகோடிகளுக்கு ஞானம் உபதேசிப்பவர்கள் செற்றார்—அஞ்ஞானிகள் இருக்குமிடம் தேடிச்சென்று, அவர்களுடைய அஹங்கார மமகாரங்களை அழிப்பதாகும். பகவானுக்கு விரோதி யாவர்கள் என்றால்-பாகவதர்களை வெறுப்பவர்கள். பக்தர்களுக்கு விரோதி - பெருமாளைத் த்வேஷிப்பவர்கள். ஆதலால் உனக்கும் பிடித்த கிருஷ்ணனுடைய குணங்களைச் சொல்லும் போதும், அவனே உபாயம், உபேயம் என்பதை நாங்களும் உன்னைப்போல, உணர்ந்தும், "நிருபாதிக" பாரதந்த்ரியமுடைய பாகவதரை எழுப்பினது—என்பது ஸ்வாபதேசம்.

இங்கு பாகவதரின் பெருமையைக் கூறினதாகும். "என் அடியாரது (குற்றம்) செய்யார்"—செய்தாரேல் நன்று செய்தார் என்பர் போலும்; "சிதைகுறைக்கும்" என்கிற வார்த்தை—பிராட்டி சிதைகுறைத்தாலும்—குணத்தை தோஷமாகப் பிரமித்தாயோ—இதனால் பெரிய பெருமாளுடைய ஆஸ்ரிதபக்ஷபாதம் சொல்லிற்று. இதனால் கைவிடாமைக்குச் சொல்லும் வார்த்தை (பெரியாழ்வார் திரு 4-9-2) "அடியார்" ஸ்வாதந்திரிய நிவ்ருத்தி "தன் அடியார்" என்று அந்யசேஷத்வநிவ்ருத்தி, அடியார் என்பது—சேஷியும், உபாயமும் உபேயமும் தானாகப் பற்றினவர்களை. "அடியார்"—என்று நிருபகம், இவர்களுக்கு குலகோத்ராதிகள் நிருபகம் மற்றவர்களுக்கு. ஔபாதிகமாகவும் அநித்யமாகவிருக்கும் அது. ஆனால் பகவத், பாகவத சம்பந்தம் நிருபாதிகம்—நித்யமாகவுமிருக்கும் திருநாரணன் தொண்டர்

ஒருமிதுனம் (பிராட்டி, எம்பெருமான்) சேஷிமானால், "தம்மடியார்' என்றுசொல்ல வேண்டாமோயெனில், "தன்" என்கிறபதத்திற்குள் நாளும் அந்தர்கதம் அவன் ஸ்வரூபரூப குணவிபூதியித்தனையும், "இவள்" தோயல் வாசியிறே! சேதன அபராதத்தை பொறுக்க வேணும் என்று அவள் சொல்ல (புருஷகாரம் செய்ய)—இவன் "நாம் இவர்கள் அபராதத்தையும் சாஸ்திர மரியாதையையும் மறந்து பொறுத்தோம்"—என்ன; இவன் பொறுத்தது நமக்காகவோ—இவர்களுக்காகவோ; தன் போகத்துக்காகவோ - என்று ஆராய்கைக்காகச் சிதகுரைக்கத் தொடங்கினாளாகில்—"என் அடியார் அது செய்யார்" — என்பான் அவன் (பகவான்). ஸ்வதந்திரரும் அநந்யசேஷபூதரும் செய்யுமத்தை என்னடியாரும் செய்வார்களோ—அதாவது ஆஸ்ரயணத்துக்கு முன்பு இவள் (பிராட்டி) மன்றுடுவாள்; பின்பு அவன் மன்றுடுவான். செய்தாரேல் நன்று செய்தார் என்பான. ஆகையால் சிதகுரைத்தார் ஸ்ரீரங்கநாயகி; நன்று செய்தார் என்று மன்றுடினார் பெரிய பெருமாள்.

மேலும் பேசுவாரடியார்கள் எந்தம்மை விற்கவும் பெறுவாரே (பெரியா. தி. 4–4–10). பாகவதர்களுக்கு சேஷமாகையே புருஷார்த்தம் என்று விஸ்வசிக்கும் எங்களை—தங்களுக்கு இஷ்டப்படி விநியோகத்துக்குறுப்பாக விற்றுக்கொள்ளவும் உரிமை பெற்றவர்கள்.

இப்பாட்டு குலசேகராழ்வாரைச் சொல்லும். ஆழ்வார் தம்மைப் பேயர் என்று சொல்லிக் கொண்டார். பேயனேயொழிந்ததேன் எம்பிரானுக்கே (பெரு. தி. 3–7). இவர் தாஸ்யவிரோதிகளைச் சொல்லும்போது "உண்டியே உடையே உகந்தோடும் இம்மண்டலத்தோடுங் கூடுவதில்லை யான்—என்றும் (3-4) காதல்செய் தொண்டர்க்கு எப்பிறப்பிலும் காதல் செய்யும் என் நெஞ்சமே (2—6) என்றார். பெருமான் ஸம்பந்தம்தான் மிகப்பெரிய செல்வம் என்றார்—செண்பகமாய் வாழும் குருகாய்ப் பிறப்பேனே—(4—1) என்று சொன்னார்.

## 12-ம் பாட்டு :

கனைத்திளங் கற்றெருமை கன்றுக்கிரங்கி
நினைத்து முலைவழியே நின்றுபால் சோர
நனைத்து இல்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்!
பனித்தலை வீழ நின்வாசற் கடைபற்றி
சினத்தினால் தென்இலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக்கு இனியானைப் பாடவும்நீ வாய்திறவாய்
இனித்தான் எழுந்திராய் ஈதுஎன்ன பேர்உறக்கம்!
அனைத்தில்லத்தாரும் அறிந்தேலோ ரெம்பாவாய்.

இந்தப் பாட்டிலும் தூங்குகின்ற ஒருத்தியை எழுப்புகிறார்கள். இவளுக்கும் மற்றவர்களுக்கும் வாசியுண்டு. இவளுக்கு நன்கு தெரியுமாம்-அனைத்தில்லத்தாரும் அறிந்து மற்றையப் பெண்கள் எல்லோரும் வந்து கூடி-இவளது வீட்டின் வாசலிலே ஊர் அறிய நிற்கிறார்கள்-எல்லோரும் வந்தது இவளும் அறிந்தது. பகவத் விஷயம் ரகசியமாக அனுபவிக்குமித்தனை-புறம்பு இதுக்கு ஆளுண்டோ வென்று நீ (படுக்கையில்) கிடைக்கிறாயாகில், அதெங்கும் பிரஸித்தமாகத் தெரிந்திருப்பதால்-எம்பெருமானார் திரு அவதரித்தாற் போலவே-காணும் இப்பெண் பிள்ளையும் என்றார் மூவாயிரப்படி- பெரிய வாச்சான்பிள்ளை. "நாங்கள் உன் உள் வாசலிலே வந்து எழுப்பவும்; என் மதிப்பு எல்லோரும் அறிய வேண்டுமென்று நீ நினைப்பாயாகில்-அந்த விஷயத்தை எல்லோரும் அறிந்தது தான். இனித்தான் எழுந்திராய். ஈது என்ன பேரு றக்கம்! ஓயாத உறக்கம் இஃது என்ன? நாங்கள் பாடவும்-நீ வாய்திறவாமல்-எங்களது ஆற்றாமையை அறிந்து கொண்ட பின் பாகிலும் எழுந்திராய் - ஈது என்ன பேர்உறக்கம்? நமது சித்தாந் தத்திலே சுஷுப்தியிலும் – பிரளயகாலத்திலும் சூக்ஷ்ம அவஸ் தையிலும் - ஜீவன் எம்பெருமானால் அணைக்கப்பட்டு - விஸ்ராமம் செய்து கொள்பவனாகத் தூங்குகிறான். ஜீவன் பிரும்மத்தோடு ஐக்யமாகி-அணைக்கப்பட்டு துங்குகிறான், ஆதலால் இந்த பெண் பேய் உறக்கத்திலும் எம்பெருமானையே அனுபவித்துக் கொண்டிருக் கிறாள். ஸ்வாப்யயாது-ஜீவன் அதன் காரணத்தில் – தூக்கத்தில் லயமாகிறான் என்கிறபடி.

சுஷுப்தம் ஜீவம் ஸதா ஸம்பந்நாம் ஸ்வமபீத: என்கிறபடி இவர்கள் இவள் வாசல் கடையில்-பனிதலையில் பெய்யும்போது - "நீ என்ன பண்ணுகிறாய். ஸ்ரீராமகுணானுபவம் செய்து கொண்டு-மனத்துக்கினியானைப் பாடிக் கொண்டும் - அனுபவித்துக் கொண்டுமிருக்கிறாயா? நாங்களும் அதைத்தான் செய்துக் கொண்டிருக்கிறோம். தென் இலங்கை கோமானை சினத்தினால் செற்ற (கொன்ற) மனத்துக்கு இனியானைப் பாடிக்கொண்டிருக்க - "நீ" மாத்திரம் வாய்திறவாமல் ஸ்வானுபவத்தில் மூழ்கி அனைத்து இல்லத்தாரும் அறியும்படி-எங்களோடு கலந்து சேர்ந்து அனுபவிக்க- நீ எழுந்திராய். இவளுக்கு இன்னொரு விசேஷணம் - "நற்செல்வன் தங்காய்" - நற்செல்வமான கோக்களின் ஸம்ருத்தியினால்-எருமை தம் கன்றுகளை-நினைத்துக் கனைத்து இரங்கி-முலை கடுப்புற்றதால்-பால் அடக்கமுடியாமல் - தானாகவே பெருகும்படி மென்மேலும் பெருகவிட்டுக் கொண்டு-வீட்டு முற்றும் முழுவதும் பால் சேராகி விட்டதாம். இடைவிடாமல் தாரை போல-நீர் விழுச்சிகளில் தண்ணீர் ஊற்றெடுத்துப் பெருகுமாப் போல-அது போல தனஸம்ருத்தி பெற்றவனின் தங்காய்-கண்ணனின் தோழனின் ஸ்ரீதாமனின் தங்காய்-எழுந்திருப்பாய். எங்களோடு சேர்ந்து அனுபவிப்பாய் என்பதாம்.

மனத்துக்கினியான் - ராமசப்தார்த்தம். ரமயதீதிராம: மனத்தைக் களிப்பிக்கின்றவன் - கிருஷ்ணாவதாரத்தில் ராமனை நினைப்பதாவென்றால் - சீதைக்கு மனத்துக்கினியான்-அது போல இவளும் கண்ணனுக்கு; அவன் இங்கே எழுந்தருளியிருப்பதாலே-கண்ணனுக்கும் மனத்துக்கும் இனியனாகவிருக்கிறான். அவன் சீதைக்காக தென் இலங்கைக் கோமானைச் செற்று-ராவண வம்சம் புல் பூண்டோடு அழியும்படி ஸபுத்ரபௌத்ரம் ஸாமாத்ய் ... என்று பெருமான் தேவர்களுக்கு வாக்களித்தபடி ஸர்வவிநாசம் செய்தவன்.

உட்பொருள்:- இளங்கற்றெருமை - பிரபத்தி நிஷ்டரைச் சேர்ந்த ஒரு அதிகாரியை (இங்கு பெண்ணை எழுப்புதலால்) அழைப்பதாம். இவளுக்கு பகவத் அனுபவம் இடைவிடாமல் இருப்பதாலே

முலைவழியே நின்று பால்சோர - அதனால் யாவனொரு மஹானின் உள்ளம் நனைந்து உருகுகின்றதோ-அந்த நற்செல்வனைக் குறிப்ப தாம். நனைத்தில்லம் சேருக்கும் நற்செல்வன். பகவான் எப்படிப் பட்டவன், நித்ய நிரவதிக அஸங்க்யேய கல்யாண குணங்களின் நிதி. ஹேயபிரதிபடன் இங்கு பகவானிடம் பக்தி செய்வதைவிட பிரபத்தி செய்துஅதனால் பக்தியை வளரச் செய்வது, பெருமையாம். ஸாத்யபக்தி ஸ்துஸாஹந்த்ரீ ப்ராரப் தஸ்யாபிபூயஸி என்பதால்- உபாய பக்தியைவிட ஸாத்யபக்தியான பிரபத்திக்கு சீக்கிரம் மோக்ஷம் பெறுவிக்க சக்தியுண்டு. அதையுடைய நற்செல்வன் - அவனின் தங்காய் நீ அனைத்தில்லத்தாருமறிந்து-மனத்தில் அனுப விப்பது மட்டுமின்றி-வாய்திறந்து எங்களோடு கூட அன்வயித்து அனுபவித்தால் எல்லோரும் உன் ஸாதனையை அறியலாம். இத் துடன் எழுபெண்களையெழுப்பினுர்கள்.

இப்பாசுரத்தை பூதத்தாழ்வாருக்கு அடுத்து முந்தினவரான பொய்கையாழ்வாரைக் குறிக்குமென்பார்கள். இவர்தாமரைப் பூவில் தோன்றினவர். அவருக்குத் தங்காய் என்பது ஒற்றுமை நயமா கும். இவர் பாடின பாட்டில் பழுதேபல்பகலும் போயினவென்று அஞ்சி அழுதேன். அழுது அழுது இவரது இல்லம் பொய்கை சேருகவேயுளதாம். "வையத்தடியவர்கள் வாழ" என்கிற தனியனில்- அருந்தமிழ் நூற்றந்தாதி படி விளங்கச் செய்தான். பரிந்து- இரக்கம் கொண்டு பாடினுர். அதனல் நினைத்து முலைவழியே நின்று பால்சோர-அதுபோல இவரும் பகவத் குணங்களைப் பாடினுர். மூன்று ஆழ்வார்களும் வாசற்கடைபற்றின ரேழியில் சந்தித் ததும், - நன்கு தெரியப்படுகிறது. இவர் ஸ்ரீராமகதையைச் சொல்லும் போது பூமேய மாதவத்தோன்தாள் பணிந்த வாளரக்கன் நீண்முடியைப் பாதமத்தாலெண்ணினுன் பண்பு - அதில் நாமே யறிகிற்போம் "நன்னெஞ்சே" என்பதற்குப் பொருந்த,- மனத்துக்கினியான்-என்றுள். இனித்தான்யெழுந்திராய் என்பதற்கு "பழுதே பல பகலும்" - என்று பாசுரம் பேசின பிறகு உறங்க

ளாமோ?'' இங்கு முமுக்ஷுப்படியில் இழந்த நாளைக்குக் கூப்பிடுகிற வனுக்கு உறங்கவிரகில்லை என்பது ஒக்கும். அனைத்தில்லத்தாரு மறிந்து. அறியுமுலகெல்லாம் யானேயுமல்லேன் - என்ற இவ்வாழ் வாரின் பாசுரம் நினைப்புக் கொள்ளலாயிற்று.

இப்பாசுரத்தோடு - ஸ்ரீமதுரகவிகளும் உணர்த்தப்படுவார். நற் செல்வன் தங்காய் நற்செல்வனுகிற (நம்மாழ்வாருடைய) தங்கையே (கையின் ஸ்தானத்திலிருப்பவரே. கையால் பட்டோலை செய்ததால்- இதுவும் பொருந்தும்). இதே மாதிரி-எம்பெருமானுரையும் கோதற்ற திருப்பாவையைப் பாடிய பாவை (ஆண்டாளின்) தங்கையே, பெரு மையை உடையவளே, என்றும் சொல்லலாம்.

**அழகியசிங்கரின் கருத்து :**

நற்செல்வனுடைய தங்கையை இங்கு எழுப்புகிறார்கள் - மனத் துக்கினியான் - ஸ்ரீராமன். கண்ணிற்கும் மனத்துக்கும் இனியவன். சுபாஸ்ரயம்.

**ஸ்ரீமதாண்டவன் அருளிச் செய்த உரை :**

உறங்குபவளின் தமையன் — கிருஷ்ணபக்தன் ஒருவன், தன்வீட்டு வேலைகளில் சிரத்தையில்லாமல் இளைய பெருமாளைப்போல , இருத் தல் — அத்தகையவனை எழுப்புதல். தொழில் எனக்குத்தொல்லை. மாலினீர்மை வையகம் மறைத்ததென்ன நீர்மையே — ( திருச்சந்த விருத்தம்—44 ; நான்முகதிருவந்தாதி - 85-ம் பாட்டில் — தொழில் எனக்குத்தொல்லை மால் தன்னுமமேத்த பொழுதெனக்கு மற்றதுவே போதும் - — அவனால் அவன் தங்கைக்குயேற்றம்.

ஸ்வாபதேசம்: பாகவதபிமான சிஷ்டரை எழுப்புகிறார்கள். இவள் தொண்டருக்கு தொண்டுசெய்யும் அடியாருக்கு அடியார்தான் தங்கை-அடியாரடியார்க்கு தம்மடியார் அடியார் தமக்குஅடியாரடியார்

தம் அடியாரடியோங்களே-திருவா. 3-7 - 10. மனத்துக்கினியான்-ராமவிருத்தாந்தம். ஸ்ரீராமநாமம் மிருதசஞ்ஜிவினிமந்திரம். சுக்ரீவன் ராவணன் மீது பாய்ந்து அவனை அடித்தல். அதுபோல-ஆசார்யன் இளஞ் சிஷ்யனைத்திருத்தி உபதேசிக்க வேண்டும். பரசுராம கர்வபங்கமும் நினைக்கத்தக்கது .

## 13-ம் பாட்டு :

புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லா அரக்கனைக்
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்ப்
பிள்ளைகள் எல்லாரும் பாவைக்களம்புக்கார்
வெள்ளியெழுந்து வியாழம் உறங்கிற்று
புள்ளும் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய் !
குள்ளக்குளிரக் குடைந்து நீராடாதே
பள்ளிக்கிடத்தியோ ? பாவாய் ! நீ நன்னாளால்
கள்ளம் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய்.

இந்தப் பாட்டிலும் படுக்கையில் கிடந்து பரந்தாமனை மானஸீகமாக அனுபவிக்கும் ஒரு தோழியை - இதென்ன ஆச்சரியம் நீ இன்னும் படுக்கையை விட்டு இறங்காமல் நீயாகவே தனியாக ராமன், கிருஷ்ணன் போன்ற அவதாரங்கள் எடுத்த பரமாத்மாவை அனுபவித்துக் கொண்டிருக்கிறாயோ? - சீக்கிரம் எழுந்திருந்து-எங்களுடன் கலந்துகூடி கள்ளம் தவிர்த்து - (கபடங்களைத் தியாகம் செய்து) - இந்த (மார்கழி) நன்நாளில் குள்ளக்குளிர் (உள்ளம் குளிரும்படி - அதாவது உடல் முழுதும் நனைந்து நீராடினால் - உள்ளமும் குளிரும்) வா - படுக்கையைவிட்டு ஸ்நானம் செய்யப்போகலாம் என்று அவளை அழைக்கிறார்கள். மற்றவர்கள் - இங்கு அவளைக் கூப்பிடும்போது - "போது அரிக்ண்ணினாய் - " புஷ்பத்தை முகரும் வண்டைப்போல கருங்கண்கள் உடையவளே என்றும்; பாவாய் - தங்கப் பதுமையைப்போல மேனி

அழகும் படைத்தவளே; என்றும் சொல்கிறார்கள். நாழிகையாகி விட்டது - தாமதம் செய்யாதே என்பதற்கு வெள்ளி எழுந்து - வியாழன் உறங்கிற்று என்றனர். புள்ளும் - (பட்சிகளும்) சிலம் பின (இரைதேடப் போகுமுன் தம் குஞ்சுகளுடன் குலாவி மகிழ் கின்றன காண். நாம் ஸ்நானம் செய்துவிட்டு - மற்றைய பிள்ளைகளுடனும் சேர்ந்து பாவைக்களம் - நோன்பு நோற்பதற் காக - ஒரு குறிப்பிட்ட ஸ்தானத்திற்கு புகுந்து விட்டனர். சிலர் - ஏற்கனவே வந்து சேர்ந்தனர். அவர்களுடன் நாம் பரந் தாமனின் கீர்த்தியைப் பாடி இன்புறுவோம். பரந்தாமன் - ராம ணுகவிருக்கும்போது பொல்லா (ராவணன்) என்கிற அரக்கனை அவனது தலைகளை பனங்காய் அறுப்பதுபோல - வெட்டித்தள்ளி - மார்பில் பின்பு அம்பு எய்த ராமபிரானின் சரிதத்தைப் பாடுவோம். கிருஷ்ணவதாரம் எடுத்தபோது, பறவை உருக் கொண்டுவந்த பகாசுரனுடைய வாயைக் கீண்டு எறிந்தவனும் - காலநேமிபோன்ற அரக்கர்களையும் கம்சன் போன்றவர்களையும், வதைத்த கிருஷ்ணனுடைய புகழ்களைப்பாடி - நாம் இன்புறுவோம் ஓடிவா - சீக்கிரம் என்று குரலிட்டு அழைத்தனர்.

மூவாயிரப்படியில் - நம் கண் உண்டாகில் தானே வருகிறாள்- னென்று கிடக்கிறாள் ஒருத்தியை எழுப்புகிறார்கள். அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் ஆராயிரப்படியில் - தன் கண் அழகை நினைத்து இக்கண்ணழகுடைய நானிருந்தவிடத்தே எல் லோரும் வரும்த்தன்னயன்றோ! நானே போவேனென்பாள் ஒருத் தியை எழுப்புகிறார்கள். இந்த நாயகி - வந்தவர்களை கேட்கிறாள். "நீங்கள் பக்கத்து வீட்டினிலே மனத்துக்கினியானைப் பாடினீர் களோ" என்க - இவர்கள் பதில் சொல்வது- "ராமவிருத்தாந்தமும் கிருஷ்ணவிருத்தாந்தமும் சொன்னோம். பாரதம் பாஞ்சராத்திரம் உள்பட எல்லாமும் சொன்னோம்" என்கிறார்கள்."

புள்ளின்வாய் - சகடத்திலே அசுரன் ஆவேசித்ததுபோல - பகா சுரன் - கொக்கின்மேல் ஆவேசித்தான், அவனைக் கீண்டான் கண்ணன் - கண் அழகுள்ளவன், நம்மாழ்வார் சொன்னது போல் - "மோக்ஷப்ரதன் - நம் கண்ணன் கண் அல்லது ஓர் கண்

இல்லை - மோக்ஷம் முதலிய சகலபுருஷார்த்தங்களையும் அளிக்கும் கண்ணபிரான். கண் - உலகுக்கு இறைவன்; அல்லது ஓர் கண் இல்லை - அவன் அல்லாமல் வேறு ஒரு தலைவன் இல்லை என்பதாம். பகவானே ஸர்வபலப்ரதன் என்பது ஸ்ரீபாஷ்யத்தில் பலாதி கர ணத்தில் சொல்லப்பட்டது. ஐஹிகம் ஆமுஷ்மிகம் இரண்டும் பரமாத்மாவினுல்தான் ஏற்படுகின்றன. கொக்குக்கும் மோக்ஷம் அளித்தவன் - இது கிருஷ்ணவிருத்தாந்தம் ராமவிருத்தாந்தம் - பொல்லாத (ராவண) அரக்கனைப் பூண்டோடு அழித்தவன் - உயிரையும் உடலையும் வேருக்கினதால் - கிள்ளிக்களைந்தானை - எதற்கு திருவினை (சீதையை) பிரித்தமையால் ஏற்பட்ட அனர்த் தம். "சீதை ராவணனை நோக்கி - துர்விருத்த த்வந்நீச: பரதார அபேக்ஷை செய்கிறபடியால் - பொல்லா.

விபீஷணன் தர்மாத்மா, அவனை விரட்டினவன் ராவணன். ஆகவே ராமபுகழ்பெரிதா - கிருஷ்ணபுகழ் பெரியதா - என்பதை - பக்ஷம் வகுத்துப்பாடுவார்களைப்போல - கீர்த்திமை பாடிப்போய் - ராமன் தனிவிரன் - எதிரிகளும் புகழத்தக்க ரஞ்சனீயஸ்ய வீரன்- உகவாதார்களே புகழ்ந்தால் இந்தப் பெண்களைப் போல உகந் தவர்கள் பாடுவது பற்றிச் சொல்லவேணுமோ? ராமன் - தன்னைப் பெறுவதற்கு உபாயத்தை கடற்கரையிலே அருளிச் செய்தனன்; பரதனுக்கு ஒரு நாள் இட்டுக்கொடுத்து அந்த வாக்கைக் காப் பாற்றினவன். குஹனேடு, ஐவரானேம் - என்று ஸௌசீல்யத்தின் பராகாஷ்டையக் காட்டினவன்; அதனுல் அவனை கீர்த்திக்கனி- பண்களாகிற தேனில் கலந்து காதுகள் பூர்ணமாக அனுபவிக்கும் படி கீர்த்தி பெருமைகள் உள்ளவன்.

ஆனுல் கிருஷ்ணனுடைய ஸௌசீல்யம், பரத்வம்- இரண்டும் தேர்த்தட்டின் மீது அமர்ந்து அர்ஜுனனுக்கு உபதேசித்ததும்- பாண்டவர்களுக்காக தூதுபோயும் - "பாண்டவர்கள் எனக்கு மித்ரர்கள்- அவர்களுக்கு எதிரிகள் எனக்கும் விரோதிகள்" என்று துர்யோதனனிடம் சொன்னவன். ருக்மிணி போன்ற தன் பக்தர்

களிடம் தாமே ஓடிவருபவன் -- சாரங்கத்தின் ஒலி சீதைக்கு உதவி யதுபோல சங்கின் ஒலி ருக்மிணிக்கு -- "நாயகன் இதோ வந்துவிட்டான்" என்று உள்ளம் குளிர சங்கிட்டவன்.

இத்தகைய பெருமைகள் வாய்ந்த ராமகிருஷ்ணுவதாரங் ரங்களைப் பாடிப் பருகுவதால் என்ன லாபம்? என்று கேட்பவர்களுக்கு - நம்மாழ்வாரின் திவ்ய சூத்தி - ஆவியே ஆராமுதே என்னை ஆளுடை தூவியும் புள்ளுடையாய் - சுடர் நேமியாய், பாவியேன் நெஞ்சம் புலம்பப் பலகாலும் கூவியும் காணப்பெறேனுன் கோலமே -- இதற்கு ஈட்டில் ஒன்று அபிமதம் பெற்றவனல்லேன்-மற்றொன்று ஸ்வரூபம் பெற்றேனல்லன். இரு விதத்தாலும் நான் பகவத் ஸ்வரூபத்தையும் நீர்மையையும் அழித்து எனக்குக் கேடு விளைவித்துக் கொண்டேன். அதாவது என் சேஷத்வத்தையும் -- அவனுடைய ஈஸ்வரத்வத்தையும் (ஸர்வரக்ஷதத்தையும்) அழித்தேன் என்றது. கூவியும் காணப்பெறேன் - எனது ஆவியை ஈர்க்கின்றாய் - சௌசீல்யமே வடிவெடுத்து வந்திருப்பவனே - உன்னை என்று கூடி களிப்பேன்? பரதனுக்கு ஒருநாள் இட்டுக்கொடுத்தாய், பலியை ஆட்கொள்ள வாமனனாகச் சென்று-உபாயம் பிச்சை அவனைக் கேட்பதுபோல - தேடினாய், அதுமாதிரி நான் உனக்கு அடியேன். என்னை நீதான் ஸ்விகரிக்கவேண்டும். நீயாகவே உபாயம் தேடுவாய் -- பாணாசுரன் கம்சன் ஆகியவர்களின் கர்வத்தை அழித்த புள்வல்லாய் -- கருடனை வாகனமாகவும் கொடியாகவும் கொண்டவனே என்றார் நம்மாழ்வார். உள்ளில் வருத்தம் இவருக்கு-ஸம்சாரிகள் இவ்விதம் கூப்பிடுகிறார்களில்லையே என்பார் அவர். அதுபோல இந்த பெண் பிள்ளைகள் பாடுவதற்காகவும் ராமகிருஷ்ண நாமங்களை அரற்றுவதற்காகவும் பாவைக்களம் புகுந்து விட்டனர். அகாலமில்லை -- சுக்ரன் உதயமாகி விட்டான் -- பிரஹஸ்பதியும் அஸ்தமித்தான். புள்ளும் சிலம்பினகாண்.

நாங்கள் பாடப்பாட - நீ உன் கண் அழகினையே நினைந்து நினைந்து, - போதரிச்சண்ணினாய், -- அஸிதேக்ஷண புண்டரீகாக்ஷனிடம் (வண்டு போலக் கருங்கண்கள் - கொண்ட இவள்

பேரீக்கடலேளே - என்கிற சம்சயம் நீங்க-நெடுங்கண் இளமான் இவள் - அவனே அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனன் ; அவனுடைய விபூதியும் இவள் கண் அழகுக்கு ஒரு மூலைக்குப் போராதே - அதனால் போதரிக்கண்ணி. பூவும் மானும் போன்ற கண்; பூவில் படிந்த வண்டு போல கருங்கண்கள்-அரி-மான்-வண்டு என்னவுமாம். கம்பன் சீதையின் அழகை வர்ணிக்கும் போது கஞ்சத்துகளிக்கும் இன்தேன் கவர்ந்து உணும் வண்டு போல அப்ராகிருத அழகு. திரௌபதியின் அழகைப் பருகின தோழி களைப் போல – சீதா கல்யாண உத்ஸவத்தில் சீதையின் அழகைப் பருகின தோழிமார்களும் திகைத்தனராம். சீதாப் பிராட்டியின் கண்கள் கருப்பு – அகண்டும் நீண்டும் - செவ்வரிகள் படர்ந்து-குளிர்ந்து கடாக்ஷம் நிரம்பி - அழகுமதம் கொண்டதும் - வேல் போன்று கூரிய விஷத்தைக் கொண்டதும் - ராமனைப்போல அன்பர்களுக்கு உயிர் கொடுக்கும் அம்ருதமாகவும் - சஞ்சீவினி யாகவும் – சுகமாகவும் – இருந்தன. "செம்செவே நீண்டு மீண்டு சேயரி சிதறி (செவ்வரிகள்-சிதறி) தீயவஞ்சமும் களவும் இன்றி மழை என (குளிர்ந்து) மதர்த்த கண்கள் அவைகளின் அஞ்சனம் நிறமோ- அவை அண்ணல் (ராமனின்) (இங்கு கிருஷ்ணனின்) மேனி வண்ணமோ? அறிதல் தேற்றும் (நாம், தெளிவாக அறிகின்றோமில்லை என்பாள்) மொய்வளர் குவளைபூத்த முளரியின் முளைத்த முந்நாள் இரு நீலோத்பலங்களோ – அல்லது தாமரையில் உதித்து முளைக்கப் பெற்றதோ - தெரியவில்லை என்பதாம். பூவிற்படிந்த வண்டு போன்ற கண்ணுடையவளே- புஷ்பத்தின் அழகுக்குச் சத்ருவான கண் அழகு கொண்டவளே.

மொத்தத்தில் - நீ விழித்திருக்கிறாய் என்பது எங்களுக்குத் தெரியும் - அவ்விதமாயினும் பதுமை போன்று அசையாமலிருப்ப தால்–அதுவும் இந்த நன்னாளில்–நாளில்–நீகள்ளம் தவிர்த்து கலந்து நீராடாமல் - தனியாகப் படுக்கையில் இருக்கலாமா? ஆகவே கள்ளம் தவிர்த்து கலந்து கொள்க.

**ஸ்வாபதேசம் (உட்பொருள்) :-**

இது ஆண்டாளுக்கடுத்த தொண்டரடிப்பொடி ஆழ்வாரைக் குறிக்கும் பாசுரமாம். போது அரிக்கண்ணினாய்-புஷ்ப கைங்கர்யம் கொண்ட இந்த ஆழ்வார், துளபத் தொண்டாய தொல்சீர்த் தொண்டரடிப்பொடி என்றும், தொடையொத்த துளவமும் கூடையும் பொலிந்து தோன்றிய தோள் – தொண்டரடிப்பொடி. இவர் அரங்கன் ஒருவனுக்கே கைங்கர்யம் செய்து - வேறொரு திருப்பதியை எண்ணுமலே – திருமாலைப் பாடியவர், திருவேங்கட முடையான் எதிரிலே - ஒருவர் "பதின்மர் பாடும் பெருமாள்!" என்று சொல்ல, அதைக்கேட்ட பெரிய கேள்வி ஜீயர், "தோழியன் கெடுத்தான் காணும். அந்த ஏற்றம் நம் பெருமாளுக்கில்லையே; நம் பெருமாள் ஒருவர்க்கே!" என்றாராம்.

திருமாலை பாடிய தொண்டரடிப்பொடி மார்கழித் திங்களில் அவதரித்தவர். இவர் தம் பாமாலையில் - தனனைப் பற்றிப் பேசும் போது, "கள்ளன் - சூதனாய் கள்வனாகி - கள்ளமே காதல் செய்து- கள்ளத்தேன் நானும் தொண்டாய்" என்று தமது கள்ளத்தைப் பேசினார்.

திருமாலையைப் பாடின தொண்டரடிப் பொடியாழ்வார், "மற்ற ஒன்றும் வேண்டா மனமே மதிளரங்கர் எம்பெருமானை எப் பொழுதும் பேசு" என்று சொன்னவர். "இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன்- அரங்கமா நகருளானே" என்றவர். அத்தகையவர் மீண்டும் சொன் னார் "வேத நூல் பிராயம் நூறு மனுசர் தாம் புகுவரேலும் பாதியு முறங்கிப்போம்" என்பதால்! கள்ளம் தவிர்ந்து கலந்து பகவத் அனுபவம் செய்யாமல் பள்ளிக்கிடத்தியா! பேசும் அதுவும் இந் நாளில்! இந்த சுபதினத்தில்! ராமனையோ கிருஷ்ணனையோ பாடாமல்

சிலையினுல் இலங்கை செற்ற தேவனே தேவனுவான் என்று ராமனையும் - கற்றினம் மேய்த்த வெந்தை கழலிணை பணியினீரே என்று கிருஷ்ணனையும் சேர்த்து, மதிளரங்கனைப் பாடாமல் தூங்குகிருயோ? மருவிய பெரிய கோயில் மதிள் திருவரங்கம் என்று சொல்லாதவர் கருவிலே திருவிலாதவர்; காலத்தை வீணுகக் கழிக்கின்றவர் என்று கோஷித்துச் சொன்னவர். நாம் சங்கீர்த்தனம்-கலந்து கூடிப் பாடிடுவோம். எங்கள் மால் இறைவன் ஈசன் கிடந்ததோர் கிடக்கை கண்டும் எங்ஙனம் மறந்து வாழ் வேன் ? போதெல்லாம் போதுகொண்டு உன் பொன்னடி புனைய மாட்டேன்; தீதிலா மொழிகள்கொண்டு உன் திருக்குணம் செப்ப மாட்டேன்; காதலால் நெஞ்சமன்பு கலந்திலேனது தன்னுலே ஏதிலெனரங்கர்க்கெல்லே என் செய்வான் தோன்றினேனே-அத் தகைய நீசவாழ்க்கையைக் கொண்ட நான் "எம்பிரார்க்கு ஆட் செய்யாதே (அடிமை செய்யாமல்) என் செய்வான் தோன்றி னேனே". மனித ஜன்மம் எடுப்பது பகவானைத் தொழுவதற்காக; அதில்லாவிடின் - நாய்களோம் – அத்தகைய நீச ஆத்மாக்களையும் சமமாகப் பார்க்கிறவன்-எம்பெருமான்-எப்படி? செம்புலால் உண்டு வாழும் முதலைமேல் சீறிவந்தார் ஆனைக்காக ஆகி. அத்தகைய பெருமானே ஆருளர் (உன்னைவிட்டு யார் உளர்?) களைகண் அம்மா- (உதவிசெய்ய உன்னைத்தவிர வேறு யார் உளர்-ஸ்வாமியே என்ருர். உன்னையன்றி உறவு மற்றெருருவரில்லை. நின் பாதமூலம் பற்றினேன் - பரமமூர்த்தி என்று தன் பிழைகளை நினைந்து உரு கிருர். சேவியேன் உன்னையல்லால் சிக்கெனச் செங்கண் மாலே- பாவியேன் (சிந்திக்கமாட்டேன்); காம் பறத்தலை சிரைத்துன் கடைத்தலையிருந்து வாழும் சோம்பரை யுகத்தி போலும் சூழ்புன லரங்கத்தானே, (ஐம்புலனடக்கி - காம்புஅற தலைசிரைத்து - வேறு உபாயங்களைவிட்டு) உன் பிரதான வாயிலில் நின்று "வாழும் சோம்பர்)" (சுமையைத் தாங்கச் சோம்பினவர்களை, வேறு உபா

த்தில் மனம்இழியாமல்-கேவலம் பிரபத்தி செய்து - பிரபன்னரின் சிறப்பு. காம்பற-இத்தகைய மற்ற பக்தி முதலிய உபாயங்களை விட்டு-"வாழும் சோம்பரை". பிரபத்தியென்பது கடைத்தலையாம். அத்தகைய அனுஷ்டானம் செய்தவராம். இவர்--பரம புருஷார்த்தத்தின் எல்லை நிலமாகிற பாகவத கைங்கர்யத்தையும் இவர் மீண்டும் பேசினார்; கலந்து என்பதற்கு போனகம் செய்த சேடம் பிரஸாதசேஷம் புனிதம் என்றார். யாருடைய பிரசாத சேஷம் ஆசார்யர்களின் பிரஸாதசேஷம் எனக் கொள்ளவும். கண்ணனைப் பஜிப்பது மோக்ஷபுருஷார்த்தத்தை அடைவிக்கும். அரங்கமாலைத் துளபத் தொண்டாய தொல்சீர்த் தொண்டரடிப்பொடி சொல் இளைய பன்கவிதை யேலும் எம்பிராற்கினியவாறே என்றார். பரதேவதை ஸ்ரீயப்பதியே-அவன் திருவடியில் பிரபத்தி செய்வதே ஹிதம். பாகவத பிராவாண்யமும் ஏற்படுமாம் இவரே பெருமானுக்குத் திருப்பள்ளியெழுச்சியும் பாடினார். அவனை எழுப்புவதற்கு எல்லாத் தேவதைகளும் கூடி நின்று அனுசந்தித்தனர் என்றார். அரசனை ப்ராபோதநீம் பள்ளிஎழுச்சி விஷயமான திருமொழி மாலையை அருளிச் செய்தவர் இவரேயாவார்.

**அழகியசிங்கரின் உரை : -**

இப்பாட்டில் கண்ணழகி ஒருத்தியை எழுப்புகிறாள்—பொல்லா அரக்கனை-கம்ஸன் - தாய் - தந்தையைப் பிரித்தவன், ராவணனையும் சொல்லலாம். புள்ளின் வாய் கீண்டான் கிருஷ்ணன்.

**ஸ்ரீமதாண்டவன் அருளிச் செய்த உரை :**

புள்ளின்வாய் - கீண்டானை _ பகாசுரவதம். போதரிக் கண்ணினாய் - தாமரை மலர்போலவிருக்கு முகத்திலே ஒருவண்டு படிந்தது என்று சொல்லும்படி கண்கள். இன்று சுதினம்-(போதரி) எழுந்திரு.

**ஸ்வாபதேசம்** :—சொருபஞானம் ஏற்பட்டால், கண்ணன் வரும்போது வருவான்-என்று முயற்சியின்றி இருத்தல் - அத் தகைய பக்குவமான அதிகாரியை எழுப்புதல்-வில்லிதாஸர் கதையை ஸ்மரிப்பது.

போதரிக்கண் - ஸ்வரூபஞானத்தைக் குறிக்கும். பள்ளிக்-கிடத்தல்-தனித்து குணனுபவம் செய்தல்.

இன்னெரு விதமாயும் சொல்லலாம். பாகவத சமுதாயத்தில் தலைவரை எழுப்புதல் நமஸ் சப்தத்திலே பாரதந்திரியம். ஸ்வாதந் திரியம் தலை மடிந்தது காண். அதாவது அனன்யார் ஹசேஷத்வம், அனன்யசரணத்வம், அனன்யபோக்யத்வம் ஆகமூன்றையுமுடைய உத்தம பிரபந்நனை எழுப்புதல். எங்கனமெனில், "உன்னைப்போல நாங்களும் பரதந்திரர்கள் என்று உணர்ந்திருக்கின்ருேம்",

கள்ளம்-கபடம்-பெரியாழ்வாரது திருமாலிருஞ்சோலை மீதுள்ள பாசுரங்கள் (நான்காம்பத்து - 2ம் திருமொழி) நினைப்பது "வல் லாளன்தோளும் வாளரக்கன் முடியும் தங்கை பொல்லாத மூக்கும் போக்குவித்தான் பொருந்தும் மலை-சூர்ப்பணகை மூக்கறுவுண் டது, பொல்லா அரக்கன் ஹிரண்யகசிபையும் சோழ அரசனையும் குறிக்கும், தாழ்வான்- அவமதித்தலையும் குறிக்கும்.

கள்ளம்—திருமாலையில் 34வது பாட்டு - உள்ளத்தேயுறையு மாலை உள்ளுவானுணர்வொன்றில்லா, கள்ளத்தேன் நானும் தொண்டாய் தொண்டுக்கே கோலம்பூண்டு-நினைக்கவும். அதே போல மதுர கவியையும் சொல்லலாம்.

14-ம் பாட்டு :

உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல் வாய் கூம்பின
[காண்
செங்கல்பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்ருர்
எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
நங்காய்! எழுந்திராய் நாணுதாய்! நாவுடையாய்!
சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்
பங்கயக்கண்ணனைப் பாடேலோ ரெம்பாவாய்.

இந்தப் பாட்டு தலைவி ஒருத்தியை—அவள் தானே எல்லோரையும் தானே வந்து எழுப்பக் கடவதாகச் சொல்லி வைத்து அதனைச் செய்யாமல்-மறந்துபோய் தூங்கும் ஒருத்தியை எழுப்புகிருர்கள். தோழிகள் சொல்கிருர்கள்-ரொம்ப அழகுதான்! முன்னமே எங்களை எழுப்புவதற்காக வாய்ப் பேச்சுக்களை சொல்லியிருந்தாயே! நங்காய், உன் வீட்டின் பின்புறமுள்ள தோட்டத்தில் வாவியுள் (தடாகத்திலே) செங்கழுநீர் மலர்கள் வாய் திறக்கவும் ஆம்பல் மலர்கள் மூடவும்—(இது விடிந்ததற்கும் சூரிய உதயத்திற்கும் அடை

யாளம்) அது மாத்திரமின்றி, செங்கல்பொடி கூறை வெண்பல் தவத்தவர் (பல சந்யாஸிகள்) தங்கள் திருக்கோயில்களை சங்கு த்வனி கொண்டு-திறந்து கொண்டிருக்கிறார்கள். அதற்காகப்பிர யத்னம் செய்து கொண்டிருக்கின்றனர். இவ்விதம் உதயகாலம் வந்திருக்க-நீ இன்னமும் உறங்கிக் கொண்டிருக்கின்றாயே. வெகு அழகுதான்! எங்களை முன்னம் எழுப்புவான்-வாய்பேசும் நங்காய்! இன்னும் உறங்குகிறாயோ!. நாணாதாய்-வெட்கமில்லாமலிருக்கிறாயே-நா உடையாய் இனிய நாவைப் படைத்தவனே!- எதற்கு இனிய நாவு? பகவானின் திருக்கல்யாண குணங்களை எங்களுடன் பாடுவதற்காக நீ படைக்கப்பட்டிருக்கிறாய். சங்கோடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்- (நான்கு திருக்கைகளையுடைய) பங்கயக் கண்ணனை (அம்புஜாக்ஷனாகிற கண்ணனை) ,பாட எழுந்திராய்-ஏல் ஓர் எம்பாவாய்-விளிச்சொல்.

இவள் முன் இரவு தோழிகளுடன் சொன்னாளாம், "நான் ஒருவளே தெரிந்து எழுப்புவேன்-கவலையில்லாமல் தூங்குங்கள்" என்று சொல்லிவிட்டு-சூரிய உதயகாலம் வந்தபிறகும்-தன் வார்த்தையை மறந்து தூங்குபவளை எழுப்பும் பாசுரம். வேறிடத்திலுள்ள அல்லிகள் அல்ல உன் கடைவாயிலிலுள்ள வாவியில் உள்ளன ஆதலால் நீயே போய்ப்பார்த்திடு,தாமரைப்பூக்கள் மலர்தல் ஆம்பல் குவிதல் விசேஷித்த விடியற்காலத்தின் அடையாளங்கள். இன்னும் ஸ்ரீவைஷ்ணவ சந்யாஸிகளுக்கு பற்களும் பூணூலும் ஜபவஸ்திரமும் வெளுப்பு. திருக்கோயில்- அவரவர் கிரஹங்களிலுள்ள (ஆசிரமங்களிலுள்ள) திருக்கோயில். சங்கு - பூஜைக்கு உபகரணம் சங்கை ஊதினார்கள் யார்? காவி வஸ்திரமணிந்த சந்யாஸிகள். இதுவும் விடிந்ததற்கு அடையாளம். சங்கிடுவான் என்றதுமே சங்கும் சக்கரமும் ஏந்தும் தடக்கையன் நினைவு வருமாம். இந்த அடைமொழி "கண்ணனுக்குதான்" என்பதற்காக பங்கயக்

கண்ணனை என்றாள். கிருஷ்ணாவதாரத்தில் பார்த்தசாரதியாக பாஞ்சஜன்யம்ஹ்ருஷிகேசன் "பாரதயுத்தம் முடியும்வரை ஆயுதம் எடுக்காமல் என்று சொல்லின் பிஷ்மருக்கு எதிரில் சக்கரத்தைப் பிரயோகித்ததும் ஜயத்ரதவதையிலே சக்கரத்தால் சூரியனை மறைத் ததும், அவதரிக்கும் போதே தமது தாய்க்கு (தேவகிக்கு) சதுர்ப்பு ஜன சங்கசக்கர கதார்யுதம் என்பதும், உத்தரையின் கர்ப்பத் தைக் காப்பாற்ற சக்கரத்தைப் பிரயோகித்தான். அர்ஜுனனுக்கு விராட்ஸ்வரூபம் காண்பித்தபோது அதனால் பயந்து மயங்கிப் போனவன், அர்ஜுனன் "தேனைவ ரூபணே சதுர்புஜேன ஸஹஸ்ர பாஹோ" என்றான். ஸஹஸ்ரபாஹோ பவ விஸ்வமூர்த்தே என்ற படியால் கண்ணனுக்கு என்றுமுள்ளரூபம் சதுர்புஜரூபமே என்பது சித்தம். பௌண்டரக வாசுதேவனும் நான்கு புஜங்களைக் கட்டியமைத்து-தானே நிஜமான கண்ணன் என்றானும். அவனையும் நிரஸித்தபிறகு சதுர்புஜக் கண்ணன் என்பது தேவகி மைந்தனாகிற கண்ணனுக்கே நின்றது. பிரும்மதேவனுக்கும் இந்தக் கண்ணனே சதுர்புஜங்களோடு சங்கு சக்கரத்தினோடு காட்சி அளித்தான், இது மாத்திரமல்ல இந்தக் கண்ணன் அம்புஜாக்ஷனாவான். பங்கயக் கண்ணனைகுளிர்ந்த கடாக்ஷம் பொருந்திய கண்கள் கப்யாஸச்ருதி யிலே பங்கயக் கண்ணனது பெருமை பரக்கப் பேசிக்கப்பெற்றது. அம்புஜாக்ஷ என்று ருக்மிணி கண்ணனுக்கு எழுதிய காதற்கடிதத் தில் அவனை உதவிக்கு அழைக்கக் கூறின விளிச்சொல் . ஒரு சிம் மத்திற்கு மனைவியாயிருக்கவேண்டிய பலியை (அதாவது என்னை உனக்கு மனைவியாயிருக்க வேண்டியவளை) நரியான சிசுபாலன் எடுத்துப் போவது சரியாகுமா? தன்மே பவான் கலுவிருத:பதிரங்க ஜாயாமாத்மார் பிதஸ்ச பவதோ அத்ரவிபோ விதேஹி, மாவீர பாக மபிமர்சது சைத்ய ஆராத்கோமாயுவன்ம்ருகபதேத பலிமம்புஜாக்ஷ என்றாள். ஆபத்தில் உதவுபவன் கண்ணன்

ஆழ்வார் நோற்ற நோன்பிலேன் என்னும் பதிகத்தில் எங்குற்றேனுமல்லேன் இலங்கை செற்றவம்மானே - திங்கள் சேர்மணிமாட நீடு சிறிவர மங்கல நகருறை சங்கு சக்கிரத்தாய், தமியேனுக்கருளாயே என்றார். கருளப்புட் கொடி சக்கரப்படை வான நாடவெங்கார் முகில் வண்ணா - என்றார். ஆபத்தில் உதவு பவன் கண்ணன் என்பது சித்தம்.

**உட்பொருள் :**

காலட்சேபம் நடந்ததும் - பல உபகரணங்களைச் சேர்த்து இஜ்யைக்குப் புறப்பட அவரவர் தயார் செய்துகொண்டதைக் கூறும். (உத்தமூர் ஸ்வாமி) சேதனர்களுக்கு வீடு - மோக்ஷ ஸ்தானம், புழக்கடை ஸம்சாரம். அதிலுள்ள தோட்டம்-சரீரம். சரீரத்தை விருட்சமாகச் சொல்வது வேதாந்த மரபு - ஸமானே விருக்ஷே புருஷோ நிமிக்னர்; வாவி என்பது ஹிருதயம், தண்ணீர் தேக்கம் ரக்தாசயம் முதலியவை ஹிருதயத்திலுள்ளவை, ஆத்மா வும் மனதும் ஹிருதய நடுவேயுள்ளது. இரவு முடிந்ததும் விடிவது போல சம்சாரம் என்கிற இரவில் விகஸிப்பது ஆம்பல், விடிந்ததும் ஞானம்மேற்பட்டதும் ; ஞானம் புஷ்பம் க்ஷமா புஷ்பம் புஷ்ப மிந்திரிய நிக்ரஹ: என்றவை போன்ற ஆத்மகுணங்கள் விகாஸமடையும். இந்திரியாதி தோஷங்கள் நீங்கின. ஆகவே பகவானிடம் இஜ்யைக்குப் பிரார்த்திப்பதுபோல "நாங்கள் எல் லோரும் தயாராகிவிட்டோம். நீயும், நங்காய் - குணப்பூர்த்தி யுள்ளவளே, இஜ்யைக்குத் தேவையான உபகரணங்கள் தயாராகி விட்டன, நீயும் எழுந்திருந்து எங்களோடு கலந்து களிப்பாய். என்று கூறும் பாசுரம்" என்றார் உத்தமூர் ஸ்வாமி.

இது தொண்டரடிப்பொடிகளுக்கு அடுத்த திருப்பாணாழ்வாரை உணர்த்தும் பாசுரம் என்பர். நங்காய் நாணாதாய் நாவுடை யாய் - என்பது பாண்பெருமாளுக்குப் பொருந்தும். லோக சாரங்க

முனிவர் வந்து "என் தோளின்மீது ஏறிக்கொள்ளும், இது ஸ்ரீரங்கனின் ஆக்ஞை"—என்ன அந்தணர் தலைமீது ஏறிச் செய்தேயும், சிறிதும் செருக்கு கொள்ளாமல் "அடியார்க்கு என்னை ஆட்படுத்தின விமலன்" என்றாரே அவர். பாண்பெருமாள் பாடிய பாடல் பத்தும் பழமறையின் பொருள் என்று பரவுமின்கள் என்று தேசிகன் பணித்தார். கையினார் சுரிசங்கனலாழியர் என்று சங்கோடு சக்கரம் ஏந்தினவழகையும்-"கரியவாகி புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரியவாய் கண்கள்" என்று கண்ணழகிலே ஈடுபட்டார்.

அமலனாதிப்பிரான் என்ற பத்துப் பாட்டுக்கள் பகவானின் திருவடிமுதல் திருமுடிவரை ஸேவை சாதிப்பதைச் சொல்லும் பாசுரம். இதையே தேசிகன் முனிவாஹனபோகம் என்று பெயரிட்டு நூல் செய்தார். அமலனாதிப்பிரான் - பரதத்வம், அடியார்க்கு என்னை ஆட்படுத்த விமலன் - புருஷார்த்தம்; திருக்கமலபாதம் வந்து என் கண்ணினுள்ளன வொக்கின்றதே - பக்தி-பிரபத்தியிலேற்படும் சுக அனுபவம் – அனன்ய பிரயோசனமாக அர்ச்சை ஒன்றிலேயே – அரங்கனுடைய திருமேனி அனுபவமாய் முழுமையும் பகவத் விஷயமாக அருளப் பெற்றது. எம்பெருமான் இவரைத்தானே வரவழைத்து – பத்துபாட்டுக்களைப் பாடச் சொல்லி-அதன்பிறகு தன்னிடமே லயிக்கும்படி செய்துகொண்டது மற்றைய ஆழ்வார்களைவிட இவருக்குள்ள தனியேற்றமாம். பரமபதத்தில் பெறும்பேற்றை பெரியபெருமாள் திருவடிகளிலே பெற்று – இப்பேற்றை அமலன் ஆதிபிரான் முதலான பாட்டாலே அருளிச் செய்தவர்.

ஆதிப்பிரான் என்பதால் ஜகத்காரணத்வமும் - அமலன் என்பதால் பிறர்தோஷங்களைப் போக்கும் திறமையுள்ளவனும் - விமலன் என்பதால் உபயலிங்கமுமாய் - ஹேயப்ரத்யனீகபடன் – விண்ண

வர்கோன் என்பதால்-நித்யசூரிகளுக்கும் இறைவனுனவனும் அர்ச்சைக்காகவே வந்து அருளின பொழில் வேங்கடவனும் – நின்மலன் என்பதால் ஆஸ்ரிதர்களின் தோஷங்களைக் காணுதவனும், அனுக்ரஹமடியாய் விருப்பவனும்- நிமலன் – ஸர்வேஸ்வரனும் - நீதிவானவன் - வைகுண்டபதி - அவன் அரங்கத்து அம்மானே - அவனுடைய திருக்கமல பாதம்வந்து என் கண்களில் ஒட்டிக்கொண்டனவே - என்ருர். அந்த அரங்கனைக் கண்ட கண்கள் மற்றென்றினை காணுவே — என்பதால் விஷய வைராக்யத்தைச் சொன்ஞர். அகாரார்த்ததைச் சொல்லியதாம். மோக்ஷப்ரதன் – ஸர்வ பலப்ரதன் - போக்தா ஸர்வசேஷி வைகுண்டபதி - அவனே திருவரங்கச் செல்வனும் . நீர்மைக்கும் மேன்மைக்கும் எல்லையானவன் மற்றும் சம்சாரிகளுக்கு வெகுதூரத்திலிருப்பவன் - இந்த மஹானுபாவருக்கு கண் உள்ளேயே வசிக்கும் புருஷஞகிவிட்டான். அக்ஷி புருஷஞகிவிட்டான் . பாதகமலம் என்பதால் திருவையும் எம்பிரானுடன் சேர்த்துச் சொன்னதாம். உபயவிபூதி நாதன் - சரண ரக்ஷகத்வம் ஆஸ்ரித சுலபத்வம் , அசயுதன்–யாவரையும் நழுவவிடாதவன் எல்லாம் சொல்லியதாம் .

மதுரமா வண்டுபாட மாமயில் ஆட அரங்கத்தம்மான் – விஜயலக்ஷ்மியுடன்கூடியவிஜயராகவனை பிரும்மருத்ராதிகள் ராவண வதத்திற்குப் பின்பும் – அக்னி பரிட்சைக்குப் பின்பும் பிராட்டி பெருமானைச் சேர்த்து வைத்துப்பாட – பலவகையான வண்டுகள் (நித்யரும் முக்தரும்) பாட "திருவுதரபந்தம்" என்று திருநாமத்தை உடைய திருவாபரணம் என் மனத்தைக்கவர்ந்தது என்ருர் . திருவுடன் சேர்ந்த மார்பன் - பரதத்வத்தைச் சூச்சிபிக்கும் அடையாளமாம். புருஷகார திருவின் திருவுள்ளத்திற்கு இணங்கி நடப்பவனும் அரங்கத்தம்மான். யாருக்காகவாவது அருளினுரு ? என்பதை அடுத்த பாசுரத்தில் சிவனுக்கு அருள் செய்ததைச் சொன்ஞர்.

துண்டவெண்பிறையன் (சந்திரகலை தரித்தசிவனின்) துயர் தீர்த்தவன், அது மாத்திரமா எல்லா அண்டங்களையும் உண்டவன், ஏழு மால்வரை முற்றும்உண்டகண்டன்-மார்க்கண்டேயருக்கு நடுக்கடலுள் ஆலிலைமேல்தரிசனம் அளித்த பிரான் - இதனாலே ஜன்மஸ்திதிலய முதலியவைகளுக்கு இருப்பிடமாய் - உலகுமுண்ட பெருவாயனாகவிருப்பவன் அரங்கத்தம்மான். பங்கயகண்ணனே தானே உலகமுண்ட பெருவாயனாக, யசோதைக்குக்காட்சி அளித்தனன்.

செய்யவாய் "ஐயோ" என்னைச் சிந்தை கவர்ந்ததுவே என்று யசோதையும் சீதையும் ருக்மிணியும் ஆண்டாளும் - திருப்பாணாழ்வாரையுமே "ஐயோ" என்றது ஆச்சர்யத்தையும் அத்புதத்தையும் காட்டுதலை அனுபவித்து ஆற்ற அரிதானபடியை- அனுபவரஸத்தைச் சொல்லுதலாம்.

பின்பு திருமுடி அனுபவம்-அதில் வாய்க்குப்பின்பு இரு கண்களின் அனுபவம்-பெரிய வாயகண்கள் என்னைப் பேதமை செய்தனவே . ஆலமாமரத்தினிலை மேல் ஒரு பாலகனாய் ஞாலம் ஏழும் உண்டான், நீலமேனி "ஐயோ" நிறை கொண்டது என் நெஞ்சினையே- அனுபவித்த என்நெஞ்சை ஆனந்தரஸத்தாலே நிரப்பியதாம். அதனால் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு பாடலாம்படி என்னை நிறைகொண்டது, என் நெஞ்சினையே" என்றார். அத்தகைய அணி அரங்கனைத் தவிர என் அமுதனைக்கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே மற்றைய அர்ச்சை வடிவுகளில்வைராக்யத்தை ஆழ்வாருக்குப் பண்ணினதுபோல நமக்கு பகவத் ஆராதனம் விஷயவைராக்கியங்களை ஏற்படுத்துவதாம். பரம பதத்திலும் க்ஷீரார்ணவத்திலும் அர்ச்சையிலும் அனுபவிக்கத் தகுந்த சுபமங்கள முர்த்தி ; நான் அனுபவிக்க; அஹம்அன்னம்-அஹம் அன்னாதயனாக ஆனேன் - அவன் சாப்பிட்ட அமுதை நானும் சாப்பிட்டேன், என்று சொல்லும்படி அம்ருதமானான்.

கண்டபொழுது ப்ரீதியும் காணுதபொழுது அப்ரீதியுமாய் இல்லாமே எப்போதுமே தித்திக்கும் ஆரா அமுதை அனுபவிக்கப் பெற்ற கண்கள், மற்றொன்றினைக் காணுவே. இவ்வர்ச்சா ரூபத்தாலே மற்ற பரவ்யூஹவிபவ அர்ச்சை அனுபவம் எல்லாம் சிந்திப்ப தாம். நாராயணஸ்மிருத : என்பதைக்கருதி'' முனிவாஹனபோகமும் அமலனுதிப்பிரானும் அமைந்ததாகும். அதனுல் "நம்பாணன்'' என்று ஆஸ்ரிதன் அருபெறுவான் என்பதைச் சொல்லுமாப்போலே குருபரம்பராஸாரத்தில் தேசிகரால் சொல்லியது—நோக்கத் தக்கது.

**அழகியசிங்கரின் கருத்து :**

நீங்கள் நன்ருகத் தூங்குங்கள் . நான் எழுந்துவந்து உங்களை எழுப்புகிறேன் – என்று சொன்ன தோழியை இப்பாட்டில் எழுப்புகிறுர்கள். பங்கயக்கண்ணன் - கப்யாஸம் புண்டரீகாக்ஷம். கம் ஜலத்தை : பிபதீதிகபி : - சூர்யன் தண்ணீரைக் குடித்தலால் தே ந ஆஸ்யதே - அவனுல் மலர்ச்சியடைந்த தாமரைப்பூ .
2 ) கம்பிபதீதிகபி · - தாமரைத் தண்டு (தண்ணீரைக் குடித்து வளர்தலால்) தஸ்மிந் ஆஸ்தே இதி கப்யாஸம்-அதன் மேலிருக்கும் (தாமரைப்பூ)

3) கே - ஜலத்தில் அப்யாஸ்தே-ஸ்தம்-இருக்கிற தாமரைப்பூ. இம்மாதிரியான மூன்று வித பொருத்தமான விளக்கங்களும் தாமரைப் புஷ்பத்தின் சோபாதிசயத்தைப் பெருக்குபவை. " வேதார்த்தஸங்கிரஹம்'' என்கிறநூலில் " கம்பீராம் பஸ் ஸமுத்பூத ஸீம்ருஷ்டநாளரவிகர விகஸித புண்டரீகா மலாய தேக்ஷண'' என்று விளக்கம் செய்தார் ஸ்ரீமத்ராமானுஜர். மிகவாழமுள்ள தண்ணீரில் மூளைத்து வளர்ந்து தடித்த தாமரைத்தண்டிலுள்ளதும் ( காலையில் ) சூர்யகிரணத்தால் மலர்ச்சி பெற்றதுமான தாமரைப் புஷ்பத்தினிதழ்கள் போன்ற அழகையும் விரிவையுமுடைய இருந்திருக்கண்களை

உடையவன் - " உத் " என்று வழங்கப்படும் எம்பெருமான்-ராம: கமல பத்ராக்ஷ: ஸர்வ ஸத்வ மநோஹர: என்று வால்மீகியும்; கரிய வாகிப்புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரிய வாய கண்களென்னைப் பேதமை செய்தனவே – என்ற ஸ்ரீ பாணர் பாசுரமும்; ஸ்ரீபாஷ்யகாரரின் விளக்கத்திற்கு மார்க்கதரிசிகள் எனப் பூர்வாசாரியர்கள் பணிப்பர்.

**ஸ்ரீமதாண்டவன் அருளிச்செய்த உரை** :

ஆய்ச்சிகளின் தலைவியை எழுப்புதல், இவள், "நானே உங்களை எழுப்புகிறேன்" என்று சொல்லி மறந்து போனாள் – அவள் தூங்குகிறாள். இவளால் எல்லோருக்கும் பகவத் சம்பந்தம் ஏற்படுவது. அனன்யார்ஹசேஷத்வம், அனன்ய சரணத்வம், அனன்ய போக்யத்வம் - மூன்றும் உத்தம பிரபந்தனை எழுப்புவது. உன்னைப்போல நாங்களும் பரதந்திரர்களே. திருமங்கை ஆழ்வாரின் திருவெள்ளியங்குடி பாசுரங்களை நோக்கவும். யாதவ பிரகாசரின் மதம் மாறுதலைச் சொல்லலாம். இப்பாட்டில் சம்பாஷணை-கேள்வி பதில் உள்ள பாட்டு.

பாகவத கோஷ்டியைக்காண ஆசைப்படுபவரை எழுப்புதல் நீயும் எழுந்திருந்து எங்களோடு ஒருவராய் இரும் இத்துடன் தோழிகளை எழுப்பும் பாசுரம் முடிவு பெற்றது.

சங்கு-ஆண்டாளின் " கற்பூரம் நாறுமோ" என்கிற பாசுரத்தை நினைக்கவும், கண்ணனின் வாய் சுவையை வேண்டுகிறாள். தேசிகனின் பரமபதசோபானமும்-ஆழ்வாரின் "கங்குலும் பகலும்" நினைப்பது.

"சங்கொலி-மங்களங்களை அறிவிக்கும் சப்தம். சூர்யன்-சக்கரம் வாபி - திருமந்திரம் உபநிஷத்; புழக்கடை- அதர்வண வேதம்.

## 15-ஆம் பாட்டு :

எல்லே ! இளங்கிளியே ! இன்னமும் உறங்குதியோ ?
சில்லென்றழையேன்மின் ! நங்கைமீர் ! போதருகின்றேன்
வல்லே உன்கட்டுரைகள் ! பண்டே உன்வாயறிதும்
வல்லீர்கள் நீங்களே நானேதான் ஆயிடுக !
ஒல்லே நீ போதாய் உனக்கு என்ன வேறுடையை
எல்லாரும் போந்தாரோ ? போந்தார் போந்தெண்ணிக்
[ கொள்
வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க
வல்லானை மாயனைப் பாடேலோ ரெம்பாவாய்.

எல்லாப் பெண்களும் மாயனை - மாயவனைப்பாட கூடிவந்து விட்டார்கள். நீ ஒருத்திதான் இன்னும் உறங்கிக் கொண்டிருக்கிறாய் என்று தூங்குகிற ஒருத்தியை- விளித்து-நீ எங்களைக்காண வேண்டாமா ? எழுந்திரு-என்று கூறி எழுப்புகிறார்கள். இவள் பேச்சிலே இனிய சொல்லாள். அதனால் இவளை இளங்கிளியே இன்னமும் உறங்குகிறாயோ? நாம் எல்லோரும் ஆரவாரம் செய்து கூப்பாடு போட்டு இவளை நாம் எழுப்ப வேண்டாம், ஏனெனில் இவள் நம் பக்கத்து வீட்டுத் தோழியை எழுப்பப் பாடிய சங்கோடு சக்கரமேந்தும் தடக்கையன் பங்கையக் கண்ணனை என்று பாடியபோதே இவள் எழுந்திருக்க வேண்டியது. ஏனெனில் இவளும் கிருஷ்ணபக்தை. தானேஎழுந்திருந்து ஓடிவந்து விடுவாள். ஆகையால் நங்கைமீர் சில் (ஆரவாரம் செய்து) என்று அழையாதீர்கள், இவள் இளங்கிளியாதலால்-பொன்னுரை பேசுபவள், நானே வருகின்றேன் என்பாள். ஆகவே சாமர்த்தியசாலியான இவளது கிளிப்பேச்சுக்களை மென்மொழியாளை நாம் ஏற்கனவே அறிந்திருக்கின்றோம். பண்டே அறிதும், உன் கட்டுரைகள்-உன்வாய் கொண்டு அறிந்துள்ளோம். இவள் என்ன பேசியிருப்பாள்? இது சிந்தனைக்குரிய விஷயம்- அவள் மறுமாற்றம் சொல்வாள், "நீங்கள் என்ன சாதாரண பேர்வழிகளா? நீங்களும் ஸர்வசாமர்த்தியமுள்ளவர்களாச்சுதே, நீங்களே வல்லீர்கள். உங்களைப்போல நானும் ஆகவேண்டும். நானேதான் ஆயிடுக, நானும் உங்கள் கடாக்ஷம் பெற வேண்டாமா? என்னைப் புகழ்ந்து பேசினது போதும் என்று தூங்குபவள் மறுவிளி அளிக்க, அதற்கு எதிர்மாற்றமாக, "நீ ஒல்லே (சீக்ரமாக) வருவாய், உனக்கு, கிருஷ்ணபக்தையாகிற உனக்கு, என்ன வேறு உடைமை

எங்களைத்தவிர வேறு ஒரு பொருள் பெரிதல்லவே ? நாங்கள் தானே உனக்குக்குலதனம், உனக்கு ஜீவனம். எல்லோரும் போந்தாரோ ? வந்துவிட்டடார்களோ? என்று கேட்பாயாகில், நீயே வந்து எங்களைத் தரிசித்து போந்து எண்ணிக்கொள். எதற்காக இவ்விதம் சொல் லுகிறோம் எனக் கேட்பாயாகில்- வல்லானைக்கொன்றானை - வல் லர்களான கம்ஸனுடையமல்லர்களை சாணூர முஷ்டிகன் போன்ற மல் வீரர்களையும் - குவலயா பீடத்தையும் கொன்றவனும் மாற்றாரை கம்ஸன் போன்ற விரோதிகளை மாற்று அழிக்கப் பேச்சில்லாதபடி புல் பூண்டோடு அழித்தமாயனைச் சிறுபாலகனாகிற கண்ணனை அற்புதச்செயல்களைச் செய்தஅவனைப்பாட நீயும நாங்களும் கூடிப் பாட நீ சீக்கிரமே எழுந்திருந்து ஓடி வருவாய் என்றார்கள். வினு விடைகளாக அமைந்த பாசுரம் என்பார் அண்ணங்கராசாரியார் - முதலடி உணர்த்துமவர்களின் பாசுரம் ; இரண்டாமடி உறங்கு பவளின் பாசுரம் மூன்றாமடி உணர்த்துமவர் பாசுரம்; நான்கா வது உறங்குமவள்பாசுரம்; ஐந்தும் உணர்த்துமவர் பாசுரம்; ஆறு- முற்கூறு உறங்குமவள்-மேல் முழுதும் -உணர்த்துமவர் பாசுரம்.

ஆராயிரப் படியில்– திருப்பாவையாகிறது இப்பாட்டிறே-பகவத் விஷயத்திலிருக்கும் படியெல்லாம் சிற்றஞ் சிறு காலையிலே சொல்லு கி ற து; பா க வ த வி ஷ ய த் தி லி ரு க் கு ம் படியெல்லாம் இப்பாட்டிலே சொ ல் லு கி ற து - தேசிகர். அருளியது :- பாகவதர்களால் ஏதேனும் ஒருவர் — ஒரு குற்றம் சாற்றப் பெற்றவராகில் அப்பாகவதர் திருவடிகளிலே கீழ் விழுந்து, “ இக்குற்றம் அடியேனுடையது — மன்னிக்க வேண்டும் ” என்று அபராத க்ஷமையை வேண்டவேண்டும். இது தான் வைணவனின் லக்ஷணம்என்றுஅபராத பரிஹாராதிகாரத்தில்(ரஹஸ்யரரியஸாரம்) அருளினர்.நானேதானுயிடுக பிறர்கூறியகுற்றம்தம்தலைமீதேஎன்று கூறிஇசைவர். இதனல் திருப்பாவையாகிறது இப்பாட்டிறே என்றது. பாகவத விஷயத்தில் இருக்கும்படி சொல்லியது. எல்லே இளங்கிளியே, ஸம்போதனக்குறி- ஆச்சிரியக்குறிப் பிடை என்றும் சொல்லலாம். இளம்கிளியே என்பது

சுகரைச் சொல்லும். "ஏனெனில் இவளிடம் வந்தவர்களுக்கு மரி ாதை. வேறொருத்தியை நாணுதாய் என்று கூப்பிட்டவர்கள் இவளை மேம்பட்டவளாகச் சொன்னதுதான் காரணம். கிருஷ்ணஸம்ஸ்லே ஷம் பெற்றபடியால். பசுகு பசுகென்று—வாயும் சிவந்து குறியழி யாமே கிடக்கிறபடி வெகுஜோராகயிருக்கிறபடியால் —இளங்கிளியா ளுள் . மறுமாற்றம் சொல்லத்தயங்க,சில் என்று அழையேல் மின் நெஞ்சு வெறுப்புயேற்படும்படி — கோரமாகக்கூவி அழைத்தல், அதுமாதிரி செய்யாமல்—மெதுவாக எழுப்பினுர்களாம். ஒரு கெட்ட சொல்லும் குற்றமிருந்திடினும் - இருவர்தரப்பிலும் இல்லை யாம். ஒரு வைணவன் குற்றம் சாட்டப்பட்டால்—அவன் எதிர்மாற் றம் சொல்லாமலேயே இசைந்திடுவானும். இது அவனது ஸ்வரூபம். ஆகவே வல்லீர்கள் — வந்து கூப்பிடுபவர்கள் சாமர்த்தியமுள்ளவர் களாதலால்-தூங்குபவளை எழுப்பிட நீயே படுக்கையை விட்டு இறங்கி வந்து, எங்களைக்கண்டுட எண்ணிக்கொள்வாய்ட "இதோ வரு கின்றேன் என்று அவள் பதில் சொல்லியும் உடனேயேவராமலிருந் ததாலே ஏன் காலதாமதம் செய்கிறுய்? என்று வினவுவது போல; உனக்கென்ன வேறுடையை. என்கிறுர்கள். ,,நாங்களும் உன்னைப் போல கிருஷ்ண ஸம் ஸ்லேத்திற்கு ஆசைப்படுகின்றோம். நீயும் வந்தால் நலம்"என்று கூறவும் அவளும் ஓடிவந்தனளாம். நாமனைவ ரும் செய்யத்தக்க இந்தக்காரியத்திற்கு என்னுல் ஒரு கெடுதியும் செய்யப்படமாட்டாது' கவலையற்றிருங்கள்" என்றுசொல்வதுபோல நானே" தான் ஆயிடுக" — என்பனளாம்.

மாற்றுரை மாற்றழிக்க — எதிரிகளின் கர்வத்தை மிடுக்கை அழிக்கும் திறன்பெற்ற வல்லான், ராமனோ — கோவிந்தனோ — வல்லர்களான இந்த ஆவப் பெண்களிடம் எப்படி நடப்பான் என்றுல்-ஒரு பேச்சும் பேசாமல் அவர்கள் விரும்பியபடி அனுகடலனுகவிருப்பவன். அதனுல் அத்பு தச்செயலை உடைய எம்பெருமான் மாயனுகிறுன் - இவனு - இடக் கை வலக்கை அறியாத ஆயர்களினுல் கட்டுண்டு ஆப்புடைபட்டு ட்டப்பட்டானே, எத்திறம்-எத்திறம்! என்று எத்தகைய

சௌலப்யம் என்று நம்மாழ்வார் வியந்து -ஆறு மாதங்கள் பேச்சு மூச்சின்றி மெய்மறந்து சமாதியிலாழ்ந்தாரே-அத்தகைய பரமன்-அவனது குணகீர்த்திகளை இவர்கள் பாடப்பாட, அவனும் மெய் மறந்து தன் வசமிழந்து அவர்களின் சொற்படி கேட்கும் திருமால் ஆனுன்என்பதே. மாணிக்கவாசகரும் "விண்ணுக்குஒருமருந்தை, வேத விழுப்பொருளைக் கண்ணுக்கினியானைப்பாடி கசிந்துள்ளம்" என்றார். ( திருவாசகம் ).

. வேறு உடையை - பாகவதர்கள் அடிமையாகும் போது – கிரயவிக்ர யார் ஹதசயா ஸமிந்ததே – என்று சொல்லப் பட்டபடி பரிபூர்ணதாஸ்யத்வம் கொண்டவர்கள். ஆகவே எல்லாப் பெண்களும் இவளுடன் கூடி, கண்ணன் மாளிகைக்கு வந்து விட்டனர்.

உத்தமூர் ஸ்வாமி: அம்மாள் கால க்ஷேப: கோஷ்டியிலே எழுந் தருளியிருந்த ச்ருதபிரகாசிரியரைப் போல - அர்த்த ஸ்வாரஸ்யங் களில் ஆழ்ந்து அசையாது இருந்த ஒரு ஸதீர்த்யரைத் தோழர்கள் ஸ்நேக மிகுதியினல் பேசும் முறையை இங்கே நோக்கிடுக. சிற்றம் சிறுகாலே என்னும் பாட்டில் பகவத்தாஸ்யமும் – இங்கே பாகவதர் விஷயத்திலே குற்றமற்ற தாஸ்யமும் கொள்ள வேண்டியது என்பதைக் கூறுவதாம்.

க்ஷமை கொள்ள வேண்டும் - என்று சுக்ரீவன் லக்ஷ்மணனிடமும் ராமனிடமும் காலதாமதத்திற்காகக் கூறியது எண்ணத் தகுந்ததாகும். அதுபோல லக்ஷ்மணன் பரத சேனையைப் பார்த்ததும் ராமனுல் பரிபவிக்கப்படும் போது - லக்ஷ்மணன் அடங்கினதும் நோக்கத் தகும். "பரதனுக்கு ராஜ்யத்தில் ஆசையில்லை. அதனை அவனிடம் கேட்டு-உனக்கு யாம்தருவோம்" என்று ராமன் லக்ஷ்மணனிடம் கூறியதால்-அவன் மாயன்-அவனுடைய குணகீர்த்திகளைப்பாட-நாம் கூடுவோம் என்று அழைத்தவாறு. எல்லே-இகழ்ச்சிக்குறி. இது என்ன வேடிக்கை ? என்பதுபோல்.

ஸ்வாபதேசம்: திருமங்கையாழ்வாரை உணர்த்தும் பாசுரம். பலபாசுரங்களில் இவர் தம்மைக்கிளியாகச் சொல்லிக் கொண்டவர். கிளிபோல மிழற்றிநடந்து மெல்கிளிபோல மிக மிழற்றும் என்பதையே. இவரே இரு ஆய்ச்சிகர்களுக்கு ஒருவருக் கொருவர் நடத்திய ஸம்வாதமாக- "மானமருமென்னேக்கி" என்ற பதிகத்தைஆருளிச் செய்தவர். இவர் மாறன்பணித்த தமிழ்மறைக்கு மங்கையர்கோன ஆறங்கம் கூற-என்று நம்மாழ்வாரைப் பின்பற் றியே அருளிச்செய்தபடியால்-இவரைக்கிளி என்பதாம். இரண்டா மடி-வல்லே உன் கட்டுரைகள் பண்டே உன் வாயறிதும்- என்பதை கலியனை நோக்கிக்கூறுவது - இந்தனுரீர் என்பதில் வாசி வல்லீ ரிந்தனுரீர், வாழ்ந்தேபோம் நீரே நீர் என்று மிகக்கடினமாகப் பேச வல்லீர் என்பது எனக்கு - பண்டே-நீர் அவதரித்துப் பாசுரம் பாடு வதற்குமுன்னமே - தெரியக்காணும்என்ருள்.

அது கேட்ட கலியனை "வல்லீர்கள் நீங்களே-" என்றனரே- ஆண்டாள் தன் கொங்கைக் கிழங்கோடும் அள்ளிப் பறித்திட் டவன் மார்பில் எறிந்து என் அழலைத்தீர்வேனே – என்று சொல்லி தன் பேராக்காதலை வெளிப்படுத்தினவள். அத்தகைய ஆண்டா ளுக்குமுன் திருமங்கையாழ்வார் எம்மாத்திரம்? நண்ணுத வாள வுணர், கண்சோர வெங்குருதி போன்ற பாசுரங்களிலே திருமங்கை யாழ்வாரின் பாகவத சேஷத்வ காஷ்டைமிகப்பிரசித்தம்–அதனையே நினைத்து "நானே தாஞயிடுக"என்ருர். உனக்கென்ன வேறு டையை என்றது திருமங்கை ஆழ்வாருக்கு - திருமடல் திவ்ய பிரபந்த சொற்வன்மையைப் பற்றிச் சொல்லியதாம். கலியனுக்கு முன்னமே மற்றுமுள்ள ஆழ்வார்கள் அவதரித்து பன்னிருவர் என்கிற எண்ணிக்கையை இவரோடு நிரம்பிற்றன்றோ ?

திருமங்கை ஆழ்வார்-சிறிய திருமடலில் காரார்கடல் வண்ணன் பின்போன நெஞ்சமும் வாராதே யென்னை மறந்ததுதான் - என் நெஞ்சு என்னிடம் வராமல் - எனக்கு விரோதம் செய்ய வேண்டு மென்ற நோக்கம் அதற்கில்லை. சில நாட்கள் கழிந்த பின்பு, என் னிடம் வரலாம் என்று நினைக்கக் கூடும். ஆனுல் கடல் வண்ணன் விஷயத்திலே-அவ்விதமில்லை அவன் பின் சென்றவர் அனைத்தை யும் மறப்பர் என்பது பிரஸித்தம் அது என்னை மறந்து விட்டிருக்க வேண்டும். என்னுல் அதனை மறக்க முடியவில்லை. ஆதலால் ஆழ் வார் சொன்னுர் – "வல்வினையேன், ஊரார் உகப்பதேயாயினேன்' மற்றெனக்கிங்கு ஆராய்வாரில்லை, அழல் வாய் மெழுகுபோல நீராயுருகுமென் ஞவி, நெடுங்கண்கள் ஊரார் உறங்கிலும் தானு றங்கா, உத்தமன்றன் பேராயினவே பிதற்றுவன்". ஆழ்வார், "தென்னறையூர் மன்னு மணி மாடக் கோயில் மணாளனைக் கன்ன

வில் தோள் காளையை – கல்லாவது மலை, திருநறையூர் பெருமாளை முதலில் தொடக்கத்தில் சொல்லி, முடிவிலும் எடுத்து தமக்கு மடலூரும் அளவுக்குக் காதலைக் கிளரச் செய்தவன் என்று குறிக்கிறார். கண்டு ஆங்குக் கைத் தொழுது என்னிலைமையெல்லாம் அறிவித்தால், பழி பெறுமைக்காக நன்றாக சேவித்து – என்னைக்காக்க உரிமை அவனுக்கு உள்ளதை நினைப்பூட்ட தொடங்கிய திருமொழி முதல் முடிவான இந்த பெரிய திருமடலில் காதலைப் படிப்படியாக உரைத்தார். இந்த நாயகி நினைக்கிறாள் - மடலூர்தல் தான் இவளுக்கு முக்கியாதிகாரம் - இதனையே அனுஷ்டிக்க வேண்டும் என்று நினைக்கிறாள். மடலூர்தல் நடை பெறும் வரை நாம் (பகவான்) உதாஸீனனாகவிருந்து கெட்டோமோ என்று அவனே நொந்து கொள்வான் என்ற கருத்தினால் முன்னோர் மொழிப்பர. இதற்கு மேல் தோழி கூறுபவளாக, " நீ இந்த அர்ச்சைகளில் திருக்கோயில்கொண்ட மூர்த்திகளிடம் ஈடுபட்ட பிறகு-உனக்குத் தலைமகன் உபேக்ஷிகன் என்ற எண்ணம் ஏன்? – மடலூர்தலுக்குப் புறப்படுவது ஏனோ?" என்று கேட்டபோது-அதன் கருத்தை விளக்குகிறாள். எம்பெருமான் தன்னருளும் ஆகமும் தாரானேல்- ஆழ்வார் தன் நிலையிலும் நாயிகை நிலையிலும் மாறிமாறி எம்பெருமானின் அழகு குணங்களை அனுபவிக்க, (நாயிகாபாவம் - கைவளையும் மேகலையும் காணேன் கண்டேன் கன மகரக் குழையிரண்டும் நான்கு தோளும் எவ்வளவுண்டெம் பெருமான் கோயில் என்றேற்கு இதுவன்றோ எழிலாலி என்றார் தாமே-என்னுடன் கூட வா, எழலாலி சேர்வோமென்றுமே-ஊரைச்சொல்லி மறைந்தவாறு தோற்றுகிறது.

மின்னிலங்கு என்ற பாசுரத்திலே திருவுருவு முதலியனகாட்டி என் நலனும் என்நிறையும் என் சிந்தையும் என்வளையும் கொண்டு என்னை யாளும் கொண்டு-புனலரங்க மூரென்று போயினாரே; தூது விடும்போது - அணி அழுந்தூர் நின்றானுக்கு; திருக்கண்ணபுரம் புக்கென் செங்கண் மாலுக்கு - என்று இவரையும் தலைவனாகக் கூறினார் பரகால நாயகி. தலைமகளாகப் பேசிய பின்பு பரகாலர் என்று சுய நிலைக்கு மாறி – நிகமனப்பாசுரம் அருளிச்செய்தார். தூது விட்டுப் பயனில்லை. பிறகு தான் மஹத்தான உபாயம் அனுஷ்டித்தே மடலூர்தலால் வசப்படுத்த வேண்டும் என்று தன் முடிவை சொல்கிறாள். பொன்னிலங்கு முலைக் குவட்டில் பூட்டிக்கொண்டு-மடலூர்தல் நிச்சயம் என்கிறாள். இங்கே - ஆகம் தாரானேல் – என்றார் இவர்சொல்வது மன்னிய நாணச்சம் மடமென்றிவையகலத் தன்னுடைய கொங்கை முகம் நெரியத்தகன் – - - அவன் தன் பொன் வரை ஆகம் தழீஇக் கொண்டு - என்கிறபடி அவருடன் புணர்ந்ததாக இயலுமோ?

சரி, பெருமாள் நேரே தோன்றினாலும் - இவர் அவரை நாம் தேவரொன்றஞ்சினோமே - என்று அகலும் புத்தியை அளித்தான். பெருமான் இவரது காமக் காதலைப் பக்தியாக மாற்றிக் கொள்ள வேண்டுமென்று திருவுள்ள மிட்டான் போலும். ஆனால் ஆழ்வார் சொன்னது - தன்னை (நான்) மின்னிடையார் சேரியிலும் வேதியர் கள் வாழுமிடத்திலும் தன்னடியார் முன்பும் தரணி முழு தாளும் கொன்னவிலும் வேல் வேந்தர் கூட்டத்தும் தின்னிலைமையெல்லா மறிவிப்பேன் - தன்னை என்பது அறிவிப்பேன் என்பதோடு சேரும். தன்னை நயந்தாளைத் தான் முனிந்து மூக்கரித்து- (இங்கு ஆழ்வாரை - பரகால நாயகியாகச் சொன்னால் - சூர்ப்பணகையைப் போல மூக்கரித்து அவமானப்பட்டது போல-) மற்றிவை தான் உன்னியுல வாவுலகறிய ஊர்வன் தான்-முன்னி முளைத்தெழுந் தோங்கியொளி பரந்த மன்னிய பூம் பெண்ணை மடல்-என்று கூறி முடித்தார். இத் தகைய பிராணிடம் காதல் கொண்ட பரகால நாயகி மீண்டும் சொல் கிறாள் - தோழியிடம் ( 9ம் பத்து - 5 திருமொழி) மானமருமென் னோக்கி வைதேகியின் துணையா - காணேடி வானவர் தம் சென்னி மலர் கண்டாய் சாழலே - எண்ணற்கு அரியன் - இமையோர்க்கும் சாழலே - கலிகன்றி உள்ளத்தினுள்ளே உளன் கண்டாய் சாழலே. இரு தோழிகளின் மாற்றங்களாக - ஏடி என்று முதற்பகுதி யிலும் சாழலே என்று பிற்பகுதியிலும் முடியும். பரத்வத்தைச்சொல் வது சாழலே ; சௌலப்பத்தைச் சொல்வது ஏடி என்பதாகும். வினு விடையான சம்பாஷணை வேறொருத்தி - சாழலே என்கிற விளிச் சொல்லால் விளையாட்டுக் கருவியைச் சொல்லுவதாம். முதலில் ராம னின் விஷயத்தைச் சொல்லுவாள் - பிறகு கிருஷ்ணவதாரத்தைச் சொல்லுவள். இவ்விதம் விஷய பரிமாற்றத்தினால் பகவானுடைய பரத்வமும் சௌலப்பமும் பேசப்படும். உதாரணமாக - அறியா தார்க்கு ஆன் ஆயனாகிப் போய் ஆய்ப்பாடி உறியார் நறு வெண் ணெய் உண்டுகந்தான் காணேடி ; உறியார் நறு வெண்ணெய் உண்டுகந்த பொன் வயிற்றுக்கு - எறிநீருலகனைத்தும் எய்தாதால் சாழலே - முதலில் சௌலப்யம் - பிறகு பரத்வம் - கடல் எல்லா உலகும் உண்ட பொன் வயிற்றுக்கு - உறி ஆர் நறு வெண்ணெய் - எய்தாது (போதாது) ஆல் சாழலே - ஆச்சரியம், வருத்தம் அறியா தார்க்கு - இவனை சர்வேசுவரன் என்று அறியாதார்க்கு.

திருமந்திரத்தில் நம: சப்தத்தை விளக்கும் பாகவத காஷ்டை இவருக்கு பகவானே திருமந்திரத்தை உபதேசித்தார். ஆகவே இவருடைய பெரிய திருமொழி - அறிவு தரும் பெரிய திருமொழியாயிற்று என்றார் தேசிகன். நாராயணா என்னும் நாமமும் நலம்தரும் சொல்லாயிற்று. உலகறிய (மடல்) உளர்வன் நான் முன்னி முளைத்தெழுந்தோங்கியொளி பரந்த மன்னிய பூம்பெண்ணை மடல் என்று மடலூர்தலில் திண்ணமாக ஆழ்வாரின் மனோரதம் எவ்விதம் பூர்த்தியாயிற்று? அதுதான் பெரிய திருமொழியின் ஸாரமாகும். ஸர்வரக்ஷகத்தை அர்த்தமாகக் கொண்ட திருவஷ்டாக்ஷரத்தை பெருமாளிடமே இவர் பெற்றபடியாலே - முழு மந்திரார்த்தமும் இதில் சொல்லப்பட்டதாகும். பரமாத்ம ஸ்வரூபம் திவ்ய மங்கள விக்ரஹம் இவற்றில் - நிரவயவமாய் நிர் விகாரமான பரமாத்மஸ்வரூபம் ஒன்று. திருமேனி திரவியம் அதற்கு மாறானது. வேறு-பரமாத்ம விக்ரஹ விஷயத்திலே தேஹாத்ம வாதியாவர் இவ்வாழ்வார் என்று பூர்வசாரியர்கள் பணிப்பர். ஞான ஆனந்த சக்தியாதி குணங்களின் தோற்றமிருப்பதாலும் - ஞான ஆனந்தஸ்வரூமாகையாலும் அவன் திருமேனிக்கு அவனை விட வேறுபாடு உண்டு. அந்த திருமேனி அர்ச்சாவதாரத்தோடு வாசியில்லை என உணர்த்தினவர் இவர். ஏரார் முயலை விட்டுக் காக்கைபின் பின் போவதே ஏன்?) என்று இவர் அருளினதாலே - அர்ச்சையே மேம்பட்டது. இமயம் முதல் எல்லாத் திருப்பதிகளும் இவருக்கு உகந்தவை. தமது அனுபவம் தம்மோடு நிற்காமல் - தம்மைப் போன்ற அனைவரும் இப்பேறு பெற வேண்டும் என்று கருதி - உய்த்துமின் உய்த்துமின் என்று சொல்லி தமது உவப்பை வெளியிட்டார். முதலில் நமோ நாராயணமே என்று திருவஷ்டாக்ஷரத்தைக் கூறி, மணிக்குன்றினையன்றி என்மனம் போற்றியொன்றுதென அனன்யபக்தியும் கூறப்பெற்றது. பாகவத பக்தியைச் சேர்க்காது கேவலம் பகவத் பக்தி ஸ்வரூப விருத்தமாதலால் - பாகவத கைங்கரியம் பரமபதத்திலே அரிது என்று கண்டு, இவர் இங்கேயிருந்து அதனைச்செய்பவர் களே ஸாரர்கள் என்று முடிவு செய்தார். கண் சோர, வெங்குருதி

(7-4) என்னும் பதிகத்தை இவரது நெடுமாற்கடிமை என்பர். அதா வது நம்மாழ்வாரின் திருவாய்மொழி போல- இதுவும் பாகவத விஷ யமாகும். திருக்கடல்மல்லை எம் பெருமான் விஷயமாக நண்ணாத் வாளவுணவென்ற திரு மொழி வேறு அருளியுள்ளார். ( 2-6) பாக வத சேஷத்வம் - சரணாகதி தீக்ஷையில் அனுகூலரோடு அனுகூல்யத் தைச் சொல்வது போல - பாகவத்ரோடு சேராமை பிராதி கூல்யவர் ஜனத்திலும் சேர்ந்ததாகும் என்கிறார். நண்ணாத வாளவுணரிடைப் புக்கு வானவரை ---- இருப்பாரை இறை பொழுதும் எண்ணோம். ( பெரிய திருமொழி 2-6) அத்தகைய எண்ணும் நெஞ்சு - பகவானை நினைப்பவர்-உடையார் யார் அவர்-அந்த மஹான்கள் எம்மை ஆள் வாரே என்றார். பகவானை நினைக்கும் பாகவதர்கள் என் நாயகரே, எங் கள் குல தெய்வம் – அவர்களை வலம் கொள், அவர்களை நெஞ்சில் தொழுவாய் – என்று பலவாறு சொன்னார். அதே போல எம் பெரு மான் தாள் தொழுவார் எப்போதும் என் மனத்தேயிருக்கின்றாரே என்றார் ( 7-4-3 ) பேர் ஆளும் பேரை நாளும் ஓதும் பெரியோரை ஒரு நாளும் பிரிகிலேன் என்றார், மஹாத்மா நஸ்துமாம் பார்த்த தைவீம்பிரகிருதிம் ஆஸ்ரிதா; ப்ஜந்த்ய நந்யமநஸோ ஞாத்வா பூதா திம் அவ்யயம் - என்றார் கண்ணன். இங்கு தண்சேறை எம்பெரு மான் பதிகமாகப்பாடினார், மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறு அங்கங்களைக் கூற அவதரித்தவர். இவருடைய ஆறு திவ்ய பிர பந்தங்களும் நான்குவேதங்களுக்கு சிக்ஷமுதலான ஆறு அங்கங் கள் இருப்பது போல - நம்மாழ்வாரின் நான்கு பிரபந்தங்களும் முன் அங்கங்களாகப பெரியோர்கள் பணிப்பர். அதாவது அவற்றிற்கு இவற்றால் தெளிவு பெறலாம் என்பதே. இவருடைய ஆறு பிரபந்தங் கள் - சிறிய திருமடல், பெரிய திருமடல், திருக்குறுந்தாண்டகம்,

திருநெடுந்தாண்டகம், திருவெழுக் கூற்றிருக்கை, ஆறுவதாகப் பெரிய திரு மொழி. நம்மாழ்வாரின் நான்கு பிரபந்தங்கள் – பெரிய திருவந்தாதி ( பதினுன்கு வருஷங்களுக்குப் பின்பு பகவான் வரு வார் என்கிற மஹாவிசுவாசத்தினுல் பரதன் வாழ்ந்தானே அது போல) ஆசைகளும் கரை புரண்டு ஓடிடியது (இயற்பா); 2. திருவாசிரி யம் (என்பக்கம் பெருமாள் கிருபை செய்வார் என்னும் பரதனுடைய நிலே – அழகும் மேன்மையும் நீர்மையும் சொல்வது ) ; 3. திருவிருத் தம் ( எம்பிரானுர் மாசின் மலரடிக்கீழ் - எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே – அதாவது ஆசார்யர் பிரபத்தியினுல் சேதனனே பகவா னிடம் சேர்ப்பர் ; பகவானே உபாயம் பெருங்கிறி யானேயல்லால்- பகவானே அல்லால் அடியேன் நெஞ்சம் பேணலதே ) ; 4. திருவாய் மொழி ஸாம வேதத்தின் ஸாரம். ( பரத்வம , சரீர ஆத்மபாவம், குணாத்மகன் , எல்லா வஸ்துக்களுக்கும் சரீர, ஜகதைஸ் வர்யம், ஜகத் காரணத்வம், ஜகத் ஸ்வரூப, ஸ்திதிபிரவிருத்தி எல்லாம் பக வத் அதீனம். அபாஸ்த பாத: ஸ்ருதிசி ரஸி வீதியதே பிரும் மணீ ஸ்ரீநிவாஸே - பொறி உணர்வு அள விளன் ச்ரீ தாப்தா சூன்யத் வம் நிரஸனம் - சாரீரக சாஸ்திரத்தில் இரண்டாம் அத்தியாயத்தில் சொல்லப்பட்ட விஷயங்கள். முத்தர்களால் போக்யத்வம் அடையப் படுவது – கைவல்யம் துக்கம் - ஸம்சாரத்தை வெல்லாது- அற்றது பற்று எனில் உற்றது வீடுயிர் செற்றது மன்னுறில் - அவற்றைப் பற்றே என்பது போல பல கருத்துக்களைக் கொண்டது. அவைகளை விளக்க வந்த ஆறு அங்கம் போல திரு மங்கையாழ்வாரின் பிரபந் தங்களாகும் . ரீதே போல கிளி என்ற சொல் கடைசி ஆசார்யரான தேசிகனேயும் சொல்லும். தேசிகர் தன்னேக் கிளி என்று சொல்லிக் கொண்டார். வரதராஜ ஸ்தவம் etc. பார்க்கவும்

**ஸ்ரீமத் அழகிய சிங்கரின் கருத்து :—**

கிளி மொழியாள் ஒருத்தியை எழுப்புகிறார்கள். வல்லான் - பௌண்ட்ரக வாசுதேவன் (பாகவதத்தில் இவனது கதையைக் காண்க)மாயன் - நாரதர், கிருஷ்ணர் எவ்விதம் ஸம்சாரியாக வாழ்கிறான் என்று ஆசைப்பட்டு, துவாரகை வந்து • ஒவ்வொரு கிருஷ்ண பத்தினி வீட்டிலே ஒவ்வொரு கிருஷ்ண உருவம் இருக்கக் கண்டு - ஸம்சாரியாக வாழ்க்கை செய்பவராகக்கண்டு • ஆச்சரிய முற்றார் . ( பாகவதத்தில் இக்கதையைக் காண்க ) மாயன்.

**ஸ்ரீமதாண்டவன் அருளிச் செய்த உரை :**

இளங்கிளியே - திருமங்கையாழ்வார் - பெரிய திருமொழி 8-1-1. சிலையிலங்கு பொன்னாழி —— கலையிலங்கு மொழியாளர் கண்ண புரத்தம்மானைக் கண்டாள் கொலோ? உபயத்தினாலே - கடைசி ஆசார்யன் தேசிகரையும் சொல்லலாம். வரதராஜ பஞ்சாசதி, தயா சதகம், அச்சுத சதகம் இவைகளை ஸ்மரிப்பது – வல்லை உன் வாய்ப்பண்டே அறிதும் . நீங்களே வல்லீர்கள் – மதுரகவிகளையும் சொல்லலாம். மிக்க வேதியர் வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடியென் நெஞ்சுள் நிறுத்தினான் -என்பதால் (கண்.சிறு) நம்மாழ்வாரையும் சொல்லலாம். நாடாத மலர் நாடி ; இப்பாட்டில் ஆசார்யரின் மாளிகையடைந்து அவருக்குக் கைங்கர்யம் செய்யும் சிஷ்யர்களை அணுகி, அவர்களிடம் பிரார்த்தித்தல்.

## ஸ்ரீமத் அழகிய சிங்கர் அருளிச் செய்தது

**ஸ்ரீமத் அழகிய சிங்கரின் கருத்துக்கள் இனி வரப்போகும் பாட்டுக்களாகிற 16 லிருந்து 19 ம் பாட்டு வரை கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளன. 20 க்கு மேல் அந்தந்த பாட்டின் உரையின் முடிவில் காணவும்.**

**16 ம் பாட்டு.**

**( நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய ——— )**

**அழகிய சிங்கரின் கருத்து:**

நந்தகோபக்கோனாரம் அடைகிறார்கள்; அவருடைய வீடு ஸ்ரீவைகுண்டம் மாதிரி இருந்தது, ஜ்வலித்தது, எங்கும் காவலாட்கள் கண்காணிப்புத் தொழிலில் தீவிரமாகவிருப்பவர்கள்.

## 17 ம் பாட்டு

( அம்பரமே தண்ணீரே சோறே ' அறஞ்செய்யும் —— )

**அழகிய சிங்கரின் கருத்து :**

நந்தகோபாலா - தகப்பன் தாய் நடுவிலுள்ள கிருஷ்ணன் அனந்தப்பிரும்மம். ஆனந்தம் பிரும்மம் ( தைத்ரிய சுருதிகளை நினைவுபடுத்திக் கொள்க )

## 18 ம் பாட்டு

( உந்துமதகளிற்றன் ஓடாத தோள்வலியன் —— )

**அழகிய சிங்கரின் கருத்து :**

நப்பின்னையை எழுப்புகிறார்கள் மஹாலட்சுமி அனுப்பின ஒரு தேவி இவள். அவதாரம் நப்பின்னை. பந்தார் விரலி - கந்தம் கமழும் குழலி - இவளைச்சொல்லும்.

## 19 ம் பாட்டு

( குத்துவிளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல் —— )

**அழகிய சிங்கரின் கருத்து :**

கோபிகைகள் தனியாகக் கிருஷ்ணனை நினைத்துக் கொண்டே படுத்துகிடந்தமையை நினைத்து, இதனால் கிருஷ்ணனுடன்சேர்ந்திருக்கிற நப்பின்னையை மறந்து, பிறகு, அவள் ஞாபகம் கொண்டு, உற்றுப்பார்க்க, கிருஷ்ணனைத் தனியாகக் காணமல், நப்பின்னையின் கொங்கை மேல் இருப்பதாகக் காண்கிறார்கள். இருவர்களையும் சேர்த்து எழுப்புகிறார்கள்:

ஸ்ரீ:

ஸ்ரீமத்யை கோதாயை நம: ஸ்ரீமதே ராமானுஜாய நம

# 1. அனுபந்தம்

குந்தீ நகரத்தில் ஸ்வாமி நம்மாழ்வாரின் பரிபூர்ண அம்சத்துடன் வைகாசி விசாகத்தில் அவதரித்து, முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து ஞானமதனைப் பசும் திருவாய்மொழிப்பிள்ளையின் பேரருளுக்கிலக்கானவர் அழகியவரதன் என்று பூர்வாசிரமத் திருநாமத்துடன் விளங்கிய ககதகிரிமுனி. (வானமாமலை ஜீயர்) அவர் அருளிச்செய்த திருப்பாவை உள்ளுறை பொருளில் சில பகுதிகள் ஸாரமாக கொடுக்கப்பட்டிருக்கின்றன.

| | | |
|---|---|---|
| 1. | மார்கழித்திங்கள் | பரவாசுதேவனான நாராயணன் |
| 2. | வையத்துவாழ்வீர்காள் | வ்யூஹ வாசுதேவனான பாற்கடலுள் துயிலும் பரமன் |
| 3. | ஓங்கி உளகளந்த | விபவாவதாரங்களில் நாடுமுழுவதுக்கும் பயனளித்த திருவிக்கிரமன் |
| 4. | ஆழிமழைக்கண்ணா | அந்தர்யாமியான நாராயணன் |
| 5. | மாயனை | உகந்தருளின நிலங்களில் அடியவர்கட்கு அருள் புரியும் அர்ச்சாவதார எம்பெருமான். |
| 6. | புள்ளும் சிலம்பின | அஸ்மத் குருப்யோ நம: |
| 7. | கீசு கிசென்று | அஸ்மத் பரம குருப்யோ நம: |
| 8. | கீழ் வானம் | அஸ்மத் ஸர்வ குருப்யோ நம: |
| 9. | தூமணிமாடத்து | ஸ்ரீமதே ராமாநுஜாய நம: |
| 10. | நோற்றுச் சுவர்க்கம் | ஸ்ரீ பராங்குச தாஸாய நம: |
| 11. | கற்றுக் கறவை | ஸ்ரீமத்யாமுந முநயே நம: |
| 12. | கனைத்து | ஸ்ரீராம மிச்ராய நம: |
| 13. | புள்ளின் வாய் | ஸ்ரீ புண்டரீகாக்ஷாய நம: |
| 14. | உங்கள் புழக்கடை | ஸ்ரீமந் நாதமுநயே நம: |
| 15. | எல்லே இளங்கிளியே | ஸ்ரீமதே சடகோபாய நம: |
| 16. | நாயகனாய் நின்ற | திருவாசல் காக்கும் முதலிகள் (துவார பாலர்கள்) |

| | | |
|---|---|---|
| 17. | அம்பரமே | ஸ்ரீமதே விஷ்வக்ஸேநாய நம : |
| 18. | உந்துமதகளிற்றன் | ஸ்ரீயெ நம : |
| 19. | குத்துவிளக்கு | ஸ்ரீதராய நம : |
| 20. | முப்பத்து மூவர் | "ஸ்ரீமந்" (இனி துவய விவரணம்) |
| 21. | ஏற்ற கலங்கள் | நாராயண |
| 22. | அங்கண்மாஞாலம் | சரணௌ |
| 23. | மாரிமலை | சரணம் |
| 24. | அன்றிவ்வுலகம் | ப்ரபத்யே, |
| 25. | ஒருத்தி மகனாய் | ஸ்ரீமதே |
| 26. | மாலே | நார |
| 27. | கூடாரை | அயந (நாராயணாய) |
| 28. | கறவை | ஆய |
| 29. | சிற்றம் சிறுகாலே | நம : |
| 30. | வங்கக்கடல் | திருப்பாவை நாற்பயன் |

ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சரணம்

# 2. திருப்பாவையும் நாலாயிர பிரபந்தமும்

இனி, திருப்பாவை முப்பதும் பாடினால் நாலாயிரம் பாடல்களைப் பாடிய பயன் கிடைக்கும் என்று பூர்வாசாரியர்களிட மிருந்து கேட்டுணர்ந்த ஸ்ரீ ராமானுஜர் (ஸ்வாமி எம்பெருமானார்) எப்பொழுதும் திருப்பாவையை அநுசந்தானம் செய்து (பாடி) 'திருப்பாவை ஜீயர்'' என்ற திருநாமத்துடன் விளங்கினார். திருப்பாவைப் பாடல்களின் சொற்கள் எப்படி நாலாயிரம் பாடல்களை உணர்த்துகின்றன என்பதை கீழே தந்திருக்கிறோம். மார்கழி என்ற சொல் மார்க சீரிஷ என்ற வடசொல் சிதைவு. ஆதலால் ''மார்'' ''கழி'' என்று இரண்டாகப் பிரிக்க வேண்டும்.

| | |
|---|---|
| மார் | ''மார்பில் திருவன் வலனேந்து சக்கரத்தன்'' (பெரிய திருமொழி 8-4-6) |
| கழி | ''கழியமிக்கதோர் காதலளிவளென்று அன்னை காணகொடாள்,''(திருவாய்மொழி 5-5-10) |
| திங்கள் | ''திங்களப்பு வானெரி காலாகி'' (பெரிய திருமொழி 2-2-7) |
| மதி | '' மதிக்கண்டாய் நெஞ்சே'' (இரண்டாம் திருவந்தாதி 51) |
| நிறைந்த | ''நிறைந்த வன்பழி நங்குடிக்கிவள்'' (திருவாய்மொழி 5-5-7) |
| நல் | '' நல்லை நெஞ்சே நாம் தொழுதும்'' (பெரியதிருமொழி 1-7-9) |
| நாள் | ''நாளும் வாய்க்க நங்கட்கு'' (திருவாய்மொழி, 8-10-8) |
| ஆல் | ''ஆலமாமரத்தினிலை மேலொரு பாலகனாய்'' (அமலனாதிபிரான் 9) |
| எங்கும் | ''எங்குமுளன் கண்ணனென்ற மகனை'' (திருவாய்மொழி 2-8-9) |
| திருவருள் | ''திருவருள் செய்பவன் போல'' (திருவாய்மொழி 9-6-5) |
| பெற்று | ''பெற்றார் பெற்றொழிந்தார் பின்னும் நின்று'' (பெரியதிருமொழி 8-9-7) |
| இன்பு | ''இன்பம் பயக்க'' (திருவாய்மொழி 7-10-1) |

| | |
|---|---|
| உறு | "உறுவதிது என்று" (திருவாய்மொழி 9-4-4) |
| வர் | "வருவார் செல்வார்" (திருவாய்மொழி 8-3-7) |
| எம் | "எம்மாவீட்டுத்திறமும் செப்பம்" (திருவாய்மொழி 2-9-1) |
| பா | "பாத நாளும் பணியத்தணியும் பிணி" (திருவாய்மொழி 9-10-9) |
| வாய் | "வாய்க்க தமியேற்கு" (திருவாய்மொழி 8-10-10) |

# 3. குருபரம்பரையும் (கூரத்தாழ்வான்படி) திருப்பாவையும்

ஸ்ரீ குருபரம்பரையில் கூரத்தாழ்வான் அருளிச் செய்தது - இவ்விதம் :

1. அஸ்மத் தேசிகம்
2. அஸ்மதீய பரமாசார்யாந்
3. அசேஷாந்குரூந்
4. ஸ்ரீமந் லக்ஷ்மணயோகிபுங்கவ :
5. மஹாபூர்ணௌ
6. முநிம் யாமுனம
7. ராமம்
8. பத்மவிலோசனம்
9. முனிவரம் நாதம்
10. சடத்வேஷிணம் (நம்மாழ்வார்)
11. ஸேநேசம
12. ச்ரியம்
13. இந்திராஸஹசரம் நாராயணம் ஸம்ஸ்ரயே.

இதில் - முதலாவது - அஸ்மத் குருப்யோ நம : என்று ஆரம்பித்து, பதின் மூன்றாவது ஸ்ரீதராய நம : என்று வாக்ய குருபரம்பரை பூர்த்தியாகிறது.

இதையே ஸ்ரீ ஆண்டாள் ஆறும் பாட்டின் முதல் ஆரம்பித்து, பதினெட்டாம் பாட்டுவரை பாடியுள்ளாள். 16-ம பாட்டில் பரமபதத்திலுள்ள த்வாரபாலகர்களைக் குறிக்கும்.

பத்து ஆசார்யர்கள் லீலாவிபூதியில் அவதரித்தவர்கள். மூவர் நித்ய விபூதியான பரமபதத்தில் வாழ்பவர்கள். முப்பத்து மூவர் என்கிற பாட்டுமுதல் - சிற்றஞ்சிறுகாலே வரை த்வயார்த்தம்.

வங்கக்கடல் என்னும் பாட்டில் பலசுருதி. முதல் பாட்டு முதல் ஐந்து பாட்டுக்கள் வரை – பரத்வாதி பஞ்சக ப்ரதிபாதகாந் ।

ஸ்ரீமத்யை கோதாய நம :-

ஸ்ரீ:

# திருப்பாவை (தொடர்ச்சி)

நாயகனாய்நின்ற நந்தகோபனுடைய
கோயில்காப்பானே கொடித்தோன்றும் தோரண
வாயில்காப்பானே மணிக்கதவம்தாள்திறவாய்.
ஆயர்சிறுமியரோமுக்கு அறைபறை
மாயன்மணிவண்ணன் நென்னலேவாய்நேர்ந்தான்
தூயோமாய்வந்தோம் துயிலெழப்பாடுவான்
வாயால்முன்னமுன்னம் மாற்றாதேயம்மா நீ
நேசநிலைக்கதவம் நீக்கேலோ ரெம்பாவாய். *(16)*

**ஸங்கதி:**—கீழ் பத்துப் பாட்டுக்களாலும் உறங்குகின்ற தோழிகளை எழுப்ப - அவர்கள் எல்லோரும் கூடி வந்து ஸ்ரீ நந்த கோபர் திருமாளிகைக்குச் சென்று - அங்கு கிடக்கும் கோயில் காப்பானையும் - வாசல் காப்பானையும் எழுப்புகிறார்கள். ததீயரை முன்னிட்டுப் பற்றாதவன்று முறை தப்பின சூர்ப்பணகை பட்டது பாடுமித்தனை - வல்ல பரிசு வருவிப்பரேலது காண்டும் - என்னும் பெரியாழ்வார் திருமகளிறே இவள் (மூவாயிரப்படி). ஆறாயிரப் படியில் பஞ்சலக்ஷம் குடியில் பெண்களையும் தனித்து எழுப்பின படிக்கு உபலக்ஷணம் - இப் பத்துப் பெண்களையும் எழுப்பினது. வாசற் காப்பான் கோயில் காப்பான் - க்ஷேத்ராதிபதிகளையும் த்வாராத்யக்ஷகர்களையும் எழுப்பி அவர்கள் அனுமதி பேரில் - உள்ள செல்ல எண்ணுவது ஞானாதிகருடைய அனுஷ்டானமும் கோல் விழுக்காட்டாலே பலிக்கிறது.

நாயகனாய் - வாசற் காப்பானுக்கும் நந்த கோபருக்கும் சொல்லலாம் — நாயகத்வம் பகவானை அடைய உத்தேஸ்யமுள்ள வர்கள் - இந்த பாவைப் பெண்கள்-ஏன் நந்தகோபரைப் பிரார்த் தித்து அனுமதி ஏன் பெற வேண்டும் என்கிற கேள்விக்குப் பதில்— சாஸ்திரங்கள் எங்கும் அப்யஸித்துப் பார்க்குமிடத்து - உபாய மாகத் தோன்றுகிற ஞான பக்தி கர்மயோகாதிகள் பேற்றுக்கு ஸாதனமாகாது. பகவத் ஸம்பந்திகளை முன்னிட்டுக் கொண்டு -

அவனையே உபாயமாகப் பற்றுவது பேற்றுக்கு உடல் என்று ஸ்வப்ரபந்தத்திலே முதலிலும் முடிவிலும் பரமாசார்யரான பெரிய முதலியாரை (சுக்ரீவனை) - ஆளவந்தார்-நாதமுனியைச் சொன்னது; விபீஷணன் பற்றினன்-நிவேத்யதமாம் க்ஷிப்ரம் என்கிற சுலோகத்தில் - அர்ஜுனனும் த்வத்பாத மூலம் சரணம் பிரபத்யே - என்று சொன்னார். ஆளவந்தரும் சொன்னார் ''நாத முனிம் விலோக்ய'' என்று பெரிய முதலியாரையும் முன்னிட்டு பிரபத்தி செய்தனரே! எதற்கென்றால் ஈஸ்வரன் ஸர்வ ஸ்வதந்தி ரன். இவருடைய பூர்வ கர்மங்களை நினைத்து நிக்ரஹ சங்கல்ப னாக விருக்கக்கூடும். அது செய்யாதபடி - மறுக்க ஒண்ணாத மனிசரை முன்பு காட்டி - திருமகள் - நாதமுனிகள்-திரௌபதி தர்ம புத்ராதிகளை, அர்ஜுனன் மனம் கொண்டது போல, பகவானைப் பொறுப்பிக்கவும். அனுக்ரஹ சங்கல்பம் செய்யும் படிக்கும் பிரார்த்திப்பது தான் பாபிஷ்டன். க்ஷத்ரபந்துஸ்ச புண்டரீகச்ச புண்யச்ருத ஆசார்ய வத்தயா முக் தௌ தஸ் மாதா சார்யவாந் பவேத் பலசித்தி-ஆசார்ய முகத்தாலே - உபகாரகனை ''நாயகன்'' என்கிறார்கள். அது போல ஈஸ்வரனுடைய கிருஷிக்கும் பலம் இவர்களோடு சம்பந்தம் கொண்டதாலே. தொண்டர் தொண்டர் தொண்டர் சடகோபன் - வேறாக வேத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரை சாத்தியிருப்பார் தவம் - உன் அடியார்க்கு ஆட் படுத்தாய் - தங்கள் தேவரை வல்ல பரிசு வருவிப்பரேல் (ஆண்டாள்)-இது போன்ற ''ஆழ்வார்களின் ஸ்ரீ சூக்திகள் பிர மாணம். பட்டர் - நஞ்சீயரை-பெரிய பெருமாள் தஞ்சமென் றிருக்கும் வரைத் தஞ்சமென்றிரும்'' என்று அருளிச் செய்தார். இது ஒரு புறமிருக்கட்டும்.

'நாயகனாய்-உலகங்கள் எல்லாவற்றிற்கும் நாயகனாக விளங்கு பவன் பகவான். அமரர் பதியான அவரை - யசோதை நந்த கோபன் - உட்பட ஆயர் நாயகனாக நிற்க - நம்முடைய நாயக னன்று - என்று சொல்லும்படி உபய விபூதி நாயகனாகிற கிருஷ்ண னுக்கும் நாயகராதலால்-நாயகனாய் நின்ற நந்தகோபன்மகன்-என் கிறார்கள். தேவகி - வசுதேவன் ஸுதன் என்று சொல்லும்படி யாயிற்று-எப்புடி ஆத்மானம் மானுஷம் மன்யே-ராமம் தசரத புத்ரம் என்கிறாப் போலே - அவர்களின் அபி மதத்தில் இவன் ஒதுங்கினான்! ஆகவே கிருஷ்ணன் கோயில் என்னாதே - நந்த கோபன் கோயில் என்றனர். கோயில் காப்பானே - என்பதற்கு இன்னொரு சுவாரஸ்ய அர்த்தம் - கம்ஸன் முதலானவர்களின் ஹிம்சைகளிலிருந்தும் கண்ணனைக் காப்பாற்றியது - நந்தகோபன் யசோதை செய்த உபகாரமாம். அது இவர்களுக்குப் பலிக்க -

சேஷ விருத்தி - பிரயுக்தமான பேறு ஆத்மாவுக்கும் பேறு என்னு மிடம் தோற்றுகிறது. நாங்கள் வயிறு எரிதல் அடையாதபடி தீர்க்கிறவன் அன்றோ நந்தகோபன்! ஸர்வரக்ஷகன் தன் ரக்ஷகத் வத்தை இவர்கள் தலையிலே வைத்து - தான் சுகமாக உறங்கினான்- இவனே சேஷ விருத்திக்கு யேற்படும் பேறு ஆத்மாவுக்கு ஆன படியால் ஸ்வரூப அனுரூப மென்னும் பாவத்தை அடைந்தனன்.

கோயில் காப்பானும்-வாசற் காப்பானும் கண் ஜாடையினால் இந்த பாவைப் பெண்களுக்கு அனுமதி உள்ளே செல்லும்படி கொடுக்க - கொடித் தோன்றும் — வெளி வாசலைக் காப்பவர் களும் தோரண வாயில் காப்பானும் அனுமதி வேண்டப்பட்டு- கொடுக்கு மளவிலே - மணிக்கதவம் தாள் திறவாய் - உள்ளிருப்ப வரைக் கூவி - அவனையும் தாழ்ப்பாளை திறந்தருள வேணும் என்பதாக-மணிக்கதவம் தாள் திறவாய் என்றனர், "எதற்காக?" என்று அவன் கேள்வி கேட்க - இந்தப் பெண்களுள் ஒருத்தி - இளங்கிளி பதில் சொல்கிறாள். "ஆயர் சிறுமியரோ முக்கு (நேற்று) நென்னல் ஏ மணிவண்ணன் - மாயன் - அறை பறை என்கிற கோஷிக்கும் வாத்யத்தைத் (தருவதாக) கண்ணன் வாய் நேர்ந்தான் (வாயால் வாக்களித்தான்). அதன்படி நாங்கள் இங்கு வந்திருக்கிறோம்", என-மணிவண்ணன் துயிலி லிருந்து எழுப்பும்படி-துயில் எழ - பாடுவான் (பாடுவதற்காக) தூயோமாய் (ஸ்நானம் முதலிய பாஹ்ய சுத்தங்களையும் - காயிக மானசீக சுத்தங்களுடன்) வந்தோம். அம்மா - நீயும் ஒரு எஜமானி - உன்னையும் வேண்டுகிறோம் - முன்னம் முன்னம் வாயால் மாற்றாதே - (எதிர்ச் சொல் சொல்லி மறுக்காமல்) நிலை நேசக் கதவம் (நிலையில் பதிந்துள்ள பெரிய கதவை) நீக்கு ஏலோ- ரெம்பாவாய்-திறப்பாய் என்று வேண்டினர். நேசக் கதவம் - ஆசார்யனையும் சொல்லும். அவன் தான் ரகசியங்களைச் சொல் லிக் கொடுப்பவன்.

இவர்கள் வேண்டினால் அவன் திறக்க வேண்டுமோ என்ப தற்கு-நேற்றே கண்ணன் எங்களை வரும்படி சொன்னான் - அறை பறை தருவதாக வாக்களித்தான் என்பதினால் - உகந்தாரை உகக்கும் பாகவதனைப் போல கோயில் காப்பானும் - உட்வாயில் காப்பானும் வேலைக்காரனுக்கு எஜமானனின் சம்பந்தத்தைக் கொண்டோ பெருமை பெறுவது - காரியம் சாதிப்பது! நாங்களும் உன்னைப் போல பகவானுக்கு சேஷ பூதர்கள் என் பதிலே ஊற்றம் இவர்களுக்கு; அவனுக்கு கிருஷ்ணனும், கிருஷ்ண விபூதிகளும் ஸர்வமும் ஸ ஏவ ஹி - தன் சொத்துப் போலே . சுய

உரிமை கொண்டவனும். கண்ணனே இந்த நோன்புக்கு முக்கிய கதாநாயகன். ஆகவே அவனுக்கும் இது தெரிந்த விஷயம். மாயனே பறை அளிப்பவன் என்றாலும் நாமே அவனைத் திருப் பள்ளி எழுப்பவே இங்கு வந்துள்ளோம். நீ உட்செல்ல அனுமதி கொடுப்பாய் - துயிலெழுப் பாடவே வந்தோம். நாங்கள் பூதனை சூர்ப்பணகையுமல்ல பாடவே வந்தோம் என்பதாம்.

இவ்விதம் சொன்னதும் அவன் தாளைத் திறக்க-இவர்கள் உள் எட்டிப் பார்த்தனர். நேச நிலைக் கதவு-திருவாழி திருச்சங்கு போலே எல்லா வஸ்துக்களிலும் நித்ய சூரிகள் நித்ய சைதன்யப் பிரகாசத்துடன் இருந்தனராம். படியாய் கிடந்து பவளவாய் காண்பேனே-என்று குலசேகராழ்வார் சொன்னாரே அது போல சேஷ பகவானே கோவிலாகும். கதவும் நித்ய சூரிகளாகும். தடைக் கதவு நீங்கினதும் அவர்கள் எட்டிப் பார்த்த காட்சி அடுத்த பாசுரத்தில் காணும்.

**ஸ்வாபதேசம்:**—ஆண்டாள் பத்துப் பாட்டுக்களாலே பத்து ஆழ்வார்களை எழுப்பினதாக கொண்டோம். சேதனன் தனது பத்து இந்திரியங்களையும் வசப்படுத்திக் கொண்டான் என்றாலும் தவறில்லை. பதினோராம் இந்திரியமான மனது இந்தப் பாசுரத் தில் சொல்லப்படுகிறது. மனது என்பது நேய நிலைக் கதவமாக விருக்கிறது. பொன் மயமான பாத்திரத்தை அதன் முகத்தை மூடி விட்டால் அந்தப் பாத்திரம் பற்றி பெருமைப்படக் கூடம் படுமோ அது போல ரஜஸ் தமஸ் நீங்க வேண்டும். மனதும் அமலமாகிவிடும். அதற்கு சாதன சதுஷ்டயம் சம்பத்தும்-கர்ம யோகத்தினால் விளைவு பெறும் பலத் தியாக புத்தியும்-ஈஸ்வராரா தனம் என்று செய்யப்படும் கர்மாக்களும் தான் மனத்தை சுத்தப் படுத்தும். ஆகவே இவர்கள் தூயோமாய் வந்தோம் என்றனர். பிரும்மபுரே தஹரம் (சிறிய த்வாரம்) புண்டரீகம் வேச்ம - என் கிறபடி-பெருமாள் பிரும்மபுரமாகிற ஹ்ருதயபுண்டரீகத்தின் சிறிய துவாரத்தில் கோயில்கொண்டிருக்கிறான். அதனைக் காப்பது மனது. ஐந்து த்வாரங்களைப் பிரஸ்தாவம் செய்து-அவற்றில் ஐந்து பிராணங்கள், ஐந்து இந்திரியங்கள் - அவற்றின் தேவதைக ளுக்கும் சம்பந்தத்தைச் சொல்லி - அந்த துவார பாலர்களின் உபாஸனத்தை - தஹர வித்யையில் சாந்தோக்யத்தில் சொல்லப் பட்டது. இப் பாசுரத்திலும் பிரும்ம உபாஸனத்திற்குத் தேவை யான - வாசற் காப்பார்களையே விளித்து - பிரார்த்தித்ததாம். மனம் விஷயப் பற்றுதல்களிலிருந்து விடுபட்டால் அமலமாகும். மதிநலம் பெறப்படும்.

ஒரு கேள்வி எழலாம். இது பரம ஏகாந்திகளுக்கு முடியும். இவர்களோ ஆயர் சிறுமியரே - இவர்களுக்கு ஸாத்யமா? அதற்கு கண்ணனே ஆயர் பதியாக அவதரித்திருக்கிறனே-பரம சௌலப்யத்தை அறிந்து - அந்நலனுடைய ஒருவனையே நணுகு மவனே பரமாஸ்திகன்-பெரும் பாக்யம் பெற்றவன் - அதனாலே அவன் மாயன்-மணிவண்ணன் - அனுக்ரஹ சித்தமுள்ளபடியால் "எங்களுக்கு நேற்றே வாக்களித்து வரச் சொல்லியிருந்தவன். ஆகவே நீ மனம் சலிக்காதபடி - கதவை நீக்கு" என்று இந்தச் சிறுமிகள் விண்ணப்பம் செய்தனர்.

ராமனைக் காண பரதன் சித்ரகூடம் செல்லும் போது - ராமனுடைய ஆசிரம சூசகமானபுகை - வட விருக்ஷம் - போல கொடியையும் தோரணத்தையும் கண்டு இவர்கள் களித்தனர். மணிவண்ணனின் அழகைச் சொல்லியது. இவர்களைக் கிடந்த விடத்தில் கிடக்க வொட்டாதே - படாத பாடு படுத்தி - பிராப்ய ருசியை உண்டு பண்ணுவது. வாய் நேர்ந்தான்—வாக்கு அளித் தவன். மெய்யனுக்கு மெய்யனாகும், பொய்யனுக்கு பொய்ய னாகும்-ராமோத்விர் நாபிபாஷதே-அந்ருதம் நோக்த பூர்வம்மே- இது ராம விஷயம் ஆச்சுதே-கிருஷ்ணன் எவ்விதம் மெய்யனாகும்? பீஷ்மரைத் தாக்க சக்கரம் ஏந்தினனே - வாக்கை விட்டானே. ஆகையால் மெய்யனுக்கு - ஆஸ்ரிதர்களுக்கு மெய்யனாகும். ஆஸ்ரிதரக்ஷணம் இவனுக்கு ஸ்வரூப நிருபகதர்மம் எங்களைக் கைவிடான் என்கிற பரதாழ்வாரைப் போல மஹா விஸ்வாச முடையவர்கள் இந்த ஆயர் சிறுமியோர். அது மாத்திரமா இவர்களுக்கு கார்ப்பண்யமும் உண்டு. பகவானிடமே பிரார்த் தித்துக் கொண்டு-அவன் சம்மதியைப் பெற்றனர். பகவத் ஆராதனை எங்களுக்கு ஸ்வயம் பிரயோசனம். பிரயோசனம் கொண்டு அகல மாட்டோம் என்பதால் சிறுமிகளின் உள்ளம் படைத்தவர்களாம். இன்னொரு அர்த்தம் - நாங்கள் அவனை மங்களாசாஸனம் செய்ய வந்திருக்கிறோம். சூர்ப்பணகை - பூதனை போன்ற மாதர்களல்ல. ஆயர் சிறுமி கள். வந்த காரியமும் கண்ணனிடமாதலால் - அவனைத் திருப்பள்ளி எழுச்சி பாட வந்திருக்கிறோம். ஸ்வரூப அனுரூப குணமே சேஷ விருத்திக்கு யேற்பட்டது. இளங் கிளியே-என்று முன்னால் விளிக்கப்பட்ட தோழியினால் இவ் விதம் சொல்லப்பட-அவன் மறுத்துச் சொல்லாமல் வாயிற்கதவை நீக்கினான் என்கிற கருத்து. ஆய்ச்சிகளின் ஆர்த்தி கனமும் அவர் களின் தூய்மையும் அவனை நெகிழச் செய்தது. காரணம்-ஜய விஜயர்களைப் போன்றன்றி மஹா பாக்யமுள்ளவர்களன்றோ -

பெரிய நிதியைக் காக்கும் கண்ணும் கருத்துள்ள மஹா வீரர்கள் தங்கள் தொழிலில் எண்ணிலா பெருமையும்-கணிப்பையும் கொண்டபடியால் அவர்கள் - சிறுவர்களான ஸனக ஸநாதன, ஸநத் சுஜாத ஸநந்தனு திகளைப் பகவானைக் காணவொட்டாமல்-தடுக்க-அதனுல் சாபம் பெற்றனரே - அவர்களைப் போல இவர்கள் இல்லை என்கிற கருத்தாம். ஆகவே அவன்கதவைத் திறந்தான் - இவர்களும் எட்டிப் பார்த்தனர்.

---

(ஸ்ரீமதாண்டவன்) ஆசார்யனின் மாளிகையை யடைந்து-அவருக்கு கைங்கர்யம் செய்யும் சிஷ்யர்களை அணுகி, அவர்களிடம் பிரார்த்தித்தல். பறை என்பது வியாஜம் (புருஷார்த்தம்) பாகவதர்களை முன்னிட்டு பகவானை அடைதல் நியமம். கோயில்-திரு மந்திரம் குரு பரம்பரை-ஆசார்யனின் பெருமை இவைகளை ரஹஸ்ய திரய ஸாரத்தில் சொல்லியிருக்கிறுர்.

---

அம்பரமேதண்ணிரே சோறேயறஞ்செய்யும்
எம்பெருமான்! நந்தகோபாலா! எழுந்திராய்
கொம்பனுர்க்கெல்லாம் கொழுந்தே! குலவிளக்கே!
எம்பெருமாட்டி! யசோதாய்! அறிவுறுய்
அம்பரமூடறுத்தோங்கி உலகளந்த
உம்பர்கோமானே! உறங்காதெழுந்திராய்
செம்பொற்கழலடிச் செல்வா! பலதேவா!
உம்பியும்நீயும் உறங்கேலோரெம்பாவாய். (17)

வாசலிலிருந்து கதவிடுக்கின் வழியாகப் பார்த்த அந்த ஆயர் சிறுமிகள் ஸ்ரீ நந்தகோபரையும் யசோதைப் பிராட்டியையும்-கண்ணபிரானையும்-பலதேவனுகிற நம்பிமூத்த பிரானையும் கண்டு-அவர்களைத் திருப்பள்ளி எழுப்புகிறுர்கள். முதல் இரண்டு அடிகளால் நந்தகோபரையும் - மேல் இரண்டு அடிகளில் யசோதையையும்-அதன் மேலே பலராமனையும் எழுப்புகிறுர்கள். கண்ணனும் பலதேவனும் நன்றுகவிருக்க வேண்டுமென்று ஸதா தெய்வங்களையும் பூதேவர்களையும் பிரார்த்தித்துக் கொண்டு அவர்களுக்குத் தவருமல் பூஜை செய்தும் - தானம் வழங்கியும் - இன்னும் கிராமத்திலுள்ள ஏழை ஜனங்களுக்கு அன்ன மிட்டும் - கிணறு வெட்டுதல் போன்ற இஷ்டா பூர்த்தா கர்மங்களையும்-

வஸ்திரம் ஜலம் சோறு இவைகளை தர்மமாக அளித்தும் ஏங்கும் கண்ணனுடைய ஸம்ருத்தியைப் பரப்பினதால்-அத் தகைய நந்தகோபாலா கோபரே எழுந்திருக்க வேண்டும். அதைப் போல யசோதைப் பிராட்டியுமாவாள். அதனால் கொம்பு அனார்க்கு (நல்ல தனம் படைத்த) எல்லா மாதர்களுக்கும் கொழுந்து போன்றவளே. நந்தகோபனின் குல விளக்கே-எம் பெருமாட்டி யசோதாய்-நீயும் எழுந்திருப்பாய் அறிவுஉறாய் - நாங்கள் கண்ணனுக்காக வந்திருக்கிறோம், என்று உணர்ந்து கொள்வாய். அம்பரம் ஊடு-ஆகாசத்தைக் குடைந்து அதன் நடுவிலே அறுத்து (பிளந்து) ஓங்கி வளர்ந்த உலகு (மூவுலகு) அளந்த உம்பர் கோமானே தேவாதிதேவன் - திரு விக்ரமனே - கண்ணனாக அவதரித்திருக்கிற ஸ்ரீ மஹாவிஷ்ணுவே-உபேந் திரனே-உறங்காது - (எங்கள் சப்தம் கேட்டதும் மீண்டும் உறங் காதே-உடனேயே எழுந்திராய்,) சிவந்த (செய்பொன்) கழல் அடிச் செல்வா பலதேவா-நீயும்-உம்பியும் தம்பியுமாகிய கண்ண னும்-உறங்கேல்-தூங்காமல் விழிப்புக் கொண்டு-எங்களை அனுக் ரஹம் செல்ய வேண்டும். முமுக்ஷுப்படியில்-பர்த்தாவின் படுக்கை யும்-குழந்தையின் தொட்டிலையும் ஏக காலத்திலேயே கண் காணிப்பார் போல பதி மக்கள் இவர்களை விடாதேயிருக்கும் மாதாவைப் போல-சதா உறங்காமல் கண்ணனையும் பலதேவனை யும் பாதுகாப்பார்கள். அறம் செய்யும்-துஷ்டி புஷ்டியை விஸ் தரிக்கும் கண்ணன் நன்றாகவிருக்க வேண்டும் என்று சதா சாந்தி பாடங்கள் வாசித்தும்-தானதர்மங்கள் செய்தும் வாழ்ந்தவர்கள். திரு விக்ரமனைச் சொல்வதன் நோக்கம்-வேண்டாதார் தலையிலும் வேண்டாம் என்று மறுத்தவர் தலையிலும் திருவடியை வைத் தருளின திரு விக்ரமனின் வடிவம்-திருமங்கையாழ்வாரின் பாசுரம்- அனுஸந்திக்கவும். ஒரு குறளாய் இருநிலம் மூவடி மண் வேண்டி சேர்மினீரே (3-4-1) வாமனனாக மூன்று அடிகள் பலியை யாசித்து அவன் கொடுத்த பின்பு-திருவிக்ரமனாக வளர்ந்த எம்பெருமான்.

மீண்டும் கண்ணனை எழுப்பு முன்-அவன் பெரிய சஹோதரனான பலதேவனையும் - அதாவது பலதேவனுக்குப் பின் தம்பியாகப் பிறந்தவன் - மூத்தோனை செம்பொற் கழலடிச் செல்வா- தம்பி பிறந்த கால நலத்தைச் சொல்வது கிருஷ்ணன் பின்னே பிறக்க-முன்னே பொற்காலே பொலிய விட்டுப் பிறந்த சீமானே- பலதேவனின் செல்வம். கண்ணன் பேச்சைக் கேட்பது - வத்ஸலா சுபத்ரா பரிணயங்களில் கண்டுகொள்க. மேலும் கண்ணனுக்கு நீயே படுக்கை, பாதரக்ஷை அதனால் அடி சொல்லப் படுகிறது. சேஷனாதலால் அனந்தன் மேல் கிடந்த வெம்புள்ளி

யன்-கண்ணன்-உறங்காது எழுந்திருக்க வேண்டுமென்று பிரார்த்தித்தல், திரு விக்ரம அவதாரம் எடுத்த கண்ணனுக்கு மூத்தவன் பலதேவன். நம்மாழ்வார் திருவிக்ரமனைப் பாட ஆழி எழச் சங்கும் வில்லுமெழ திசை வாழியெழத் தண்டும் வாளுமெழ வண்டம் மோழையெழ முடிபாத மெழ வப்பன் ஊழியெழ உலகம் கொண்டவாறே திருவிக்ரமனின் மேல் நோக்கிய பாதத்தை பிரமன் கமண்டலு ஜலத்தினால் திருவடி சேர்த்து - அதுவும் போராமல் தரும தேவதையைத் தீர்த்தமாய் உருகிப் பெருகச் சொன்னாரென்றும் - அதுவும் போதாமே - விஷ்ணுவின் பாதம் அண்ட கடாஹத்தையும் பிளக்க-அங்குள்ள அதிமதுர சீதளஸமஷ்டி (காரண) ஜலத்தாலே திருவடிக்கும் பாத்யம் போதுவாயிற்று. (விஷ்ணு புராண வியாக்யானமான விஷ்ணு சித்தம்). அம்பரம் ஸம்ஷ்டி ஜலம் - அது புகராதபடி தடையா யிருப்பு அண்ட கடாஹம் - அதனை ஊடறுத்து - பல தேவனுக்கு விக்ஞானம் பலம் என்கிற குணங்கள் உண்டு. இளைய பெருமாளின் கைங்கர்யம் - பல தேவனின் வீரபிரதாபச் செய்கைகள்- ஸங்கர்ஷணன் என நாமமுடையவன்.

**உட்பொருள் :**—அம்பரம் என்பதும் பகவானைக் குறிக்கும். ஈஸாவாஸ்யமிதம் ஜகத் சர்வம் - ஸர்வ வஸ்துக்களை வியாபித்து, வஸ்திரம் உடலை மறைத்துத் தன்னைக் காணச் செய்வது போல- யோகிகளுக்கு உலகைவிட தன்னையே எங்கும் காணச் செய்யும் பகவானை அம்பரம் எனலாம். அம் - அழகிய பரம் பகவான் நாராயணன்.

எம் பெருமானை ஆராதிக்கப் போமளவில்-ஆசார்யர்களையும் பெரியோர்களையும் திருப்பள்ளிபாடி-அவர்களின் கடாக்ஷத்தைப் பெறுதல் இப்பாட்டின் நோக்கமாம். நந்தகோபன் ஆசார்யர்; யசோதை மந்த்ரமாம். காளியன் மடுவில் கண்ணன் குதித்த செய்தி கேட்டதும் - முகம் வாடியவள் யசோதைப் பிராட்டி - அதனால் அவளை மாதர்களுக்கு கொழுந்து - முதலில் வாடும் கொழுந்தைப் போல விருந்தபடியால் - என்று சொல்லிற்று. எல்லாம் ஒரே வஸ்து - அதுவே கண்ணன் - ஏகைக பல லாபாய ஸர்வ லாபாய கேசவ-எல்லாம் கண்ணன் எங்களுக்கு - என்றிருக்கும் நாங்கள் பஞ்ச லக்ஷம் ஆய்ச்சிகளில் ஒருத்திக்கு துக்கம் வந்தால் - யசோதையின் முகம் வாடுமாம். அதனால் கொழுந்து. தேசிகர் ரஹஸ்யத்ரயஸாரத்தில் திருமந்திர-அத்யாயத்தில் மந்திர விஸ்வா-ஸம்-மந்திரம் சொல்லும் ஆசார்ய விஸ்வாசம் 3) மந்த்ர தேவதை 4) பாகவதன் என நான்கையும் குறிக்கும்.

திருவிக்ரம அவதாரம் எடுத்தது - இருவிசும்பினுக்குப்போய்-எல்லார் தலைகளிலும் திருவடிகளை வைத்து பூமியையளந்து கொண்டு - தேவஜாதிக்கு குடியிருப்பைக் கொடுத்து - இதனால் நிருபாதிக ரக்ஷகனுகையாலே ரக்ஷகத்வமே விளை நீராக வளர்ந்தபடி - உலகளந்தார் உறங்கும் பிரஜையைத் தழுவிக் கொண்டு கிடக்கும் தாயைப்போல - எல்லார் தலையிலும் திருவடியை வைத்து; உம்பர் கோமானே - தேவஜாதியை எழுதிக் கொண்டவனே. ''அம்மா'' என்கிற சொல் பிரயோகம் கஷ்டத் தாலும் கூட விருக்கும்.

உறங்காது எழுந்திராய் - கண்ணன் ஸர்வரக்ஷகன். ரக்ஷகரா யிருப்பார்க்கு உறக்கம் விரகுண்டோ? அபலைகள் நாங்கள். அனன்ய பிரயோசன முள்ளவர்கள். நீரே காரியம் செய்து கொள்ளாமல் - இந்திராதிகளுக்குத்தான் உதவணுமா? நமக்கு சிரோபூஷணமான உமது திருவடிகளை விட்டோ காடு மோடையு மளப்பது. உலகளந்த களைப்பாலே தூங்குகிறுயோ? நடந்த கால்கள் நொந்தனவோ தாளாலுலகமளந்த அசைவே கொல்-என்று சொல்லி வயிறு எரிவது. அது மாத்திரமா-பாண்டவர்கள் விஷயத்தில் எல்லாக் காரியங்களைச் செய்த பின்பும் ருணம் ப்ர விருத்நம் - கடன் வட்டியும் முதலொடு பெருகுவதுபோல - என் கடனும் திரௌபதிக்கு கிஞ்சத்தளவிலே - கோவிந்தா என்று அவள் அலறியபோது - சீலை கொடுத்தோமே ஒழிய - அவள் முன்னே நிற்கப் பெற்றிலோம்! என்று இருந்தபடிகளெல்லாம் அறிந்தோமிறே! பிரணய ரோஷம் காட்டலாகாது என விண்ணப் பம் செய்தனர்.

**செல்வா** பல தேவனைச் சொல்லும் லக்ஷமணு லக்ஷ்மி சம்பந்ந: இளைய பெருமாள் பின் பிறக்க—முன்னே பொற்கால் பொலிய இட்டுப் பிறந்த ஸ்ரீமானே -- பெருமாளையும் பிராட் டியையும் சேர்த்து வைப்பதல்லவோ உமது ஸ்வபாவம். உமக்கு உறங்க விரகுண்டோ? சென்றுல் குடையாம்.

**உம்பியும் நீயும்** — உன் ஸ்பரிசத்தாலே தம்பியும் அவனுடைய ஸ்பரிசத்தாலே நீயும், அவன் பார தந்திரியத்தாலே கட்டிக்கொண்டு கிடக்கும்; இவன் ஆற்றுமையாலே கட்டிக் கொண்டு கிடக்கும். புல்கு மணையாம்—என்று நாய்ச்சிமாரைப் பிரிந்தால் ஆற்றலாயிறே யிருப்பது—ராமன் பிராட்டியைப்பிரிந்து நெடுநாளிருந்தார்—இளைய பெருமாளைப் பிரிந்த பின்பு அன்று அமுது செய்திலர். உகந்தபோது நாகணைமிசை நம்பிரான்-ஊடின

போது—நீ முகத்து நாகணை என்பார்கள். ஸ்ரீ குஹன்—மஹா ராஜர் —திருவடி —விபீஷணுழ்வான் எல்லார்க்கும் இளையபெருமாள் (லக்ஷ்மணன்) தானே புருஷகாரம் செய்தார். ஆன பின்பு (பல தேவனையும்) —லக்ஷ்மணனுடைய மறு அவதாரம்—அவனையும் எழுப்பி—நீயும் எழுந்திராய்—எங்களுக்கும் நீயே புருஷகாரம் செய்ய வேண்டும் என்று விண்ணப்பம் செய்கிறார்கள். "செம்பொற் கழலடிச் செல்வா - நீயும் உறங்கேல் எங்களையும் அவனையும் பொருந்தவிடும வனல்லேயோ நீ? ஆகவே நீ எங்களுக்கு புருஷகாரம் செய்வதற்கு - எழுந்திருக்க வேண்டும்'', என்றனர்.

(ஸ்ரீமத் ஆண்டவன்) அம்பரம் ஆகாச சப்தத்தினுல் பகவான் சொல்லப்படுகிறார். ஆகாசசரீர பகவான்.

தண்ணீர்—நீர்வண்ணன். நீர்மலைக்கே. தண்ணீர், சோறு எல்லாம் கண்ணனைக் குறிக்கும். சோறு-க்ருஷ்ணன் ரிஷிபத்னிகளை அன்னம் கேட்டது. ஸ்மரிக்கவும் அறம் செய்யும்.

எம்பெருமாட்டி - சரணுகதி கத்யத்திலே-மஹாலக்ஷ்மியைப் பிரார்த்தித்தது. அநுபோல. ஸ்ரீயம் தேவீம் பகவதீம். பலராமனின் தம்பி—திரு அடிச்செல்வ.

பாகவத பக்தி—நந்தகோபன். மந்திரபக்தி, ஆசார்ய பக்தி பகவத் பக்தி—நந்தகோபன் மருமகளே என்று புக்காத்து பெருமை பேசுதல்.

புருஷகாரம்—ஆசார்யனை எழுப்பி, நம்பி மூத்தபிரான் முன்னுகப் பகவானை எழுப்புகிறார்கள்.

அம்பரமே—ஆத்ம சொரூபத்தையும், தண்ணீர் இதை வளர்க்கும் மனநிலையையும்! சோறு கைங்கர்யத்தையும் குறிக்கும். அவரவர்களுக்குத் தக்கபடி, ஞானம் உபதேசிப்பது. யசோதை-திருமந்திரம்; அதாவது திருமந்திரம் உபதேசம் பெற்று—பாகவதர்களை (ஆசார்யனை) முன்னிட்டு—பகவானை அடைதல்.

——x——

உந்துமதகளிற்றன் ஓடாததோள்வலியன்
நந்தகோபாலன்மருமகளே ! நப்பின்னாய் !
கந்தங்கமழுங்குழலீ ! கடைதிறவாய்
வந்தெங்குங் கோழியழைத்தனகாண், மாதவிப்
பந்தல்மேல் பல்கால்குயிலினங்கள் கூவினகாண்.
பந்தார்விரலி ! உன்மைத்துனன்பேர்பாட
செந்தாமரைக்கையால் சீரார்வளையொலிப்ப
வந்துதிறவாய் மகிழ்ந்தேலோரெம்பாவாய். (18)

இப்படி யெழுப்பின போதும் :- கிருஷ்ணன் எழுந்திராமை யாலே - தங்களுக்கு புருஷகார பூதையான நப்பின்னைப் பிராட்டியை எழுப்புகிறார்கள். அவள் புருஷகாரமாக அவனைப் பற்றுவதே - பலன் பெறலாம், அவளுடைய கிருபையாலே - அனுமன் சுந்தர காண்டத்தில் சீதையைப் பிரார்த்தித்தான் - நமோஸ்து ராமாய தேவ்யை ச தஸ்யை ஜனகாத்மஜாயை - ஜனகனுக்கு எப்படி நீ வலுவில் தோன்றினாயோ - அது போல நீயே எனக்கும் உன் நிர்ஹேதுககிருபையால் காட்டியருள வேணும். அதுபோல லக்ஷ்மணனும் காட்டிற்குப் பெருமாளை அழைத்துச் செல்வதற்கு பிராட்டி முன்னிலையில் ராகவனை சரணடைந்தார். ஸிதா முவாசாதியசாராகவஞ்ச மஹாவிரதம- அதுபோல பிராட்டி ஸந்நிதியிலே காகாசுரன் அபராதியாக விருந்தும் சரணமடைந்து - உயிர் தப்பினான். வதார்ஹமபி காகுத்ஸ: அதுபோல சுக்ரீவனும் பிரட்டியின் திருவா பரணத் தைக் காட்டி - அது முன்னாலே பெருமாளை சரணம் புகுந்தது. பிராட்டியைக் கவர்ந்து செல்ல முயன்ற சூர்ப்பணகை காது மூக்கறுப்புண்டாள். ''தன்னை நயந்தாளை'' யாகினும் - முறை தப்பினதால் சூர்ப்பணகை அநர்த்தத்திற்குள்ளானாள். எம்பெரு மானுடைய கிருபையாலே பலனடைவது சதிர். பிராட்டியின் புருஷகார பலத்தினால் பெறுகை மாசதிர். அவளுடைய கருணை தானே அவளைப் பற்றுகைக்குப் புருஷகார மாகவற்றும். நெருப்பை ஆற்றுகைக்கு நீர் வேண்டும். நீர் ஆற்றுகைக்கு நீரே போது மன்றோ! கிருஷ்ணாவதாரத்தில் இவள் தான் பிரதான மஹிஷியாத லால் இவளைப்பற்றுகின்றனர் எனத் தெளியவும்.

அதெப்படி - உந்தமத களிற்றின் (மதயானைகளை உடைய ஓடாத திரும்பி முதுகு காட்டியவனாம்) - தோள்வலியன் நந்த கோபாலன் மருமகளே - நப்பின்னாய் நந்தகோபனுக்கு நப்பின்னை

பிராட்டியிடம் மஹா ஆசையாம்-ஆயற்சிறுமியல்லவா? அதனால் அந்த நந்த கோபனைப் புகழ்ச்சிச் சொல்லால் - நப்பின்னையின் சந்தோஷத்தைப் பெருக்க - நந்தகோபனின் சம்பந்தத்தையிட்டுக் கூறுகின்றனர். காரணம் - கஞ்சன் நேரடியாக கண்ணனைக் கொல்லவராமல் - பூதனை சகடாசுரன் போன்றவர்களை கபடமாக அனுப்பியதால் தோள் வலியன் நந்தகோபனிடம் அச்சமிருக்க லாம். அதுபோல மற்றைய ஆய்ச்சிமார்கள் கண்ண னைக்குற்றம் கூற இவனுக்காக அஞ்சினார்களாம். அதனால் நப்பின்னையை-நந்த கோபாலனின் மருமகளே-என்றனர். நந்தகோபனுக்கு மருமகள்-மாத்திரமா - பிரதானமறுமகளானபடியால் - நப்பின்னாய் - என்று பேர் கூறி அழைத்தனர் - பேரைக் கூவி அழைத்தல் - எதற்காக வென்றால்-உன்னை யொத்த நாங்களும் ஆயர் குலத்தைச் சேர்ந்த வர்கள். சகாக்கள் - அது மாத்திரமல்ல - நீ கந்தம் கமழும் குழலி யாதலால் - உனக்கு யேற்றம். அதனால் ஸர்வகந்த ஸர்வரஸ: எனப் பெருமாள் பெயர் பெற்றான். நாற்றம் கொடுக்கும் திருக்குழலை யுடையவள். நீயே வந்து கடை (தாழ்ப்பாளைத்) திறவாய். கோழி எங்கும் வந்து அழைத்தன காண். (கூவுகின்றன); மாதவி பந்தல்மேல் குயில் இனங்களும் பல்கால் (பலதடவை) கூவினகாண் (நீயேகேள்); பொழுது விடிந்ததற்கு இத்தனையடையாளங்கள் தேவையா? நீ எழுந்துவிட்டாயானால்-பொழுது கிருஷ்ணனுக்கும் புலர்ந்து விடும். காரணம், படுக்கையில் உன் கையணைப்பில் இருக்கும் அவன் எழுந்தவுடன் உன் முக அணைப்பில் வாசம் செய்வான் - உன் இங்கிதங்களையே அறிந்து தன் வாழ்க்கையைப் பரிபூர்ணமாக ஆக்கிக் கொள்வான். உன் போக்யதையிலே அவனமுந்திக் கிடக்கும் அவனை நாங்களும் அனுபவிக்க வேண்டாமோ - இதென்ன என்ன போட்டி - இவளுக்கும் - ஆயர்சிறுமிகளுக்கும்! ஆம் காரணம் உண்டு. மற்ற ஆய்ச்சி மகளிரை விட நப்பின்னையின் தனங்களும் குவளைக் கண்களும் மிக்க அழகுள்ளபடியால். இந்தச் சிறுமிகள் காமத் தால் உயிர் அழிந்து போகிறார்கள், போது அரிகண் பொலன் குழைப்பூண் முலைச் நப்பின்னை எத்தவம் செய்தனளோ - நீயே கிருஷ்ணனுக்கு ஏற்றவள் - பூண்முலை நப்பின்னை - போதரிக்கண்-பொலன் குழை என்று வியப்புற்று சோர்ந்து போனார்கள்.

ஆயினும் நப்பின்னையின் புருஷகாரம் எதற்கு? சகீ - நீ ஏதா வது உபாயம் செய். நாங்களும் அவனைக் கணவனாக அடைய விரும்புகிறோம். அவதார காலங்களில் பகவானே சேதனனின் பெருமையையும் - வாழ்க்கைப் பிரயோசனத்தையும் அடைய வைக்கிறனாதலால் - இந்தச் சிறுமிகளுக்கு பக்தியில் லஜ்ஜை,

நாண் இல்லை - சேஷத்வம்முக்கியத்தை அடையும்போது - பகவானும் ஆனந்தமடைதலால் - சேஷனும் ஆனந்தமடைகிறான், "நாம் படுக்கையில் கூடச் சேருவோம்" - என்று பொருள் படக் கூவிய அவர்களுக்கும் சக்களத்தியாக விருந்தாலும் - பகவத் பிரேமையில் விதிவிலக்கில்லாமல் - நப்பின்னையும் இவர்களுக்கு கிருபை செய்கிறாள் - தானும் அவர்களுடன் கூட ஆனந்த மடைய சம்மதிக்கிறான், இதை நம்மாழ்வார் திருவாய்மொழியில் "உன் தன் திருவுள்ளமிடர் கெடுந்தோறும் நாங்கள் வியக்க இன்புறுதும் எம் பெண்மையாற்றோம், - அதாவது கண்ணா, உனக்கு அபிமதைகளாக இருப்பவர்களோடு நீ பிரிந்து - உன் திருவுள்ளத்திற்கு அனுகூலர்களாவோம், எங்களுக்கு கண்ணா, நீவேறு சிலரோடு ஸம்ஸ்லேஷிக்கப் பொறுக்கமாட்டாத - ஏகாந்த போகமாகிற - பெண்மை வேண்டாம் என்பதாம்.

ஆகவே நப்பின்னை மனம் உருகி - தன் கையை கிருஷ்ண அணைப்பிலிருந்து நெகிழவிட - இதைக் கண்ட ஆயர் சிறுமிகள்- பந்து ஆர் விரலி - (நப்பின்னையின் தனங்களின் நேர்மையையும், விரல்களில் மலர் மாலைப்போன்று ஆரத்தழுவிக் கொண்டிருந்த கைகளின் விரல்களையும் - சேர்த்து ஒருங்கே - விளித்ததாம் - உன்மைத்துனன் (கண்ணவனுன கண்ணனுடைய) பேர் பாட (புகழ் கீர்த்திகளை நாங்கள் பாட நீயும் சேர்ந்து கொள்ளலாம்) சீர் ஆர்வளை ஒலிப்ப - (ஒலிக்க) வந்து (நடந்து வந்து) (உன்) செந்தாமரை கையால் மகிழ்ந்து (மகிழ்ச்சியுடன்) (தாள்) திறவாய் - ஏல் ஓர் எம்பாவாய் - என்றனர்.

தோள் கண்டார், தோளே கண்டார் தாள் கண்டார் தாளே கண்டார், (அதுபோல) தடக்கை கண்டாரும் அஃதே (அந்த அனுபவதசையில் மூழ்கிவிட்டனர்) - என்று யார் சொன்னார்கள் - வாள் கொண்ட கண்ணார் - ஐயனின் வடிவினை முடியக் கண்டார். யாரோ? - "முடிய" - என்கிற பதம் ரசோக்தியுள்ளது, வாளுக்கும் கண்களுக்கும் பார்க்கும் நபருக்கும் பொருந்தும் திருமேனி அழகின் முடிவு "பூராவையும் பார்க்க முடிந்ததோ - வாள் போன்ற கண்கள் உள்ளவர்களுக்கும் முடியாது, அவர்களே முடிந்து போவார்களையன்றி - அழகின் முடிவை அவர்களால் காண முடியாது, அத்தகைய கிருஷ்ண சௌந்தர்யம் அதி ஆழ முடையாது. தம் நிலையை மறந்து ஏக மயமாகினர், என்று சொல்வது பொருந்தும். அதுபோல நப்பின்னையும் மகிழ்ந்து செந்தாமரைக்கையால் கதவைத் திறந்து - எங்களையும் கிருஷ்ணனுபவம் செய்யவிக்க வேண்டும்

என்று விண்ணப்பம் செய்தனர். குயில்களைக் கூவச் சொன்னது- தூங்குகிற குயில்களையும் இவர்களுடைய ஆர்த்திகனத்தினால் எழுப்பி - கூவச் செய்கிறார்களே கூவாது போது இவர்கள் நம்மை துரத்திவிடுவார்கள் என்று பயத்திற்கு அஞ்சி கூவச் சொல்லுகைக்கு கூலி தந்து - கூவச் செய்தார்கள் என்று நப்பின்னை தனக்குள் நினைந்து மகிழ்கிறாளாம்! மீண்டும் அவர்கள் பந்தார் விரலி - என்று தன் பெருமைகளை அவர்கள் வாயினால் சொல்லும்படி கேட்க - மீண்டும் - உன் செந்தாமரைக் கைகளால் - சீரார் வளை ஒலிப்ப - வந்து மகிழ்ந்து திறவாய் - என்று சொல்வதைக் கேட்டாளாம், இது ஒருஓடும்கவிச் சித்திரமாக விருக்கிறது. நீயும் கிருபை செய்து கிருஷ்ண ஸம்ஸ்லேஷத்தை எங்களுக்குக் கிட்டுமாறு அனுக்கிரஹிப்பாய்.

இப் பாட்டு எம்பெருமானார் விசேஷித்து உகந்தருளின பாட்டு என்று வைஷ்ணவ முதலிகள் மிகவும் ஆதரித்துப் போவாராம், ''திருப்பாவை ஜியர்'' என்கிற பெயருக்கு யேற்ப - இவர் தினமும் திருப்பாவை அனுஸந்தானத்துடன் வீதியில் பிக்ஷைக்குச் செல்லுவாராம், ஒருதினம் - பெரிய நம்பி திருமாளிகைக்கு எழுந்தருள - அப்போது அவரது பெண் அத்துழாய் பிட்சை எடுத்துவர - அவளைக் கண்டவாறே மூர்ச்சித்து விழ - அத்துழாய் பெரிய நம்பி பக்கலிற் சென்று ''ஐயா - திறந்து சென்றேன் - என்னைக் கண்டவுடனே ஜீயர் மூர்ச்சித்துக் கீழே விழுந்தார்'' என்று சொல்ல – நம்பி ஸர்வக் ஞ ராகையாலே - உந்து மதகளிறு அனுஸந்தான மாயிருக்கலாம்'' என்று சொல்ல; அத்துழாய் - ''அதனால் ஆவது என்ன?'' என்று கேட்க; ''நீ செம்தாமரைக் கையால் சீரார் வளை ஒலிப்ப வந்து, கதவைத் திறந்தாய் அல்லவோ - பாசுரத்தில் அவர் இந்த விடத்தை அனுஸந்தானம் செய்ததும், நீ கதவைத் திறந்ததும்- ஒன்றாகிவிட - அவர் மூர்ச்சித்தாராம் காண் - என்று நம்பி அருளிச் செய்தாராம். ஆகையால் இந்தப் பாட்டு எம்பெரு மானாருக்கு மிக்க உகந்த பாசுரம்'' - என்று நம் முதலிகள் ஆதரிப்பர். அதாவது நப்பின்னையே அத்துழாய் வடிவாக வந்து கதவைத் திறந்ததாக பாவனை செய்தாராம்.

ஆறாயிரப் படியில் - பந்தார் விரலி - படுத்திருக்கும்போது கூட - பந்தை ஒரு கையாலும் - கிருஷ்ணனை ஒரு கையாலும் அணைத்துக்கொண்டு கிடப்பள் நப்பின்னை - கிருஷ்ணன் போ கோப கரணம் - பந்து லீலோப கரணம். அவன் செண்டை ஒரு கையிலும் நப்பின்னையை மற்றொரு கையாலும், அணைத்துக்

கொண்டு கிடப்பன், போக்யம் ஒரு கையில், போகஸ்தானம் மற்றொரு கையிலே - ஆய்ச்சிகள் தங்களுக்குள் இந்தக் காட்சியைக் கண்டதும் சொல்லிக் கொண்டார்களாம், ''நாங்களும் அசேதனமாகி - பந்தாகவும் - செண்டாகவும் இருக்க மாட்டோமா - உங்கள் விளையாட்டுக்களைப் பார்த்து நாங்களும் ஆனந்தமடைவோம்'' என்று நினைப்பவர்களாக - இதை ஸர்வக்ஞையாகிற நப்பின்னைப் பிராட்டி - உணருககூடுமாதலால் - அவளை - ''செம் தாமரை கை கொண்டு தாள் திறவாய்'' என்று கெஞ்சினுர்கள் எனக் கொள்வதாம்.

கை மாசுச: என்று சொல்லும் கை பார்த்திருப்பார்களோ? நாங்கள் - பவேயம் சரணம் ஹிவ:- என்று கை பார்த்திருக்கிறவர்களன்றோ? ஈஸ்வர ஸ்வாதந்திரியத்திற்கு பற்றி அஞ்ச வேண்டாம்:-இவளுடைய கை அஞ்சேல் என்பதாம்! அவனும் அதாவது ஆசைப்படும் கையிறே!

சீரார்வளை - விஸ்லேஷ வ்யஸனமடையாத - அனுப வியாதவளை- ''ஒண்டொடியாள் திருமகள்! நாலடி எங்களுக்காக நடந்து வந்து கதவு திறக்க வேண்டும். நாங்களும் உன் நடையழகைக் காண வேண்டும். மகிழ்ந்து - பேறு உன்னுடையதாக வேணும்.''

**பிராட்டியின் புருஷ காரம்** ஸத்ஸஹவாசம், நல் நடத்தை-ஸதாசார்யசம்பந்தம் இவையிருந்தால் பிராட்டி சேதனனை எம்பெருமானிடம் சேர்த்து வைப்பாள், பெரிய பிராட்டியாரே புருஷகாரமாக விருப்பதாம். இது மோக்ஷார்த்தமாக, மற்ற பலன்களையடைய - வேறு புருஷகாரமும், கூடும், ஆயினும் ஸ்ரீ வராஹ அவதாரத்தில் பூமி பிராட்டியைப்போல - கிருஷ்ணவதாரத்தில் அவன் கோகுலவாசம் செய்தபோது - செய்தவரை நப்பின்னைப் பிராட்டியே அந்தரங்கமானவள் என்பது ஆழ்வார்கள் இசைந்ததாம், இவள் நீளாதேவியின் அவதாரமானபடியால் - இது யுத்தமாம், யாதவாப்பு- 91 - உத்தமூர் ஸ்வாமி வ்யாக்யானம் 113ம் பக்கம் பார்க்க) ஆராதனத்திற்கு முன்பு ஆசார்யார் - அனந்த கருட விஷ்வக்ஸேனதிகளைப் பள்ளி உணர்த்தினபிறகு - எல்லாப் பிராட்டிமார்களையும் பள்ளியுணர்த்துவது.

இவ்விதம் எழுப்பியும் நப்பின்னை எழுந்திருக்கவில்லை. கண்ணனும் எழுந்திருக்கவில்லை, அவர்கள் உள்ளே எட்டிப் பார்க்க- அந்த காட்சிலே மெய்மறந்து போய் - கண்ணனையும் நப்பின்னையையும் சேர்த்து எழுப்புகிறுர்கள்.

(ஸ்ரீமத் ஆண்டவன்) ஓடாத தோள்வலியன் – ராமன் கிருஷ்ணன் - இரு அவதாரங்களையும் குறிக்கும். ஸ்ரீராமானுஜர் தெருவில் திருப்பாவை பாடிவந்தபோது, பெரியநம்பியின் குமாரத்தி அத்துழாய் கதவு திறக்க; அவள் நப்பின்னையோ, என்று தடுமாறி மூர்ச்சித்துப் போனார். அதனால் அவருக்கு "திருப்பாவை ஜீயர்" என்கிற நாமம்.

புருஷகாரபூதை—ஈஸ்வரனை புருஷனாக்குகிறவள். அதிகமாக ஆனந்தத்தைத் தருபவள். சேதனனுக்கு பகவானை ரக்ஷகனாக ஆக்குகிறவள். விமுகரான சேதனனை பகவத் அபிமுகமாகப் பண்ணி, பகவானிடம் "இவன் ரக்ஷிக்கத் தகுந்தவன்" என்று தகவுரை கூறுபவள். பிராட்டியின்றி அவன் அசையமாட்டான். சரணாகதி கத்யத்தில், ராமானுஜர் பிராட்டியை முதலில் சரண மடைந்து, "தமக்கு நிஷ்டை கைகூடவேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

பிராட்டி எம்பெருமானின்-அபின்னசக்தியே-நீயே பகவானை மறைக்கும் புருஷார்த்த விரோதிகளான கதவை நீக்குவாய். புழுதி படிந்திருந்த கண்ணனை:—நாணெத்தனையுமிலாதாய் நப்பின்னை காணிற் சிரிக்கும்! .. மஞ்சன மாடவாராய். (பெரி. திரு. 2-4-9); நப்பின்னை கிருஷ்ணாவதாரத்தில் முக்கியம். லீலா விபூதி— பந்து; நித்யவிபூதி கண்ணன். பந்துஆர்விரலி—பந்துபொருந்திய விரலையுடைய நப்பின்னை. பரகால ஜீயர் தோள்வலியன் என்பதற்கு "வத்ஸராம பஸ்யதனும்"—

நம்மாழ்வார்—கன்மமன்றெங்கள் கையில் பாவை பறிப்பது கடல் ஞால முண்டிட்ட நின்மலா நெடியாய் உனக்கேதும் பிழை பிழையே! (திருவாய்மொழி)

வேரி மாராத பூமேலிருப்பாள் வினைதீர்க்குமே வினை— ஸமஸ்த துக்கங்களைப் பிராட்டி போக்குகிறாள். ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்க—பண்டைநாளாலே நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளும் அதேபடி. தாமரை மங்கையும்— நீயும், 9-2-3. 9-2-1. தேசிகனின் மும்மணிக்கோவை —நவமணி மாலை இத்யாதி ஸ்மரிப்பது. பராசரபட்டர்: - லக்ஷ்மியைச் சேவித்துச்தான் பெருமாளை யடையவேண்டும் என்றார் (क्लिन्दत्— किरीय: கோழி அழைத்தன:—கோழிகுப்பையைக் கிளறிப் பொறுக்கிச் சாப்பிடும்; பாகவதலக்ஷணம் சொல்லப்பட்டதாகும்- பட்டரின் சீடர் அனந்தாழ்வானோடு தங்கி, இந்த ரஹஸ்யத்தை

உணர்ந்தார். ஆரம்பத்தில் சிறப்பாக உபசரிக்கப்பட்டு, நாளடை விலே அவரைத் தாழ்த்தித் தாழ்த்தி சாதாரண விருந்தினராக உபசரிக்கப்பட்ட போது அந்த சீடர் மனம் தளராமல், ஏற்றுக் கொண்டு விடை பெற்றுக் கொள்ளும் போது, ஆழ்வானால் ஸ்ரீவைஷ்ணவனின் லக்ஷணம் சொல்லப்பட்டது—அதாவது.

கொக்கைப் போல் இருப்பான்

கோழி போல யிருப்பான்

உப்பைப் போலே இருப்பான்

உம்மைப் போல இருப்பான்—என்றார் அனந்தாழ்வான் பட்டரின் சீடரிடம்.

கொக்கு அற்பமீன்களைத் தியாகம் செய்து, பெரிய மீன்களைப் பிடிக்க—ஒரே தியானமாகவிருக்கும். வைஷ்ணவனும் தனக்கு ஆசாரியனைத் தேடுவதிலும் தோழமை கொள்ளப் பாகவதரை நாடுவதிலும், யோகி போலவும், கொக்கைப் போலவும், நடந்து கொள்வான். கோழியைப் போல ஸ்ரீவைஷ்ணவன் வேதசாரங்களை கடைந்து எடுத்த பொன்னுக—(அமுதமாக) ஆசார்யர்களின் நூல்களைச் சிறப்பாகக் கற்று அதன்படி ஒழுகுவான் என்கிற கருத்து.

மாதவிபந்தல்—உபநிஷத்துக்கள்.

குயில்கள்—நாதமுனி போன்ற ஆசார்யர்கள்.

---

குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்சசயனத்தின் மேலேறிக்
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக்கிடந்த மலர்மார்பா! வாய்திறவாய்
மைத்தடங் கண்ணினாய்! நீ உன் மணாளனை
எத்தனைபோதும் துயிலெழவொட்டாய்காண்
எத்தனையேலும் பிரிவாற்ற கில்லாயால்!
தத்துவம் அன்று தகவேலோ ரெம்பாவாய், (19)

இவர்கள் பன்முறை கூவியும் - கிருஷ்ணனுடைய ஆலிங்கனத்தினால் கெட்டியாக இறுக்கப்பட்ட நப்பின்னை வந்து திறவாமலிருக்க - ஆயர் சிறுமிகள் கண்ணனை எழுப்புவதற்கு சொல்லும் பாசுரம் – "ஆஸ்ரிதர்களை வாழவைக்கவே அவதரித்த நீ எங்களை சோதிக்கலாமா? - என் அடியாரீ அது செய்யார், என்று வாதாடுபவனுன நீயும்" - "நகச்சிந்நாபராத்யதி" என்று அறிவுறுத்தும் நீயும் - நப்பின்னையை நோக்கிச் சொல்வது - இருவரும் இப்படிச் செய்யலாமா " என்கிறார்கள். கிருஷ்ணனுடைய அபிப்ராயம் - நம்முடையார்க்கு இவள் (நப்பின்னை) முற்பட்டாளாக வொண்ணுது - நாமல்லவோ முற்படக் காரியம் செய்ய வேண்டும் என்று சொல்லுமாப்போலே, நப்பின்னையை இறுகத்தழுவி - அதனால் தானும் மயங்கி, அவளைப் படுக்கையில் விழவிட்டு – இவர்களை மறந்து விட்டிருக்கும்போது – "இது தகவலே கண்ணு - உன்னையே நம்பி வந்திருக்கும் எங்களை நலிய வைக்கலாமா?" என்று சொல்கிறார்களாம். இங்கு சுவாரஸ்யம் தெரிய வேண்டும். புருஷகார பூதையான பிராட்டிதானே சித குறைக்கிலும் (தவறு சொல்லிடுனும்) அவளோடே மறுதலைத்து நின்று ஆஸ்ரிதரை ரக்ஷித்தருளும் பெரிய பெருமாள் குணத்தை அருளிச் செய்து பின்பு அவளையும் க்ஷமை கொள்ளும்படி வேண்டி - இருவர்களையும் பிரார்த்திக்கிறார்கள். இதனுல் பெரிய பெருமாளின் ஆஸ்ரிதற்பக்ஷம் பக்ஷபாதத்தைச் சொல்லியது, அடியார் - சேஷியும் உபேயமும்-உபேயமும் தானுகப் பற்றினவர்களை - ஒரு மிதுனம் சேஷியானுல் "தம் அடியார்" என்பதில் தன் அடியார் என்பதற்குள்ளே தானும் அந்தர் பூத மாகையாலே - அவன் ஸ்வரூப ருபகுண வீபூதியித்தனையும் இவள் தோயல் வாசியிறே யென்னுதல். அந்தர் பாவம் தனக்குமுண்டாகையாலே. இவளுடைய புருஷனை, பலத்தினுல் - ஈஸ்வரன் தன் ஸ்வாதந்தரியத்தையும் இவர்கள் அபராதத்தையும் சாஸ்திர மரியாதையையும மறந்து பொறுத்தேன் - இவன் பொறுத்தது எதற்காக சேதனனுக்கா? தன் போகத்திற்காகவா? நமக்காகவோ? என்று ஆராய்கைக்கு, அதற்காக சித குரைக்கத் தொடங்கினுல் - இவன் சொல்வானும், "என் அடியார் அது செய்யார்" ஸ்வதந்திரரும் அந்ய சேஷபூதரும் செய்யும் தவற்றை "என் அடியாரும செய்வார்களோ?" அப்படி செய்தார்கள் என்று நீ (பிராட்டியை) நிர்பந்தித்தாயாகில்-அவர்கள் என் அடியார்கள் என்று வாதாடுபவனும். செ லு அப்பாலே, அதாவது ஆஸ்ரயணத்துக்கு முன்பு அவள் வாதாடும்; பின்பு அவன் வாதாடுவான். செய்தாரேல் நன்று செய்தார், நாம் நெஞ்சாலே பொறுத்து - இவனுக்கு முகம் கொடுத்துக்கேட்கில் - இவள் இன்னமும் குறை

சொல்லக்கூடும் என்று வாய்திறந்து அருளிச் செய்வர். அது எவ்விதம்? அதற்கு விபீஷண சரணாகதி உதாரணம். சுக்ரீவன் குற்றமுண்டு என்றான், குற்றமில்லை என்று சொல்லிய திருவடி இளைய பெருமாளையும் பூர்வபக்ஷமாக்கி - அவர்களின் அபிப்ராயத்தையும் தள்ளி - குற்றமுண்டு - ஆனாலும் நான் கைக் கொள்ளக் கடவேன் - தோஷோயத்யபிஸ்யாத் - என்றான் பெருமாள். சிதகுறைக்கும் சுக்ரீவ கோடி. என் அடியார் அது செய்யார் என்றது திருவடி இளைய பெருமாள் கோடி, சித குரைக்கை - புருஷகார கர்த்யம் (செய்கை) அடியார் அது செய்யார் என்றது சரணாகத கர்த்யம். நன்று செய்தார் என்றது சரண்ய (பெருமாள்) கர்த்யம். பகவானைத் தவிர வேறு ஒருவருக்கும் ஆளாவரோ? ஆகையாலே பிராட்டியும் "நன்று செய்தார்" என்று மன்றாடினார் பெரிய பெருமாளுரையுமிருந்ததிறே!

கஸ்சித்நாபராத்யதி - அடியவரை ஆட் கொள்வதே பகவத் தர்மம்—ஸ்வரூபசித்தி - யாருக்கு? எப்படி? ஆட்கொள்ளுகையாலே சேதனனுக்கு அடிமைசெய்து ஸ்வரூபம் பெறும் அவன் (பெருமாள்) அடிமை கொண்டு (ஸ்வீகரித்து) ஸ்வரூபம் பெறும். சேஷ பூதனுக்கு ஸ்வரூப சித்தி கிஞ்சித் காரத்தாலே யானப்போலே, சேஷிக்கு ஸ்வரூப சித்தி கிஞ்சித்கார பிரதிஸம் பந்தியாகையாலே யிறே (மணவாளமாமுனிகள் - பெரியாழ்வார் திருமொழி-4-9-3) நகஸ் சிந்நாபராத்யதி-என்பதில் அவள் கடாக்ஷமும் பெற்று - க்ருபயா பர்யபாலயத் - என்று கிருபாபரதந்திரனை பகவானுடைய கடாக்ஷமும் - அப்பாரதந்திரி தியத்துக்கு அடியான பிராட்டியின் கடாக்ஷமும் என்றுமாம். பங்கயத்தாள் திருவருளும் - பகவானுடைய ஸ்வாதந்தர்யத்தைத் தவிர்க்குமவள் அருளும் படியாக வந்தது. அவள் அருகே யிருக்கும்போது, ஸ்வாதந்திரியம் ஜீவியாது, அவனுடைய பாரதந்தர்யம் பிராணயித்வ மன்றோ? நிலை நிற்குமோ என்கிற பயம் வேண்டாம், ஸ்வாதந்திரியமே யன்றோ பிரகிருதி - ஆகவே முற்கூற்றால் அவள் புருஷகாரமாகப் பற்றுகிறது. பிராட்டி புருஷகாரத்தினால் பகவத் பிரஸாதம் பெறலாம் என்பதே.

இவ்விதம் விண்ணப்பம் செய்யப்பட்டதும் அவர்கள் கதவிலிடுக்கின் வழியே உள்நோக்க - குத்து விளக்கு எரிய - அதன் வெளிச்சத்தின் உதவியினால் கிருஷ்ணனுடைய மஞ்சத்தைப் பார்க்கிறார்கள், அந்தக் கட்டிலின் நான்கு கால்களும் யானைத் தந்தங்களினால் செய்யப்பட்டது, அதன்மேல் மெத் தென்ற பஞ்ச சயனம் ஐந்து குணங்கள் கொண்ட படுக்கை -

மென்மை, வெள்ளை, அழகு, குளிர்ச்சி - பரிமளம் அதன் மீது ஏறி - கொத்தலர் (கொத்தாக அலர்கின்ற) பூக்களை அணிந்த கூந்தலை உடைய நப்பின்னையின் கொங்கைமேல் (திருமுலைத் தடங்களை தன்மேல்) வைத்துக் கிடந்த மலர் மார்பனைக்கண்டு -மலர் மார்பா - என்று அழைத்து - வாய் திறவாய், ஒரு மாற்றம் வாய் திறந்து சொல்வாய். " கண்ணா-இது தகவலை" கிருஷ்ணன் என்றால் பெண்களுக்கு தன்னது ஆகவிருக்குமென்று பிரஸித் தமிரே. "பெண்களுக்கு ஸ்வம்மான நீ நிர்த்தயனாக விருக்கிறாயே- உனக்கு இது சரியில்லை, எங்களோடு விரோதித் தாரைப் போல நலியச் செய்யலாமா?" என்று கேட்க; அப்போது அவனும் பேசாமலிருக்க - மைத்தடங் கண்ணினாய் - நப்பின்னையே - நீயும் உன் மணாளனை எத்தனை போதும் (ஒரு நொடிப் போதும்) துயல் எழ ஒட்டாய் - படுக்கையை விட்டு எழ சம்மதிக்க மாட்டாய், காரணம், அவதாரிகையில் படுக்கையை விட்டு எழுந்திருக்கப் போன நப்பின்னையை, கீழே தள்ளி அவள் எழுந்திருக்கா வண்ணம் அவள் கொங்கைமேல் பள்ளி, கொண்டவனாக வன்றோ சொல்லப்பட்டது. அதனால் அந்த கிருஷ்ணனை "மலர் மார்பா அவளை விட்டு விடுவீர். அதற்கு முன்பு வாய்திறவாய் - ஒரு வார்த்தை சொல்லவேண்டும்." அதே சமயம் "மை தடங் கண்ணினாய் - அஸிதேக்ஷணா - குவளைக் கண் கொண்ட நப்பின்னாய் - நீயும் உன் மணாளனைப் பிரிய வொட்டாமல் பிரிய ஆற்றஇல்லாய் - பிரிந்து தரித்திருக்க வல்லை யில்லை-ஆல் - தகவு அன்று- உன் ஸ்வரூபத்திற்கு தகுதியில்லை. தத்துவம்; அன்று தகவு - நாங்கள் உண்மையையே சொல்கிறோம் - இப்படி உபேக்ஷிப்பது தகவு அன்று. வேறு விதமாகவும் சொல்லலாம் தகவு-தத்துவ அன்று உனக்கு நீர்மை - தயை உண்டு என்பது உண்மையில்லை - உடனே திறக்கவும் என்று இருவரையும் ஐக்ய மிதுனமாகச் சேவித்துக் கேட்கிறார்கள், இதென்ன ஐஸ்வர்யம் - இதென்ன பாக்யம் - ஒரு குத்துவிளக்கு பிரகாசகமான விளக்காயிருக்க வேண்டும் - இதனால் ஸ்வயம் பிரகாசம் - பரபிரகாசம் என்று இரண்டும் தோன்ற, பிரபை தன்னையும் காட்டி ஆதித்யனையும் காட்டுவதுபோல - நப்பின்னையையும் கண்ணனையும் காட்டித் தந்தது - திகழ்கின்ற திரு மார்பில் திருமங்கை தன்னோடும் காட்டித் தந்தது.

எப்படியிருந்தனர் இருவரும்? கூச்ச மறப்படுக்கையில் கிடந்தனர். கோட்டுக்கால் - குவலயாபீடத்தின் தந்தத்தினால் பண்ணப்பட்ட கட்டிலை - தந்தத்தைக் கடைந்து எடுத்துச் செய்த கட்டில், வீரபத்னிக்கு அவைரதமும் நாயகனை அணையும்போதும் -

பர்த்தாரம் பரிஷ்ஸ்வஜே - பெருமாளுடைய வீரக் கோலத்தைக் கண்டு - ஆண் என்று அணைத்துக் கொண்டாளாம் சீதை. மற்றைப் போது ஸ்திரியம் புருஷ விக்ரஹம் என்று யிருப்பவள்.

பஞ்சசயனம் - ஐந்து விதமான சிறப்புள்ள படுக்கையின் மேல் ஏறி-பர்யங்க வித்யையில் சொல்லப்பட்ட படுக்கை, முக்தாத்மா ஏறும்போது, அவன், பெருமாள் "நீ யார்?" என்று கேட்க, இவன் (ஜீவன்) "அஹம் பிரும்மாஸ்மி" என்பான். "பிரும்ம பிரகார பூதன் நான்" என்றபடி, இந்தப் பெண்களும் அத்தை யல்லவோ கணிசிக்கிறது. அது மாத்திரமா, நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய -விட்டு விட்டு, மதுராவில் அவதாரம் செய்தவனின் படுக்கை.

அந்த மென் படுக்கை கொத்தலர் பூங்குழல், நப்பின்னையின் பூங்குழல், அவளுடைய கொங்கை மேலே வைத்துக் கிடந்த- கேசவனையும் (நன்றாகக் கருமையடர்ந்த கேசமுள்ள கேசவனையும்) பிச்சேற்ற வல்ல குழலையுடையவள். மலர் மார்பு-முலையைப் பற்றி அவன் கிடக்கும். மார்பின் மாலையைப் பற்றி இவள் கிடக்கும்! இவள் முலை பரப்பெல்லாம் ஒரு மூலைக்குப் போராதபடி - அகன்ற மார்பை யுடையவனே. பெரியவரை மலைபோன்ற மார்பல்லவோ! முற்றுராவன முலையாள் அகலத் துள்ளியிருப்பாள். மார்பில் அமர்ந்திருக்கும் மாலை - நப்பின்னையின் திருமுலைத் தடங்க ளூறுத்தும்படி அணைத்த ஸ்பரிச சுகத்தாலே பூ அலருமாப் போலே, விகஸிதமான மார்பையுடைய கிருஷ்ணன். நித்யாநபா யினியாய் இருக்கிறவளுடைய ஸம்ஸ்லேஷத்தால் வரும் விகாரம் இல்லையன்றோ?

வாய் திறவாய்-மார்பை நப்பின்னைக்குக்கொடு. எங்களுக்கு உன் பேச்சையாவது கொடு. அவன் வாயினால் சொல்ல நினைக்க-நப்பின்னை அவனது கழுத்தைக் கட்டி அமுக்கிக்கொண்டு கிடந்தாள்.

அதனால் அவளை சந்தோஷிப்பிக்க, மைதடங் கண்ணினாய்- கண்ணாலே கிருஷ்ணனுக்கு ஜாடை செய்யாதே, நாங்கள் மையிட்டு எழுதோம்-அதனால் எங்களையும் மையிடப் பண்ண வேண்டியது உனது கடமை. தடங்கள் - இக் கடலைக் கரை கண்டலே அவன் நம்மைப் பார்ப்பது!

நீ உன் மணாளனை-பரஸ்பரம் பிரியம் கொண்டிருக்கும் உங்க ளுக்கு, பேறு எங்களுக்கு—உன்னாலே யாக வேண்டியபடியால்- மேலாக பர்த்தாரம் என்கிற நாட்டுப் பொதுவை நீயே தனித்து புஜிக்காமல், எங்களுக்கும் அனுக்கிரஹம் செய்ய வேண்டும்-கோல மலர்ப் பாவைக்கன் பாகிய அவனும் அவ் வழியையே உகப்பான்,

எத்தனை போதும் துயிலெழ வொட்டாய் காண்-க்ஷண காலமும் ஸம்போக நிமித்தமாக அவனைக் கட்டின கை நெகிழ்க்க மாட்டாய். எத்தனையேலும் ஆற்றகில்லையால்-உனக்காக அன்றோ, எழுந்திருக்காமலிருக்கிறான், நாங்களும் உன்னோடு சேர்ந்து அவனைப் பணி செய்வதற்கு நீ சம்மதிக்கையில்லையேல். தத்துவம்- உண்மையே பேசுகிறோம். தகவென்று இது மெய்யே, தர்மமன்று, கிருபையன்று பரமார்த்தமன்று. நீயும் தவறு செய்திடாமல் அவனை எங்களுக்கு அளிக்க, நீர்மையாலே வர வேண்டும் சரணம் கத:'' என்றனர்கள். உன் ஸ்வரூபத்திற்குயேற்ப - ஸ்வபாவத்துக்கும் சேரும்படி, புருஷகாரமாய் நின்று சேர்ப்பாருடைய ஸ்வரூபத்துக் கும் ஸ்வபாவத்திற்கும் தகுந்தாற் போல - அகில ஜகந்மாதரம். அசரண்ய சரண்யாம் - தேவ தேவ திவ்ய மஹிஷிம் — இப்படி புகழப்பட்ட உன்னை நாங்கள் சரணமடைகிறோம்'' என்றார்கள் ஆய்ச்சிறுமிகள். தத்வமன்று - உன் ஸ்வரூபத்துக்கு (கிருபைக்கு) ஸ்வபாவத்துக்கு (புருஷகார பாவத்துக்கும்) போராது-சரியாகாது.

பட்டர் தனியன் நீளாதுங்கஸ்தனகிரி தடீ ஸுப்த முத் போத்ய கிருஷ்ணம் - நப்பின்னையின் உயர்ந்த மலைபோன்ற முலைத் தடத்திலே உறங்கினவனுன கிருஷ்ணனை உத்போத்ய எழுப்பி, சுருதிசதசிர. நூற்றுக் கணக்கான வேதங்களின் முடியான உபநிஷத்துக்களிலே ஸித்தமான தனது பாரதந்திரியம் சேஷத் தன்மையை அத்யாபயந்தி அறிவிக்கின்றவளாய்-பலாத் கிருத்ய ஸ்வ உச்சிஷ்டாயாம்ஸ்ரஜி (தன்னால் ஆடப்பெற்ற பூமாலையிலே) நிகளிதம் (விலங்கிடப்பட்ட அந்த பரமனை) புங்க்தே அனுபவிக் கின்றாள் - தஸ்யை - அந்த பிராட்டியின் பொருட்டு இதம் இதம் நம: பூய ஏவபூய: அஸ்து - இது தனியனுக்கு முதலடியாயிற்று, வேதங்கள் கிருஷ்ணனை ''பதிம் விஸ்வஸ்ய'' என்று சொல்லுவது போல - கோதா - உன்னையும் ஸர்வ சேஷியாகவும் சொல்லு கின்றன. தேசிகரின் அபிப்ராயம் ஆண்டாள் பெரிய பிராட்டி யின் ஓர் அம்சம். பூமியைப் பிளந்து எழுந்தவளாதலால் - கோதா - பிரபந்தம் எவ்வித மிருக்க வேண்டுமென்று வழி வகுத்தவள் - அர்ச்சையிலுள்ள எம்பெருமானும் தானிட்டபடி நடந்து கொள்ளும்படி செய்தவளாதலால் - ஆண்டாள் - ஆழ்ந்தாள் எனப்பொருள் படவும் - என்று அழைக்கப்படுபவள். இவளை சாஸ்திரங்களிலே பிரணமம் செய்வதுபோல - நாமும் எல்லாப்பிரணமங்களையும் செய்வோம் என்கிற கருத்து. பிராட்டிக்கு மூன்று லக்ஷணங்கள் உண்டு - புருஷகாரத்வம் - உபாயம்-உபேயம். அவைகளே இவளுக்கும் பேசப்படுகின் றனவாம்!

குத்து விளக்கு-ஸ்வபிரகாசம் பரப்ராகாசம்போல நப்பின்னை குத்து விளக்காய் தன்னைப்போல எங்களையும் பிரகாசிக்கவைப் பாள். அவள் உடனே வராமலிருக்க-வேறு ஒரு புருஷகாரம் வேண்டு மோ - கிருஷ்ணு என்றார்கள். மலர் மார்பா - என்பதால் மலர் மங்கை உறைந்திருப்பதால் மலர்ந்த மார்பானது - இவளது கொங்கைமேல் அவளையும் சேர்ந்திருப்பதாலே - மார்பு மலர்ந்து விட்டது. கொங்கையை தன்மேல் வைத்துக்கிடந்த மார்பனே எனப் பொருள் - நீளா துங்கஸ்தனகிரிதடீஸுப்தம், அவள் கொங்கை மேல் இவன் தலை வைத்துப் படுப்பானும், மார்பையும் வைத்து என்பதாம், எத்தனை போதும், இரவு முழுவதும் சேர்ந் திருந்தும் பகலிலும் பிரியலாகாதோ? தயையே புருஷ காரத்வம் இப்படி பேசாமலிருப்புதகவன்று (தகுதியில்லை). தத்வம் அன்று தகவு புருஷகாரத்தவம் என்கிற ஸ்வரூபமில்லை. அனுக்ரஹம் எனப் படும் சரண்யத்வம் என்கிறதாகவும் அன்று. சரண்யத்வம் என்பது உபாயம். இரண்டு பேர்களுக்கும் பொதுவானதால்-இருவருக்கும் தகவு அன்று, இருவர்களும் எங்களுக்கு சரணை. ஸ்வரூபஸ்வ பாவ விருத்தம் எப்படி? மணாளனை-வேங்கடம் போன்ற பல விடங் களில் அர்ச்சையாக யிருக்கும் பெருமாளை விட்டுப் பிரியவிடாமல் எங்களைக் காப்பது உனது கடமையாதலால் - ஸ்வரூபமாதலால் அவனைத் தூங்க விடுவது-சரியோ? இருவர்களையுமே சேர்த்து அனுஸந்தித்ததனுல் இருவரையுமே சரணமடைந்து பேறு அடைய வேண்டும். நப்பின்னையையும் கிருஷ்ணனையும் சேர்த்து இருவர்களையும் பிராப்யமாக வேண்டுதலாம்.

**உட்பொருள்:**—ஆசார்யன் கோட்டுக் கால் மாதிரி நான்கு புருஷார்த்தங்களைச் சொல்பவர். அல்லது ஞானம் இச்சை பிரயத்னம், லீலாரஸத்தை அனுபவிக்க போக்யதா புத்தி. பரமாத்மா அக்ஷரன் - முக்தர்களைக் காட்டிலும் பெரியவன்- ''எங்களைப் பெருமாளிடம் சேர்த்து வைக்க வேண்டும்-தயா மூர்த் தியே எங்களை விடக் கூடாது'' என்றனர்-இருவர்களையும் நோக்கி.

---

**ஸ்ரீ மதாண்டவன்:—**

முந்தின பாட்டில் நப்பின்னையைப் பாடி—சீர் ஆர்வளை ஒலிப்ப செம்தாமரைக் கையால் மகிழ்ந்து கதவைத் திறவாய் என்று ஆண்டாள் வேண்ட; அவள் எழுந்திருக்க; அவளை இறுகக் கட்டிக்கொண்டு, அவளைத் திறக்க வொட்டாணுதபடி கண்ணன் தடுக்க— ''இவள் நம் அடியாருக்கு முற்படுவதா?'' என்று அவளைக் கட்டியணைக்க; கோபிகைகளுடன் கூடிய ஸ்ரீ ஆண்டாள் இருவர்களையும் சேர்த்து எழுப்புகிறார்கள்,

குத்துவிளக்கு— ஞானம் பிரகாசமாவது ஞானவிளக்கு பிரகாசமடைதல். கட்டிலுக்கு நான்கு கால்கள், அதுபோல கர்மஞானம் பக்தி பிரபத்தி எனப்படும் உபாயங்கள் நான்குவிதம். பஞ்சசயனம் -- ஆத்மாவும், சதுர்வித புருஷார்த்தங்களும். நான்கு ஆஸ்ரமங்கள், நான்கு வர்ணங்கள்; ஞானத்திற்கு கர்த்தா பெருமாள். பகவானின் ஐந்து வடிவங்கள் அவை - பர, வ்யூஹ, விபவ, அர்ச்சை, அந்தர்யாமி. (திருவாய். 8-8-1) கண்கள் சிவந்து பெரியவாய் வாயுஞ் சிவந்து கனிந்து உள்ளே... என்பதை ஸ்மரிப்பது. கௌஷீ. உபநிஷத்தையும் ஸ்மரிப்பது. பக்தி ஒன்றினுல் ஹரி சந்தோஷப்படுவார். பக்தியா கேவலமேவதரு ப்யத் ஹரி:— கட்டில்—பக்தி. பக்தி செய்வதால் அர்ச்சராதி கதி யேற்படுகிறது. நம்மாழ்வார்—வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே - பரமபத சோபானம் (தேசிகன்) உய்கில் அல்லாய். கட்டிலுக்கு நான்கு கால்கள்— அதுமாதிரி நான்கு புருஷார்த் தங்கள். அதற்குப் பின்பு—ஸ்வரூபஞானத்தை தரக்கூடிய அர்த்த பஞ்சகம் எனப்படும் மெத்தை. பரிபக்குவ ஆத்மாக்களே புஷ்பங்கள். பகவத் பிரேமை என்கிற கூந்தலில் கூடி, பகவானே யும் பிராட்டியையும் சேர்த்து எழுப்புதல்.

லக்ஷ்மியின் ஸ்வரூபம்—தாயே! மைந்தடங்கண்ணினுய்; நீ உன் மணுளனே எத்தனைபோதும், எத்தனையேலும் பிரிவாற்ற கில்லே. அனபாயினீ—புருஷனே விட்டுப் பிரியாதவள். அதனுல் எங்களேயும் காப்பது என்று சொல்வது சரியாகும் அர்த்தபஞ்சகம் -இறைநிலே, உயிர்நிலே, தடைநிலே, உபாயநிலே, பயன்நிலே. சக்தி யின் உதவியினுலே ஈஸ்வரன் ஸ்ருஷ்டிக்கிருன். என்பது ஒரு பக்ஷரின்' கொள்கை.

—— x ——

முப்பத்துமூவ ரமரர்க்குமுன்சென்று
கப்பந்தவிர்க்குங்கலியே! துயிலெழாய்
செப்பமுடையாய்! திறலுடையாய்; செற்ருர்க்கு
வெப்பங்கொடுக்கும் விமலா! துயிலெழாய்
செப்பன்னமென்முலேச் செவ்வாய்ச்சிறுமருங்குல்
நப்பின்னே நங்காய்! திருவே! துயிலெழாய்
உக்கமுந்தட்டொளியுந் தந்துஉன்மணுளனே
இப்போதே எம்மைநீராட்டேலோ ரெம்பாவாய். (20)

## 25

### மறுபடி கண்ணனையும் பிராட்டியையும் எழுப்புகிறார்கள்.

கண்ணனை - மீண்டும் வினயமாகவும் புகழ்ச்சியாகவும் - முப்பத்து முக்கோடி தேவர்களுக்கு முன்னரே எழுந்து - கப்பம் (நடுக்கத்தை) நீக்கித் தவிர்க்கும் கலியே, மிடுக்கு உடையவனே- செப்பம் உடையாய் (மனவாக்கு செய்கைகளில் ஒருமிக்க ஒற்றுமையை உடையவனே)-திறல் (பலம்) உடையாய்-செற்றார்க்கு- விரோதிகளுக்கு வெப்பம்-(பயம்) கொடுக்கும் விமலா நிர்மலனே (காரியம் முடிந்தும் ஒருவித ரோஷமும் க்ரோதமுமில்லாத அமலனே) துயில் எழாய் (எழுந்திருக்க வேண்டும்.) மென்(ல்) முலை செம்வாய் (சிகப்புவாய் உடையவளும்) சிறு மறுங்குல் (நுண்ணிய இடையுள்ள) நப்பின்னை நங்காய் - திருவே துயில் எழாய். உக்கமும் (நோன்புக்கு உபகரணமான ஆலவட்டத்தையும்) தட்டு ஒளியும் (தட்டான கண்ணாடியையும்) தந்து உன் மணாளனை இப்போதே எமமை நீராட்டு ஏலோ - ரெம்பாவாய் - (எங்களை நீராடச் செய்) என்று நப்பின்னையை வேண்டிக் கொண்டார்கள்.

ஒகில் நன்றாகத் தூங்குகிறார்கள், தூங்குவதுபோல நடிக்கிறார்கள் என்று நினைத்து-திருப்பள்ளி பாடுகிறார்கள். முப்பத்து மூவர் தேவர்களுக்கு ஆபத்து வரும்போது ரக்ஷணம் செய்பவனே - முப்பத்து மூவர் - த்வாதச ஆதித்யர்கள்-ஏகாதச ருத்ரர்கள் - அஷ்ட வசுக்கள் அஸ்வினி தேவர்கள் இருவர் - (இந்திரன் பிரஜாபதி யென்றும் பிரஹதாரணயத்திலே யாக்ஞ்ய வல்கியர் சொன்னார்.) முன் சென்று - உபேந்திரனாக அவதரித்து-மால்யவானுதி அரக்கர்களை விரட்டி அடித்துக் காப்பாற்றிய விஷ்ணு - கப்பம் - கோவர்த்தனகிரியைத் தூக்கும்போது கோபாலர்களுக்கு கப்பமில்லாமல் காத்தவனே - அமரர் தலைவா "உங்களை எப்பொழுதும் காப்பாற்றுவேன் - அஞ்சேல்" என்று சொல்லி இடையர்களைக் காப்பாற்றியதால் கோபாலன் கோவர்த்தன கிரிதாரி-செற்றோர்க்கு- தன் ஆஸ்ரிதர்களை விரோதிப்பவர்களுக்கு தாபம் தருபவனே, ஹிரண்யன் ராவணன் கம்சன் முதலானவர்களைப் பயப்படும்படி செய்தும் - "நான் தசரதபுத்திரன்-ராமனே" என்று சொல்லியும் "தம்மன்யே நாராயணம் அநாமயம்" என்றானே. ராவணன் பாண்டவமித்ரன்-ஆஸ்ரித பக்ஷபாதி-அவர்களுக்கு எதிரி நமக்கும் எதிரி-இவ்விதம் சொல்லியும்-நப்பின்னையை மீண்டும் கருணை வரும்படிபுருஷகாரம் செய்யச் சொல்கிறார்கள். செப்பன்ன பொற்கவசம் பெட்டகத்திலுள்ள மெல்லிய முலை - பஞ்ச சயனம் ஏறினவளை - உறுத்தக் கூடிய மென்மையாம். நப்பின்னையை விட அவள் கொங்கை மிக்கமென்மை. ஹ்ருதயமே அந்த மென்மையை

அடைந்துவிட்டிருக்கிறது. அதனால் திருவே-புருஷகாரம்; உபாயம் இரண்டுபேற்கும் பொது. புருஷகாரம் முதலிலே - பிறகு உபாய மாம். நீயே உன் மணாளனை எழுப்பித்தருவாய். அதனால் நாங் களும் மார்கழி நீராடலுக்குத் தேவையானஉக்கமும் தட்டொளி யும் தந்து-பிறகு அவனையும் நோன்புக்கு நீராட்டிவைப்பாய். இது கேட்டதும் நப்பின்னையும் மனம் குளிர்ந்து அனுக்ரஹிக்க - மீண்டும் கண்ணனைப் பாடி எழுப்புகிறார்கள்.

இங்குள்ள கருத்து நயத்தை நோக்கவும். தேவர்கள் காரிய ஆபத்தை அடையும்போது பகவானை ரக்ஷிக்க வேண்டுவார்கள். மற்ற சமயங்களில் ஈஸ்வரோஹம் என்று இறுமாப்புடனிருப்பார் கள். அவர்களை ரக்ஷிக்க நீ அவதாரம் எடுக்கிறாய் - கடும் துன்பங் களை உண்டாக்கிக் கொள்கிறாய். ஆனால் நாங்களோ ஏழைச் சிறுமிகள். அனன்ய பிரயோசனபரர்கள் ஸாத்விக தியாகம் செய்ப வர்கள். எங்களுக்கும் காரியம் செய்யலாகாதோ - முன் சென்று ரக்ஷிக்கும் நீ (ஆபத்து வருவதற்கு முன்பே ரக்ஷிப்பவன்) ரக்ஷிதா ஜீவ லோகஸ்ய - என்கிற தர்மமிருக்கட்டும் உன் பந்துக்களான ஸ்வஜனஸ்ய ரக்ஷிதா-இதையும் அறிந்துகொள். அர்ஜுனனுக்கு உன்னைக் கொடுத்தாய். மற்றவர்களுக்கு (அழிந்துபோகும்) உன் விபூதிகளை அளித்தாய். அதுபோல எங்களுக்கும் உன்னையே தந்தருளவேண்டும். விமலா - சரீர ஆத்மபாவத்தினால் நாங்கள் ரக்ஷணை கேட்கிறோம். எங்களை உன் ஆதீனத்தில் வைத்துக்கொள், ஆனால் ஆத்மாவிற்கு சரீர தோஷங்கள் வராதபடியால் - அதனால் அமலன் நின் மலன்.

நப்பின்னையின் மென்முலையை அனுபவிப்பதைத் தவிர்த்து எங்களுக்கு ரக்ஷணம் செய் - அவளையும ஜனனியாகப் பாவித்து வேண்டுகிறார்கள் நீயும் நோன்புக்கு ஸாதனங்களை எங்களுக்கு அளித்து - உன் மணாளனையும் நீராடச் செய்து - எங்களையும் அவனையும் ஒன்று சேர்த்துவை என்று கெஞ்சுகிறார்கள் - ஞான தர்சன பிராப்திகளைப் பண்ணித்தர வேண்டும் என்கிறார்கள்.

---

**அழகியசிங்கர்:**

புருஷகார பிரபத்தி பண்ணினார்கள். முதலில் நப்பின்னையை பின்பு இருவர்களையும்-உபாயம் உபேயம் ஆக.

செற்றார்களுக்கு - ஆஸ்ரிதர்களின் விரோதிகளுக்கு.

பகவான் அமலன் திருவே-நப்பின்னை-த்வயவிபூதி நாதர்கள் இருவர்களும். கிருஷ்ணனுக்கு ஸ்நானம் செய்விக்க ஆலவட்டம், சங்கு சாமான்கள் வேண்டும் என்றனர்.

**ஸ்ரீமத் ஆண்டவன் :**

''நப்பின்னையே—எங்களையும் உன்னைப் போல அவனோடு சேரும்படி செய்வாய். பக்தி வைராக்யம் என இரண்டு ஸ்தனங்கள். புருஷகாரம் எங்களுக்குச் செய். அதாவது ஞான தர்சன பிராப்தியைச் செய், தட்டொளியும் தந்து;

அமரர்—முமுக்ஷுக்களைக் குறிக்கும்.

கப்பம் தவிர்த்து—ஞானத்தை உண்டாக்குதல், அக்ஞானம் தலையெடுக்கு முன்பு, அதைத் தடுத்து ஆட்கொள்வாய். பிராட்டி உபாயமும்—உபேயமும் ஆகும். அந்திம ஸ்மிருதி பாகவத ஸ்லோகம் ''யேமாம்'' (கஜேந்த்ர ஸம்ரக்ஷணம்). கடைசியில் பலன் என்பதில் ஸ்மரிப்பது - கருடபஞ்சாசத்தில் - தேசிகர் கஜேந்திர ஸம்ரக்ஷணத்தை வர்ணித்தார். எம்மை நீராட்டேலோ-கருத்தின் நயத்தை நோக்கவும்—அமரர்களின் தலைவன் நீ; அப்பேற்பட்ட பிரபு. அபலைகளான எங்களுக்கு உதவி செய்யலாகாதா?

கலியே—அந்தர்யாமியே.

கப்பம் - கம்பம் என்பதிலிருந்து வந்தது. உன் உதவியினால் அசுரர்களுக்கு தேவர்கள் கட்டும் கப்பம் ஒழிந்தது. அந்தர்யாமித்வம்—நாராயணன் ஒருவனுக்கே—இதர தேவதாந்திரங்கள் ஆகாது. கிருஷ்ணர் பீஷ்மரிடம் திரௌபதியை 7ம்நாள் யுத்த இரவுயன்று அழைத்துச் சென்று பாண்டவர்களைக் காத்தல்—திறல் உடையாய்; செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா, உன் உதவியினால் தேவர்கள் அசுரர்களுக்குப் பயந்து, கப்பம் கட்டுவது ஒழிந்தது.

திருமழிசைப் பிரானின் திருச்சந்தவிருத்தம்—53வது பாட்டு மோடி யோடிலச்சையாய சாபமெய்தி முக்கணான்... ஆதிமால் கண்ணனுடைய பரத்வம் வெளியிடப்பட்டது. உக்கமும்...உன் மணாளனை தந்து-எங்களை நீராட்டு.

—x—

ஏற்றகலங்கள் எதிர்பொங்கிமீதளிப்ப
மாற்றாதேபால்சொரியும் வள்ளற்பெரும்பசுக்கள்
ஆற்றப்படைத்தான்மகனே! அறிவுறாய்
ஊற்றமுடையாய் ! பெரியாய் ! உலகினில்
தோற்றமாய்நின்ற சுடரே ! துயிலெழாய்
மாற்றாருனக்கு வலிதொலைந்துன்வாசற்கண்
ஆற்றாதுவந்து உன்னடிபணியுமாபோலே
போற்றியாம்வந்தோம் புகழ்ந்தேலோ ரெம்பவாய். **(21)**

நப்பின்னையும் ஆயர் சிறுமிகளோடு சேர்ந்து - பிரானை எழுப்புகிறாள். கிருஷ்ணன் இருவர்களுக்கு ஸ்தோத்திர விஷய மாகிறான். உபயலிங்காதி கரணத்தின் விஷயமாக - ஸத்ய ஞான அனந்த ஸ்ரீயப் பதித்வம் அமலத்வம் - ஸர்வக்ஞ, ஸர்வ சக்தி - ஸத்யகாம ஸத்ய சங்கல்ப ஆஸ்ரித வாத்ஸல்யாதி குணங்களை, எல்லோரும் சேர்ந்து புகழ்கிறார்கள், கார்ப் பண்யமும் சொல்லப்படுகிறது.

ஏற்ற கலங்கள் எதிர் பொங்கி சுரந்த பால் பொங்கி மீது அளிப்ப - கோகுலத்திலிருந்து பசுக்களனைத்தும் பெரிய பாத்திரங் களிலே மேலே வழிநது போகும்படி ஸம்ருத்தியாக கறக்க சாமர்த்யம் மனஉதாரம் கொண்டவள்ளள் பசுக்கள் நந்த கோபனுக்கும் நப்பின்னையின் தந்தைக்கும் தனமாகும். அவை களைக்கொண்ட ஆற்றப் படைத்தான் மகனே - மருமகனே - அறிவுறாய் - விழித்துக் கொண்டு நாங்கள் வந்திருப்பதாகத் தெரிந்துகொள். ஊற்றம் உடையாய்- பெரியாய்-தோற்றமாக எங் களுக்காக அவதாரம் எடுத்த மஹா உத்ஸாஹமுள்ள ஸர்வசக்தி வாய்ந்தவனே - உலகினில தோற்றமாய் - பாஹ்ய கண்களால் காணும்படி-நின்ற சுடரே-பரம் ஜ்யோதிஷே-(இது ஒரு அவதாரம்) துயிலெழாய். மாற்றார், (சத்ருக்கள்) உனக்கு வலி தொலைந்து ஆற்றாது (உன் விஷயத்தில்) பலமெல்லாம் அழிந்து போக - அவர்கள் கர்வம் லஜ்ஜை இத்யாதிகளைத்தியாஜ்யம் செய்து விட்ட மாற்றார். இங்கு உன்னைக்காண வந்திருக்கும் எங்களுடைய (வாய்ப்பேச்சுக்களால் திருப்தி செய்து வைக்கும் உனக்கு) ஆற்றாது - வந்து உன் அடிபணியுமாப் போலே - சேவித்து அடிமை செய்து - யாம் புகழ்ந்து போற்றி வந்தோம் - ஏலோ ஏல் ஓர் எம்பாவாய், உன்னை வெறுப்பவர் பலத்தை இழப்ப வர்கள். உன்னை விரும்புவர் எல்லாவற்றையும் (நாண், கவுரவதை

எல்லாமும்) உன் நீர்மைக்குத் தோற்றவர், குணைர்தாஸ்யமு பாகத: - இளையபெருமாள் தம்பியாக விருந்தும் ராமனுடைய குணக்கடலில் மூழ்கி தாஸ்ய விருத்தியை யேற்றுக்கொண்டவர்- அதுபோல நாங்களும்.

நீ எவ்விதம் உன்னை நினைத்துக் கொள்கிறாய் - க்ஷீராப்தி சயனுகவா-இல்லை சக்கிரவர்த்தி திருமகனுகவா- இல்லை - பாத்தி ரங்கள் வழியே பால் கறக்கும் பசுக்களைத் தலைமைக் கொண்ட நந்தகோபனின் மகனே - உதாரா: - காமத்திலே மனைவி புருஷனிடம் தன்னையே அளிப்பதுபோல - வள்ளல் தனம் கொண்ட பசுக்கள் பாலை யதேஷ்டமாக அளிந்தன, ஸ்வரூப மாகவே கொடுக்கிறவன் - யாசித்துக் கொடுக்கிறவனல்ல. இறையும் அகலகில்லேன், ஸதாபஸ்யந்தி ஸூரய: என்கிறுப்போல- முலைக் கண்ணின் பெருமையாலே ஒரு தடவை தொட்டுவிட்டால் ஒரு பீச்சிலே கலத்தை நிறைத்து - நின்றும் முலைக்கடுப் பாலே மேலே மேலே சொரியும், அதனல் பெருமையுள்ள பெரும் பசுக்கள்.

வள்ளல் என்பது மதுரகவிகள். அருள் கண்டீரிவ்வுல கினில் - மிக்கதே - அதுபோல நம்மாழ்வார் - விடுமின் முற்ற வும் - திருமங்கையாழ்வார் - முந்துறவுரைக்கேன் - சொல்லுவேன் வம்மின் - நமரு முறைமின் — என்று உதாரஸ்வபாவம் - கேட்கப்படாமலே பராசரர்மைத்ரேயனுக்கு நல்லர்த்தம் - இது - என்று நினைத்து இதைமைத்ரேயர் யிழக்கக்கூடாது என்று நினைத்தார். அதுபோல வள்ளல் (கேட்காமலே) - ஆசார்யர்கள் கொடுப்பவர்கள் - பசுக்கள் ஆசார்யர்களே - பசுக்கள். ஆற்றப் படைத்தான் - அபரிமித குணகணைக மஹார்ணவ - போன்ற நந்தகோபனின் மகனே - யசோதை சீராட்டும்படி - உளன் சுடர் மிகு சுருதியுள்-வேத முதல்வன் - நான் மறைகள் தேடியும் கண்டு பிடிக்க முடியாத செல்வன் - கிருஷ்ணன் யசோதை மகனும், யதோவாசோ நிவர்த்தநதே அப்ராப்யமநஸாஸஹ - என்றும் அவிக்ஞாதம் விஜாதாம்-பிரமாண குணங்களின் எண்ணிக்கை அடங்காதபடி - பெரியாய் - அப்ராப்ய மனஸாஸஹ - மஹதோ மஹீயான் - தோற்றமாய் - எல்லோரும் காணும்படி அஜஹத் ஸ்வபாவனுய் கொண்டு அவதரித்தவனே - சுடரே - சாணையிட்ட மாணிக்கம்போல ஒளியுடையவனே, மனிதனுய் அவதரித்தாலும் பரத்வம் விலகாதபடி - ஸௌலப்ய பாண்டவ தூதன் - பாண்டவ பக்ஷபாதி - பார்த்தசாரதி - கோபாலன். ஊற்ற முடை யாய் - ஆஸ்ரித ரக்ஷணத்தில் மிக்க சிரத்தையுள்ளவனே - இன்னுர் தூதனென நின்ருன் - இன்னுர் சாரதி என்று நின்ருன்

மாற்றார் உன்பக்தர்களுக்கு விரோதி - நாங்கள் உன் பிரியை நப்பின்னைக்கும் வேண்டியவர்கள். உன் வாசல்கள்-சரணமடைந் தோம், காகாசுரனும் இவ்விதம் சரணமடைந்தான், நாங்கள் உன் குணங்களுக்குத் தோற்றுயாம் வந்தோம், உன்னை எங்களிடம் வரச்சொல்லவில்லை. போற்றி - போற்றவே யாம் உன்னிடம் வந்தோம். ஏற்றுக் கொள்ள வேண்டும், உலகினில் தோற்ற மாய் - மற்றவர் கர்மத்தினுல் பிறப்பு - உனக்கு அபஹத பாப் மா திவ்யோ தேவ ஏகோ நாராயண : - அகர்மவச்யன் - மாயை என் அதீனம். பிறந்தாலும் - வைகுண்டத்திலுள்ள அபிராகிருத சக்தி ஞான பலம் ஐஸ்வர்யாதி குணங்களைக் கொண்டவனே - சாதாரண மனுஷ்யன் மாதிரியில்லாமல் - துக்கமான தேகத்தைப் பெற்ற பிறகு ஜீவனைப்போல - பிரகிருதிஸம் பந்தமின்றி - ஞான ஆனந்த மயமான லோக விலக்ஷணமாக அவதரிப்பவன், சாதுக் களை ரக்ஷிக்க - மோக்ஷமளிக்க சக்தியுள்ளவன் - ஆதலால் சுடரே -

பெரியன் - நெடியன் பல அவதாரங்களைச் செய்தாலும் அர்ச்சையில் நிற்கும் வேங்கடவாணன் - வைஸ்வநராதி ஜாட ராக்னியின் ஜ்வாலையில் உட்புகுந்துவிருக்கும் அந்தர்யாமி. தோற்ற மாய் பந்தசுடே-ரபரசுராமர்-சுபந்தன் - காகாசுரன் இவர்களைப் போல நிலைமையும் அறிவிக்கப்பட்டதாம். அபராதம் செய்தவர் களும் உவந்து போனூர்கள்-அவனது ஸ்வரூபம் தெரிந்தே போனூர் கள். மாற்றார் பணியுமாப் போலெ, யாமும் வந்தோம், அடிபணி வதற்கே வந்தோம். விபீஷணனைப்போல உன் இடம் தேடி வந்தோம், ஜய விஜயீ பவ என்று சொல்வதற்கு வந்தோம், புகுந்து - புகழ்ந்து - என்பது - ஏன் தெரியுமா? பெரியாய் - உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே - அகர்மவச்யனுக அவதரிப்பவனே-ஆண்டாளுக்கும் எங்களுக்கும் காட்சி கொடுக்க அவதரிப்பவனே ஆற்றாது வந்து - கதியில்லாமல் விழுந்த - கார்ப்பண்யம் நிறைந்த நாங்கள் - உன் அடிபணியுமாப்போல் - போற்றிப் புகழ்ந்து பாடவந்தோம் என்றனர். ஊற்றமாய் - ஊற்றின் கண்ணுய் வந்து - நேஹாநாஸ்தி - அனுப்ர வேச்ய - அவனின்றி ஒரு வஸ்துவுமில்லை யென்றபடி.

பாலுக்குஏற்ற நீரே! எப்படி பொங்குகிறது உமது ஞானம்— ''என-ராமனுஜரின் பதில்'' ''ஆளவந்தாரின் அருள்'' தான் என்றார். இங்கு ஒரு ஐதிகம் ஓதப் பெறும். ராமானுஜர் திருமாலை ஆண்டாளிடம் திருவாய்மொழி பயின்றபோது-ராமானுஜர் குருவை மறுத்து - ''இப்படிச் சொல்லார் ஆளவந்தார் - அப்படி சொல்லமாட்டார்''-என்று சொல்ல-ஆண்டானும் ''நீர் ஆள

வந்தாரைக் கண்டதில்லை. எப்படித் துணிந்து பேசுகிறீர் என ராமானுஜரின் பதில்-'' அடியேன் ஆளவந்தாருக்கு ஏகலைவன் அன்றோ! ஆளவந்தாரின் அருள்தான் இது என்றார்.

---

**அழகியசிங்கர்:—**

நப்பின்னையை மஹாலக்ஷ்மியாகப் பாவித்து-புருஷகாரம் செய்யச் சொல்கிறார்கள், கிருஷ்ணனை - துயில் எழாய் - வேஷம் பூண்ட இடையன் நீ-நாங்களும் இடைச்சிகள். பாணுசுரனை நிக்ரஹம் செய்தது இங்கு நினைக்கவும்.

**ஸ்ரீ மதாண்டவன்:—**

நப்பின்னை சொல்கிறாள் - ''நானும் உங்களுடன் சேர்ந்த ஒருத்தியன்றோ?'' என்று சொல்லி அவர்களைத் தேற்ற, ''சரி, நாம் எல்லோரும் சேர்ந்து கிருஷ்ணனைப் புகழ்ந்து பாடுவோம். சிஷ்யர்கள் ஆசார்யகிருபையால் மேன்மையடைகிறார்கள். அப்பேற்பட்ட ஆசார்யருக்கு மேலானவன் நந்தகோபன். அவனுக்குப் பகவத் அனுபவமே கண்ணன்

ஊற்றமுடையாய் - வேதத்தில் பிரதிபாதிதப் படும்படி - திண்மையுடையவன். பெரியாய் - தோற்றமாய் - நாமரூப ரஹிதமான பிரும்மம் யாவருக்கும் புலனாகும்படி அவதரித்திட்டல், அனுபவ யோக்யதையை அவனாகவே ஆஸ்திதர்களுக்கு அளித்தல்.

கீடபிரமர நியாயத்தாலே-உன்னைப் பகைப்பவர்கள் (கம்சன் மாதிரி) துர்கதி அடைகிறார்கள். இதனால் ஆசார்ய சிஷ்ய லக்ஷணமும், பகவத் பாகவதலக்ஷணமும் சொல்லப்பட்டது. ஊற்றமுடையாய் - ஸ்திதபிரகஞன்; நம்மாழ்வார் '' உளனெனி லுளன்,'' செரியாய் - நபும்ஸலிங்கம் ஸ்வரூபத்தாலும் குணங் களாலும் பெரியவன்.

தோற்றமாய் - பாண்டவர்கள் தூதனாய் - அர்ஜுனனுக்கு சாரதியாய். ஆற்றப்படைத்தான் - ராமானுஜரைச் சொல்லும். அவருக்கு ஐந்து ஆசாரியர்கள் - பெரிய நம்பி, திருமாலை ஆண்டான், திருக்கோட்டியூர் நம்பி, பெரிய திருமலைநம்பி, திருவரங்கம் பெருமாள் அரையர், ஸ்ரீ மதாண்டவன் ஆளவந்தா ரையும் (மாலா காரணையும்) சொல்லும்.

—x—

அங்கண்மாஞாலத்தரசர் அபிமான
பங்கமாய்வந்து நின்பள்ளிக்கட்டிற்கீழே
சங்கமிருப்பார்போல் வந்துதலைப்பெய்தோம்
கிங்கிணிவாய்ச்செய்த தாமரைப்பூப்போலே
செங்கண்சிறுச்சிறிதே எம்மேல்விழியாவோ ?
திங்களுமாதித்தியனும் எழுந்தாற்போல்
அங்கணிரண்டுங்கொண்டு எங்கள்மேல்நோக்குதியேல்
எங்கள்மேல்சாபம் இழிந்தேலோரெம்பாவாய், (22)

கிருஷ்ணன் மீண்டும் படுத்திருக்க - ஆய்ச்சிறுமிகள் உள்ளே நுழைந்து கிருஷ்ணன் சயனித்திருக்கும் கட்டில் கீழ் - (அடியிலே) சங்கம் (கூட்டமாக) வந்து உன்னை வந்து தலைப்பெய்தோம் (நெருங்கி வந்து உன் கடாக்ஷம் பெற வந்திட்டோம்), பிராதி கூல வர்ஜனம் இத்தால் சொல்லப்பட்டதாகும், எதுபோல வென்றால் அம்கண் (அழகிய இடங்களையுடைய) மாஞாலத்து (பெரிய பூமியிலிருக்கும்) அரசர்போல வந்து காத்துக் கிடக்கிறது போல - உன் முக உல்லாஸத்திற்குக் காத்துக் கிடக்கிறோம். நஹுஷன் நளன் ஜருசந்தன் நருகன், இத்தகைய அபிமான முள்ள அரசர்களின் விருத்தாந்தங்களை ஸ்மரிப்பது. கிங்கிணி வாய் செய்த (சலங்கையின் வாயைப்போல செய்தன வான செம்கண் தாமரைப் பூ போல சிறு சிறிதே (சிறுகச் சிறுக) எம்மேல் விழியாவொ - கிருபாகடாக்ஷம் விழுவதற்காக - அதெப்படியிருக்கு மென்றால் - திங்களும் ஆதித்யனும் (சேர்ந்து) எழுந்தாற்போல் (உதயம் செய்தால் எப்படியோ - அதுபோல) அம்கண் இரண்டும் கொண்டு - (உனது இரு பங்கயக் கண்களால்) எங்கள்மேல் நோக்குதியேல் எங்கள்மேல் சாபம் (பாபம் எல்லாம்) இழிந்து (ஒழிந்துவிடும்) ஏல் ஓர் எம்பாவாய், ஆண்டாளின் திருவாக்கினால் இன்னும் சில பாசுரங்களைக் கேட்க பகவத் திருவுள்ளம். அதனால் அவர்கள் பேசாமலிருக்க;

இந்தப் பாட்டில் தங்களது அனன்யார்ஹ சேஷத்வத்தை விண்ணப்பம் செய்கிறார்கள். சிற்றரசர்கள் கண்ணனுடைய கட்டிலின் கீழ் வந்து நின்று கப்பத்துடன் காத்துக் கிடப்பார்கள். அஹங்காரம் பிடித்த மன்னர்கள் — பெரிய பூ நிலத்தை ஆள் பவர்கள் என்கிற பெருமை அவர்களுக்கு உண்டு. அத்தகைய அரசர்களுக்கும் எம்பெருமானுக்கும் வெகுதூரம் - காரணம் அகங்காரம் மேலிட்டவர்களாதலால். ஆனால் இந்த ஆய்ச்சிறுமிகளுக்கு

ஒரு காலத்தில் அஹங்காரமிருந்தது. இப்பொழுது இல்லை-அதனால் மாற்றார் வலி தொலைந்து-உன் திருவடி பணிதலே பெரும் பாக்ய மென வந்திருக்கிறோம். அரசர்கள் கப்பம் கொண்டு வருவார்கள். நீங்கள் எதைக் கொணர்ந்து வந்தீர்கள்? - என்கிற கேள்விக்கு - நாங்கள் ஒன்றும் கொண்டுவரவில்லை பிராதி கூலவர்ஜனம் கண்ணனிடமிருந்து கடாக்ஷத்தைப் பெறுவதற்கே வந்தோம் - காரணம் அவனது திவ்ய கடாக்ஷம் - புன்முறுவல் - திங்களும் ஆதித்யனும் சேர்ந்து எழுந்தாற்போல - உதயம் செய்தது போல - எங்கள் பாபங்கள் தொலைந்து நாங்கள் அவனையே நோன்பின் பலனாகப் பெறுவோம். இவர்களுக்குப் பக்திதான் பலம். ஸ்வதந்திர ஆத்மபிரமும் அந்ய சேஷத்வ பிரமும் நீங்கின. கிருஷ்ணன் ஒருவனையே விரும்பினார்கள். அவனது விபூதிகளை அன்று! அதனால் அபிமான பங்கமாய் (அழிந்து போய்) - அபிமானத்தை அடைவிக்கும் பலன்களை விரும்பாமல் ஸ்வயம் பிரயோசனமாக வந்தோம், ஆகவே எங்களிடம் கண்ணோட்டம் வேண்டும். கதிர் மதியம் போல் முகத்தான் - என்று முன் சொன்னதுபடி - சந்திர சூர்யௌ சநேத்ர-ஆஸ்ரிதர் களுக்கு நன்மை செய்யும் சந்திரன் - ஆஸ்ரிதர்களின் விரோதி களைத் தபிக்கும் சூர்யன் - இரண்டும் சேர்ந்த ஒரு தேஜோராசி - இவனுடைய ஒளியினால் தான் சூரியன் சந்திரன் தாரகைகள் மின்னுகிறார்கள். तमेव भान्तं अनुभाति सर्वं சூரியன் चक्षोस्सूर्यो अजायत—அவனுடைய கண்களிலிருந்து சூர்யன் பிறந்தான். சந்த்ர மாமனஸோ ஜாத:-அவனுடைய மனத்திலிருந்து சந்திரன் உண்டானான். சாபம் மிழிந்து - சாபம் உடனேயே பலிக்கும். சாபத்தை துர்வாஸசாபம் பிரும்மசாபம் — தக்ஷசாபம் — கௌதம சாபம் - பிரபலம். அனுபவித்தேயாகவேண்டும். எம் கண் மேல் உமது கண் விழ வேண்டும், செங்கண் சிறிது சிறிதாக விழிக்கமாட்டாவோ? அம் கண் இரண்டும் கொண்டு உட் கண்கள் கொண்டும், மன உல்லாஸத்துடன் விழ வேண்டும். அத்துடன் கிங்கிணி வாய்ச் செய்த - உன்னுடைய அழகிய வத னத்திலிருந்து ஆறுதல் தரும் சொற்களையும் நாங்கள் பெற வேண் டும். கிண்கிணி-பாதி வாய் மூடியும் பாதி வாய் திறந்துமிருக்கிற ஒரு ஆபரணம் - பகவானுடைய மந்தஸ்மிதம் போல விருக்கும். அது போலவாம் கண்களும் அலரவும் மாட்டாதே மொட்டிக்கவும் மாட்டாதே திருக் கண்களிருந்த படிக்குத் திருஷ்டாந்தம் சொல்லுகிறார்; கேள். சிறிச் சிறிதாகப் பாபத்தால் நிக்ரஹம் - சரணாகதி செய்ததால் விகஸிதமான அனுக்ரஹம்.

சாபம் - விஸ்லேஷ விசனம் - துர்வாச சாபம் மஹா லக்ஷ்மி யின் நோக்கால் போயிற்று. கௌதம சாபம் பகவானுடைய காலின் ஸ்பர்சத்தால் விலகியது. அது போல நப்பின்னை பெருமாளுடைய கடாக்ஷத்தினுல் எங்கள் சாபம் விலகட்டும் என் றனர். எப்போது எம்மை நீராட்ட வேண்டும் என்று பிரார்த் தித்தனர் சிவ சாபம் பகவானுடைய நீர் கபாலத்தில் ஏற்றினதால் விலகியது.

---

**அழகியசிங்கர்:—**

பகவத் கைங்கர்யமாகிற பலனை யாசிக்கிறார்கள். திங்களும் ஆதித்யனும்-இருவரும் ஆதிவாஹிகள்-அர்ச்சராதி கமனத்தில் இருப்பவர்கள். பகவானுக்கும் பிராட்டிக்கும் சீற்றமும் அருளும் உண்டு-சீற்றம்-எங்கள் சத்ருக்களிடமும்-அருள் எங்களிடமும் இருக்கட்டும் எனப் பிரார்த்திக்கிறார்கள்.

**ஸ்ரீமதாண்டவன்**

இப் பாட்டினுல், அகங்காரம், மமகாரம் அழிந்து, பங்கமாய், பகவானைச் சரணமடைதல், ஆத்ம ஸமர்ப்பணம். அதாவது உம் கடன் அடியேனைத் தாங்குதல்; எமது கடன் உமக்கு பணி செய்து கிடப்பதே அனன்யார்ஹ சேஷத்வத்தைச் சொல்லும். அகப் பற்று புறப் பற்று நீங்கி, நான் சுதந்திர மல்லன் என்கிற அறிவோடு, மஹா விசுவாசம் கொண்டு, அவனையே சிக்கெனப் பிடித்தல். அதனுல் அவன் கருணையுள்ளவனுகி, பாப நிவிருத்தி செய்கிறான்.

போய பிழைகள் தூசாகும். அவனுடைய கடாக்ஷம் ஞான ஸ்வரூபமாகவும், அக்ஞான நிவர்த்திகரமாகவிருக்கும் சந்திரனைப் போலக் குளிர்ச்சி, அக்ஞான இருளைப் போக்கும் சூரியனைப் போன்றுமிருக்கும். விரோதிகளாகிற அகங்கார மமகாரங்களைப் போக்கி, சரணமாகிற உபாயத்தைச் சொல்லி, பாப நிவர்த்தி யாகிற பயன்; மேலும் ஈசுவர ஸ்வரூபமும், ஆத்ம ஸ்வரூபத்தை யும் சொல்லி-இவற்றால் அர்த்த பஞ்சகம் சொல்லிற்றும்.

சசி சூர்ய நேத்ரன்-ஒரு கண்ணுல் அருளும் ஒரு கண்ணுல் ஞானமும் நல்குவன்.

செங்கண் சிறுச்சிறிதே-பாதி மலர்ந்த தாமரையைப் போல சம்சாரிகளின் குற்றத்தை உணர்ந்த போது கண் மூடியும்; கூக் குரலைக் கேட்டபோது கண் திறந்தும் பார்த்தல் அரைவிழிப்பா யிற்று (ஆராயிரப்படி) கடைக்கண் நோக்கு என்பதாம்.

பெருமாள் பரீட்சை செய்து அருளுவார். தேசிகரின் வைராக்ய பஞ்சகத்தையும், ரஹஸ்ய திரய ஸாரத்தில் முமுக்ஷுத்வ அதிகாரம் நினைப்பது. மா ஞாலத்தரசர்-நளன், நிருகன் நகுஷன் ஜராசந்தன்; இவர்கள் அபிமானமுள்ளவர்கள் இதனால் சரண மடைந்தால் நலம். வந்து தலைப்பெய்தோம்-வந்து சேரவேண்டிய இடத்தில் நாங்கள் வந்திருக்கிறோம்.

—x—

மாரிமலைமுழஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும்
சீரியசிங்கம அறிவுற்றுத்தீவிழித்து
வேரிமயிர்பொங்க எப்பாடும்பேர்ந்துதறி
மூரிநிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு
போதருமாபோலே நீபூவைப்பூவண்ணா ! உன்
கோயில்நின்று இங்ஙனேபோந்தருளி கோப்புடைய
சீரியசிங்காசனத்திருந்து யாம்வந்த
காரியமாராய்ந்தரு ளேலோரெம்பாவாய். (23)

மாரிக் காலம் போக ரஸமனுபவிக்கும் காலம். சுக்ரீவன் தன்னால் இழக்கப்பட்ட மனைவியைத் திரும்ப அடைந்த சுகத்தை அனுபவிக்கட்டும் என்று ராமன் தன் வருத்தத்தை மறந்து நாலு மாதங்கள் ப்ரஸ்ரவண கிரியில் ஆறியிருந்தார். அதுபோல ராஜாக்களும் படைவீடு புறப்படாதாற்போலே சிம்ஹமும் வர்ஷ காலம் மலை முழைஞ்சு விட்டுப் புறப்படாது. விஸ்லேஷித்தார் கூடும் காலம் அன்றோ? அதுபோல நாங்களும் உன் வாசற்கண் வந்து காத்திருக்கிறோம் - மன்னிக்கிடந்து உறங்குகிறாயே - நப்பின்னையுடன் - நீ, இது நியாயமா? என்று கேட்டனர்கள், நப்பின்னைப் பிராட்டியின் பருத்த கொங்கைகளையும் நிதம் பத்தையும் பூர்ணமாக அனுபவிக்க - ஓராபரண முமில்லாதபடி - ஏகவஸ்து என்னலாம்படி பொருந்திக் கிடக்கிற எம்பெருமான். உறங்குவது யாருக்குத்தகும்? ஜிக்ஞாஸுக்குத் தகாது - அது போல ஆர்த்த ஸம்ரக்ஷணுகிற உனக்கும் தகாது. மலை

முழைஞ்சில் கிடக்கிற சிம்மத்தைப்போல - சிம்மம் மலைக் குகைக்கு ஆபரணமாப்போல - இவனும் நப்பின்னையினுடைய துங்கஸ்தனகிரி தடியிலே ஸ்தாநாபரணம் போலே தங்குகின் றானிறே! மன்னிக்கிடந்து உறங்கும் சிங்கம் எழுப்பப்பட்டால் சீறியதுபோல அறிவுற்று தீவிழித்துப் பார்க்கும், கஜத்தைப் பார்த்தால் அவ்விதம் சீறும், ஆனால் சிங்கம் தன் குட்டிகளுக்குப் பால் கொடுக்குமே, அதுபோல எங்களிடமும் தயை நீ செய்ய வேண்டும், சிங்கம் வேரி மயிர் பொங்க எப்பாடும் பேர்ந்து உதறி மூரி நிமிர்ந்து முழங்கி - உடனே எழுந்திருந்தால் நான்கு புறங்களிலும் பார்க்கும்போது - தனது பிடறியை ஒரு தடவை உலுக்கினால் - பிரதம கடாக்ஷம் தன் குட்டிகளின்மேல் விழும். பிறகு அதன் சத்ருகளின் மீது விழ, அக்கடாக்ஷம் நேர்ந்தால் - கோபித்து விழித்தால் எரிவட்டக் கண்களாலே சிவக்கப் பார்த்தால் ஏனைய மிருகங்கள் நடுங்கும். அதுபோல பகவான் கோபித்து சிவந்த கண்களால் பார்க்க நேரிட்டால் - ஸம் வர்த்தக அக்னி எரியுமாப்போலே விருக்கும். அப்போது ரிஷிகள் சாந்த பாடத்தைப்பாடி - பகவானுக்கு - ரஜஸ் தமஸ்ஸாதி குணங்கள் மேவாமலிருக்க - அவனது அருளை வேண்டுவார்கள். பகவான் குணாதீதனானாலும் - தன் பேடைகளுக்கு ஆஸ்ரித ரக்ஷணம் செய்ய எண்ணம் கொண்டாரேல் - ஏதேனுமொரு செய்கை அறிவுற்று என்றதோடு பிறரையும் நைவிக்கலாம். ஸர்வ கந்தனுக்கு இது ஏற்படுமா? பிராகிருத ஸிம்மத்தைப் போல-உளை மயிர்கள் சிலும்ப-வேரி மயிர்-சிம்ம ஜாதிக்குயேற்ப வீர கந்தம் - இவனுக்கு தண்துழாய் கந்தம் - எப்பாடும் பேர்ந்து ஸர்வ திக்குகளிலும் பரவும், முழங்கிப் புறப்படும் சிம்மத்தைப் போலே-நீ அவ்விதம் எங்களிடம் வர வேண்டாம், பூவை பூ வண்ணா! ராகவ சிம்மமில்லையா-நரசிம்மம் இல்லையா, இவர்க ளுடைய மென்மை தங்கள் பக்தர்கள் விஷயத்தில் பிரசித்தமிறே- பிரஹ்லாதனைத் தன் மெல்லிய கரங்களால் தடவி உச்சி மோந் தான். சிம்ம நடை மாத்திரமா—ரிஷப கதி-மத்த கஜகதி-புலியி னுடைய சிவிட்டும்-சிம்மத்தின் பராபி பவன ஸாமர்த்தியமும் தோற்றியிருக்கை. நமக்கு இவையெல்லாம் நம் பெருமாள் நடை யழகிலே காணலாம், இவைகள் எல்லாம் பக்தர்களிடமும் காண லாம். உன் வடிவுக்கு பூவைப் பூவை ஓராகாரத்துக்கு திருஷ் டாந்தம் என்கிறப் போல - காயம்பூ போன்ற நிறத்தையுடைய வண்ணா கண்ணனில் வடிவுக்கு ஸ்மாரகமாயிறே யிருப்பது-இந்த அழகு பிரதி கூலர்களுக்கு - பயத்தையும் அனுகூலர்களுக்கு விஸ் லேஷ காலத்தில் நஞ்சாக விருக்கும். சரி - நீங்கள் அனுகூலர்கள் தானே - உள் நுழையலாம் என்று சொல்லப்போமாகில்-உன் கோயில் நின்று இங்கனே - ஆஸ்தானத்திலே-போந்தருளி - எழுந்

தருளி - கோப்பு உடைய - அழகியதாக அமைக்கப் பெற்றதும் சீரிய-மேலான, சிம்மாஸனத்து (மீது) (வீற்றி) ருந்து·யாம் வந்த காரியம் ஆராய்ந்து அருள் - அருள வேண்டும்-என்று விண்ணப்பம் செய்கிறுர்கள். அதாவது இது படுக்கை வார்த்தையாக ஆகாமல்-மணி மண்டபத்தின் வார்த்தையாக அமைய வேண்டும். உன் கோயில் என்று தனியாக உண்டு. அது சிங்காஸனம்-ராஜ தர்பார்.

திருவரங்கம் நம்மூர், எம்பெருமான் கோயில் என்று சொல்லுமவர்களுக்கு எழிலாலி என்னக் கடவதிறே-ங்கள் முன்னே நீ நடக்க-நாங்கள் பின் தொடர-நடையழகைக் கண்டும் உனது பின் வடிவழகைப் பருகி-சிறு குஞ்சி-திண் தோள்கள் - புருஷர் ஷப;-ராம சார்த்தூலம்-மத்த மாதங்க காமினீம்-சிம்ஹ விக்ராந்த காமிநம்-இவை யெல்லாம் நாங்கள் அனுபவிக்கவும் ஸ்மாரகமுமாக விருக்க-நீ செய்தருள வேண்டும்.

சிம்மம் மாரிக்காலத்தில் இருப்பது எதற்கு உவமை என்றுல் பிரளய காலத்தில் மன்னிக் கிடந்து இருக்கும் சேதன அசேதனர்களுக்கு பகவான் இரக்கத்தால் [illegible] கர்ண களேபரங்களைக் கொடுத்து-நம்மை யடையட்டும் என்கிற மஹாசங்கல்பம் போல.

சிங்காஸன வார்த்தை என்பது மிக்க கௌரவமானது - ஆழ்ந்து யோசித்து அருளும் வார்த்தை-தேர் தட்டின் வார்த்தை-யுத்த களத்தில் யேற்பட்டது. கடற்கரை வார்த்தை விப்ரலம்பத்தில் யேற்பட்டது. இங்கு பெண்களுக்கு ஒரு வார்த்தை என்று போகாமல் காத்து-பொய் நப்பியான கிருஷ்ணன் சொன்ஞன் என்றுப் போலில்லாமல், தர்மாஸனத்திலே சொன்ன வார்த்தைகள் போல கவுரமாக விருக்கும். தர்மாதி பீடம், பிரஹ்லாத விஷயத்தில் செந்தாமரைக் கண்ணேடு-தயை மனத்தோடு சிரத்தில் செங்கை வைத்துத் தடவி - குளிர்நது நோக்கியது போல - தீ விழித்து நோக்காமல்-குளிர எங்களைக் கடாக்ஷிக்க வேண்டும்.

நிருஸிம்மனுக்கு கிருபை பிரஸித்தம்-பக்தனுக்காக திரிபுவன முழுவதும் பத்ராம் - நூநம்த்ரை லோக்ய மேததகிலம் நரஸிம்ஹ கர்பமாக ஆனதே! ஒரு சிசுவுக்காக எடுத்த அவதாரம் எங்கு முளனுக ஆகிவிட்டான். ஒரு சிசுவுக்குப் பல ரூபங்கள் எடுத்தவன். அதே போல அர்ச்சையிலிருக்கும் திருவேங்கடமுடையான் வானவர்க்கும் பூமியிலோர்க்கும் சுலபமாகப் பார்க்கும்படி எப்பொழுதும் நிற்கிறுனே. அப்படிப்பட்ட விலக்ஷணமானவன் - எங்களிடம் யது (குல) ஸிம்ஹமாய் அருள வேண்டும். இதனுல் சீரிய

சிங்காஸனம் வீற்றிருந்த திருக்கோலம்-தொலை வில்லி மங்கலம் சேவை செய்த நம்மாழ்வார்-தடங்கொள் தாமரைக் கண் விழித்து - உன் தாமரை மங்கையும் நீயும் அருள வேண்டும். நப்பின்னை புருஷ காரத்தினுலும் - ஸ்ரீ தேவியின் சேர்க்கையால் அழகு பெற்ற ஐக்கிய மிதுனத்தின் கிருபை எங்களுக்கு கிடைக்க வேண்டும். விஜயலக்ஷ்மியுடன் கூடியவராக சிம்மம் அருளினது போல எங்களுக்கு அனுக்ரஹம் செய்ய வேண்டும். உன் கழுத்தில் பிராட்டியின் திருக்கைகள் அழுந்தின தோற்றமிருப்பது போல, உன் வாக்கு எங்கள் மனத்திலும் அழுந்தி அமர வேண்டும். அதனுல் நீ படுக்கையை விட்டு எழுந்து சீக்கிரம் ஆஸ்தான மண்டபம் வந்து - எங்களை அனுக்ரஹித்த-சீரிய சிங்காஸனத்தின் மீது ஏறி-நாங்கள் வந்திருக்கும் காரியத்தை ஆராய்ந்து-அதற்குத் தக்கபடி - உபாயம் ஆராய்ந்தருள வேண்டும்.

பல பெருந்தேவிமார்களுடனே-எல்லோரும் சூழ-சிங்காஸனத்தில் யிருந்தானை நாங்கள் கண்டு சம்சயம்-பயம் நீங்கி-மனம் குளிர வேண்டும்.

அதற்காக-நீ நான்கு வார்த்தைகள் எங்களிடம் பேசவேண்டும். யாம் வந்த காரியம்-பரதாழ்வான் தன்னேடு ஒக்க ஆர்த்தர்கள் அனைவரையும் கூட்டி சித்ரகூடம் சென்று தன் மனக்கோரிக்கைகளை ஸமர்ப்பித்தான். அப்போது தர்மாஸனத்தில் அமர்ந்திருந்த நீயே ஆராய்ந்து - எது சரியோ - அதைச் செய்ய உத்தேசித்து - அவனுக்கு கராவலம்பனம் செய்ய திருவடி நிலைகளைக் கொடுத்தாயே - அதுபோல எங்களுக்கும் நீ உன் திருவடி நிலைகளை ஸர்வ தேச ஸர்வகாலங்களிலும் ஒழிவில் காலமெல்லாம் உடனுய் மன்னிவழுவிலாவடிமை செய்ய விருப்பம் கொண்ட எங்களுக்கு - எழில் கொள் சோதி எந்தைத் தந்தை தந்தைக்கே - பரம சேஷியானவனுக்குப் ப்ராப்ய பிரதானமான திருமந்திரத்திலுள்ளது எல்லாம் சொல்லிற்று. – குத்துவிளக்கைப்போல உனக்கும் பிராட்டிக்கும் அந்தரங்கமான விருத்திகளைச் செய்ய அருள வேண்டும், (அதாவது நாங்கள் வஸ்துக்களாக மாறவும் உங்கள் ப்ரீதிக்காக - தயார் என்பதாகும்) பாரதந்தரியம் அறிவார்க்கு ஸ்வாதந்திரயம் யேது? அடிமை கொள்கிறவனுன நீ நித்யன் - அடிமை செய்கிற நாங்களும் நித்யர்கள் - காலமும் நித்யமாய் - தேசமும் நித்யமாய் - ஒரு காலமும் மீள வேண்டாதபடி - அபுநராவிருத்தி லக்ஷண மோக்ஷமாய் க்ஷீத்ர விஷயானுபவம்போல - துக்கமிஸ்ரமாயிருக்கை அன்றி, நிரவதி சுகதாயக - எங்களுக்கு உனது திருமந்

திரத்தின் (நாராயணசப்த) அர்த்தத்தை - அதாவது பிராப்த (அடைய வேண்டிய) விஷயத்தில் பண்ணும் கைங்கர்யமே ப்ராப்யம் - இனி ஸௌலப்யமும் வடி வழகும் ஸ்வாமித்வமும். எல்லாம் கிடைக்க - அடிமை கொள்ளுகைக்குப் பாங்கான நிலம் (சீரிய சிங்காஸனம்) இது.

வேங்கடத்து எழில் சோதி - குன்றத்து இட்ட விளக்கைப்போல - தந்தை தந்தையாக நீ விளங்க வேண்டும், நீசனென் நிறைவொன்றுமிலேன் - அநாத்ம குணமே எங்கள் பக்கலிலே உள்ளது, ஆத்ம குணம் ஒன்றுமில்லை. என் தண்மையையும் நிறைவில்லாமையுமிறே - நான் இவ் வார்த்தை சொல்லிற்று என்பாராம். அனந்தாழ்வான் பிள்ளை - திரை நறை யூரரையர் நித்ய சூரிகளுக்கும் ஈசன் எங்கள் பக்கத்திலே சிநேகம் வைத்து - சங்கத்தைப் (கூட்டுறவை) பண்ணினுன். அவர்கள் ஸத்தை உண்டாகைக்காக - அவர் களோடு கலந்தான், தன் ஸத்தைப் பெறுகைக்காக எங்க ளோடேவந்து கலந்தான் - நெஞ்சும் உடம்பும் வார்த்தையும் தந்தது எங்களுக்கு - அதனுல் நாங்கள் எப்போதும் கிருஷ்ண விஷயமாக ஆனோம் என்று சொல்லுமாப்போல் - நீ நாலு வார்த்தை அருள வேண்டும். அதாவது ஸ்வஸ்வபாவ பிரகாசத்தை அருள வேண்டும் என வேண்டினுர்கள் இது தான் எங்கள் காரியம்.

ஆராய்ந்தருள் என்பதற்கு எதிர் சூழல் புக்கு புருஷகார மாகப் பற்றி - நாம் படுவதெல்லாம் - நீங்கள் படுவதே - நீங்கள் என் செய்தீர்கள்? என் பட்டி கேள் - என்று ஆராயவேணும், அதாவது பெண்காள் நீங்கள் ஒருவர் ஒருவரை எழுப்பி - எல்லோரும் திரண்டு நம் வாசற்கண் காக்குமவனையும் எழுப்பி - ஐயரை (நந்தகோபனை) எழுப்பி - ஆய்ச்சியை (யசோதையை) எழுப்பி - அண்ணரை (பலதேவனை) எழுப்பி பின்பு என் பிராட் டியையும் (நப்பின்னையையும்) எழுப்பி - மீளவும் நம்மை எழுப்பி - இத்தனை கஷ்டங்கள் வ்யஸனங்கள் பட்டிருக்கின்றீரே - என்று நீ உவந்து கிருபை பண்ணவேண்டும் - என்பதாம். (இவர் களுடைய விண்ணப்பம் சிற்றஞ் சிறுகாலே - உன் தன்னோடுற் ரோமே யாவோமுனக்கே நாமாட் செய்வோம் - மற்றை நங்கா மங்கள் மாற்று என்பதாம்.)

**அழகியசிங்கர்:—** ரக்ஷகத்வம் உன் தொழில். உனது சிம்ம நடை பிரசித்தம். ஆயர்குலச் சிங்கமே, யோக நித்ரையை விட்டு எழுந்திருந்து, கர்ஜித்து, பிறகு ஸ்ருஷ்டியைச் செய்தான். அறிவுற்று-பிரளய காலத்திலே எல்லா சேதன அசேதன வஸ்துக்களை தன்னிடம் தங்கிய நிருஸிம்ஹன். அறிவுற்று-ஸ்ருஷ்டியை சங்கல்பித்து, பஹுஸ்யாம் பிரஜாயாயேத் என்றும்; ஏததேவ உத்தாரணம் கவெள-என்கிற தாபனீய உபநிஷத்தின் அர்த் தத்தை இங்கு சொல்வது எல்லோருக்கும் அபயம் கொடுத்து-யாவரையும் வாழவைக்க வேண்டும். நீ நடந்து, சீரிய சிங்கா ஸனத்தில் அமர்ந்து-எங்கள் காரியத்தை ஆராய்ந்து அனுக்ரஹிக்க வேண்டும் என்பதே எங்கள் கோரிக்கை.

**ஸ்ரீ மதாண்டவன்:—**

சிங்காஸனத்தில் அமர்ந்து, எங்கள் குறையைக் கேட்டு நீக்குவாய். இறைவனுக்கும் சிங்கத்திற்கும் சிலேடை. இவன் தேவதேவன்-அது விலங்குக்கு அரசன். பிரளயத்தில் அபின்ன சக்தியோடு உறங்குபவன். பசியினால் கத்தும் குழந்தை சத்தம் கேட்டு, யாரால் என்ன தீங்கோ நம் குழந்தைகளுக்கு ஏற்பட்டதோ வென்று சீறுகிறவன் தீ விழிக்கிறான். பிரளயத்தில், பிண்டாகாரத்துடனிருக்கும் சேதன அசேதனர்களை-நாமரூப முடைய மஹத் முதலிய பிரகிருதியினின்றும் வேறுபட்டு வருவது-

ஸமஷ்டி தத்வங்கள் சீரிய சிங்காஸனத்திலிருந்து-போதருமாப் போலே-வந்தவர்கள் எங்கள் விஷயத்தை ஆஸ்தான மண்டபத்தில் அமர்ந்து கொண்டு கேட்டு அனுக்ரஹிக்க வேண்டும். ரகசியமாக விசாரிக்கக் கூடியதல்ல; இதனால் ஆர்த்த ஸம்ரக்ஷணத்தின் மகிமை பேசப்பட்டது.

ஸ்ரீ பாஷ்யத்திலே-ஏக: அத்விதீய:—பிரளயத்திலே யிருக்கும் ஸ்திதி-நாமரூப வியாகரணம் இல்லாதபடி ஸூக்ஷ்ம சித் அசித் துடன் கூடிய பிரும்மம். ஸ்ருஷ்டிக்குப் பின்பு-ஸ்தூல சேதனா சேதன விசிஷ்ட பிரும்மம்.

கோயில்களில்-பெருமாள் வெளிப்புறப் படும்போதும்-சிம்ம கதி-ரிஷப, யானை கதி-வீர சார்த்தூலகதி வேல் போற்றி-புல்லாங் குழல் ஓசை. இவைகளையும் சேர்க்கவும்.

——x——

அன்றிவ்வுலகமளந்தாய் அடிபோற்றி.
சென்றங்குத்தென்னிலங்கைசெற்ருய் ! திறல்போற்றி
பொன்றச்சகடமுதைத்தாய். புகழ்போற்றி,
கன்றுகுணிலாவெறிந்தாய், கழல்போற்றி
குன்றுகுடையாவெடுத்தாய், குணம்போற்றி
வென்றுபகைகெடுக்கும் நின்கையில்வேல்போற்றி,
என்றென்றுன்சேவகமே ஏத்திப்பறைகொள்வான்,
இன்றுயாம்வந்தோம் இரங்கேலோரெம்பாவாய், (24)

இது ஆண்டாளின் மங்களாசாஸனம்என்பர் - பார்த்த வர்கள் கண்ணனின் திருக்கழல்களைப் புகழ்கிருர்கள் - நடந்து போய் சிம்மாஸனத்தில் அமர்ந்ததைக் கண்டவர்கள் - எது போல சிசு தாயின் ஸ்தன்யத்தைக் கவ்வுவதுபோல - இவர் களுக்குப் பிராப்யமும் பிராபகமும் அத்திருவடிகளே - அன்று யாவருக்கும் - குணமுள்ளவர்க்கும் குணமில்லாதவர்க்கும் சம மாகத் தன் திருவடியை அவர்கள் மீது வைத்தது திருவிக்ரம அவதாரத்தில்; இன்று இவர்களுக்கு அதே திருவடிகளே பிராப்யமாம். இரண்டு காலமும் சமமாக ஒரே காலமாகத் தோற்றுகையாலே - அன்று இன்று என்கிருர்கள், ஆர நோன்பு நோற்கத்தானே - திருவடிகளைப் பிரார்த்தித்தது. கண்ணன் வரவேண்டுமே. ராமாவதாரத்தில் தென்னிலங்கை சென்று - திக்பாலர்களின் மனைவிகளும் சொந்த மனைவியுமான கற்புக்கரசி சீதையையும்-மீட்க அங்கு சென்று (ஸேதுவை பாலமாக அமைத்து) செற்ருய் - லங்கையை அழித்தவனே - திறல் போற்றி - உன் வலிமையைப் புகழ்கிறேம் என்ருர்கள். முதலடியில் திருவடி- ஆண்டாளின் திருப்பல்லாண்டு பாடப்படுகிறது. இரண்டாம் அடியால் திருகைகள் :— இரண்டுக்கும் வாழி - போற்றி என்றனர். மீண்டும் கண்ணனைப் புகழவந்தவர்கள் ராமனைச் சொல் வதா-என்று தயங்கி கண்ணன் சகடாசுரனை உதைத்த திறலைப் போற்றுகிருர்கள். கன்று குணிலா-ஒரு இளங்கன்று மாதிரி வேட மணிந்து வந்திருந்த அரக்கனை ஒரு கைத்தடியைப் பிடித்து விட்டு எறிவது போல - அந்தக் கன்றைக் காலில் பிடித்து சுழற்றி ஒரு விளாங்கனி போன்றிருக்கும் இன்னொரு அரக்கனை அவன் மீது எறிந்து அழித்தவனே. அதே போல சிவ தனுஸ்ஸை ஒடித்த இரு கைகள், ராமாவாதாரத்தில் கிருஷ்ணவதாரத்தில் ஒரே கையின் விரல் நுனியில் கோவர்த்தன கிரியைக் குடையாக - எடுத்தாய். கழல் போற்றி-இங்கு குணம் போற்றி-ஸௌசீல்ய

குணம் போற்றி. கழலுக்கு-செவ்வடி செவ்வி திருக்காப்பு-என்று அடி போற்றினார்கள். காரணம் பிரும்ம ருத்ராதிகள் தேவத்வம் கலவாதபடி நாராயணன் - என்றாலும் - மனிதனாக நடந்து கொண்டு யாவரையும் பிரமிக்க வைக்க காடும் மலையும் கரிய திருமேனி வாட நடந்தான். அத்தைய அமானுஷ்யச் செயலை சிறு பிள்ளையாகச் செய்து முடித்தான். இதனால் தனது பரதத்வ நிர்ணயம் செய்தான். கோபிகைகளையும் பசுக்களையும் ரக்ஷித்து ஸௌலப்யத்தின் எல்லையைக் காண்பித்தான். பால்யத்தில் விசுவாமித்திராதிகளுடன் சென்று தாடகை சுபாகுவைக் கொன்றதில் - பரதத்வம் நிர்ணயம், பரசுராமனிடம் வாதில் ஜயித்து வைணவ வில்லைக் கொண்டதும், பரதத்வம் தான் என்றாலும் சகடாசுரனை உதைத்து வதைத்தற்கு ஈடாகுமா? பெருமாள் கைகளுக்கு சிவ தனுஸ் தழும்பை உண்டாக்கியது போல-காலுக்கு சகடம் உதைத்தது சாடுதைத்த தழும்பு - சரி இவன் தான் ஆண்பிள்ளை - என்னை நிறை கொண்டார் என்று மடல் எடுக்கும் வண்ணம் - அடக்கம் கெட்டு மடல் எடுக்கத் தேடுவார்.

பெண்கள் தங்கள் நிலையை மறந்து பிதற்றும்படி - கைகளும் கால்களும் செய்வதே. தோள் கண்டார் தோளே கண்டார் - தாள் கண்டார் தாளே - (அது போல) தடக்கை கண்டாரும் அஃதே கண்டார்கள். பகவானுடைய அத்புதச் செயல்களில் மூழ்கி லயித்து விட்டனர்-ராம அழகு அபாரம்; அது போல கண்ணனின் சௌந்தர்யமும் பெயர் போனதே. இந்திரனுடைய சத்ரு என்கிற பெயரையும் - இந்திரனால் சம்மானிக்கப்பட்டு - கோவிந்தா-என்கிற திருநாமத்தையும் கோவர்த்தன கிரியைத் தூக்கி - கிரிதரன் என்றும் பெயரை அடைந்தான்.

இங்கு நினைக்கத் தக்கது. இங்கு நம்மாழ்வாரின் குன்றமெடுத்த பிரானடியாரோடும் ஒன்றி நின்ற சடகோபன் உரை செயல் (7-4-11) - ஆழ்வாரும் குன்றினடியில் எல்லோரோடும் நின்றநாக-தாமும் கோவர்த்தனகிரியில் கீழே நின்று - ரக்ஷணத்தை பகவானிடம் ஒப்பிவித்தார். ஒரு காளாங் கன்றுச் செடியைத் தூக்குவது போலவும்-வராஹ அவதாரத்தில் பூமியைத் தன் திருமுகக் கொம்பின் வாயில் அடக்கித் தூக்கியது போலவும் பிரபு விரல் நுனியினால் கோவர்த்தன கிரியைத் தூக்கினான். ஸர்வயக்ரு போக்தாவாக தன்னை ஆக்கிக் கொண்டான். இந்திரன் ஆத்மாபஹாரியானான்-ததீய (அடிமை) புத்தி பண்ணாதே - ஸ்வதந்த்ர புத்தி பண்ணி - நலியத் தேடமலையைக்

குடையாக எடுத்து பசுக்களுக்கும் இடையர்களுக்கும் வந்த ஆபத்தை நீக்கினுன். மல்லாண்ட திண்தோள் மணிவண்ணு நின் சேவடி திருக்காப்பு - அது போல இங்கும் குணமும் - கைத் திறலும் போற்றி, நந்தகோபன் வேலைக் கொண்டு போவான்; அதனுல் கூர்வேல் கொடுந்தொழிலன்-அது கண்ணனுக்கு எப்படி பொருந்தும்-சக்கரப் படையையே-இவன் வேலாக உபயோகித் தான். சார்ங்கம் என்னும் வில்லாண்டான் தன்னே-பல்லாண்டு என்பதைப் போல வேல் போற்றி என்கிருர்கள், வென்று விரோத மனப்பான்மை (பகை கெடுக்கும்) ஒழித்திடும் வேல். வசமாக்கும் குணம்-சிநேகத்தை பகைவனிடமும் வைப்பது-அப்படி அழித்திடினும் மறுபிறவி இல்லாதபடி செய்வதே ராமனின்/ கிருஷ்ணனின் குணம். இதற்கு மாரீசன் - பூதனே சிறந்த உதார ணங்கள்.

குணம் போற்றி-சௌசீல்யம்-பரத்வம் இரண்டும் சேர்ந்த குணம். மலேயே காக்கின்றது பாருங்கள் என்று சொல்ல மலேக்குப் பெருமை உண்டாக்கினுன்.

இத்தனேயும் செய்தது எதற்காக வென்றுல் - உன் சேவ கமேயேத்தி-பக்த பராதீனனுக விருக்குமிவனே சேவகம் செய்து நாங்கள் உஜ்ஜிவிக்கக் கடவோம். **உன்** என்கிற பதமே உயி ரானது. வீரபத்னியாகிற எனக்கு உனக்காக வாழ வேண்டும். ஏனெனின் பறைகொள்வான் - காக்க வல்லவனிடமிருந்தே பறை பெற வேண்டும். அனன்யக்தி-அனன்யார்ஹ சேஷத்வம்-இதற் காக நாங்கள் இன்று யாம் உன்னிடம் வந்தோம்-இரங்கு தயை செய்வாய்-ஏலே ரெம்பாவாய். என்று பிரார்த்தித்தனர். பகவத் கருணேதான் ஆத்மாவுக்கு உஜ்ஜீவனம். இத்தலேயில் பரபக்தியும் பெற்றுக் குடலன்று: பகவானுடைய இரக்கமே அவ்யவ ஹிதோபா யம் என்றிருக்கிருர்கள், சுருதியில் यमेवैष वृणुते तेन लभ्य: யமைவேஷ வ்ருணுதே தேனலப்யதே-பிரியதமனிடம் தான் பகவானுக்குக் கிருபை யேற்படும். அது எவ்விதம்காளிய மடுவில்கண்ணன் குதித்த போது இவர்கள் என்ன சொன்னுர்கள் என்பது ஞாபகத்திலிருக்க வேண்டும், ''இந்த யசோதை புத்ரன் காளியன் மடுவில் மூழ்கி விட்டான். நாமும் இவனேடு இந்த மடுவில் புகுவோம், சூரியன் இல்லாவிடில் தினம் ஏற்படுமா? சந்திரனின்றி இரவு யேது? நாமும் யமுனேயில் மூழ்கி விடுவோம்'' என்றனர். ராமனேயோ கிருஷ்ணனேயோ கண்டவர்கள் (அனுபவித்தவர்கள்) வித்யைமய மானவர்கள். கர்மமயமானவர்களல்ல. அந்த வித்யையினுல்-கர்மங் களினுல் யேற்பட்டஞானத்தால்-எல்லாப் பொருள்களுக்கும் அழிவு

மாறுதல் உண்டு - எல்லாக் கர்மாக்களின் பலன் அல்பம் அஸ்திரம் என்று அறிந்து இந்த பகவான் ஒருவனே சாஸ்வதம்-ஸநாதனம் - பரமார்த்தம் என்று வித்வான்கள் அறிகிருர்கள். ஆகவே கலியில் ராம கிருஷ்ண நாமமும் தான் சிறந்தது என்று ஆண்டாள் ராமானுஜர் தியாகராஜர் - துளசிதாஸர் - சொல்லியது-கோபிகைகள் காட்டிய வழியே ஆகும். ஆகவே அவர் ஸதா தியானம் செய்ய வேண்டியது என்று இவர்கள் தலைக் கட்டினுர்கள், பகவானே ஏக தர்மம் ஏக பராயணம் என்றனர்.

சரி - பகவான் தான் வந்து கடாக்ஷிக்காமல் - இவர்கள் வர பிராப்தமா? பிரஹ்லாதன் விஷயத்திலோ - துருவன் விஷயத்திலோ - அவன் தானே கன்றுக்கு இரங்கி வந்த பசுவைப் போல வந்தான். அவ்விதமின்றி - நீ வர பிராப்தமாயிருக்க விரஹம் பொறுக்க முடியாமல் நாங்களே ஆற்ருமையிழுக்க வந்தோம். அந்த இரக்கம் பகவானுக்கு எப்போது உதயமாகுமோ-என்று மனம் கலங்கினுர்கள் மங்களா சாஸனம் பண்ணுகை யிவர்களுக்கு ஸ்வரூபம்; இத்தலைக்கு இரங்குகை அவனுக்கு ஸ்வரூபம். அதனுல் யாம் வந்தோம் என்றனர். காகுத்தன் - கண்ணன் வாரானுல் - என்றிருந்த உனக்கு யிருந்த பிரதான மஹிஷிகளில் எங்களுக் குண்டான வாசி (நீயே) பாராய், கொஞ்சம் நீர் வர தாமதித் தால்-இரக்க மெழீர்-என்று உன்னை வாசு பாடுவர்கள் கிடாய்-நாங்கள் அவ்விதம் சொல்லமாட்டோம், கண்ணன் வரும்போது வருவான். இன்று, நாளை வருவான் என்று விஸ்வசித்தே காலம் போக்கிடுவோம். அவன் இரங்கினுல் அல்லது கார்யகரமாகாது அதாவது இவர்கள் பண்ணின மங்களா சாஸனம் - ஸாதனம் அன்று 'என்றிருக்க உபாய விரோதியைக் களைந்தார்கள் என லாம். பரகதஸ்வீகாரமே ஸ்வரூபானுரூபமென்றும் ஸ்வகத ஸ்விகாரம் ஸ்வரூப விருத்தம் என்று யிருக்காமல் - ஆற்ருமையின் மிகுதியால் வல்லமை பெற்று வந்து விட்டோம், நீர் பொருத் தருள வேண்டும் என்கிற கருத்தும் ஏற்படுகிறது ஸ்ரீமத்ஆண்டவன் அருளியபடி இது ராமானுஜரை குறிக்கும். உலக மெல் லாம் சுற்றினுர் - அஹங்காரமாகிற - ராவணனை ஒழித்தார். காமக்ரோத ஆசைகளை ஒழித்தார். ஜன்ம சக்கிரம் - கர்மபாப புண்ய அவித்யா தேக பிராரப்த்-வாஸனை (சுக துக்க வாஸனை) இந்த நான்கும் சகடம் மாதிரி ஜீவாத்மாவை சூழ்ந் திருக்கின்றன பகவானைச் சரணமடைந்தால் அந்த திருவடிகள் காப்பாற்றும். சிங்காஸனத்தை விட்டு இறங்காமல் எங்களை அனுக்ரஹிக்க வேண்டும் என்பதாய்.

**அழகியசிங்கர் :**

பெண்களின் பிரார்த்தனையை யேற்றுக்கொண்டு, நடையழகைக் காட்டி-சிங்காஸனத்தில் சிம்மம் போல அமர, கோபிகைகள் பல்லாண்டு பாடுகிறார்கள். அன்று இவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி இத்யாதி. ஜன்ம சக்கரம்-கர்மங்கள் பாப புண்ணியங்கள் அவித்யா தேகபிராப்தி-வாஸனை-(சுக துக்க வாஸனை) இந்த நான்கும் சகடம் மாதிரி ஜீவாத்மாவைச் சூழ்ந்திருக்கும். பகவானைச் சரணமடைந்தால் திருவடிகள் காப்பாற்றும்.

குன்று எப்படி தூக்கினாய். விரல் நுனியினால்.

வேல்-சுதர்சனம். கூரான வஸ்து அநேக கூர்கள் கொண்ட சக்கரம். நாங்களாகவே உன்னிடம் அஹங்காராதிகளை ஒழித்து வந்தோம். நீ இரங்க வேண்டும். இரங்கேல்-சிம்மாஸனத்தை விட்டு இறங்காமல் எங்களை ஆதரிப்பாய் என்பதாம்.

**ஸ்ரீ மதாண்டவன்:—**

இது ஸ்ரீ ஆண்டாளின் மங்களாசாஸனம். இதில் இவள் தன் தகப்பனாராகிய ஸ்ரீ பெரியாழ்வாரையும் மிஞ்சினாள். கண்ணன் சிம்மாஸனத்தில் அமர, அவனுடைய திருப்பாதங்கள் (அவைகளின் நடையழகு,) கோவர்த்தன கிரியைப் பூமியில் ஊன்றிய அவனது திருப்பாதங்கள் இவைகளைப் புகழ்ந்தாள். மலையைத் தாங்கின கரங்களைப் புகழ்ந்தாள். பகவானுக்குச் சத்ருக்கள் ஆறு பேர்கள். க்ரோத ரூபியான அசுரர்; அனுகூல சத்ருவானவன், லோபத்தினால் மாறினவன் இந்திரன்); அகங்கார மமகார முள்ளவன், மதம் பிடித்தவன் பலி; காமத்திற்கு வசப்பட்டவன் ராவணன்; மோகத்தினால் கவரப்பட்டவன் சகடாசுரன்; கன்று (வத்ஸன்) லோபம் மதம் கொண்டவன்; மாத்ஸர்யம் கொண்டவன் கபித்தன் (விளாங்கனி) இந்த விரோதிகளை ஞானத்தினால் அழிக்க முடியும். ஆனால் அவ்விதமில்லாமல்-வேலி முள்ளைக் கொண்டு முள்ளை எடுத்தாற் போல - அவர்களை ஸம்ஹரித்தது. பக்தி பரவசத்தைச் சொல்வது திருவிக்ரம அவதாரம். வசிஷ்டர் முதல் சண்டாளர்கள் வரை-அவரது திருவடி பட்டு, அனுக்ரஹிக்கப்பட்டனர். தேசிகனின் தேஹளீச ஸ்துதியை நினைப்பது. திருக்கோவிலூர் பெருமாளைப் பற்றியது.

கோவர்த்தன கிரிதரன் 7வது வயதில் செய்த அதிமானுஷ்யச் செயல். இதனால் இந்திரன் அவமானப் பட்டான். அளக்க வந்த திருவடி சிறுத்து, அழகாக, மென்மையாக விருந்தது. எங்களை

ஆளவந்தது. அவனது சௌந்தர்யம் யாவரையும் பிச்சேறச் செய்யும். கூர்வேல் - பசுக்களை புலியிடமிருந்து காக்க. பகை கெடுக்கும்-நல்லதைச் செய்யும்.

அன்றிவ்வுலகு அளந்தாய். ஆசார்யன் வடக்கு காஷ்மீரிலிருந்து குமரி வரை திக்விஜயம் செய்தாற் போல, யதிராஜ ஸப்தியில் **तद्पि परमं मतः**— (எம்பெருமானாரின் திக்விஜயம்)

திருக்கண்ணபுரம் பெருமாளைப் பற்றி திருமங்கை ஆழ்வார் பாடியது - திருமாலிருஞ்சோலை நின்ற கோவலர்-கோழியும் கூடலுமாக அழிகியவா (9-2-5) கோவிந்தனை கொடியேரிடை கூடுங்கொலோ-வள்ளலே உன் தமர்க்கு என்றும் நமன்ற கண்ணபுரத்து அம்மானே (8-10 7) கன்றுகொண்டு விளாங்கனி யெறிந்து ஆநிரைக் கழ) வென்று (9-10-7)

—— x ——

ஒருத்திமகனாய்ப்பிறந்து ஓரிரவில்
ஒருத்திமகனாய் ஒளித்துவளரத்
தரிக்கிலானாகித் தான்தீங்குநினைந்த
கருத்தைப்பிழைப்பித்துக் கஞ்சன்வயிற்றில்
நெருப்பென்னநின்ற நெடுமாலேஉன்னை
அருத்தித்துவந்தோம் பறைதகுதியாகில்
திருத்தக்கசெல்வமும் சேவகமும்யாம்பாடி
வருத்தமும்தீர்ந்து மகிழ்ந்தேலோரெம்பாவாய். (25)

கண்ணனைப் போற்றி வாழ்ந்த ஆயச் சிறுமிகள் கண்ணனைக் கண்டதும்-தங்கள் கருத்தைச் சொல்ல நினைத்தார்கள். வெட்கம் மேலிட-ஸர்வக்ஞனான பிரபு "தாமே அவர்கள் எண்ணத்தைப் பிரகடனம் செய்ய நினைத்து - பெண்களே-உங்களுடைய சொந்த ஊரிலே நாம் உங்கள் ஸ்வரூபத்துக்கு ஏற்ப வந்து வசித்தோம்-உங்களைப் பேணாதே யிருந்தால்-க்லேசம்" எனக்கல்லவா-உங்கள் நெஞ்சில் ஓடுகிறது - வெறும் பறையையோ - இல்லை - வேறு ஏதேனும் உண்டு என்று நினைக்கிறேன். அவர்கள் பதில் "பறையை வியாஜமாக வைத்து-நாங்கள் உன் குண கீர்த்திகளை பஜனம் செய்து உன் திருமுக உல்லாஸத்தைப் பெற வந்தோம். ஏதேனும் நம் சேர்க்கைக்குப் பிரதி பந்தங்கள் உண்டானால் - அவைகளை

நீயே போக்கி அருள வேண்டும். எங்களோடு ஸஜாதீயரிலே சிலர் நோன்பு நோற்று பெற்றது எங்கள் நோன்பு பலித்த படியன்றோ'' என்று பதில் உரைக்க-கண்ணனும் சிரித்துக் கொண்டு அவர்களை அனுக்ரஹித்தான்; அப்போது சந்தோஷ மலர்ச்சியினால்-அந்த ஆய்ச் சிறுமிகள் தங்கள் பாக்கியத்தைப் புகழ்கிறார்கள்-எப்படி?

தேவகி வயிற்றில் பிறந்து-கம்சனுக்குப் பயம் ''என்கிறவியாஜத்தை ஒட்டி நீ யசோதை மகனாக ஆய்ப்பாடியில் எங்களுக்காகவே வந்து அவதரித்தாயே-ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஒரு இரவில் ஒருத்தி மகனாக (கஞ்சனுக்காக) ஒளித்து வளர''-அந்த கம்சனும் அதனை அறியாமலிருந்தானோ-இல்லை - நாரதரால் தெரியப்பட்டு-அவன் பூதனை—சகடாசுரன், திருணவர்த்தன்-பகாசுரன்-அகாசுரன் போன்றவர்களை ஆயர்பாடிக்கே அனுப்பி வைத்தான் - எல்லோரும் அழிந்து போக-அவனுக்குப் பயம் அதிகரித்தது. சிறு பாலகனாகிற இந்த கிருஷ்ணன்-அமானுஷ்யச் செயல்களைச் செய்கிறானே-இவனுக்கு நாம் பயப்பட வேண்டும்-என் மிருத்யு-என்று தினம் பகலாய் கண்ணன் நினைவாகவே பயத்துடன் காலம் கழித்தான்.

ஒளித்து வளர்ந்து வரும் சிறு பாலகன் என்று நினைத்து விடாமல் தான் (கம்சனே) தரிக்கிலானாகி, (மனம் பொறாதவனாக) எப்படியாகிலும் இவனை ஒழித்துக் கட்ட வேண்டும் என்கிற நினைவால் - தீங்கு நினைத்தான் - அவனுடைய கெட்ட எண்ணத்தை ஸர்வக்ஞஸ் ஸர்வ வித்தாகிற எம்பெருமான் வீணாக்கினான்—பிழைப்பித்தான்-உயிர் கொடுத்தான் என அர்த்தமும் வரும். உடனே மல்லர்கள் குவலயா பீடம் போன்ற மத்த கஜத்தை கிருஷ்ண பலராமர்களின் வழியில் வைத்துக் கொல்ல நினைத்ததும் அவர்களும் மாண்டு விட்டார்கள் என்று அறிந்து கம்சன், தேவகி வயிற்றில் நீர் வார்த்தான்-யசோதை வயிற்றில் பால் வார்த்தான் கஞ்சன் வயிற்றில் நெருப்பு என்ன நின்ற நெடுமாலாக நின்றான். சக்யத்தினால் பாண்டவர்கள் அவனை ஸதா நினைத்தார்கள். பயத்தினால் கம்சன் கண்ணனை நினைத்தான். அதனால் மோக்ஷம் பெற்றான். அவனுக்கு அனுக்ரஹம் விரோதிக்குச் செய்த தேவானுக்ரஹம், விரோதிக்கே இவ்விதம் நற்கதி கிடைக்குமானால் அனுகூலர்களாக நாங்கள் உன்னை அருந்தித்து - நிதி தியாஸம் முதலியவைகளைச் செய்து-முக்ய புருஷார்த்தமாகிற உன் பக்தியையும் உனது சேவகத்தையும் விரும்பி நாங்கள் வந்திருக்கிறோம். உன்னை-உன்னையே அருந்தித்து வந்தோம். நீ தான் எங்களுக்கு

உன்னை-அளிக்க வேண்டும், நோன்பு நோற்று உன்னைப் பதியாக வரித்து-உன் கிருபையை அடைவதற்கு-உன் சம்மதியாகிற பறையைத் தருவாயாகில் (நோன்புக்கு ஸாதனம்)-அதனால் நாங்கள் திருத்தக்க செல்வமும் திருவுக்கு திருவாகிய உன்னை (பிராட்டியே) உன்னை விரும்பி அம்ருத மதனத்தின் சமயம் அடைகிற சம்பத்தாகிற-உனது ப்ரேமையை) (அதனால் விளையும்) சேவகமும் அடிமைத்தனத்தையும் - உனக்கிருக்கும் பெருமைகளையும் குண பிரபாவங்களையும் பாடிப்படி - இற்றைப் பறைகொள்வான் அன்று காண்-வெறும் பறை மாத்திரமல்ல - அது வெளிப்படையான வியாஜம்-ஆனால் நாங்கள் வேண்டுவது-உன்னோடு எக்காலமும் எல்லா அவஸ்தைகளிலும் உற்றோமே ஆவோம், (உறவு கொண்டு உரிமை பெறுவோம்) உனக்கே நாம் ஆள் செய்வோம்-என்று இருபத் தொன்பதாவது பாட்டிலே வெளிப்படுத்தும் எண்ணத்தை மெதுவாகச் சொல்லி அதிகாரி யோக்யதையை - பறை தகுதியாகில் நீ நினைப்பாயாகில்-எங்களுக்கு அதுவே புருஷார்த்தம். வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து விருப்போம், ஏல் ஓர் ரெம்பாவாய்.

வசுதேவர் தேவகி-நந்தன் யசோதை-ஆக நான்கு பேர் நோற்றுப் பிறந்தவன் கண்ணனை பெற்ற பாக்யம் தேவகியிலிருந்து-யசோதைக்குப் போய்ச் சேர்ந்தது. அது யசோதை நந்தகோப பாக்யமாக மாறியது. இதுவும் அவன் செய்த சங்கல்பத்தாலே-அழுது முலைப் பால் உண்ட இடம் யசோதையிடத்தே-ஒரு கோயில் கட்டி பிரதிஷ்டை செய்பவர்களை விட, ஜீர்ணோத்தாரணம் பண்ணினவர்களே முக்கியராதலால் - கண்ணனே யசோதை மகனானான்.

வானிடை தெய்வங்கள் காண - அந்நியம் போது அங்குநில் லேல்-என்று அனுகூலர் கண்களிலும் படவொண்ணாதபடி அடக்குமவர்கள்-அசுரர்கள் போன்ற பிரதி கூலர்கள். கண்ணில் படவொட்டுவார்களா? ஆய்ச்சிகள் கண் இமை போல கண்ணனைக் காப்பவர்கள். அதனால் அசுரர்கள் தலைப்பெய்யில் யவங்கொலாங் கென்றாழ மென்னுருயிர் ஆனபின் போகேல்-கண்ணா, நீ நாளைத் தொட்டு கன்றின் பின் போக வேண்டாம்-போகேல் கோலஞ் செய்திங்கேயிரு - என்றனர்களே. தரிக்கிலேனாகி - கம்சனுக்குப் பயத்தால் யேற்பட்டது. கிருஷ்ண பிரேமை கோபிகைகளுக்கு சிருங்காரத்தினாலே யேற்பட்டது; பாண்டவர்களுக்கு உறவினாலும் சகாவாகவுமிருப்பதால் யேற்பட்டது. கண்ணன் மதுரை வருவதற்கு முன் பல தீங்குகளைச் செய்தும் - வந்த

பின்பும் மல்லர்களையும் குவலயா யானையையும் ஏவியது. ஆனால் பரப் பிரம்மத்தை அழிக்க முடியுமோ? விட்டில் தீயினில் விழுவது போல-அவன் கருத்தும் அழிந்தது-அவனும் அழிந்தான். கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற நெடுமால்-இந்த ஆய்ச்சிகளின் மனத்தில் அது விரகாக்னியை உண்டு பண்ணியது. அவர்கள் கிருஷ்ண விரஹத்தினால் மனம் கொதித்து-பிதற்றலானார்களே - கஞ்சன் மனதுக்கு உகப்பனவே செய்தாய்-காயாம்பூ வண்ணங் கொண்டாய்-இதனால் அழகினால் செய்தாய்; வாழகில்லேன் வாசு தேவா இதனால் கண்ணனுடைய சேஷ்டிதங்களை நினைத்து, விரக வேளையில் தாரகமாக-போஷகமாக விருந்த இந்த வேளையில் அவை களாலே சேர்க்கப் பெற்று ஆனந்தமடைய வில்லையே-பொழுது தான் வெறுமனே காய்ந்து விடுகின்றது-என்று விலலாபம் செய் தனர். அது சரியாகுமா? கண்ணன் வராமற் போவானேன்? அதற்கு இவர்கள் அதிகாரியோக்யதை பெற்றவர்களில்லையா? அந்த சந்தேகத்தை - இந்தப் பெண்களே - சொல்கிறார்கள். பறை தகுதியாகில்-என்பதினால் - நாங்கள் உன்னைப் பெறத் தகுதி உண்டோ இல்லையோ என்பதை அறிய மாட்டோம். உன்னை அருந்தித்து வந்தோம். (உன்னையே ஆசைப்பட்டு-பெற வந்தோம்) எங்களை அனுக்ரஹிப்பாயோ-அல்லது கம்சனைப் போல எங்களை யும் விரகாக்னியினால் கொல்ல நினைப்பாயோ அது தெரியாது, என்னையாக்கிக் கொண்டெனக்கே தன்னைத் தந்த கற்பகம் - என்று நம்மாழ்வார் சொன்னாரே அது போல அடியார்க்கு நீ வேறு ஒன்றைக் கொடாதே - உன்னையே கொடுக்குமவனாதலால், உன்னையே வேண்டி வந்தோம். அதுவும் உன்னாலேயே கொடுக்கப்பட வேண்டும். அதனால் அருந்தித்து வந்தோம்- பறை என்கிறதை அவர்களின் அந்தரங்க எண்ணத்தை "சிற்றஞ் சிறுகாலே" என்கிற பாட்டில் சொல்லுகிறார்கள். உன்னை அருந்தித்து வந்தோம்-என்பதே இப் பாட்டின் ஜீவ பதங்கள். நம்மாழ்வார்-திருமால் வந்து என் நெஞ்சு நிறையப் புகுந்தான்-ஒரு மா நொடியும் பிரியான் வாழி மனமே—கை விடேல் உடலுமுயிரும் மங்க வொட்டே.

தூமனத்தனாய் பிறவித்துழதி நீங்க-என்னைத் தீ மனங் கெடுத் தாய்-உனக்கென் செய்கேன் என்சிரிதரனே (2-7-8) உன்னை நான் அடைந்து விட்டு-நீ "இவன் என்னைச் சேர்ந்தவன் இவனுக்கு நம்மை விட்டால் புகல் இல்லை." என்று சொல்லும் தாஸ்ய உள்ளம் படைத்தவருக்கு பகவான் அருள் செய்கிறார். கர்த்ருத்வம் என்கிற விரோதியையும் ஒழித்து-தான் ஈஸ்வராதீனம் என்கிற ஸ்வரூப ஞானத்தையடைந்து-அந்த ஞானத்தினாலே நாராயணனை

தனது ஆஸ்ரயம் என்று விச்வசித்து-ஈஸ்வரன் ஸர்வ அந்தர்யாமி யாக ஒருவனைப் ப்ரேரணை செய்து-செய்யச் சொல்லி - அந்த ஈஸ்வரனே பிரவர்த்திக்கிறான்-பலன் கொடுப்பதும் - ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் ஆகிய முத் தொழில்களையும் செய்பவன் அவனே-எஜமானனுமும ஸஹ காரியாயும்-கருணைசெய்யவேண்டிய நியமங்களை யுடையவனாக பகவான் இருக்கிறான். தன்னால் வரும் நன்மை விலைப்பால் என்றும் பரமாத்மாவே முலைப்பால் தருப வனாக - ஈஸ்வரனையே நம்பி தனது விடுதலைக்கு ஹேதுவாகிறான், நாளடைவில் விசுவாசம் பக்தி பிரபத்தியாகப் பரிமளித்து-பெருமாள் பாதங்களையே பக்தி பிரபத்தியால்-கடைசி எல்லையாக-வேறு பயனில் இச்சை யில்லாமல்-ஈஸ்வர பராதீன வாழ்க்கையை நடத்துகிறான், பிறந்த க்ஷணத்திலிருந்து, எம்பெருமான் அதிகாரி யாய் சேதனனை ஸ்வீகரிக்கிறான். பிராப்ய பிரதி பந்தங்களைச் சொல்லி-பிராப்ய பிரதி நிவிருத்தியைச் செய்து-நிர்பரத்வம் அனுஸந்தானம் செய்து - சரண்ய ருசி கொண்டவர்களாக பிராபக ஸ்வரூப நிரூபணம் செய்து ஈஸ்வர அபிமானிகளாக வாழ வேண்டும் என்பதை ஆய்ச்சிறுமிகள் காட்டுகிறார்கள்.

பகவானும் ''ரக்ஷா பேக்ஷாம் ப்ரதீக்ஷதே'' - என்று சொல்வதால் - எம்பெருமான் ஜீவனை அழுக்கைப் போக்குவதற்கு கழற்றின ஆபரணத்தைப் போல ஸ்வீகரிக்கிறான். பரா சராதிகள் பகவானுடைய கருணையைப் பலவிதமாகப் புகழ்ந்திருக்கிறார்கள், கருணை ஒன்றினால் எங்களை அருள் புரிய வேண்டும் என்கிறார்கள். இந்த பாரதந்திரிய பிரார்த்தனை சேதனனுக்கு இயற்கையான ஸ்வரூபம். அதே போல ஸர்வ ரக்ஷகத்வமும் எம்பெருமானுக்கு இயற்கையான ஸ்வரூபம் என் மனம் தெளிய வேண்டும். ஆதலால் சேதனனுடைய க்ருத்யம் ஒன்றும் பலஸாதனமாக மாட்டாது. பக வானுடைய பரமசேதனனுடைய நினைவே பல ஸாதனம் என்னும் ஸத் ஸம்பிரதாயார்த்தம் இங்கு சொல்லப்படுகிறது. அவனுடைய கிருபை தான் அவனோடு பரம ஸாம்யத்தைக் கொடுக்கும். நம் பிறவி அவனை அகற்றும். அவன் பிறவி அணுகுகைக்கு உடலாம். விபவத்தின் சிறப்பு இதனால் சொல்லப்படுகிறது. நம் பிறவி அவனைப் பெற்ற தேவகி வாசுதேவர் போன்றவர்களின் காலில் விலங்கு பட்டது படும். அதற்கு மாறாக அவன் பிறவி அவ் விலங்கைத் தீர்க்கும். அதனால் ஓர் இடத்தில் பிறந்து ஓர் இடத்தில் வளர்ந்தான். இதனாலே அவன் இரு குலபதியாக ஆனான்-யாதவனும் - கோபத்வமாயும் ஏக காலத்தில் ஆனான், யது குலோத்பவன் என்றுசொன்னரிஷி தானே-கோபாலன் யாதவ குலத்தை எடுக்கக் கடவன் என்றானிறே! - பட்டர் அவளுக்கு முலை

சுரவா நின்றதாகில் இவன் அமுது முலையுண்ணு நின்ருனுகில் உமக்கு சேதமென்? யசோதை பிராட்டியாகப் பூதனைத் தன்னைப் பாவித்து முலை கொடுத்தாள். அங்கு பால் வராதபடியால் வயிறு ஆராத கண்ணன் அழ - இவள் (யசோதை) முலை கொடுத்தாள். இவள் பக்கல் பிள்ளைத் தனத்தில் தப்பாமல் அடங்கி ஒடுங்கி நடந்தானே-எம்மாத்திரம் மாயன் !

காளியன் மடுவில் குதித்து எழுந்தபோது-யசோதை ''தன் மகனுகக் கண்டு எடுத்தாள்'' அசேஷஜகத்திற்கு சாஸ்தாவான வஸ்து இவள் தாம்பால் கட்டவும அடிக்கவும் நியமிக்க லாய்த்திறே ! ஆனுல் தேவகிக்கு இவனை மகனுகப் பெற்றது. பெற்றவளுக்கு இழவானது, நந்தன் பெற்றனன் பாக்யம்-திருமுலை கொடுக்கும் போது-பகவானின் திருநெற்றியில் சாத்தின சுட்டியி லசைவையும் முறுவலையும் கண்டு-தகப்பனைக் கொண்டான் என்று அகவாய் பணைக்கும், அப்போது வாயில் விரலைப் போட்டுச் சொன்ன மழலைச் சொற்கள் யசோதை கேட்க தேவகி புலம்பி ளுளே-பாக்ய ஹீனையான தேவகி அழுதாள் நானிழந்தேன்-பாக்ய வதி யசோதை அவள் அதைப் பெற்று பூர்ணையாளுளே ! என்ன நோன்பு நோற்ருள் கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள்! அதே போல-ஞாலத்தில் புத்திரனைப் பெற்ருர் நங்கைமீர் நானே மற்ருருமில்லை கௌஸலை நோன்பு நோற்று நான்கு புத்ரர்களைப் பிறப்பிவித்தாள்.

ஒளித்து வளர - பரம புருஷன் உள்ளே யிருக்க ''இவ னில்லை'' ''இங்கில்லை'' என்று எழுத்திடுமவன். யசோதை பிறர் களுக்கு அஞ்சிப் பதில்சொன்ளுல்-பிரஜை சும்மாயிருக்குமோ? பரம பதத்தில் அஸத் கல்பராவர்கள் அந்தர்யாமியாய் முகம் தோற் ருதே - நின்று இரு தலையையும் நோக்கித் தெளிவு பிறந்து - ''அம்மே'' என்ருல் ஏன்? என்கைக்குப் பதில் கிடைக்கிறபடி-அதா வது இவனது அமானுஷ்ய செய்கைகளே அவளுக்கும் பிறர் களுக்கும் தான் அவாப்தஸமஸ்த காமன் என்று காட்டிக் கொடுக் கும் - அதாவது ஸத்ய ஸங்கல்பன்-நினைத்ததை செய்து முடிக்கிற வனும், வருத்தமும் தீர்ந்து-கேவலரைப் போல துக்க நிவ்விருத்தி மாத்திரமே அன்று ; மகிழ்ந்து - அனுபவ காலத்திலே ஹர்ஷம் கனக்கவுமிருக்கும் தூயமுதைப் பருகிப் பருகி - கிருஷ்ணனு ஸந்தானம் தித்திக்குமிறே. ஐஸ்வர்யம் ஆனந்த ஹேது-இசை மாலைகளை ஏத்தி மேவப் பெற்றேன்-வெய்ய நோய்கள் முழுவதும் அகன்றன. விரோதி நிவிருத்தியும் - அபிமத ஸித்தியும் ஒருங்கே ஏற்பட்டது. அநிஷ்ட நிவிருத்தி இஷ்டப் பிராப்தி இரண்டும் சொல்லப்பட்டது.

திருத்தக்க செல்வமும்-பகவத் பாகவத ஆச்சாரிய கைங்கர்யத்திற்கே யாம் செல்வம். சுபிட்சம் மீண்டும் எங்களுக்கு வர வேண்டும். மழை பெய்ய வேண்டும் பறை தந்திட்டாயாகில் அதைப் பெற்றுச் செல்வம் வருலதைப் பாடி உன் திருவுள்ளத்தை உகப்போம்.

இங்கு எம்பெருமானின் ஸ்வரூப ரூபகுணகண-ஆயுதாதிகளை யெல்லாம் அநுபவித்து இப்பாசுரத்தாலே அந்த ஆராதனத்தை நன்று நடத்தியருள வேண்டுமென்று அபேஷித்ததாம்.

---

**ஸ்ரீ அழகியசிங்கர்:—**

கிருஷ்ணனுடைய அவதரர ரஹஸ்யம் ஒருத்தி மகனாய்... என்கிற பாட்டில் சொல்லப்படும். உன்னைத் தர வேண்டும். அது தான் நீ அளிக்க வேண்டிய புருஷோர்த்தம் என்கிறார்கள்.

**ஸ்ரீமதாண்டவன்.—**

யசோதை பெற்றாள் என்று பெயர் வரும்படி - கம்சன் திருஷ்டியில் ஒளித்து மறைந்து வளர; அதைப் பொறாமல் கம்சன் அழிக்க விரும்பினான். மறைந்து நீ எங்களுக்கு அருள் செய்ய வேண்டும். ஆஸ்ரிதர்களின் வயிற்றில் கம்ஸன் நெருப்பை வைத்துக் கொளுத்த அதை பகவான் அவன் வயிற்றில் வைத்தான். அதனால் நெருப்பென்ன நின்ற நெடுமாலே, அதாவது வினை விதைந்தவன் வினையறுப்பான்; கெடுவான் கேடு நினைப்பான். இவ்விதமாக துஷ்டர்களை சிக்ஷித்து, அவர்களின் கெட்ட எண்ணங்களை வீணாக்குபவனே. அதுபோல திருநாம பாராயணத்தினால் நல்லவர்களைக் காப்பாற்றுகிறான். அதனால் கஞ்சன் கருத்தைப் பிழைப்பித்து - அவன் நினைத்தது போல் நடக்க வொட்டாமல் செய்தான்-தவிர்க்க-பிழைத்திட; தேசிகன் சொன்னார்-''பிழைத்திட'' கண்ணன் உயிர் வாழ - கம்ஸனின் எண்ணம் நிறைவேறாமல் போக: நெடுமாலே-ஆஸ்ரிதர்களிடம் வ்யாமோஹம் கொண்டவன்.

ஸ்வாபதேசம்:—திருமந்திரத்தில் பிறந்து, த்வயத்தில் வளர்ந்து ஒருத்தி மகனாய்ப் பிறந்து, ஒருத்தி மகனாய் வளர்ந்திட; அன்று நான் பிறந்திலேன், பிறந்த பின்பு மறந்திலேன். நின்றது மிருந்ததும் கிடந்ததுமென்னெஞ்சுளே-திருச்சந்த விருத்தம் - 64 (திருமழிசைப் பிரான்), அதே கருத்து - நம்மாழ்வார் இந்த அந்தாதியில் ''பத்தறிந்தார் பிறந்தாருயர்ந்தே-''(10-10-10)

இதே கருத்தை தேசிகரும் ரஹஸ்யத்ரய ஸாரத்தில்- பகவானுக்கு சேஷபூதம் என்கிற ஞானம் பிறந்ததும்-அன்று தான் அவன் பிறந்தான். ரஹஸ்யமாக மந்திர ஜபம் செய்ய வேண்டியது. செல்வம் என்பது ஞானம். வேதம் சொல்லிற்று- ஸந்தமேநம் பவதி; அஸந் நேவ ஸபவதி அஸத் ப்ரும்மேதி வேத சேத்-அஸ்தி ப்ரும்மேதி சேத் வேத ஸந்தமேநம் ததோவிது:- பகவானை உணர்ந்தால், நீ உயிருடன் இருக்கிறவனாக ஆகிறாய். இதே கருத்து - திருச்சந்த விருத்தம் 77ல்-எட்டெழுத்து மோது வார்கள் வல்லர் வானமாளவே-என்றார் திருமழிசைப்பிரான்.

——x——

மாலே! மணிவண்ணா; மார்கழி நீராடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவனகேட்டியேல்
ஞாலத்தையெல்லாம் நடுங்கமுரல்வன
பாலன்னவண்ணத்து உன்பாஞ்சசன்னியமே
போல்வனசங்கங்கள் போய்ப்பாடுடையனவே
சாலப்பெரும்பறையே பல்லாண்டிசைப்பாரே
கோலவிளக்கே கொடியேவிதானமே
ஆலினிலையாய்! அருளேலோரெம்பாவாய். (26)

முதற் பாசுரத்தில் அவர்கள் பறை மட்டுமே வேண்டு மென்று சொன்னாலும்-இப்போது பறையைத் தவிர இதர அபிப்ராயங்களையும் சொல்கிறார்கள். நோன்புக்கு வேண்டியவை. பகவானே பலப்ரதனானபடியால் - நோன்பு பலித்து-பரம ஸாம்யாபத்தி யுடன் கிருஷ்ணனை ஸதா காணும் படிக்கும்-ஸதா சேவை செய் யும்படி வேண்டுகிறார்கள். அதற்கு திருநாமங்களை வாயாறச் சொல்லுகைக்கு ஹேதுவையும்-இடையர் பக்கல் உபகாரஸ் மிருதியையும் - நோன்புக்கு அங்கங்களாக வேண்டிக் கொள் கிறார்கள். சிரவணம் - மனனம் - நிதித்தியாஸம் - இத்யாதி களுக்கு அங்கமாகவும், உன்னோடு விரும்பிய கலவிக்கு அது (நோன்பு என்கிற ஹேது) அவிருத்தமாயிருக்கிறபடியால் கண்டு - இடையர் பக்கல் உபகார ஸ்மருதியும்-நோன்பிலே ப[illegible]ம் யிழிந் ததும் சொல்கிறார்கள். இவர்கள் அன்பு ஒரு பக்கமிருக்கட்டும்- கிருஷ்ணனுடைய வியாமோஹமும் கடல் போல அகாதமாயும் விஸ்தீர்ணமுள்ளதைக் கண்டு-வெட்கமும் சந்தோஷமுமான ஹர்ஷமும் கூடிச் சேர - அவர்கள் முதலில் மாலே-மணிவண்ணா - எங்களைக் காக்கும் திருமாலே-தேவாதி தேவா - உன் ப்ரீதியைக்

கண்டு-சரணாகத வத்ஸல; என்று சீதா பிராட்டி ராமனைச் சொல்லியது போல-கிருஷ்ணாவதாரத்திலே ஆஸ்ரித வ்யாமோஹத் தைக் குறிப்பிடுகிறார்கள். இத்தலை (சீதை) ஒரு மாஸம் ஜீவியேன் என்னில் - அத்தலை (ராமன்) நஜீவேயம் க்ஷணமபி என்றானிறே, வாரிக்கொண்டு என்னை விழுங்குவன் காணில் - என்கிற அளவு ஒரு பக்கம்; அவன் தலையில் என்னில் முன்னம் பாரித்துப் பருகினானிறே—; எனைத்தோர் பல நாளழைத்தேனிறே - இவர் களது - என்றன் கருத்தையுற வீற்றிருந்தாளிறே அவனது, ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஒருத்தி மகனாய் வளர்ந்தது இவர் களுக்கிறே. அதனால் திருமால்-மாலாய்ப் பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை-பெண்களைப் பிச்செறும்படி வ்யாமொஹித்து தன்னொடு ஒரு ஸாம்யாயபத்தியைத் தானே உண்டாக்கும் - அதனால் மன்றில் குரவைபிணைந்த மால் என்னை, மால் செய் தான். அதற்கு வ்யாக்யானம்—தெளிவுடையார் பெண்களை நடுச் சநதியிலே வைப்பார்களோ? மாட்டார்கள். அதாவது இப் கேட்பது வழுவிலா அடிமை செய்ய வேண்டும்; என்பது, பக வான் நினைப்பது அனந்தன் வைநதேயாதிகளுக்கும் அடிமை செய்ய இடங் கொடேன்—என்றும்; இந்தப் பெண்கள் ''நானே ஸர்வம் கரிஷ்யாமி'' என்று சொல்லிப் போந்த இளைய பெரு டாளைப் போல என்று சொல்ல; ஸர்வ சேஷியான உன்னைக் காண ஆசைப்பட-அதற்கு முந்தியாக – அவனுடைய பாரிப்பு ஸத்தாப்ரயுக்தமிறே-அதனால் முற்றப் பருகினான். எங்களை நிஸ் ஸேஷமாகப் பருகினான்-இதனால் சேதன லாபம் பெருமாளுக்கே என்று விளக்கினான்.

மணிவண்ணா - மஹா அழகு ஸம்பத்து பெற்றவன் தாமரை யோனியில் 'பிறந்தவளே. தாமரையை விட்டு வருகிறது இவ் வடிவைக் காண; பனிமலராள் வந்திருக்கும் மார்வன் நீலமேனி வண்ணன்-அதோடு மில்லாமல்-முந்தானையில் முடிந்து பெண்க ளுக்கு அடக்கியாளலாம் படியிருக்கிற ஸௌலப்யத்தைச் சொல்லு கிறதாம். அதனால் மணியை வைத்துக் கொள்வது போல ஸாள க்ராமத்தைத் துணியில் முடிந்து கொள்வது போல இவனையும் புடவையில் முடித்து வைத்துக் கொள்வதாம்.

சரி - நீங்கள் எதற்கு வந்தீர்கள்?என்று கண்ணன் கேட்க- மார்கழி நீராடுவான்-மகிழ்ந்து; எதற்காக - நீ எங்களுக்குப் பறைதற; அதற்காக மேலையார் (உத்தம புருஷர்கள்) செய் வனகள் (அனுஷ்டிக்கும் நியம முறைகளை) வேண்டுவன (வேண்டியவற்றை) கேட்டியேல் நீ கேட்பாயாகில் ஞாலத்தை

(உலகத்தை) எல்லாம் நடுங்க முரல்வன (ஒலி செய்யும் கடலைப் போல) பால் அன்ன வண்ணத்து உன் பாஞ்ச சன்யமே, போல்வன (ஒத்திருப்பதுமான) சங்கங்கள் (சங்குகளையும்) போய் பாடு உடையன (இடமுடையனவும்) சாலப் பெரும பறை (களையும்) பல்லாண்டு இசைப்பார் (திருப் பல்லாண்டு என்று மங்களாசாஸனம் செய்பவர்கள்) கோலம் விளக்கு, கொடி (த்வஜம்) விதானம் (மேற் கட்டிகளையும்) (நோன்புக்காக) நீ எங்களுக்கு அருள். ஆலினிலையாய் ஆலை இலையில் பிரளய காலத்தில் பள்ளிக் கொண்டவனே.

கண்ணன் முதலில் விளையாடினுன்-யாருக்காக இந்த நோன்பு யார் செய்யும் காரியம்? அதற்கு அவர்கள் மேலே யார்-அனுட்டான சிலர்கள் செய்வது நிதித்யாஸம் அது போல தர்மஜ்ஞ ஸமய: ப்ரமாணம் வேதார்ச - சிஷ்டர்கள் செய்யும் விரதமே எங்களுக்கும் என்று சொல்ல - சரி - என்ன வேண்டும் என்று கண்ணன் கேட்க - ஞாலத்தையெல்லாம் நடுங்கச் செய்யும் சங்கங்களையும் - திருப்பள்ளி எழுச்சிக்கு சங்குகள் வேண்டும் - புறப்பாட்டுக்குப் பறை வேண்டும் - பல்லாண்டுபாட - அரையர் வேண்டும் - எல்லோருக்கும் மங்கள தீபங்கள் வேண்டும் - நாங்கள் திரளாக வருகின்றோம் என்று அறிவிக்க கொடியும்; பனித்தலைமேல் விழாது எங்களைக் காக்கும் விதானமும் ஆகியவைகளை நீ தான் தந்தருள வேண்டும்,'' என்கிறார்கள். ஆலினிலையாய் - உன் சிறுவயிற்றிலே பிரளய காலத்திலே எங்களைத் தாங்கினுயே - பெரிய லோகங்களையும் தாங்கினுயே - அகடிதங்களைச் செய்யும் உனக்கு இவை அரியவையோ? - வையம் ஏழும் கண்டாள் - இதிலிருந்து ஸர்வ சக்தித்வம் - மாம் என்பது; மாலே மணிவண்ணு - ஸௌலப்யம், அஹம் சப்தார்த்தம், அருள் - அருளவேண்டும். இவைகளை நீ எங்களுக்குக் கொடுக்க சாமர்த்திய முள்ளவன்.

காமீஸ்வதாம் பஸ்யதி - என்கிற நியாயமாய் இவர்கள் நம்மை அனுபவிக்க வந்திருக்கிறார்கள் - திருவுக்குச் சமமாக இவர்களும் நம் மனுபவம் செல்வம் பெற இவர்களின் எண்ணம் - என்று புரிந்த கொண்ட கண்ணன் வ்யாமோஹம் கொண்டான். பெரியோர்களின் ஒழுக்கத்தை அப்யஸிக்கும் இந்த ஆய்ச் சிறுமிகளை நீ அருளவேண்டும். ஆறு கருவிகள்: முதல் மூன்று ஒலி செய்யும் கருவிகள் - சங்கம், பறை பல்லாண்டிசை, பின் மூன்று விளக்கு - கொடி - விதானம்.

சிஷ்டாசாரம் - மந்திராஸனம், ஸ்நாஞஸனம், அலங்காரா ஸனம், போஜ்யாஸனம், புநர் மந்திராஸனம், பரியங்காஸனம் என்பதாம். உட்பொருள் - ஆசார்யனை அண்டி - திருமந்த்ரம் த்வயம் சர்ம ஸ்லோகம் கற்று உன்னைப் பூஜிக்க வேண்டும்.

**அழகியசிங்கர்:**— நீ அநேக ரூபங்கள் எடுத்து உன்னையே ஒவ்வொருத்தருக்கும் தரவேண்டும். வத்ஸாபஹாரத்தில் (பிரும் மாவிஞல் ஏற்பட்ட சமயம்)— நீ பல ரூபங்களை எடுத்தாயே— என்று சொல்ல; கிருஷ்ணனும் "அப்படியே செய்கிறேன்— ஆகட்டும்"— என்முன். மணிவண்ணு— அஞ்சன வண்ணனைப் பாடிப்பற- தூமணிவண்ணனைப் பாடிப்பற (பெரியாழ்வார்) என்ப தாய். விநாகிருஷ்ணே ந காந்தீ? இதற்கு தேவதைகள் அனுகூலம் செய்யவேண்டும் என்றனர்.

**ஸ்ரீமதாண்டவன்**

மாலே-ஆஸ்ரிதபிரியனே, நோன்புக்கு வேண்டிய உபகர ணங்களைச் சொல்லி, அவைகளைக் கண்ணன் ஸ்ரீ ஆண்டாளுக்குத் தருகிருன். மேலையார்-சிஷ்டர்களின் ஆசாரம்-வகுத்துப் போன வழி-சங்க காலத்திலே தமிழர் தை நீராடல் செய்து வந்தது போல, மார்கழி நீராடல். சங்கு ஓங்காரத்தையும், பறை நாதத் தையும், பல்லாண்டு-வேதத்தையும், விளக்கு-ஞானத்தையும் கொடி விதானம் கைங்கர்யத்தையும் குறிக்கும். ஓங்காரமென்பது பிரணவ ஸ்வரூபம், நாதபரிச்சயமும் வேதங்களை அத்யயனம் செய்யும் பிரபன்னர்களின் சேர்க்கையும். இவற்ருல் உண்டாகும் ஞானம், அந்த ஞானத்திஞல் பகவத் பாகவத கைங்கர்யங் களும் வேண்டப்படுகின்றன பள்ளி எழுச்சிக்கு சங்கு ஒலிக்க, பறை புறப்பாட்டுக்குக் கொட்ட, வருகிறவர்களை எதிரே வர வேற்க. பல்லாண்டு பாடுபவர்கள் வர, ஒருவருக்கொருவரின் முகம் தெரிய-தீபங்கள் வேண்ட, தூரத்திலேயே நாங்கள் வரு கிரோம் என்பதைத் தெரிந்து கொள்ள, கொடி வேண்டும். பனி தலையின் மீது விழாமல் காக்க, விதானம் (மேற்கட்டி) வேண்டும். நம்மாழ்வார் 9-6-10 திருவாய்மொழியில், "எனக்கு பரமபதம் வேண்டாம். நீ எதை இச்சைப்பட்டுக் கொடுக்கிருயோ, அதுவே எனக்குப் புருஷார்த்தம்," என்று சொல்ல, "வாரிக்கொண்டெ ன்னை விழுங்குமவன் காணிலென்று ஆர்வுற்ற வென்னை யொழிய என்னில் முன்னம்"-; 9-8-2ல் "வடிவேல் தடங்கண் மடப்பின்னை மணளன் நெடியானுறை சோலைகள் சூழ் திருநாவாய், அடியே னணுகப் பெறுநாள் எவை கொலோ" என்முர் அத்தனை ஸௌலப்யம் பகவானிடம்.

இதே கருத்தை, தேசிகர் தேவநாத ஸ்தோத்ரத்தில் சொன்னார். பகவானை முந்தானையில் முடிந்துக் கொள்ளலாம் எனும்படி அத்தனை சௌலப்யம். சாளக்ராம சிலையை முடிந்து கொள்வது போல-ரத்னத்தை முடிந்துக்கொள்வது போல-''மணிவண்ணா', என்கிற சப்தத்திற்கு அர்த்தம், ஆஸ்ரிதர் சுலபன்.

ஆசார்யரும் பகவானைப் போல கருணை, ஸௌலப்யம் உள்ளவர். கண். சிறுத். 8ல் ஆயிரமின்றமிழ்ப் பாடினான், அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே. (ராமானுஜ நூற்,-நாட்டினான் தெய்வமெங்கும்) நம்மாழ்வார் - உண்ணாது உறங்காது-சமுத்திரத்தைப் போல - தூங்காமல் பெருமாளையடைந்தனர் - கங்குலும் பகலும் 7ம் பத்து 2-திருவாய்மொழி ; பகவானுக்கு லக்ஷ்மீ பதித்வம் - அசாதாரண அடையாளம்.

x ——

கூடாரை வெல்லும் சீர்கோவிந்தா! உன்தன்னைப்
பாடிப்பறை கொண்டு யாம்பெரும் சம்மானம்;
நாடு புகழும் பரிசினால் நன்றாகச்,
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே
பாடகமே என்றனைய பல்கலனும் யாம் அணிவோம்;
ஆடை உடுப்போம்; அதன் பின்னே பாற்சோறு
மூட நெய்பெய்து முழங்கைவழிவாரக்
கூடி இருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய். (27

கூடாரை வெல்லும் சீர்க்கோவிந்தா உன் தன்னைப் - கூடாரை - தன் அடிபணியாதவர்களையும் வெல்லும் சீர்-வெல்லக் கூடிய சிறப்பான அழகு, கல்யாண குணங்களையுடைய கோவிந்தா-(கண்ணா) - உன் தன்னைப்பாடி (வாயால் பாடி மனத்தினால் சிந்தித்து - தேகத்தினால் நமஸ்கரித்து) பறை கொண்டு - அதனால் சந்தோஷ மடைந்த நீ எங்களுக்குப் பறை தந்து - அந்தப் பேற்றைப் பெற்றுக்கொண்டு - யாம் பெறும் சம்மானம் - உனது மனச் சந்தோஷம் - நாடு புகழும் பரிசினால் - நாட்டார் புகழும் படியாக சூடகம் (கையிலணியும் ஆபரணம்) தோள்வளை, தோடு செவிப்பூவும், பாடகம் (காலில் அணியும் கடகமும்) என்றனைய பல்கலனும் - இன்னும் பல ஆபரணங்களையும் (நீ நப்பின்னைக்கு அளித்தாயே - எங்களுக்குஅதுபோல) அவைகளை நீ அளிக்க - நாங்கள்நன்றாக அணிவோம். அதன்பின் ஆடையுடுப்போம்-அதன்

பின்னே பால்சோறு மூட. நெய் பெய்து (கை பூராவும் மறையும்படி நெய் பரிமாறி) முழங்கை வழி(ந்து) வார - இவைகளை (நீயும் நாங்களுமாகக்) கூடி-யிருந்து குளிர்ந்து ஏல் ஓர் எம்பாவாய் - சாப்பிட்டு மனம் நாங்கள் குளிர வேண்டும்.

கண்ணன் அருளினன் —

"பறை-ஜாம்பவான் எனக்குக் கொடுத்திருந்த பறையைத் தருவேன் - இன்னும் லங்கா விஜயத்தின் போதும் - உபயோகப் பட்ட சாலப் பெரும் பறையும் தருகிறேன். கோல விளக்கு, கருடக் கொடி, எமது கீர்த்திகளைப் பாடும் ஆழ்வாராதிகளையும் உங்களுக்குத் தருகிறேன் அனந்தனே உமக்கும் விளக்காகவும் விதானமாகவும் விருக்கட்டும்," அதற்கு அப் பெண்கள் "இன்னும் சிலவஸ்துக்கள் இருக்கின்றன-அவைகளையும் தரவேண் டும்" என்று கேட்க "அவை யாவை?" என்று கிருஷ்ணன் கேட்க - இவர்கள் ஒவ்வொன்ருகச் சொல்கிருர்கள். கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா இந்த கோவிந்த நாமம் தூரத்திலிருப்பவர் களையும் தன் மதம் பிடித்தவர்களையும் ஒன்று சேர்க்கும் திருநாமம். நாம வைபவம் திரௌபதி-துவாரகாபுரிவாசா என்றனள், பிரும்மா. இந்திரன் முதலியோர் கிருஷ்ணனை நமஸ்கரிக்காமல்-ஈஸ்வரோஹம் என்கிற இறுமாப்பினுல் இருந்தனர் - காமதேனு தன் பிரஜைகளுக்கு இரங்கி குன்று தூக்கிய பிரானை - 'கோவிந்தா'' என்றழைத்து-தனது பாலினுல் அபிஷேகம்செய்தது; ஆயர் குலம் இதனுல் பெருமை பெற்றது, விரோதி-மித்ரன்-ஸுஹ்ருத்-ஆஸ்ரிதர்- யாவருக்கும் பாரபக்ஷமின்றி கோவிந்த நாமம் பெருமாள் அருளைக் கொடுக்கவல்லது அத்தகைய கோவிந்த நாமத்தினுல்-பாண்டவர் ஜயமடைந்தனர், அதுபோல எங்களுக்கும் நீ அனுக்ரஹிக்க வேண்டும். பரத்வம் - சௌலப்யம் சௌசீல்யம்-ஆநிரும்ஸம்-கருணை-தயை எல்லாம் தரக் கூடிய கோவிந்த நாமம் உன் தன்னைப் பாடுவதால்-எங்கள் துயர் அறும்.

பாடகமே-பாடக மென்னும் வட சொற் சிதைவு, நீ-இந்த ஆபரணங்களை உன் கையினுல் எங்களுக்குப் பூட்ட அதே மாதிரி-புது ஆடைகளையும் எங்களுக்கு நீ உடுத்த நாங்கள் மகிழ்ந்து உனக்கு அளித்த பின்பு பாற்சோறு சாப்பிடுவோம். அதனுல் கூடியிருந்து - குளிர்ந்து என்றனர்-அடுத்த பாட்டில் கானம் சேர்ந்து உண்போம் என்பதோடு குளிர்ந்து அன்வயம்.

கூடாரை-பரசுராமரையும் சொல்லும், பெருமாளை வெல்ல நினைத்து-க்ஷத்ரிய மகனு-அல்லது பரம்பொருளா எனச் சந்தேகம் தீர-தன் கையில் வில்லை அவர் ராமன் கையிலே கொடுத்து "நான் பிராம்மணன்" என்று சொல்லி நமஸ்கரித்துப் போனுன். பரத்வம்

சொல்லியாயிற்று. ராவணன் வணங்காமுடியனை- "இன்று போய் நாளை வா என்று "சொன்னவிடத்தில் பெருமாளுக்குள்ள தயையைச் சொல்லியது. விபீஷண சரணாகதி கூடாரை (ப்ராப்ய ப்ரதிபந்தகங்களைப் போக்கி, அருள் செய்திடுமாதலால்) வெல்லும். கூடுவேன் என்று விபீஷணனுக்கு வில் வெட்டியிற் செய்தது. ஏற்கனவே கூடினவர்களான சுக்ரீவன் ஹனுமன் இவர்களைக் கொண்டு-அபிஷேகம் செய்து பிராண ரக்ஷணமும் பண்ணிற்று. கூடாரை கூடோம் என்று சொல்பவரையும் (துரியோதனாதிகளை யும்) கூடுவோம் என்பாரையும் வெல்லும்-ஒன்றுக்கு வெல்லு மானால் - இன்னொன்றுக்கு வெல்லுமோ? அர்ஜுனன் கூடுவோம் என்று வந்து சரண் புகுந்தான்-அதனால் நீ சொல்லிற்றுச் செய் வேன்-என்று சொல்லி "எல்லிப் பகலெண்ணாது"-எப்போதும் ஸர்வ காலமும் தூத்ய ஸாரத்யம் செய்தது. அதாவது கூடாதரை பலம் சௌர்யத்தினாலும், கூடுவோரை சீலத்தாலே வெல்லும். சீர்கின்ற குணங்கள் - அழகு உயிர்க் கொலையாக்கும். வெல்லும் சீர்-ருக்மிணிப் பிராட்டியின் காதல் கடிதம் श्रुत्वा गुणान् - ஸ்திரித்வ அபிமானத்திலே - வாசற்படி தாண்டாதாரையும் அவர்களின் அபிமானத்தை முறித்து தன் வாசலிலே வரப் பண்ணின குணம். இவ்விதமானால்-தேஹாத்மாபிமானிகளை தலை சாய்ப்பிக்க சொல்ல வேணுமா? நல முடையவன் (ஸர்வ கல்யாண குணாத்மகன்-ஹேயப்ரதிய நீகபடன் (உபயலிங்கம்)-அப்பேற்பட்டவனை தொழு தெழு-மனமே என்றார் நம்மாழ்வார். ஸர்வக்ஞரை - எத்திறம் என்னப் பண்ணும் (ஸௌசீல்யம்), அக்ஞரை - ஸர்வக்ஞ ராக்கும் सर्वं खलु ब्रह्म - உபாதான காரணம், நிமித்தம் ஸஹகாரி எல்லாம் அவனே.

**கோவிந்தா** ரக்ஷிப்பவனாயினும் - பசுக்கூட்டம் பின்னே செல்லும் எளிமைத்தனம். பசுமேய்க்கப் போனேன் என்று கண் ணழிவு சொல்லலாம்படி - ஒதுங்க-நிழலாயிருப்பது, ஸாமான்ய ரக்ஷணம-பசுக்கள்; விசேஷ ரக்ஷணம் திரௌபதி-"சேரோம்" என்று சொல்லத் திறமை பெற்ற திர்யக்குகளோடும் (ஜடாயு, யானை) பழகும் நீர்மை. கோவிந்தன் குழல் ஊதும் போது-பெண் களின் புணர்ப்பைக் குழலிலே யிட்டுப் பாடி-எங்களைத் தோற் பிக்கையன்றிக்கே, எங்கள் வாசல்களிலே பாடி, ஊருக்குப் பறை அவர்களுக்கோவெனில் பிராப்ய மிதே. கோபிகைகளுக்கு பிரண யித்வம். அவனுக்கு ஸ்வரூப நிபந்தனம்.

பாரோர் புகழ-நாடு புகழும் பரிசினுல்-ஸ்ருசயன்வர-பிரபுவும் திரௌபதி அர்ஜுனன் சத்யபாமையுமாக - கால் மேல் காலே ஏறிட்டு நிற்க-அவனே வரும்படி உள் அழைத்து ''வா'' என்று சொல்ல-அவனும் அப்படியே போய், துரியோதனனுக்கு ''நீ அழிவாய்-கெடுவாய்'', என்றனன். அவர்களிருப்பைக் காட்டியது ஆச்சரியம் இதே மாதிரி சுக சாரணுதிகள் ராமனைப் பற்றி ராவண னிடம் சொன்ஞர்கள். இதனுல் நாடு புகழும்படி நப்பின்னையை அடைந்தது. சத்யா என்பது பாகவதத்தில் இவளுக்குக் கொடுத்த பெயர். ஏழு எருதுகளைச் சுல்கமாக அவளது பிதா நக்னஜித் வைத்தார். ஏழு உருவங்களாகத் தன்னை ஆக்கிக் கொண்டு கொண்டு கிருஷ்ணன் அவைகளை நிரஸனம் செய்தார். அதனுல் உன் தன்னைப் பாடுவோம், நாடு புகழும் பரிசினுல்-கூறை (ஆடை) உடுப்போம். கோவிந்தா உன்னைப் பாடிடுவோம். அரையில் பீதகவண்ணன் வாடை கொண்டு-அவனைப் போல நாங்களும் நோன்பு சரிவர நிறைவேறப்பட்டதால்-ஆடை உடுப் போம்பால் சோறு கூடியிருந்து சாப்பிடுவோம். பல்கலனும் அணி வோம். அதாவது கிருஷ்ணனைப் பற்றினவர்க்கு ஸர்வவித லாப முண்டு-நெய் வழிய - நெய்யிடையிலே சோறு உண்டோ என்று தடவி எடுக்க வேண்டும் படியிருக்கை.

ஸம்மானம்-ஸாம்யாபத்தி இறுதியிலே நித்யசூரிகள்-முமு க்ஷுக்கள், திவ்ய மஹிஷிகள் எல்லோரும் மெச்சும்படி பெரிய வெகுமதி-அது மாத்திரமா-கிருஷ்ணன் கூடவே எப்போது மிருப்பது-கூடுவார்களையும் கூடாதவர்களையும் ஒருமிக்க வெல்லும் சீர், கோவிந்தா, அதாவது கூட விருப்பமில்லாதவர்களை நீ வெல்ல முடியும். கூடினவர்களுக்கு நீ தோற்று நிற்பாய் எனக் கருத்தாகும். மேலும் மோக்ஷம் தான் எங்களுக்கு வேண்டிய புரு ஷார்த்தம். நீ அவதாரம் எடுப்பது சம்சாரிகளை உன் வசப்படுத்து வதற்காக. நாங்கள் உன்னை யடைந்து உன்னுல் உபாயத்தை அனுஷ்டித்து விட்டோம். இதனுல் நாங்கள் பெறும் சம்மானம் லோகவிலக்ஷணம், கோவிந்தனைக் கூறியதால் அந்தர்யாமியை ஆராதனம் செய்வதாகும். குளிர என்பதால் பிரும்மத்தினிடம் ஜீவனை நியாசம் செய்தல் அதனுல் பரமாத்மாவை அனுபவித்தல். எம்பெருமானுடைய ஸம்ஸ்லேஷம். இவ்விதம் சொன்ன ஆய்ச் சிறுமிகளுக்கு பகவான் ஸௌலப்யம் பரத்வம் கலந்த சொற்களைச் சொல்ல, அதற்கு அவர்கள் உபகாரஸ்மிருதி செய்கிறுர்கள்.

**அழகியசிங்கர்:**—பாஞ்ச ஜன்யம் - கோலவிளக்கு, கொடி விதானம் தருகிறேன்-என்று கிருஷ்ணன் சொல்ல - அதனுல் கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா வேதங்களால் போற்றப் பட்டவர். வெல்லும் சீர்-சிவதனுஷ்ஷை ஒடித்தவன்-மஹாவீரன்-மத்சித்தா:மத்கதப் பிராண:-குணமில்லாதவரை யார் நாடுவார் கள்-எதை வேண்டுவார்கள்? ஆடை உடுப்போம் - இத்யாதிகளைச் சொன்னது அவர்களின் திருப்தியைத் தெரிவித்ததாம்.

**ஸ்ரீ மதாண்டவன்:—**

கூடுவோரையும் கூடாதவரையும் நீர் வெல்வீர். அழகினுல் கூடுபவரையும், கூடாதவரை பலத்தினுலும் வெல்பவர். **सत्यं न् लोकान् जयति**—என்ருர் ராமன் ஸ்ரீ ஜடாயு விஷயத்திலே. பரசுராமர் விஷயத்தில் கூடாதவரை பலத்தினுலும் அழகி னுலும் குணத்தினுலும் வெல்வீர். லக்ஷ்மணனை குணத்தினுல் வென்றது. ஸஞ்சயனுக்கு துவாரகையில் தர்சனமளித்து வென்ருர். பரகால ஸ்வாமியின் உரையின்படி - பாற்கடலில் சர்க்கரையை மணலுக்குப் பதிலாக வைத்து, அதில் விளைந்த நெல்லை பாலில் வேகவைத்துண்டாக்கிய பாற்சோறு என்பர்.

இந்தப் பாட்டில் அவர்கள் - அர்ச்சராதி கதியைக் கேட் கிருர்கள். நோன்பால் அடையும் ஆத்மலாபத்தைக் கேட்கிருர்கள். பரமாத்மா பசுக்களாகிற ஜீவர்களை கருணையினுல் ரக்ஷிக்கும் கருணை ஸ்வபாவ முள்ளவன் பகவானையே உபாயமாகக் கொண்டு-நாமங் களைப் பாராயணம் செய்து அதன் பலன் யாதெனில் - சூடகமே (கையில் நற்குறியாக அணியம்படும் மஞ்சள் கயிறு (காப்புக் கட்டுதல்) அதாவது நியமத்தோடு விரதம் செய்வோம் என வேண்டிக் கொள்ளுதல்.

தோள்வளை-பஞ்ச ஸம்ஸ்கசரம் சங்கு சக்கரம் தோள்களில் பொறித்தல், நீயில் பொலிகின்ற செஞ்சுடராழித் திகழ் திருச சக்கரத்தின், கோயிற் பொறியாலே யொற்றுண்டு நின்று குடிகுடி யாட் செய்கின்ருேம். (பெரியாழ்வார்-திருப் பல்லாண்டு -இதைத் தான் ''முக்தி தானம்'' என்றழைப்பது.)

தோடு - எட்டெழுத்து மந்திரம் ; செவிப்பூவே - த்வய மந்திரம் ; சர்ம ஸ்லோகம்-பந்தக நிவிருத்தி அதாவது ஞானம், பக்தியை யேற்படுத்தி, வைராக்யத்தைச் சொல்லும். திருமந்திரம் ஜபிப்பதால், சப்த சக்தியாலும் அர்த்த போதனத்தாலும்

(ஸர்வரக்ஷகன்) என்பதால் - ஆத்ம ஸ்வரூபம் வரப்பண்ணுவதால் ஞானபரமாயிற்று.

த்வயம் - அனுஷ்டான ரூபமாகவுள்ள கைங்கர்யத்திற்கு வேண்டிய பக்தியைச் சொல்கிறது.

சர்மஸ்லோகம் - எதை விடணும் எதை பற்றவேண்டும் என்பதால் வைராக்யம்.

இதனுல் பஞ்சஸம்ஸ்காரம் சொல்லலாயிற்று. ஆடையுடுப்போம் - இறைவனுக்கு நாங்கள் அடிமை, பாற்சோறு - மூடநெய் - சேஷத்வ ஞானத்தினுல் நித்ய போக்தாவாகிற உம்மோடு, போக்ய வஸ்துக்களான நாங்கள், தாபதிரயம் ஒழிந்து பாரதந்திரிய விளைவினுல் யேற்படும் ஆனந்தத்தைப் பெறுவோம். இதனுல் விசிஷ்டாத்வைத சித்தாந்தம் சொல்லியாயிற்று. அணி, ஆடை என்று உருவகப்படுத்தியிருக்கிருர்.

---

கறவைகள் பின்சென்று கானம் சேர்ந்துண்போம்!
அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத்து உன்தன்னைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்;
குறை ஒன்றும் இல்லாதகோவிந்தா! உன்தன்னோடு
உறவேல் நமக்கிங் கொழிக்க ஒழியாது!
அறியாத பிள்ளைகளோம் அன்பினுல் உன்தன்னைச்
சிறுபேர் அழைத்தனவும் சீறி அருளாதே,
இறைவா! நீ தாராய் பறையேலோ ரெம்பாவாய். (28)

கண்ணன் அவர்களின் அன்பைப் பார்த்தான் உங்களுக்கு இவை மட்டும் போதுமா? இன்னும் ஏதாவது வேண்டுமா - என்று அவன் அவர்களைக் கேட்க - அவர்கள் பதில் சொன்னுர்கள்-''கண்ணு, பேறு உன்னுடையது.'' ''ஏதேனும் உபாயம்- நோன்பைத் தவிர ஏதாவது செய்திருக்கிறீர்களா?'' வென்று கண்ணன் கேட்க-அவர்கள் விண்ணப்பம் செய்கிருர்கள்- ''நாங்கள் கறவைகள் பின் சென்று வாழ்பவர்கள். எங்கள் ஸ்வரூபம் இது தான''-என்று சொல்லி, உபாய சூன்யத்தைச் சொல்ல ''ஆனுலும் நீ எங்களுக்கு தயை செய்ய வேண்டும்'' என்று நினைத்து போற்றியாம் வந்தோம் - எம்மேல் விழியாவோ - உன்னை அருந்தித்து வந்தோம் - என்று சொல்லி - மீண்டும்

பிராப்ய (அடைய வேண்டிய வஸ்துவின்) ருசியைச் சொல்லி - தங்களுடைய அகிஞ்சன்யத்தையும் உபாயமில்லாமையையும் - சொல்கிறார்கள், கிருஷ்ணன் பலவாறு யோசிக்கப்புக்க-அவர்கள் மீண்டும் சொல்கிறார்கள் - "அறிவு ஒன்றுமில்லாத ஆய்குலத்து மக்களில் நாங்களும் ஒருவர். குலத்துக்கு அறிவு உண்டாக வேண்டுமா-நீயே எங்கள் குலத்தில் மஹாப்பேறாக வந்திருக்க-அந்த இரக்க மனத்துடனே-நீ இரங்கி எங்களை அருள் செய்யவேண்டும்-அருளுக்குப் பிரதி பந்தகமாக விருப்பதையும் போக்கியருளவேண்டும். நீயோ ஸர்வக்ஞன்-நீயே சித்தோபாயம். எங்களுக்கு உன்னை அடைய யோக்யதை யிருக்குமோ-இல்லையோ தெரியாது, உன் சம்பந்தம் வேண்டுமென்று அருந்தித்து வந்தோமாதலால் - உன் தன்னை பிறவு பெறும் தலை பிறவியால் அடையப்பெறும் அளவு கொண்ட புண்ணியம் (பாக்கியத்தை) உடையோம் விதிவாய்க்கின் யார் தடுப்பர்? தடுக்கக்கூடும்? நீ எங்களுக்குக் கிட்டுவாய் என்று விஸ்வசித்து-நீயோ கிடைப்பதற்கு அரியன், அவனை ஆசைப்பட வேண்டாம் என்று சொல்வது தகுதியோ - அழகைக் காட்டி, புன்முறுவல் செய்து-பந்தைப் பறிப்பது, துகில் பற்றிக்கீறிப்படிறு செய்வதும்-எங்கள் வீட்டுப் பக்ஷிகளோடும்-மக்களோடும் பேசிப் பழகுதலால்-எங்களை அதிகாரி விசேஷமுடையவர்களா என்கிற நோக்கில் பார்க்க வேண்டாம், அதாவது-ஒருவன் துஷ்டன் ஆனாலும் - என்னை வந்து அடைந்தால் - பணிந்தால் போதும் கிட்டினாரை நான் விடுவேனா? கெட்டவர்களை அடைய நீ சூழ்ச்சி செய்ய-சூழல் உடையவனாக விருக்கவேண்டும்."

உங்களிடத்தில் நான் என்ன எதிர்பார்ப்பேன் - என்று சொல்பவன்போல - கண்ணன் திகைத்திருக்க; அவர்கள் மீண்டும் சொல்கிறார்கள் - 'குறைவு ஒன்றுமில்லாத கோவிந்தா - இவர்களிடம் குறைகள் பலவிருப்பினும் - குறைவு ஒன்றுமில்லாத கோவிந்தா-ஆஸ்ரித ரக்ஷணமே தொழிலாக வுடைய உனக்கு நாங்கள் இல்லாத போனாலும்-ஒரு குறையும் உனக்கு யேற்படாது. நாங்கள்தான் ஆசைப்பட்டு - பரிபவம் வந்தாலும் பரவாயில்லை-உன்னையே நாங்கள் எங்கள் உபாயமும் - பலனுமாக நம்பியிருப்பதால்-நாங்கள் ஒரு சிலரே உன் தயையை அடைய பாக்யம் பெற்றிலோம்'என்று நினைப்போம். நீ கொடுக்கிறாயோ, கொடுக்கவில்லையோ-உன் பேற்றை-உன் சம்பந்தத்தை அது தெரியாது. நாங்கள் எங்களைப் பொறுத்தவரையில் உன் தன்னோடு உறவை விரும்புவோம். அதாவது நம்மிருவர்களுக்கும் இடையில்லை-காலமே முடிந்துபோனாலும், நாங்கள் உன்மீதுள்ள ஆசையை விடமாட்டோம் என்றனர்.

நம்மாழ்வார் தோழியிடம் தம்காதலைத் தெரிவிக்க - அவன் இவள் கிடைக்கரியன். பராசராதி போன்றவர்களுக்கே துர்லபன் - அத்தகையவனை மறப்பதே நலம் - என்று சொல்ல - அதற்கு நாயகி பதில் சொல்வாள் - அவனை எளியனுக்கிக்கண்டே திருவேன். எத்தனை காலமானாலும் சரி-அறுதியிட்டுச் சொல்வேன்-உங்களோடு உறவையும் தவிர்ப்பேன் - இடையில்லை - உங்களுக்கு என்னிடம் ஓர் அவகாசமில்லை (கிளிகளே, பூவைகளே-குயில்களே, மயில்களே-நான் உங்களை வளர்த்தாலும்-இனி இடையில்லை. என் நெஞ்சையும மாமையும் சங்கும் நெஞ்சும் ஒன்றும் ஒழிய (மிச்சப்படாமல்) கொண்டான் (கண்ணன் கவர்ந்து கொண்டான்) அடையும் வைகுந்தமும் திருப்பாற்கடலும் அஞ்சன வெற்பும் அவை நணிய (எளியனவாகப் போக)-பாசங்கள் (பந்த பாசங்கள்) கடை அறவிட்டபின்னை அன்றி (வாசனையோடு விட்டொழிந்தால் அல்லது) அவன் (அப்பெருமாள்) அவை (அந்த தலங்களைக்) காண கொடான்-காணக்கூட கொடான். தோழிமார்களின் உறவு விடுதல்-உறவறுத்ததைச் சொல்லிற்று. சரணுகதியில் பிதரம் மாதரம் தாராந் புத்ராந் ப ந் தூ ந் ஸ கீ ந் கு ரூ ந்"-என்று சொல்லியிருக்கையிலே - ஆசார்யரின் சம்பந்தத்தையும் விட்டு விட்டால்-என்பதற்கு வியாக்யானம்-ஆசார்யன் மாதா புத்ரன் - இத்யாதிகளை பகவத் விபூதிகளாகக் கருதுகின்றேன். இவர்களும் பகவத் பாகவத அனுபவ விரோதிகளாக ஆகக் கூடுமானல்-இவர்களையும் ஸர்வாத்மனு தியாஜ்யம் செய்ய வேண்டும்-பிரதி பந்தகமானல் அதைத் தவிர்க்க வேண்டும். சரி-உனக்கு அதனல் யாது பலன் என்று கேட்கப்படுமானல் - கடையறப் பாசங்கள் விட்ட பின்னையன்றி அவனவைக் காண கொடான்.

ஈடு:—அவன் சுணையுடையவன், புறம்பேயுமொரு விஷயத்தில் நசை கிடக்க-ஸ்வானுபவத்தைக் காட்டிக் கொடான். பின்னுட்டாதபடி ஸவாஸநமாகப் பாஹ்யருசி போனல் அல்வது போக ஸ்தானங்களைக் காட்டிக் கொடான்.

**ஆருயிரப் படியில்,** அவன் நம்முடைய நிறமும் வளையும் நெஞ்சும் தொடக்கமாகவுள்ள ஸர்வஸ்வத்தையும் அபஹரித்துக் கொண்டு போனுகிலும், பரம பிராப்யமான திரு நாடும் திருப்பாற்கடலும் திருமலையும் தன்னை ஆசைப்பட்டார்க்குக் காண நணியவாகில் காட்டாதொழிவானென்னென்னில்-உங்கள் பக்கலுள்ள ஸங்கம் நிச்சேஷமாகப்போனல் ஒழிய-அவன் அவை காண கொடான்; ஆதலால் இனி உங்களோடு உறவில்லை" யென்கிருர். அதற்கு தோழிகள் மீண்டும் சொன்னுர்கள் - "அவ்விதமானுலும் அவன் தன்னை ஆர்க்கும் காண கொடுப்பானல்லன்," என்க,

**நாயகி** பதில் சொல்கிறாள்-என் நிறைவினோடு நாண் கொடுத்தேன்-நல்நுதல் என் நங்கைமீர்காள்-இனி (கொடுப்ப தற்கும் இழப்பதற்கும்) என் கொடுக்கேன்? ஓவியத்தெழுத வொண்ணா வுருத்வதாய் (கம்பர்)-அப்படி அழகைக் காட்டி வசப் படுத்தியதால்-நீ எங்களை ஸ்வீகரித்தாலும் சரி-ஸ்வீகரிக்காமலும் போனாலும் சரி-நாங்கள் ஸ்வபாவமாகவே உன் அடிமையானோம். அதனால் உன் ஆஸ்ரிதரக்ஷணமும்-உன் அடியார்களின் சாம்ராஜ் யமும் ஒரு குறைவையும் அடையாது. அதனால் அவாப்தஸமஸ்த காமனாகிற கோவிந்தன் நீ என்று விளித்தார்கள். அதனால் ஆழ்வார் சொன்னார். கோதில் புகழ்க் கண்ணன்-கோது-தன்னை யொழியப் புறம்பேயும் நசை பண்ணும்படியாயிருக்கை, இவர்கள் கோதில்லா அடியார்களானபடியால்-அவனும் குறைவில்லாத கோவிந்தன் ஆனான். அதனால் பின் அடியில் தங்கள் அபிப்ராயத்தையும் சொல்லிப் பூர்த்தி செய்கிறார்கள்-''உன்தன்னோடு உறவு **நமக்கு** இங்கு ஒழிக்க ஒழியாது-(நமக்கு-என்கிற பதம் உயிரானது. யார் ஒழிக்க முயன்றாலும்-அதாவது நீயோ-மற்ற எவர்க ளாயினும் சரி-இந்த சம்பந்தத்தை அழிக்க முடியாது என்று சொல்ல - இறைவா-பிரும்மா ருத்ராதிகளுக்கும் எங்களுக்கும் ஈஸ்வரனே ஜகத்காரணப் பொருளே-(நாங்கள்) அறியாத பிள்ளைகளோம் - கோவிந்தா என்கிறதும் நாராயணா, வாமனா, என்கிற சிறு பேர் (திரு நாமங்களை) யிட்டு உன் தன்னை அன்பினால் அழைத்தனவும், (இப்போதும் சகா-கிருஷ்ணா என்று வாத்ஸல்யத் தினால் அழைத்தாலும்) நீ சீறி அருளாதே-கோபம் கூட அருள் போலவிருக்கும் எங்களுக்கு-ஒரு மாற்றமும் சொல்லாமல் பேசாம லிருக்காதே. எங்களுக்குச் செய்ய வேண்டிய எல்லாக் காரியங் களை நீயே செய்தருள வேண்டும் என்று அவன் தலையில் பொறுப் பைச் சுமத்துவது போல-பறை (நோன்புக்கு வேண்டிய உபகர ணங்கள் எல்லாவற்றையும்) தாராய்-தந்தருள்வாய்-எனக் கெஞ் சிக் கேட்டனர்.

சிறு பேர் அழைத்து-அவமதிப்பு என்று நீ எண்ணாதே அர்ஜுனன் விஸ்வ ரூபத்தைக் கண்டு பயப்பட்டு-அபராத க்ஷமை யைப் பிரார்த்தித்தானே அதைச் அந்த நாமத்தைச் சொல்லி அபராத க்ஷமையை வேண்டினார்கள்.

உறவைக் கண்டு - இந்த உறவு அனாதி சித்தம். எங்களை நீ காக்க வேண்டுமேயன்றி-நாங்கள் இடும் பச்சையில் பெருமையைக் கண்டன்று என்றபடி அதாவது அறிவும் அனுஷ்டானமும் இல் லாத ஆய்க்குலத்து மக்கள் நாங்கள்-கறவைகள் பின் செல்வது வது தான் எங்கள் குல தருமம். பசுக்கள் என்பது ஆசார்யர் களையும் பெரியோர்களையும் குறிக்கும்.

அவ்வித மிருப்பினும் உன்னை எங்கள் பாக்யமாக குலத்தில் பிறக்கப் பெற்றோம். அது நீ செய்த தவறு! பிறவி பெறும் தனை-எத்தனை பிறவி எடுத்தாலும்-உன்னோடு தான் சேர்ந்து தான் பிறப்போம். இது எங்கள் புண்ணியம். புண்ணிய முடையோம் நாம்.

**கோவிந்தா:**—வெகு சுலபன்-சுசீலன்-உன் ஸ்வரூப ஸ்வ பாவங்களை அறிவோம்-உன் விஷயத்திலே விசத ஞானம் பெற்று உனது புகழ்களைப் பாடுவோம். உனக்கு எங்களால் குறைவில்லாமை யேற்படாது. ஏன்? நீ எங்களுக்கும் பிரும்ம ருத்ராதிகளுக்கும் இறைவன், அதனால் இறைவா பகவத் நாமம் சொல்வதால்-அனுகூல்ய ஸங்கல்பம்-ஸ்வாமித்வமும் இருப்பதால் உறவு ஒழிகக ஒண்ணாது. அறியாத பிள்ளைகளோம் - நீ மனுஷ்யனாகவும் இடையனாகவும் பிறந்து உன் பெருமைகளை மறைத்தாலும்-கோவிந்தா-என்பதால் பரத்வத்தையும இறைவா-என்பதினால் நமக்குள்ள சம்பந்தத்தையும் சொல்லி-உனக்குக் குணப் பூர்த்தி-இந்த உறவால் செய்யும்படி நீ மனம் உகந்து அருள வேண்டும். ஏனெனில் இது அநாதியாக விருப்பதால் ஒழிக்க ஒழியாது. பிறவி உறவு அழியாது. மற்றவர்களுடைய உறவு ஔபாதிகம்-ஜாதி, குலம்-போன்ற சம்பந்தத்தால் ஏற்பட்டது நீ ஸர்வ நியந்தாவானபடியால் - நமது உறவு நிருபாதிகம் எனச் சொன்னார்கள். இங்கும் பரம பதத்திலும் நிலைத்து நிற்கும் எனப் பொருளாம்.

உன் அடி சேர் வண்ண மருளாய் - என்பதால் பிராப்யத்தை' உபாய பூதனைநீயே தரவேணும். இதனால் உபாய பூர்த்தியையும் தங்கள் பிராப்தியையும் முன்னிட்டு - அனுதபித்து - க்ஷமை கொள்ளும்படி பிரார்த்தித்து நீயே உபாயம் - உபேயம் என்கிறார்கள். பகவானே ஸேது - பாலமாகவும் அடையப் பெறும். பலனாகவுமிருக்கிறான் வைத்தியனிடம் தன் அபத்யங்களைக் கூறுமாப்போலே-ஸ்வதோஷத்தைச் சொல்லி-க்ஷமையைப் பிரார்த்திக்கிறார்கள். மாலே மணிவண்ணா எங்களுக்கு நீயே மருந்தாயும் மருத்துவனாகவுமிருக்கிறாய். மருந்தும் அமுதமும் நீ தானே. இங்குள்ளோர் (சம்சாரம்) நோய்கள் அறுக்கும் மருந்து. அங்குள்ளோர் (பரமபதம்) போக மகிழ்ச்சிக்கு மருந்து என்பார்கள்.

சீறி அருளாதே திரு முன்பாக - சொன்ன வார்த்தைகளை நீயும் அவளும் பொறுத்தருள வேண்டும். நோற்ற நோன்பிலனே-மற்றது ஒன்று அறியேன்-உபாயத்தை விடுவது-இவன் தயையைப்

பார்த்தல்லவோ இதனால் ஸ்வரூபத்தை உணர்ந்து - கோவிந்தா நாராயணா என்கிற நாமத்தின் மகிமைகளினால் பலன் பெறுவது. ஞானஹீனர்களும் - வால்மீகி) ஞான விருத்தர்களும் (வ்யாஸாதிகளும்) பிரும்மவாதிகளும், பழுத்த தத்துவ தர்சிகளும் செய்வது குருகுலவாசம் - நாம சங்கீர்த்தனம், திவ்ய தேசம் போதல், ஸ்வதோஷ அனுஸந்தானம் - பகவானுடைய தயைக்காக என்பதாம். அந்த தயையைப் பிரார்த்திக்க நாங்களே உன்னிடம் வந்தோம். உதரம் வளர்க்கையையே புருஷார்த்தமாக இதுவரை இருந்தோம். இனி உன்னைக் கிட்டி உன்னோடு கூடியிருந்து உண்போம். அதனால் கிடைக்கப் பெறுவது ஸ்வரூப ஞானம், அதனால் உன்னை நிரந்தரமாக அடைவோம். இங்கு சொல்லப் படுவது சமதமாதி ஸாதன ஸம்பத்து ஆகியவை முமுக்ஷுவுக்கு போக்யம். இவைகளினால் நமது ஸ்வரூப ஞானம் ஈஸ்வர ஞானமும் கர்மாங்கமாயிருக்கும்-பேற்றுக் குடலாக தங்கள் தலையால் (முயற்சியால்) வருவது பேறல்ல. அவன் கொடுப்பதே பேறு இன்னருள் என்பதாம் கர்மஞான பக்தி பிரபத்தி-உன் அருளால் எல்லாமுமே சித்திக்கும் - எப்படி முக்தன் முக்த தசையில் ஸாம்யத்தை அடைவது போல உன் சேர்க்கை சம்பந்தத்தால் எல்லாம் சித்திக்கும்.

பிறவி - கிருஷ்ணன் தர்மம் ஸநாதநம் - ஸநாதந தர்மம் நீயே - உன்னைத் தரவல்லது உன்னில் விஞ்சியது இல்லையே. யசோதைக்கு அஹோபாக்யம் அஹோபாக்யம் நந்தகோப வ்ரஜௌகஸாம், அதுபோல எங்கள் குலபாக்யம் நீ தான் - ஸஜாதீயனாக வந்து அவதரித்தாய்! குறைவு இல்லை. ஒன்றுமில்லாத-பெருமாள் கடலைத் தூர்த்து வாநரஸைன்யத்தை நடத்தினாற் போலெ-உன் குறைவில்லாமையை எங்கள் குறையிலே யிட்டு நிரவி ஒக்க விட்டுக் கொள்ளுமித்தனை. உன் குறைவில்லாமையை ஒரு மெட்டுக்கு ஒரு பள்ளம் நோன்றோ? குறைவாளரான எங்களை நிறைவாளராக்கவன்றோ என்பது நீயே தான் சால அறிவுடனிருக்கிறாய். அயர்வறும் அமரர் களதிபதியாகவுமிருக்கிறாய். அவ்வித மிருப்பினும் பசுக்களின் பின்னே போகிறாயே;

எதனால்? உமது ஸ்வதாந்திரியமே! அது போல உனது ஸ்வாதந்திரயத்தை மறந்து எம்முடைய அபராதத்தையும் மறக்கையிறே நமக்கு பாக்யம்-பரத்வத்திலன்று, தாழநின்ற நிலத்திலே-மாசுச: என்று சொன்னாயே! கன்றுகளை மேய்த்து கோவிந்த பட்டாபிஷேகம் செய்து கொண்டு காலி பின்னே வருகின்ற வேஷத்தைக் காட்டி-கோவர்த்தனக் குன்றைத் தூக்கி-வாத்ஸல்யாதிகளாலும் ஞானசக்திகளாலும் பூரணனான உனக்கு-எங்களுடைய தகுதி

யின்மை ஒரு குறையாகாது. கோவிந்தா-மாமேவம் சரணம் விரஜ-என்கிற வார்த்தை சொன்ன அவதாரம் - கடையாவும் கழி கோலும் கையிலே பிடித்த கண்ணிக் கயிறும் கற்றுத் தூளியாலே தூஸரிதமான திருக்குழலும் மறித்துத் திரிகிறபோது திருவடி களிலே கிடந்து ஆரவாரிக்கிற கழல்கள் (கால்) சதைங்கைகளும் குளிர் முத்தின் கோடாலயமுமாய் நிற்கிற உபாய வேஷத்தை-கோப வேஷத்தை-கோவிந்தா என்கிறார்கள்

**உறவேல் ஒழிக்க ஒழியாது:**—பிரகாரியை யொழிய பிரகா ரத்துக்கு ஸ்திதி யுண்டோ-நீ தான் எங்களுக்கு ஆத்மா-நாங்கள் உன் சரீரம். ஜட சரீரத்திற்கு உன்னை யன்றி ஸ்திதி உண்டோ? நீ சக்திமானாயிருந்தாலும், பிருதக் ஸ்திதி தயாதில்லாத வஸ்துவை உன்னாலே பிரிக்கப்படலாமோ? நான் உன்னை யன்றியிலேன், நீ என்னையன்றியில்லை-நீ மைத்துனன் நம்பி-நாங்கள் மாமியார், மக்கள்-எங்களை ஒழிக்கும்படி? சரி, சிசுபாலன் இத்தகைய உற வுக்கு என்ன செய்தான் தெரியுமா? அன்று நீ கேட்டாயாகில் அவன் உன் கோவிந்தத்கவத்திற்கு பழிப்பு சொன்னான். அது சரி என்போம். உன் காலில் குனிந்து உன் மைத்துனன் என்று சொன்னானே ஒருவன் (அர்ஜுனன்)- அவன் காரியத்தை எல்லாம் உன் தலைமேலே ஏறிட்டுக் கொண்டு செய்தாயே-அது போல நாங்களும் உன்னை வணங்கிச் சொல்கிறோம்.

**இங்கு ஒழிக்க ஒழியாது** அங்கு (பரமபதத்தில்) ஒழிக் கலாம். இங்கு (பூலோகததில்) ஒழிக்க வொண்ணாது-கோவிந்தா உன்னுடைய நாராயண த்வத்திலுறவு பழங்கிணறு இருக்கிறதே-அதற்கு சண்வார வேணுமோ? ரக்ஷ்ய ரக்ஷகபநதம் உன்னோடே சேஷ சேஷி பாவமும் உன்னோடே-நியநதிரு நியாம்ய பாவமும் உன்னோடே-நீ உயிராயும் நாங்கள் சாரீரமாயுமிருப்பதால் கார்ய காரண பந்தமும் தார்யதாரக பந்தமும் உன்னோடே. வ்யாப்ய வியாபக சமபநதமும் உன்னோடே. இப்படி உண்டான பந்தத்துக்கு எல்லையுண்டோ? உன்னாலும் இந்த உறவை விட ஒண்ணாது, எங்களாலும் விட ஒணணாது; அதாவது உன் தயா பூர்த்திககு தயைக்கு அருகதையாகவுள்ள எங்கள் வுறவுக்கு அன்யதாஸித்தி சொல்ல ஒண்ணாதே! உன் தயை எப்போதும் எங்கள் பக்ஷமே! நாங்கள் " டள்ளுவம் (பொய்) பேசாதே கழக மேறேல் நம்பி "- என்று சொன்னாலும் நீ துறந்ததில்லையே-கோவிந்தன் கோபிகை ஸாம்ய உறவு, உபாய நைர பேக்ஷயம் சொல்லிற்று.

**அன்பினால்**—பிரேமையினால் குறை பாராதது-ஒரு படுக்கை யிலே கை தாங்கிற்று, கால் தாங்கிற்று என்று சொல்வதாம்.

**நாராயணன், கோவிந்தன்**—உபய விபூதிநாதன், இந்திரன் சூட்டியதால் ஒரு ஐஸ்வர்யம்-அஷ்டா க்ஷரமுன்பு ஷடாக்ஷரம்-ஸஹஸ்ராக்ஷரங்கள்-த்வாதசாக்ஷரங்கள் சிறுகிற்று. ''கோவிந்த'' நாமம் ஏற்பட்ட பிறகு அவனை நாரணனை என்று கூப்பிடுவது குற்றமே. அத்தகைய மந்திரத்திற்கு கோவிந்த நாமம் சரிசம மாயிற்று **எப்படி ?** அழைத்தன காண்-திரௌபதி கோவிந்தா என்றாள். நாற்றத்துழாய் முடி நாராயணன் என்பது போல. செய்த தோஷங்களை பொறை கொள்ள நினைத்தார்கள்-ஸர்வாந சேஷத: எல்லாக் குற்றங்களையும் மீதியின்றி க்ஷமித்துக்கொள்-என்பது போல-திரிவித அபாராதங்களை மன்னி. எப்படி? புகு தருவான் கோயிலில்-புத்தி பூர்வத்துக்கு க்ஷமை; பகவத் பாகவத விஷயம் அபசாரத்துக்கு க்ஷமை; கடலனை ''பரன்'' என்ற தால் அபராதம்-இத்தனைக்கும் நப்பின்னைப் பிராட்டியின் புருஷ காரம்-அதனாலும்-ஸௌலப்யத்திலே பரத்வம் கண்டவாறே, விஸ்வ ரூபத்திலே கண்ட அர்ஜுனன்-கண்ணனை-என்னை மன்னித்து விடு, விஹார சய்யாஸனத்திலே பண்ணின அஸத்காரங்களை (தப்புக்களை) மன்னிப்பாய் என்றான்-அதுபோல பரத்வத்துக்கு ஸௌலப்யத்தினால் க்ஷமை வேண்டுகிறார்கள் ஏன்?

இறைவா, ஸர்வசேஷி-பேற்றுக்கு அபிமுக்யம் தேவை. அது போல நாங்கள் உன்னை அருந்தித்து வந்தோம். செய்த குற்றத்தை நல்லதாக உன் குண பூர்த்தியினால் செய்து கொள்கிறாய்-இது உன் சீர்மை.

**பறை தாராய்**—புருஷகாரம் செய்தாள் நப்பின்னை. அவள் தருவதைத் தந்தாள்-நீ தருவதை தர வேண்டும். எங்களை அங்கீ கரித்தல்-உபாயத்திலும் உபேயத்திலும் எங்களால் ஒரு உபாய மனுஷ்டியாமலே ஸித்த ஸ்வரூபனான உன்னையே பார்த்து காரியம் செய்தருள வேணும் என்கிற பிரார்த்தனை. பக்தி பிரபத்தி யோக உபாயத்தில் நீயே லக்ஷ்மியுடன் நின்று-உங்களையே பலனாகக் கொடுக்க வேண்டும். த்வயம். எங்கள் பிராப்ய ஸித்திக்கு உபாயம் உபேயம் நீயே. (லக்ஷ்மி ஸஹிதனாக).

**மொத்த அர்த்தம்** நற்கருமமில்லாமை- முதலடி; அறிவொன்றுமில்லாத......என்பதில் அதிகாரி யோக்யதையின்மை; குறைவொன்று கோவிந்தா-மூல சுக்ருதமான கல்யாண குண பூர்த்தியின் அனுஸந்தானமும், ஐந்தா படியில் உறவேல்...... வொழியாது-ஸம்பந்த உணர்ச்சியும் ஏழா மடியில்-பூர்வ அப ராதங்களுக்கு க்ஷமையையும் - சீறியருளாதே. எட்டாமடியில் - தாராய் பறை - உபேயார். பேக்ஷையும்-காண்க.

இறைவா-ஸர்வஸ்வதந்திரன்-உன்னை ஏன் அப்படி செய்தாய் என்று யாரும் கேட்க முடியாது-எங்களை முனிட்டு நீ யாது செய்தாகினும் உன்னை விலக்குகைக்கு அல்லது கேள்வி கேட்பது யாருமுண்டோ? இல்லை என அர்த்தமாம். ஸர்வஸ்வதந்திரன் என்பதாம். ஸர்வலோக நியந்தா-பரமேஸ்வரன்.

---

**ஸ்ரீ அழகியசிங்கர்:—**

கண்ணன் ஆண்டாளையும் தோழிமார்களையும் "மீண்டும் யாது" வேண்டும் என்று கேட்க; அவர்கள் "பறை தரவேண்டும்" என்கிறார்கள். பறை என்பது புருஷார்த்தம் ஸ்ரீ வைகுண்ட பிராப்தி-உன் தன்னைப் பிறவிப் பெறும் தன்னை-கோப குலத்தில் உதித்து, தாஸனுக விருக்கவேண்டியவன், குறை ஒன்றுமில்லாத கோவிந்தா-ஸர்வத்ர உபயலிங்கமஹி (நீ ஹேய குணங்கள் இல் லாதவன்-கல்யாண குணங்களுக்கும் இருப்பிடம்) நீ ஸ்வாமி-நாங்கள் தாஸர்கள் இந்த உறவை ஒழிக்க முடியாது. பிராப்யன் நீ; நாங்கள் பிராப்தாக்கள்-சிவன் லக்ஷ்மி நரசிம்மனைப் புகழ்ந்து பாடினர்-"நரசிம்மா. நானும் உன் பக்தன், உன்னைச் சேவிக் கிறேன்" அதுபோல.

சிறு பெயர் கோவிந்தா, மணிவண்ணு-இந்த சப்தங்களும் வ்யத்பத்தி பண்ணினுலும் எவ்விதமான தோஷமும் யேற்படாது. நாராயண சப்தார்த்தத்திற்கு அர்த்தம் சொன்னுல்-தோஷங்கள் வரலாம், நாராயணு-சிறுபெயர் நாராணும் அயநம்-த்வேஷிப்பவர் களுக்குக்கூட இருப்பிடம் அது ஒரு தோஷம். நரகத்திலிருப்ப வரையும் சொல்லலாம். இதுவும் தோஷம். இந்த குறைகள் கோவிந்த 'நாமத்திற்கு இல்லை-இறைவா-சரணுகதி பண்ணிய ஜீவாத்மாக்களுக்கு இறைவா-என்கிறுர்கள்.

உன்தன்னேடு-நாமாட் செய்வோம்-புருஷார்த்தத்தை (கைங் கர்யத்தை) அனுஸந்தநித்தல்.

**ஸ்ரீமதாண்டவன்:—**

முக்கியமான பாட்டு. (கறவைகள்) கிருஷ்ணனிடம் தங்கள் அதிகாரியோக்யதையை-அருகதையாக விருப்பதைச் சொல் கிறுர்கள். "நீ எங்கள் குலத்தில் பிறந்தது எங்கள் பூர்வ புண் ணியம். நமது உறவு இரு பக்ஷங்களிலும் ஒழிக்க முடியாது. இதனுல் மிக முக்யமான "பவ்யபாவம்" தன்னடக்கம், பணிவு இப்பாட்டில் (அறிவொன்றுமில்லாத எங்களுக்கு) சொல்லப் பட்டது. நாங்கள் ஸாதனம் ஒன்றும் புரியவில்லை. அகிஞ்ச

னத்வம் காட்டப்பட்டது. காட்டுக்குப் போய்-பசுக்களை மேய்த்தல் ஜீவனோபாயம்தான். பசுக்களை மேய்க்க-இதனால் ஸத்கர்மா ஒன்றுமில்லை - வயிறு வளர்க்கத்தான். வயது முதிர்ந்தவர்களும் அல்ல, சிறுமியர்கள், அதாவது உபாய சூன்யர்கள். பிரபந்நர்களுக்குத் தேவையான (1) குருகுலவாஸம், ஸத்கர்மம், தடைகளை நீக்குதல், இறைவனுடைய குணபூர்த்தியை யுணருதல், அதாவது இறைவனுக்கும் ஜீவனுக்குமுள்ள நித்ய ஸம்பந்தத்தை அறிதல் குற்றங்களை க்ஷமிக்க பகவானைச் சரண் புகுதல். அதனால் குற்றமில்லாத கோவிந்தா. குணப்பூர்த்தியுள்ளவனே. உறவு என்பது சம்பந்த ஞானம்.

சீறியருளாதே-அபராதக்ஷாபணம் (மன்னிப்பு வேண்டுதல்) ''நான் உன்னையின்றி இலேன் நாரணா, நீ என்னையின்றி இலாய்.'' இருவர்களுக்கும் பரஸ்பர சம்பந்தம் நித்யம். வைணவர்களுக்கு ஒன்பது வித சம்பந்தம். அந்த சம்பந்த ஞானத்தைக் கூறும் பாட்டு. இது பிதா-புத்ரன்-பதி-பத்னி இத்யாதி நவ சம்பந்தம்.

சிறுபேர்-ஆயர்பாடியில் கோபாலா, கோவிந்தா என்று கூறி அழைக்காமல், நாராயணா என்று மற்றப் பெயர்களைக் கூவி யழைத்தல்.

நம்மாழ்வார்—சூழ்விசும் பணிமுகில் - என்கிற 10-9-1ல் அர்ச்சராதி மார்க்கத்தைச் சொன்னார். புண்ய க்ஷேத்ரம்-மாடு மேய்த்தல்.

நலம் பிரபத்தி ஞானத்தைக் கொடுக்கும், ராமாவதாரத்தில் ஒருகுறை உண்டு சீதைக்கு அண்ணனோ, தப்பியோயில்லை. அந்தக் குறை கிருஷ்ணாவதாரத்தில் இல்லை அதனால் பேண்மை. மேலும் விண்ணப்பம் செய்யும் ஜீவனுக்கு புருஷார்த்தத்தை அளிப்பது பகவானின் கடமை இங்கு ஒன்றும் அறியாத இடைச்சியரும் அடைந்தனர். (தேசிகன் ராமாவதாரத்தில் பகவானே தூது செல்லவில்லை. இது கிருஷ்ணாவதாரத்தில் நிவர்த்தியாயிற்று. பகவான் தானே ''சகா'' சாரதி-மாம்பலகையில் உட்கார்ந்து கொண்டு சரிக்குச் சமமாக வீற்றிருத்தல். ஆகவே கிருஷ்ணாவதாரம் பூர்த்தியானது.

சீறி அருளாதே-கிருபையினால் எங்களுக்குப் புருஷார்த்தம் அளிக்க வேண்டும். (நாங்கள் மாரீசன் சிசுபாலாதிகளைப் போலவில்லை என்பதாம்.)

——x——

*சிற்றஞ்சிறுகாலே வந்துன்னைச் சேவித்துன்*
*பொற்றாமரையடியே போற்றும் பொருள்கேளாய்;*
*பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில்பிறந்து நீ*
*குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது;*
*இற்றைப் பறை கொள்வான்அன்றுகாண்; கோவிந்தா!*
*எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு*
*உற்றோமேயாவோம்; உனக்கே நாம் ஆட்செய்வோம்;*
*மற்றைநம்காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்.* **(29)**

கீழ்பாட்டிலே உபாய ஸ்வரூபம் பகவானே எல்லாம் செய்து வைக்கவேண்டுமென்றும்; அதனால் யேற்படும் பலனும் பகவானே தான் - அதாவது ஸர்வ காலத்திலும் ஸர்வ அவஸ்தைகளிலும் பகவத் கைங்கர்யமே உத்தேஸ்யம் என்று சொல்லி-ப்ரபந்தத்தை கூறி முடிக்கிறார்கள். **उपपत्तेश्च** (பிரு. சூத் 3-2-34) **अनेन सर्वगतत्व-मायामशब्दादिभ्यः** (பிரு. சூத் 3-2-36 பரம புருஷனே மேலான தத்வம் - அவனைவிட பெரியவனில்லை மேலும் அவனுக்கு ஸமமும் யாரும் இல்லை. அந்த புருஷனை எவன் அடைய விரும்புகிறானோ - அந்த பரம புருஷனே அவன் அடைவதற்கு உபாயமாகவிருக்கிறான். **अमृतस्यैष सेतुः तस्यैष आत्मा विवृणुते तनूं स्वाम् - न च म-स्तांत्यधिः नेति** - என்று எந்த பரபிரும்மம் சொல்லப்பட்டதோ அதை விடப்பெரியது எதுவுமில்லை. **स वा एष महान् अज आत्माऽ-न्नादो वसुदानः**—அந்த பிறவில்லாத பரபிரும்மம் தான், உணவையும் ஐஸ்வர்யங்களையும் கொடுக்கிறான்-போக அபவர்க்க ரூபமான ஐஸ்வர்யத்தை அளிப்பவன் இவனே. அவனே பலப்ரதன் **हेतुव्य-पदेशात्** - காரணம் (ஜகத்காரணம் etc) சொல்லப்பட்டதால் - அதாவது **यज देवपूजायाम्** - தேவதைகளைப் பூஜை செய், அதாவது வாயு தேவதையைப் பூஜை செய்... பணத்திற்காக, இதனால் வாயு வாதி தேவதைகளை சரீரமாகக் கொண்ட பரமாத்மாரவே ஆத்மாவாக விருப்பதால் பலத்தை அளிக்கிறான்—என்று சுருதிகள் சொல்வதால் - இவை உபாஸனபலன். ஆகவே பகவத் திருப்தி பகவத் கைங்கர்யம் தான் பலன். இதற்கு பிராப்ய ருசி-பிராப்ய உபாயம் - த்வரையையும் ஆய்ச் சிறுமிகள் நிவேதனம் செய்ய - "எம்மா வீட்டிலே" (திருவா. 2-9-1) அடைய வேண்டியதை எப்படி நிஷ்கரிஷிக்கிறாரே நம்மாழ்வார் அதன் பிறகு சர்மதன சயான அர்த்தமாகிற நெடுமாற் கடிமையிலே (திருவா. 8-10-1)

அனுபவித்து முடித்தது போல் - அந்த அர்த்தங்களை இங்கு சொல்கிறார்கள். அதாவது அதிகாரி யோக்யதை என்கிற நியமம் விலக-ஸித்த உபாயமான பகவானே புருஷார்த்தமாகிறான், தூயமாய் வந்தோம், அருந்தித்து வந்தோம், இத்யாதிகளால் ஸித்தோபாயத்திற்கு என்ன பாதிதம்-அதாவது ஸாதன ஸாத்யத்தில் ருசி கொண்டவர்களா? பக்வத் ஸ்வீகாரத்தில் அவனது திருவுள்ளமே ஹேது என்பது முக்கிய மாதலால் ஸாத்யங்களைச் செய்தும்-ஒன்றும் செய்யவில்லை என்று உபாய சூன்யதையைச் சொல்லி பரம புருஷனையே உபாயமாக வரித்து அவனையே பலனாக அடைகிறார்கள். எப்படி-நான் செய்தேன் என்கிற மமகாரத்வமும்; உபேயத்தில் போக்த்ருத்வ புத்தி-நான் பரம புருஷனை அனுபவிக்கிறேன் என்கிற விஷ போஜனம் போல விருக்குமாதலால்-ஆசற்றார்-மாசற்றார் என்கிற இரு தோஷங்களும் அறவே நீங்க ஸர்வதர்மாந்ஸ் ஸர்வகாமாந்ஸ்ச-தியாஜ்யம் செய்து-த்வரையையும் விட்டு-ஸாத்யத்திலே ஸாதன புத்தியையும் விட்டு-பொறுமையை அவலம்பித்து-கண்ணன் வரும் போது தான் வருகிறான்-என்று விஸ்வஸித்து-கைங்கர்யத்தில் களை யறுத்துத் தர வேண்டுமென்று பிரார்த்தனை செய்து-''நாமுடையோம்''-''உனக்கே நாமாட்செய்வோம்-மற்றை நங்காமங்கள்மாற்றேலோரெம்பாவாய்'' என்கிறார்கள். ஸ்வரூப அனுரூபமான பலத்தில் நின்று, ஒழிவில் காலமெல்லாம் பிரார்த்தித்தது-நெடிமாற் கடிமையை பிரார்த்தித்தது போல ''எம்மேல் விழியாவே-ஆவா வென்றாராய்ந்தருள்''-என்று சொன்ன பிறகு; பறை தருவாய்-சூடகமும் பாடகமும் பல்கலனும் யாம் அணிவோம்-என்று சொல்லி-தங்கள் ஸ்வபாவத்தைச் சொல்ல-பகவான் '' சரி'' என்று ஆமோதிக்கிறான்-

சிற்றஞ் சிறுகாலே வந்து-இதனால் இவர்களின்த்வரை (ஆபிமுக்யத்தின் அதிசயம் அதாவது அந்தரங்கக்காதலின் உத்வேகம்) சொல்லப்பட்டது. ஆபிமுக்யமும் சேர்ந்தது. ஆய்ச்சிகள் மத்தினால் ஓசை படுத்தும் சிறு காலை, அப்படி வந்து சேவித்து உன்னை உபாய உபேயமாக நினைத்து உன் இருப்பிடம் விபீஷணன் வந்தது போல் வந்து சேவித்து-''தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்குமுணர்வு''-ஸதாசார்ய சம்பத்துடன் - புருஷகார சம்பத்துடன்-பாகவதர்களைத் துணையாகக் கொண்டு-உன் பொற்றாமரை (ஸ்ரீமந் நாராயண சரணௌ-த்வயத்தின் முன் பகுதி) அடியே போற்றும் பொருள் கொண்டு வந்து-எங்கள் பிரார்த்தனையைக் கேளாய்-செவி சாய்க்க வேண்டும்'' என்கிறார்கள்.

**பள்ளிக் கட்டிற்கிழே, வந்து நின்றதால் அந்தரங்கம் கொண்டு**-பிரவிருத்தி யிருந்தாலும்-பிராப்ய ருசித்வரையை உண்டு பண்ணிலும்-ஸ்வரூபத்தை மறப்பித்தாலும்-பூ மருவு கோல நம் பெண்மை சிந்தித்திராது போய்-என்று எங்களை த்வரை (ஆசைப் படச்) செய்தாலும்-உன்னைச் சென்று சேவித்ததால் எல்லாப் பாபங்களும் நீங்கப் பெற்றேம். பெற்றதும் பெறுவதும் நீயே யிருப்பதால்-சேதனர்க்கு பகவத் லாபம் அவன் வரவு. இவர் கள் வந்து சேர்தலும் அவனது லாபம்.

சீரிய சிங்காஸனத்தில் - தர்மாஸனத்தில் வீற்றிருக்கிற உன்னை-நாங்கள் கேளாய் என்கிறேம். நீ போற்றும் பொருள் கேளாய்-ஸ்துதி செய்வதின் காரணம் இது தான்-பிறந்த நீ மேய்த்து உண்ணும் குலம்-ஆயர் குலத்தைச் சேர்ந்த நீ; எங்களைக் குற்றேவல் கொள்ளாமற் போகாது - அந்த ரங்க பக்தியினுல் வந்த எங்களது கைங்கர்யத்தை அங்கீகரிக்க வேண்டும், அதை நீ தவிர்க்க (கொள்ளாமல்) முடியாது. (போகாது). இன்றை பறை கொள்வான் அன்று காண்-கேவலம் பறையை மாத்திரம் நீ இன்று கொடுப்பாய் என்று எண்ணி நாங்கள் வந்தோமல்லோம். எற்றைக்கும் (கால முள்ளவரை) ஏழ் ஏழ் பிறவிக்கும் (உன் ஸர்வ அவதாரங்களிலும்) (பரம புருஷன் கீழே பூமிக்கு வருவது-அவதாரம்) உன் தன்னேடு உற்றேமே ஆவோம். (உறவினர்களாக ஆவோம்)! உனக்கே நாமாட்செய்வோம். (அடிமை செய்யக் கடவோம்) அதற்குப் பிரதிபந்தகமாக விருக்கும் (தடையாக விருக்கும்) மற்றை காமங்கள் (இதர விஷய இச்சைகளை) (நீயே) மாற்று-ஏல் ஓர் எம்பாவாய், நீ எங்களைத் திருத்திப் பணி கொள்வாய்-என்றனர். வேறு வகையான விருப்பங்கள் எமக்குப் பிறக்காவண்ணம்-நீயே எங்களைத் திருத்திப் பணி கொள்ளவும்.

**சிற்றஞ்** எங்கள் பருவம் பாலை. குளிரைப் பொருட் படுத்தாமல் உன் மீதுள்ள அன்பினுல் வந்தோம். ஆற்றுமையின் கனம் சொல்லப்பட்டதாகும்.

**போற்றும்** உன் தாமரையடிகளைப் பணியும் எங்கள் பொருள் உத்தேசத்தைக் கேளாய். பெற்ற மேய்த்து-எங்களைப் பயன் படுத்திக் கொள்ளாமற் போனுல்-உன் இடைக் குலப் பிறப்பு வீணுகும்!

**எங்களை** நாச்சியார் திருமொழி-இம்மைப் பிறவி செய் யாதே இனிப் போய் செய்யும் தவம் தான் என்-கொம்மை

முலைகள் இடர் தீரக் கோவிந்தற்கு ஓர் குற்றேவல்-செய்யாது போனல்-இதை ஸ்மரிப்பது.

**இற்றைப் பறை** இப்போது எங்களுக்கு நீ கொடுக்கும் பறை என்கிற வாத்யம் மட்டும் கொள்வதற்கன்று-நாம்-வந்த காரணம் வேறு உண்டு—எற்றைக்கும் ஏழ் ஏழ் பிறவிக்கும்- தேவத்வே தேவதேஹேயம் மனுஷ்யத்வேச மானுஷி-பிராட்டி பகவானின் ஒவ்வொரு அவதாரத்திற்கு யேற்ப-தேவனுகிலும் சரி-மனிதனுகிலும் சரி-அன்பாயினி-ஸஹதர்மசாரிணியாக அவனுக் ஒக்கப் பிறந்து சேதனர்களை ஆட்செய்வது—அப்பிராட்டியைப் போல, **நாங்களும்** உனக்குப் பிராட்டியாகக் கடவோம். **மற்றை நங்காமங்கள மாற்று** கைங்கர்யத்தில் களையறுப்பது- ஸ்வபிரயோசன புத்தியை விடுதல்-ஸ்வரூப விரோதி கழிகையானே என்னுடைமையும் நீயே-என்று ஆத்ம ஆத்மீயங்கள்- இரண்டும் சரீர ஆத்ம பாவத்தினுல் (மாம்மதீயம்ச உனக்கு அடிமை)

உனக்கு சேஷம் என்றிருத்தல்; உபாய விரோதி கழிகை- களைவாய் துன்பம் களையாது ஒழிவாய் களைகண் மற்றிலேன் - துக்கத்தைப் போக்குவாய்-போக்காது ஒழிவாய்-வேறு ஒரு ரக்ஷக வஸ்துவை உடையேனல்லேன் என்றிருப்பது. பிராப்ய விரோதி- ஸ்வப்ரயோசன புத்தியை விட்டு-உன் உகப்புக்குப் புறம்பான எங்களுடைய ஆசையைப் போக்கு-என்பதால் மற்றை நங்காமங்கள் மாற்று. இவை எல்லாவற்றிற்கும் அஹங்கார மமகார மாகையாலே - நமம-நம: என்கை ஸ்வரூப உஜ்ஜிவனம் (முமுக்ஷுப்படி) - தொலைவில்லி மங்கலம் தொழும்-ஸ்வரூபம் சொல்லிற்று அவன் உகந்து அருளின நிலத்தளவும் செல்ல சேஷமாயிருத்தல்.

**தொழும்** என்பதால் ஸ்வரூபம்; வேங்கடத்து உறைவார்க்கு நம: என்பதால்-சேஷம் நான்-எனக்குரியேனல்லேன் என்று ஸ்வ ரக்ஷணத்தில் பாரதந்தர்யம், சீதை ராமனையே நம்பினது போல; உபாயம் சொல்லிற்று. ''அந்தி தொழும் சொல்-தாஸ்ய ரஸம் அதிசயித்தால் - அதன் முடிவான தசையிலே சொல்லும் நமச்சப்தம்-தொழும் சொல்-(பாகவத பிரியம்-கைங்கர்யம் வரை) பலன் சொல்லிற்று. ததீயர்சேஷத்வம்-பெரிய திரு 8-10-1 உற்றதும் உன்னடியார்க்கடிமை ஆக-திருமந்திரத்தின் அர்த்தமாக நான் எம்பெருமானுக்கே உரியன்-எனக்கு அல்லன்-ஸர்வ சேஷியான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப்பெறுவேன்,

**பொன் அடி** நாம் விட்டாலும்-அந்த அடி நம்மை விடாது அச்யுதன். ஸாதனமும் ஸாத்யமும் அதுதான். **பிறந்த நீ** ஆய்க் குலத்தில் பிறந்தது எங்களுக்காக.

எதிர் சூழல் புக்கு - கிருஷி பண்ணிற்று-பிறப்பிலி நீ எங் களுக்காக அவதாரம் **நாங்களோ** அந்தரங்க விருத்தி உள்ள வர்கள். எங்களிலே ஒருத்தியை மணக்கவே ஆசைப்பட்டு நீ இங்கு பிறந்தாய்! அதனால் எங்களை கொள்ளாமற் போகாது. திருவாணை-நின் ஆணை கண்டாய்-(நம்மாழ்வார்)

**கோவிந்தா** கோக்கள் ரக்ஷகன்-வேதரக்ஷகன்-வராஹ அவ தாரமெடுத்தவன் - பூமியை நீரேற்ற வாமனன்-அளந்த திரி விக்ரமன்;சப்த ராசியைப் பிரித்த ஹம்ஸரூபி-அத்தைப் பிரகாசிப் பித்த ஹயக்ரீவன்.

**ஏற்றைக்கும்** இப்பிறவியளவில் நில்லாது எப் பிறவியிலும் பிறவியே இல்லாத போனல்-அவதாரம் நீ எடுத்த காலத்திலும் நாங்களும் உன்னோடு அவதரிக்கக் கடவோம். **உன் தன்னோடு** நீ வீட்டிலிருந்தாலும்-காட்டில் உன் கரியமேனி வாட திரிந்தாலும் நீ பிறவாதிருக்குமிடத்திலும் (வைகுண்டத்திலும்)-பிறந்து திரியு மிடத்திலும்-இளையபெருமாளைப் போல-படை வீட்டிலும் காட் டிலும் ஒக்க திரிந்தாற்போல எதற்காக? உன்னை சார்ங்கம் சங்கும் சக்கரமும் காப்பாற்றுகின்றனவே அதைச் சுமந்து கொண்டு நானும் உன் பின்னேடே வரணும். இதனால் மங்களாசாஸனம் செய்தவர்கள் ஆவார்கள்!

**உற்றோமேயாவோம்** உன்னுடன் ஸர்வவித பந்துத்வம் யேற்பட எல்லாவுறவும் நீயே யாக வேண்டும்-மாதா பிதா பந்து சகா குரு-மாதா பிதா பிராதா நிவாஸச் சரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:-மமராகவ:-இப்புண்ய பூமியில் அமையும் உறவெல் லாம் உன்னோடு யாகவேண்டும்.

**எதற்கு** கைங்கர்யம் செய்வதற்கு-உனக்கே ஆட் செய் வோம். தனக்கேயாகத் தன்னைக் கொள்ளுமிதே-உன் சங்கல்பத் திற்கு அனுசரணையாக - ஸ்வரூபானுரூபமாக அடிமை செய்து கொள்ள வேண்டும். திரிவித சேதனரையும் (பத்தர் நித்யர் முக்தர்) எம்பெருமான் அடிமை கொள்கிறன் - என்றபடி; முக்தரும் நித்யரும் தாங்களும் ஆனந்தித்து அவனையும் ஆனந் திப்பார்கள் பத்தர் தாங்கள் ஆனந்தியாதே அவனை ஆனந்திப் பரர்கள். இன்புறுமில் விளையாட்டுடையானிறே-ஏன் "தனக்கே யாக" வென்று பிரார்த்திக்க வேண்டும்? மதி நலம் மயர்வற

மருளப் பெற்றவராச்சுதே-யெனில் பிராப்ய ருசி அவரை அவ்விதம் படாதபாடு படுத்தும் - பிராட்டி அகலகில்லேன்-அகல கில்லேன் என்னப் பண்ணுகிறது - திருமார்பிலே - விஷயஸ்வ் பாவமிறே. அதாவது அத்யந்த பாரதந்திரியம்.

**எனக்கு ஆட்செய்** அப்ராப்த (கிடைக்க வேண்டாத) விஷயங்களை வ்யாவர்த்திக்கிறது, தன் காரியம் அவன்காரியம் என்று பொதுவாக வில்லாமல்-**அவன் காரியமாகவே**, எப்படியெனில் ஒழிவில் கால மெல்லாமுடனாய் மன்னி நிற்க வேணும்-லட்சுமணன் ராமனைக் கேட்டுக் கொண்டது போல க்ரியதாமிதி மாம்வத-இப்படி நீ செய் என்று ஆக்ஞை செய்யும்படி-ஏவிக் கொள்ளவேண்டும்.ஜட அசேதன வஸ்துவான என்னை உன் உபயோகத்துக்காகவே இருப்பதால் ஆக்ஞை. புருஷார்த்தம்-ஸ்வரூபானு ரூபமான புருஷார்த்தம். முக்தியும்-ஸம்பத்தும் நன்றியும் நான் உன்பக்கம் கொள்ளும் மோக்ஷம் உனக்கேயாக எனைக் கொள்ளுமிதே! உன் பக்கல் நான் கொள்ளும் சம்பத் நன்றி என்னவுமாம். மொத்தமாக-ஸ்வரூபசித்தி எவ்விதம்? நீ உகந்தாக வேண்டும்-அவன் உகந்து ஏவினதை செய்ய வேண்டும்; உன் தன் திருவுள்ளமிடர் கெடுந்தோறும்-என்பது போல. உபாயம், உபேயம், சரண்யத்வம் எல்லாம் நீயே யாதலால்-உன் அனுபவத்திற்கு விரோதமாக ஏதேனுமிருந்தால்-தியாஜ்யம் செய்யும் புத்தி-வாய்ப்பு பெற வேண்டும். நெஞ்சு கலங்காது காணும் படியிருக்க வேண்டும்.

**மற்றைக் காமம்** உன்னைத் தவிர-மற்றொன்றையும் பெரிதாக நினைக்காமை.

**கோவிந்தா மற்றைக் காமம்** மாற்று,திருத்திப் பணிகொண்டான் அர்த்தகாமங்களில் புத்தி செல்லாமே-நம்பியினிடம் இராகம் யேற்பட்டது. ஸ்வதந்தர ஆத்ம பிரமம் யேற்படாமல்-தேகமே ஆத்மாவென்று எண்ணாது, ஆத்மா வேறு என்று நினைத்து-ஆத்மாவின் அனுபவத்தை கைவல்யம் என்றுமிராமல்-அந்தரங்க அடிமை பெற வேண்டும், ஸித்தோபாயம் ஸாத்யோபாயம் என்று வேதப் பொருளை என் நெஞ்சுள் நிறுத்தினான் - (மதுரகவிகள்) என்று சொல்லுமாப்போலே-தத்துவத்தை-பரதத்துவ பரமஹித பரம புருஷார்த்தத்தை அறியும்படி செய்து-ஆசார்ய பக்தியையும்- "இவர் (நம்மாழ்வார்) திருவடிகளிலுண்டான பக்தியன்றோ இவருக்கு அடியேனுனதில் உண்டான (மதுர கவியாழ்வார் ஆனது போல) பிரயோசனம் **(நஞ்ஜீயர்)**

எம்பெருமான் ஸாம்யாபத்தியை அளித்தாலும், ரூபபோக ஸாம்யம் ஒன்றாக விருந்தாலும்-தன் ஆனந்தம் பகவத் ஆனந் தத்திற்கு ஸமம் என்று நினைக்காத புத்தி-அனுகூலமான புத்தி. பகவான் செய்யும் ஜக்த ஸ்ருஷ்டி-ஸ்திதி-ஸம்ஹாராதி வியாபரங் களை-ஜீவனுக்குப் பங்கு இல்லாவிடினும்-அதனால் விளைவிக்கப் பெறும ஸாத்விக புத்தியும், தியாகமும் பகவத் கைங்கர்யமும், அதனால் பகவானுக்குப் போக ரஸத்தை உண்டாக்குமதாகவும்-செய்வித்தலே பகவான் செய்வித்தலே ''செயல் நன்றாகத் திருத்திப் பணி கொள்வான்.'' அதாவது எனக்கொரு இந்திரிய சாபல்யம் உண்டு என்னும்படி நடக்காமல் திருத்துவது;

**காமங்கள்** இரண்டு பேர்களுக்கும் இனிமை காமங் களால் யேற்படும். நாங்கள் செய்யும் அடிமையும் எங்க ளுக்கு அஹங்காரத்தை விளைவிக்கக் கூடாது. இது ஸ்வரூ பத்துக்கு விரோதம். எங்கள் அடிமையினால் நீ உகந்தால் அவ் வுகப்பைக் கண்டு யேற்படும் உகப்பே எங்களது புருஷார்த்தம். இது தவிர நாங்கள் பகவானை அனுபவிக்கிறோம். பகவான் எங்களை அனுபவிக்கிறான்-என்கிறபோக்த்ருத்வ பிரதிபுத்தியும்-எங்களுடைய அஹங்கார கர்ப்பமான அடிமையும் இல்லாமல் அந்த பிரதி பந்தகங்களைப் போக்கி-எங்களை அருள வேண்டும். எந்த விரோதி கள்? ஸ்வரூப விரோதி-ஸாதன விரோதி-பிராப்தி விரோதி-ப்ராப்ய விரோதி-என்கிற நான்கில்-ஸாதன விரோதியும் பிராப்தி விரோதியையும்-''கறவைகள் பின் சென்று'' என்கிற பாட்டில் கழிந்தன. அதாவது அதிகாரியில்லை (கர்மயோகமில்லை. பக்தி பிர பத்தியென்று ஒரு உபாய சூன்யதையை நிவேதித்தது),

இந்தப் பாட்டில் (சிற்றஞ்) பிராப்ய ருசியும் த்வரையும் யேற்பட்டதால் பகவானை அருந்தித்து வந்தோம்-என்கிறபடி ஆர்த்தியும் யேற்பட்டு-வெளி விஷயங்களில் சேர்க்கை குலைந்து; இதனால் பகவானுக்கே **நான் உரியவன்** என்கிற ஸ்வரூப விரோதி யும் கழிந்தது.

கோவிந்தா-உனக்கு என்பது அகாரார்த்தமும்; உனக்கே என்ப தால் உகாரார்த்தமும்; நாம் என்பதால் மகாரார்த்தமும் சொல் லிற்று (அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்-(ஆராயிரப்படி வியாக்யானம்)

**உன் தன்னோடு உற்றோமே யாவோம்**-என்பதால் நாராயண சப்தார்த்தம் சொல்லிற்று. பகவானுக்கு ஜீவன் சரீரமாதலால் ஸர்வ வஸ்துக்களும் ரக்ஷக யோக்யம்-யதோவா இமாநிபூதாநி

ஜாயந்தே-யேந ஜாநி ஜீவந்தி; ஸ ஏவஸ்ருஜ்யஸ்ஸச ஸர்க்க கர்த்தஸ ஏவ பாத் யந்தி ச பால்யதேச-என்பதால் ஜகத் காரணத்வமும் ரக்ஷகனுயிருப்பதும்-காரணத்வமும் ரக்ஷகத்வமும்-(அதாவது துக்கத்தைப் போக்கி-இஷ்டத்தைப் பூர்த்தி செய்வது) என்றபடி ஸம்சாரிக்கு தேஹாபிமானமும் சப்தாதி விஷய சுகமும் முமுக்ஷுவுக்கு-சம்சார பந்தம்-அறுதலும், இஷ்ட பிராப்தி பரமபத பிராப்தி-அபேக்ஷிதம் கைங்கர்யவிருத்தி. பரதன் பிரார்த்தித்தானே எப்போதும் உன் நினைவு வேண்டும் என்றும்; கோபிகைகளிடம் கண்ணன் சொல்லியதும்-''நான் அந்தர் தியானம் செய்தது-என்னிடத்தில் உங்கள் மனதில் தொடர்பு அனுவ்ருத்திக்காக; உங்களைப் போல எனக்கு மிக்கப் பிரியர்கள் இல்லை-''இவைகளை ஞாபகம் செய்து கொள்ள வேண்டியது. ''பிரேமை பாக்யம்'' என்பார்களே-''ஸௌமித்ரிபாக்யம்'' எனத் தியாகராஜர் சொன்னரே அது பகவத் கிருபையினுல் தான் விளையும், மற்றை நங்காமங்கள் மாற்று-''எங்களுக்கு'' என்கிற அஹங்கார மடியும்; போக நீயும் ''இவர்களுக்கு'' என்றிருக்கும் கிருபையைத் தர வேண்டும்.

''நாங்கள் கேட்டோம் நீ கொடுத்தாய்'' என்றிராமல்;''நீயே கொடுத்தாய்'' என்கிற பலனே அபேக்ஷையில்லாமலே அவதார பிரயோசனத்தை அளிக்க வேண்டும் என்று **அவன் தலையில்** சுமையை வைத்தார்கள். ஸ்வ பிரயோசன நிவிருத்தியே பலனுகும். அதனுல் சிறியருளாதே என்றனர்.

''இறைவா'' என்றும் அவனை அழைத்தனர். - சப்தானு ஸந்தானம். இதனுல் இடைச் சிறுமிகள் ஸ்வரூப ஸ்வ பாவங்களைத் தெரிவித்தனர். ''இச்சுவை தவிர - இந்திர லோகம் ஆளும் அச்சுவை வேண்டேன்,'' தத்வம் ஹிதம் புருஷார்த்தம் சொல்லிற்று. பஞ்ச கால பிரகிரியை யாலே அனுகூலனுய்-பிரபத்தியை அனுஷ்டித்து நிர்பரனுய்-வேறு காமங்களில் இச்சை செல்லாதது பரம புருஷார்த்தமாகும். கைங்கர்யத்தின் களை அறுப்பதும்-கியாதி, லாபம், பூஜை இவைகளும் த்யாஜ்யம். **எல்லாம் உனதாக விருக்கவேண்டும்** ஸ்வபிர யோசன நிவிருத்தி. மொத்தத்தில் பறையை விலக்கி - நித்ய கைங்கர்யம் கிடைக்கப் பெற்றுல் பரம புருஷார்த்தம். துருவன் பிரார்த்திக்கச் சென்றது அரச பட்டம்; பகவான் கொடுத்தது நித்யமான துருவ பதம்,

கடைப்பாலுக்கு பதில்-முலைப்பாலை பகவான் அளித்தான்.

இனி இந்த திவ்ய பிரபந்தத்தைப் படிப்பதினுல் பலன் கூறப் படுகிறது.

**ஸ்ரீமத் அழகியசிங்கர்:**—நந்த கோகுலத்திற்கு உன்னை உத்தேசித்தும், எங்களை உத்தேசித்தும், ஆபத்துக்களைப் போக்கி ரக்ஷிப்பாய். (இது ஆய்ச்சிகளின் பொதுவான் பிரார்த்தனை) **த்வயம்** ஸ்ரீமந் நாராயணனின் திருவடிகள் இரண்டும் ஸ்மரிப்பது.

ஸ்ரீ கிருஷ்ணன் ஐந்து லக்ஷம் பறைகளை (தப்பட்டைகளை அல்லது நகராக்களை) கோபிகைகளுக்குக் கொடுத்தான். அவர்கள் பூஜையைச் செய்து முடித்தார்கள்.

கிருஷ்ணன்—''மாசுச'' என்றான் அபயம் கொடுத்தான். ஆனந்தானுபவம் எல்லோரும் அனுபவித்தார்கள். எவ்வளவு காலம்? பதினொன்கு, இருபத்தொன்று பிறவிகளுக்கும்; ''பிறவியே இல்லாமல் செய்தான்-ஸததம்'' (எப்பொழுதும்)''

**ஜைமினி** மோக்ஷம் போகிற ஜீவாத்மாவுக்கு சரீரம் உண்டு என்றார். பிரு. சூத் 4-4-11-பாவம் ஜைமிநிர் விகல்பாமநநாத்-முக்தஸ்ய சரீர இந்திரீய பாவம் ஜைமிநிராசார்யோ மந்யதே-என்று அருளிச் செய்தார் (இது பூர்வ பக்ஷ சூத்ரம்-முக்தனுக்கு சரீர இந்திரியங்கள் உண்டு என்றார். ஸ: (முக்தன்) ஏகதா பவதி திரிதா பவதி பஞ்சதா ஸப்ததா-என்று சுருதி சொல்வதால், சரீரம் உண்டு என்றார். ஆயினும் அச்சேத்யனான ஆத்மாவானது அநேக விதமாக விருக்கிறது என்று சொல்ல முடியாது; இந்த சுருதியில் சரீர வாசி சப்தமும் இல்லை. ஆகிலும் சரீரத் த்வாரா (மூலமாக) திரிதாபவதி யேற்பட வேண்டும். இவ்விதமானால் அசரீர ச்ருதிக்கு என்ன அர்த்தம் என்றால், கர்ம கிருதமான சரீரம் முக்தனுக்கு இல்லை. அவன் இச்சித்தால் ஏற்படலாம்; சிலசமயம் உண்டாகும், ஏனெனில் அவனுக்கு பிரியா பிரியங்கள் சுகதுக்காதி இல்லை. சுருத பிரகாசகையில் ஸ சரீரத்வச்ருதே: நிவாரகா பாவாத் - காதாசித்கஹேத்வந்தராநுக்தேச்ச ஸர்வதா ஸசரீரத்வம் பலித மிதி சூத்ராபிப்ராயம். (அதாவது முக்தன் பகவானால் அனுக்ரஹிக்கப்பட்டு அனுகூலனாக வாழும்போது-தன் சங்கல்ப மூலமாக ஈஸ்வரனால் கொடுக்கப்பட்ட சரீரத்தால் (ஸ்வப்ன திருஷ்டாந்தத்தைப் போல) பகவானை அனுபவிக்கிறான்-சுகதுக்கங்களை பிரியா பிரியங்களை அனுபவிக்கிறான் என்று சொல்லக்கூடாது) பல சரீரங்கள் பலவித கைங்கர்யத்துக்காக என்று மனம் கொள்ள வேண்டும்.

இதுபோல திருமாலையில் 38ம் பாட்டு-''மேம்பொருள் அரங்கத்தானே'' என்கிற பாட்டின் அர்த்தமுள்ள த்வய மந்த்ர விவரணமும், பலனுள்ளதும் பிரபத்தியாகிற உபாயமும்...இத்யாதிகளை நினைப்பது;-கோபிகைகள் ஸ்நானம் செய்து-தங்கள் நோன்பைப் பூர்த்தி செய்தனர்.

ஸ்ரீ மதாண்டவன்:—

இதில் உண்மையான தத்வ விளக்கம் சொல்லப்படுகிறது. ''பறை''-என்று இதுவரை கேட்டது வியாஜமே. எங்களது கோரிக்கை, ஸர்வதேச, ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் உன்னோடு ''ஏகதர்மீ'' சம்பந்தம் கொண்டிருப்பதே யாகும். அடிமையில் அநன்யார்ஹ சேஷத்வம், அனன்னிய சேஷத்வம் (கைங்கர்யம் உனக்கே), என்பதாம். கோவிந்தன் என்னும் நாமம் ரக்ஷகனைச் சொல்லும், பசுபதி.

ஆயர்குலப் பிறப்பு-நீ பிறப்பிலியாய், பிறவாதார் நடுவே யிருந்து பிறவியற்றாருக்கு முகம் கொடுக்கிற நிலத்திலே (நித்ய, முக்தர்கள் இருக்கும் பரமபதத்திலே) வந்தோமா-இல்லை பிறவிக் குப் போரப் பயப்பட்டு, உன்னையே கால்கட்டுவாருள்ள (வரம் கொடுப்பது பிச்சை கேட்குமிடமாகிற) பாற்கடலில் வந்தோமா-இல்லை. பிறவியில் (பூமியில்) ஆசார பிரதானர் (முக்யர்) புகுந்து (வசிஷ்டாதி) நியமிக்கும் (இக்ஷ்வாகு) வம்சத்திலும்) பிறக்க வில்லை. வாலால் உழக்குப் பசு மேய்த்து வயிறு வளர்க்கும் எங்கள் ஆயர் குலத்திலே நீ பிறந்திருக்க, என்ன செய்ய வேண்டியது நாங்கள் என்பதற்காக நீ பிறந்தாய். அதாவது உபாய சூன்யரான எங்களைக் காப்பதற்காகவே, நீ அவதாரம் செய்தது.

சிற்றஞ் சிறுகாலை-அக்ஞான தசை குலைந்து-பிராப்தி தசை புகுவதற்கு முன்பு வரும் ஞான தசையைக் குறிக்கும். ஸத்வம் தலை எடுக்கும் காலம். பகவத் விஷயம் வெளிச்சம் யேற்படும் காலம். முக்தனுவதற்கு முந்தி முமுக்ஷுத்வம் யேற்படுவது.

இறை அனுபவம்-இறை அன்பு முளைக்கும் காலை-சிற்றஞ் சிறுகாலை-திருமந்திர விளக்கம்.

மற்றைய நம் காமங்கள்:—காமங்கள் விரோதிகள். ஜீவபர மாத்மா ஸம்யோகத்திற்குத் தடைகள் அவை யாவன—

1. சொரூப விரோதி (தேகமே ஆத்மா என்கிற மதி மயக்கம்.)

2. பரத்வ விரோதி-பிற தெய்வங்களை எம்பெருமானுக்கு சமம், மேல் என்று எண்ணுதல். மேலும் அவதாரங்களில் மனுஷ் யத்தன்மையையும்-அர்ச்சையில் பயனளிக்கச் சக்தியில்லை எனத் தவருக நினைத்தல்.

**3.** புருஷார்த்த விரோதி-பகவத் கைங்கர்யத்தைவிட மற்றது மேலான புருஷார்த்தமாகக் கருதுவது தவறாகும்.

**4.** உபாய விரோதி-பகவானைத் தவிர மற்ற உபாயங்களை மேலாக உள்ளன என்று தவறாக எண்ணுதல்.

**5.** பிராப்தி விரோதி-தேக அபிமானத்தாலே, சரீர இன்பமே இன்பம் என்றும்; அடியார்களைத் தூஷித்தல், அநாதரவு செய்தல்-இத்தகைய விரோதிகளை (நீ) மாற்றுதல் செய்ய வேண்டும்-இதற்கு பகவானே ஆவதால், அவனையே உபாயமாகப் பற்றி அவனையே மடிப்பிச்சை கேட்கிறார்கள். ஆராயிரப்படியில்-மூந்தின 28ம் பாட்டில் உபாய விரோதியும் பிராப்திவிரோதியும் பற்றிச் சொல்லி, இப்பாட்டில் மற்றதைக் கூறியதாம். ஆதலால் இப்பாட்டு ''திருப்பாவைக்கு'' சிரோபூஷணம் (ரத்ன கிரீடம்). பழக்கத்தில் வந்துள்ள''தை நீராடலை'', சமயத்திற் சேர்த்து தத்வார்த்தம் சொல்லி, இம்மையிலும் மறுமையிலும் பயன் கொடுக்கவல்ல சித்தாந்தம் செய்திருக்கிறாள் ஸ்ரீ ஆண்டாள்.

மாலையில் பெருமாளுக்கு நிறைய வேலைகள். அவனை தர்சனம் செய்வது மிகக் கஷ்டம். அதனால் சிற்றஞ் சிறுகாலை, விபீஷணன் கடற்கரைக்கு வந்தாற் போல, இவர்களும் பெருமாளைச் சென்று சேவித்து சரண் புகுந்தனர். பொன்னும் பூவும்-பெருமாள் திருவடிகளாம். பொற்தாமரை போற்றி. சிற்றிலோடெங்கள் சிந்தையும் சிதைக்கக் கடவையோ கோவிந்தா-(நாச், தி 2-9). அதாவது எங்கள் சிற்றில் வந்து சிதையேலே-மன்மத மன்மதனே-பட்டர் தனியன் செய்தது ஸ்மரிக்கவும்.

பெருமாள் அவர்களை நோக்கி-''உங்கள் கோரிக்கை யாது?'' என்று கேட்க அவர்கள் பதிலளித்தார்கள். ''உனக்கே நாமாட் செய்வோம்.'' இந்த பதிலின் கருத்தை நம்மாழ்வார் சொன்னார்-''தனக்கே யாக எனைக் கொள்ளுமிதே; எனக்கே கண்ணனை யான் கொள்சிறப்பே-(திரு. 2-9-4) சிற்றஞ்சிறு காலை.

ஓம் என்றே பிரணவம்-அ,உ,ம என்கிற மூன்று அக்ஷரங்களில், அ என்பது ஸ்ரீமந்நாராயணன் எனப்படும் 26வது தத்வம். 'ம' காரம் ஜீவன்; 'உ'காரம் நான்காம் வேற்றுமையில்-நாராயணாய-உனக்கே என்பது. பிரணவவித்யையைக் குறிக்கும். ஸகல உறவும் நீயே-(நம்மாழ்வார்); ஸ்வாதீன கர்த்ருத்வம், ஸ்வார்த்த கர்த்தருத்வம், ஸ்வாதீன போக்த்ருத்வம், ஸ்வார்த்த போக்த்ருத்வம்-இந்த நான்கையும் ஒழிக்க வேண்டும். அகங்கார மமகாரங்கள் ஒழிந்து, ஸாத்விக தியாகம் செய்ய வேண்டும்.

நம்மாழ்வார் சொன்னார் ''கண்ணனல்லாலில்லை கண்டீர் சரண்'' மற்றோர் தெய்வமில்லை கண்ணன் அல்லால்; அதேபடி திருமங்கை ஆழ்வாரும் ''வேண்டேன் மனைவாழ்க்கை-வேம்பின் புழு வேம்பின்றியுண்ணாது. அடியேன் நான் பின்னும் உன் சேவடி யன்றி நயவேன்'' கச்சிபேர் மல்லை'' என்று மன்றாடினார்.

கண்டியூர் அரங்கம் மெய்யம்-உய்யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே''; ''மந்திரத்தால் மறவாது என்றும் வாழுதியேல் வாழலாம் மடநெஞ்சமே (திருநெடுந்) என்பதை ஸ்மரிப்பது.

உற்றோமே ஆவோம்-ஆத்ம ஸமர்ப்பணத்தைக் குறிக்கும். முந்திய பாட்டுக்களால் ஆனுகூல்ய சங்கல்பம் பிராதி கூல்ய வர் ஜனம்-கார்ப்பண்யம்-கோப்திருத்வம் மஹாவிசுவாசம். ஆத்ம ஸமர்ப்பணம்-இவை யாவும் இந்தப் பாட்டினால் சொல்லப் பெற்றது.

———o———

வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனைத்
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப்பறைகொண்ட வாற்றை, அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதைசொன்ன
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே
இங்கிப் பரிசுரைப்பார் ஈரிரண்டு மால்வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள் பெற்றின்புறுவ ரெம்பாவாய். (30)

அலைகள் நிறைந்த சமுத்திரத்தை மந்திர பர்வதத்தினாலும் வாசுகியை நாணாக வைத்து-தேவாசுரர்களை உதவிக்கு கொண்டு கடல் கடைந்த மாதவன்-ஸ்ரீ யப்பதியையும் கேசவனையும் ஆதி மூர்த்தியையும்-பிரும்ம ருத்ரர்களுக்கு ஈசன் என்பவனாகிற கண் ணனை - கிருஷ்ணனை-திங்கள் போன்ற திருமுகம் படைத்தவர் களும் சே (செவ்விய) இழை; (ஆபரணங்களையும்) இழையார்- அணிந்த ஆய்ச்சிறுமிகள் சென்று (வந்தடைந்து) இறைஞ்சி (அந்தக் காலத்தில் திருவாய்ப் பாடியில்) பறை கொண்ட ஆற்றை (நோன்புக்கு பறை முதலிய உபகரணங்களை அடைந்தது. அதன் பலனாக பரம புருஷார்த்தத்தையுமடைந்தது-(இது பற்றி) அணி

புதுவை (அழகான வில்லிபுத்தூரில், அவதரித்தவளான) பைங் கமலம் தண்தெரியலே (பசுமையான துளசி தாமரைகள் நிறைந்த மாலையைத் தரித்தவளான) பட்டர் பிரான் (விஷ்ணு சித்தர்-பெரி யாழ்வாரின் கோதை ஆண்டாள் சொன்ன சங்கம் (விரும்பத்தக்க) தமிழ் மாலே (இப்பாசுரங்கள்) முப்பதும் தப்பாமே இங்கு இபரிசு (இந்த வழியில்) உரைப்பார் மால்வரை (பெரிய கிரிகளை-மலே களைப் போல) ஈர் இரண்டு தோள்களை உடைய செங்கண் திரு முகத்து (நித்ய ஸ்ரீயைப் பிரதிபாதிக்கும்) செல்வம் (கொண்ட) திருமாலால் (விஷ்ணுவினுல்) எங்கும் (எல்லா இடங்களிலும்-காலத்திலும்-எல்லாவிதத்திலும்) திரு அருள் பெற்று (பரம புருஷார்த்தத்தைப் பெற்று இன்பு உறுவர் (இங்கே துக்க நிவி ருத்தி; வைகுண்ட பிராப்தியாகிற இஷ்டபிராப்தியும் பெற்று) மகிழ்ச்சியடைவர். நிகமனம் கூறி முடிக்கிருள் ஆண்டாள்.

ஆண்டாளே-பெண்பிள்ளையாக விருந்தாலும் பன்னிரு ஆழ் வார்களில் ஒருத்தராகச் சேர்த்ததற்குக் காரணம்-பட்டர்பிரான் என்பவர் ஒருத்தர் - அவர் திருமகள் கோதை என்கிறதாலே திருமால் வைகுண்டத்திலிருந்து ஆய்ப்பாடிக்குச் சென்று கண் ணனுக அவதரித்த காலம் வேறு, அதே கண்ணனே இன்று நாம் அனுபவிக்க வைத்தவள் இந்த மலர்க்கோதையாகும். அந்த திருமாலுக்குப் போக்யமான பூமாலே சூட்டிய கோதை பைந் தமிழ் சங்கப் பாமாலே திருப்பாவை முப்பதும் - நாச்சியார் திருமொழியும் 143 பாடல்களும் சேர்த்து ஆக 173 பாட்டுக்கள் பரமாத்மாவைப் பற்றிப் பாடினுள்.

கஜேந்திரன் அலறிய போது உடனே ஓடி வந்தான் பர மாத்மா. கோதையும் தனது கொம்மை- முலேகளால் அவனே அரவணைத்து அவனுடைய பருந்தாளில் (அடிகீழ்) பிரியாது இருக்கப் பணிவிடை செய்ய முயன்று - இதற்காக நோன்பை வியாஜமாக வைத்து தன் தோழிகளுடன் சேர்ந்து கண்ணனேப் பதியாக அடைய காத்யாயனி நோன்பு நோற்ருள். களிற்றுக்கு பெருமாள் காட்சி அளித்துக் காப்பாற்றினது போல இவளேயும் மணம் செய்து கொண்டான். அதனுல் கோதை பிரியாது என்றும் இருக்கும்படி நிலே பெற்றனள். அது விஷ்ணு சித்தன் கோதைச் சொல்லாக-விருந்தாவனத்தே கண்டமையைப் பாடிப் பரிசு பெற்ருள், பெரியாழ்வாரின் திருமொழிக்கு வேறுபாடும் காண் பிக்கும் பொருட்டு-இவளது பாமாலேயை நாய்ச்சியார் திருமொழி யென்றும்-திருப்பாவை முப்பது என்றும் பெயர் பெற்றன.

மானிடராகப் பிறந்தும்-இவள் ''மானிடவர்க்கென்று பேச்சுப் படில்-வாழகில்லேன்'' என்று தனது மனத்தை வேங்கடவற்கே ஆக்கிக் கொண்டாள். பகவானுக்கு தன் கன்னியை உவந்து அளித்தாள். அதனுல் திருவுக்குச் சமமாக ஆனுள்-அவள் பாடியது திருப்பாவை முப்பதும் இதைப் பாடின ஆண்களும் பெண்களும் தன்னைப் போல எம்பெருமானிடம் பக்தி காதல் கொண்டு பாரோர் புகழப் படிந்து 'எம்பாவாய்-மஹாலக்ஷ்மியே-இந்த நோன்பே என்னைக் கண்ணனுடன் சேர்த்தது-அது போல லக்ஷ்மி அழகு குணம்; சத்யபாமா அழகு ஆண்டாள் வித்வான். பாமாலை பாடிய ஆண்டாள் மற்றவர்களைவிட விலக்ஷணம் வீரபத்னியு மாவாள். திருப்பாவை முப்பதும் கற்கின்ற எல்லோரையும் திருமாலுடன் சேர்க்கும்-அதற்கு நாம் புருஷகாரம் செய்வோம் என்கிருப் போலே-எம்பாவாய்-எமக்குப் புருஷகாரம் செய்யும் மஹா லக்ஷ்மியே-நீ எங்களுக்கு அருள்வாயாக என்று கூறி பிர பந்தத்தை முடிக்கிருள்.

பகவத் சம்பந்தம் பெறக் கூடுமானுல்-கண்ணனே காம தேவனுக விருக்குமானுல் நாமும் ஆத்மாரதர்களாகவும் ரதியாக வும் மாறலாமே. கீத கோவிந்தமும் இப் பிரபந்தத்தை ஒட்டி வட மொழியில் 11ம் நூற்றுண்டில் இயறறப்பட்டது எம்பாவாய்-தான் பெண்ணுகிற நிலையில் சொன்ன காதல் வார்த்தைகளை தோழியை வியாஜமாக வைத்துக் கூறியது போல-கற்பவர்களும் ஆண்டாளை வியாஜமாக வைத்து நமக்கு உபதேசம் செய்ததாக வைத்து-வாரணமாயிரம் போல-ஆண்டாளை நாம் விளித்துக் கூறுவதாகவே வைத்துக் கொள்ளலாம். மாணிக்கவாசகரும் திருவெம்பாவையில் இத் திருப்பாவையையே பின் பற்றி-கடைசி யில் எம்பாவாய் என்று கூறி முடித்தார். அது போலவாம் பெண் என்கிற அர்த்தம் கொண்டு முடித்தார்.

ஜீயரும் ஸ்ரீ தேசிகரும் ஆறு ஐந்தாக அருளினுள் என்றனர். கடைசி ஐந்தாக அருளினுள் என்றனர். கடைசி ஐந்து பாட்டுக் களிலே தங்கள் கோரிக்கை இன்னது என்று சொல்லி நிறைவேறப் பட்டனர். ஆண்டாள் தன்னை ஒரு கோபக் கன்னிகையாகவே பாவித்து எழுதியதால்-சிருங்கார ரஸம் உண்மையாகவே அவளது ஸ்திரி பிராயத்திலே நிறைவேறியது. அவளது திருத் தகப்பனுர் பெரியாழ்வார் ''ஒரு மகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால்-திருமகள் போல் வளர்த்தேன். செங்கண் மால் தான் கொண்டு போனுன். பெருமகளாய்குடி வாழ்ந்து பெரும் பிள்ளை பெற்ற யசோதை மருமகளைக் கண்டு உகந்து மணுட்டுப் புறஞ்

செய்யும் கொலோ? நாடும் ஊரும் அறிய அலங்கல் சூடி நாரணன் போமிட மெல்லாம் சோதித்துழி தருகின்றனள். இத்தால் பெரியாழ்வார் தமது திருமொழியை தன் மகள் ஆண்டாளுக்காகப் பாட; இவளும் இத்திருப்பாவையை அவருக்காகவும் நமக்காகவும் பாடினுளே! பெருமாளும் உவந்து அவளை ஏற்றுக் கொண்டதால் - ஸர்வகந்தனுக ஆனுன் அன்று. இவளுடைய அபிமதத்தாலே அவள் தசையை நோக்கி யோகு செய்யும் பிரான்- அவள் பிறந்த ஊர் ஸ்ரீ வில்லிபுத்தூரை மேலே கண் வைத்தவனுய் இன்றும் நமக்காக விளங்குகிருர் அன்ருே? ஸ்ரீ ரங்கத்தில் தென் திசை நோக்கிப் பகவான் கிடக்கும் கோலம் சொன்னதாம்.

நம்மாழ்வாரும் இன்சொல் கவி ஆயிரம் பாடினுர். என் நெஞ்சு நிறையப் புகுந்து என்னை ஒரு பொருளாக்கி தன்னை என்னுள் தானே வைத்து-தன் சொத்தை தவறிப் போனவன் தேடுமாப் போலே-தானே தேடி ஓடி வந்து-வாய் கொண்டு மானிடம் பாட வந்த கவியேனல்லேன் ஆய் கொண்ட சீர்வள்ளல் ஆழிப் பிரான் **எனக்கே** யுளன்-சாய் கொண்ட இம்மையும் சாதித்து வானவர் நாட்டையும் நீ கண்டுகொள் என்று வீடும் தரும்-என்று ஆழ்வார் நாவில் புகுந்து-இன் கவியான் ஒருவர்க்கும் கொடுக்கிலேன்-இந்த ஆழ்வாருக்கு மாத்திரம் தான் என்று சொல்லுமாப் போலே விலக்ஷணமாக விருக்கும்படிக்கும்; அதே படி-ஆண்டாளுக்கும் கவி நா விஷயமானுன். ஆனுல் ஆண்டாள் விஷயத்திலே திருமாலே அவளுக்கு கணவனுமானுன்-அது தான் அவளது ஏற்றம். (நம்மாழ்வாரை விட)

அதனுலே பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு அவனுக்கு அவளிடமுள்ள வ்யாமோஹத்தை தன் பேரில் வைத்தானே என்கிற உபகார ஸ்ம்ருதியினுல்-வங்கக் கடல் கடைந்த மாதவனை- கேசவனை என்றனள். இவளது கல் நெஞ்சைக் கடைந்து-வேதத்தின் உட்பொருளை நிற்கப்பாடி-என் நெஞ்சுள் நிறுத்தினுன்- என்று உபகார ஸ்மிருதி கொண்டு-மிக்க வேதியர் ஓதும் தமிழ் வேதமாகிய திருப்பாவையைப் பாடினுலே-கற்ருலே-ஆள்புக்க காதல் பெருமாளிடம் யேற்படும். இவள் திருவடிகளில் யேற்படும் பக்தியன்ருே இவளுக்கு அடியேனுனதிலுண்டான பிரயோஜனம்- கல்லைக் குழைத்து நீரை இட்டாற் போல-பரதத்துவ, பரமஹித பரம புருஷார்த்தத்தை உணர்த்தல் பெற்றேன். எம்பெருமான் திருவடிக்கு ஆட்படக் காதல் கொண்டேன்-காதலால் அடிமைப் பயன் பெறுவது அப்போதே பெறுவது! நாள் நட்சத்திரமில்லை. உடனேயே அடைவது. அது தான் திருத்தக்க செல்வமும்

சேவகமும் ஆகும். இதனுல் செங்கண் திருமுகத்து செல்வம் திருமால் கிருபை-எங்கும் (பரம பதத்திலும் பூ நாட்டிலும் இரு விடங்களிலும்) திரு அருள் பெற்று இன்பு உறுவர்-யோக க்ஷேமம் பெறப் பெறுவோம். நம்மாழ்வார் சொன்னுரே (5-7-2) அங்குற்றேனல்லேன் இங்குற்றேனல்லன் - அவ்விதமின்றி திருச் செல்வம் எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர். அவா அறவீடு பெற்ற சடகோபன் அவர். இவள் இப்பறை கொண்டவாற்றை அணிப்புதுவை பைங்கமலம் தண் தெரியல் பட்டர்பிரான் கோதை யாவாள். அவர் பிரகிருதி மண்டலத்திலுள்ள விரோதிகளையும் தன் வசமாக்கி பகவானை அடைவார். ஆண்டாளும் தந்தையாரின் உபதேச பலத்திஞல் பறையும் பெற்றனள். அதனுல் அணி புதுவை, அதில் அவதரித்தவர். வில்லிபுத்தூர் பட்டர் பிரான்-அல் வழக்கில்லாத அணி கோட்டியர்கோன்-விபரீத ஞானம் விபரீத ஆகாரமும் (வடிவுமில்லாத) கோட்டியூர் கோன்-அணி கோட்டியர் கோன் சொன்ன திருப்பல்லாண்டு, அவருடைய மகள் கோதை, திருமால் என்பவருக்கு - ஒரு மிதுனம்-அர்த்தம் கொண்டு மஹாலக்ஷ்மியுடன் கூடின எம்பெருமானுக்கு இவ் வாத்ம வஸ்து சேஷம் என்று காட்டிக் கொடுத்தார். அதனுல் ஸ்ரீவைஷ்ணவர்களை உகக்கும் துங்கனுகவும் செல்வ நம்பியைப் போல (அவரது ஆசார்யர் கோட்டியூர் செல்வ நம்பியைப் போல) நானும் உனக்கு பழ அடியேன்-பல் வகையாலும் - நல்வகை யாலும் நம: நாராயணு என்று பல நாமம் பரவி (சொல்லி) உன்னையும் (திருமார்பிலிருக்கும் மங்கையுடனும் - ஆயுதங்க ளோடும் - திருவடிகளோடும் பல்லாண்டு கூறுவேன்) என்ருர் பெரியாழ்வார். அதேபோல - அவரது திருமகளாறும் "அடி போற்றி" எனப்பாடினறே !

பல் வகையாலும் பவித்திரனுவான். அந்தப் பெருமானை-ஆண்டாள்-நாராயணனைப் போற்றப் பறை தரும் என்று சொல்லி-பறை பெற்ற ஆற்றை (வழியை)க் கூறினுள். பரமதங் களை நிரஸித்து பரத்வம் ஸ்தாபிதம் செய்து கிழி அறுத்த பட்டர் பிரான் இவள் மாலை-பூமாலையுடன் பாமாலையும் சங்கம் தமிழ் மாலையாக - யாவரும் அனுஸந்திக்கும்படி அழகான தமிழ் மறை யாயிற்று. தெளியாத மறை நிலங்களை தெளிய வைக்கும் தமிழ் மறையாயிற்று.

**தப்பாமே** - நாள் தவருமல் - குறைவின்றிக்கே.

**இப்பரிசு** த்வயம் மந்திரத்தின் ஸாரம். இதுதான் பகவத் பாகவத ஆசார்ய கடாக்ஷத்தினுல் யேற்படும் சம்மானம். த்வயத்

தை தினமும் அனுஸந்தித்து சுகமாஸ்வ-என்றார் எம்பெருமானார். அது போல ஆண்டாளும் திருவருள் பெற்று-திருமுகத்து திருமாலால் திருவருள் பெற்று 4 தடவைகள் தம்பாவில் திருவைச் சொல்லி எங்கும் திருவருள் பெற்று - ஐஸ்வர்யம் கைங்கர்யம் மோக்ஷம்-எல்லாம் பெற்று இன்புறுவர். ஐக்யமிதுனத்திற்கு-ஜகத்யேக காரண மூர்த்திக்கு உபாயத்தையும் உபேயத்தையும் சொல்லி அதனால் பெருமாளோடு பரமஸாம்யத்தைச் சொல்லினள்.

தேகயாத்ரை பூர்வகர்மங்களுக்கு ஏற்ப; ஆத்ம யாத்ரை பிரபத்தி அனுஷ்டானத்தினால் கண்டு கந்த பரம புருஷனுக்கு நாம் அதீனம் என்று தெளிவுற்று "**அவனுடைய**" கைங்கர்யத்தில் ஆசைப்பட்டு இத் "**திருப்பாவையை**" தினமும் பாடுவோமாக.

**எம்பாவாய்** பெண்ணே-தோழியைக் குறித்து ஆண்டாள் **சொல்வது** நாம் ஆண்டாளைக் குறித்து உபகார ஸ்மிருதியால் விளிப்பது. ஓ ரெம்பாவாய்-என்று முன்பு சொன்னது போலில்லாமல்-நோன்பு விஷயம் முடிவு பெற்றதாலும்-தோழி ஒருத்தியையோ-ஆண்டாளையோ நாமே விளித்துச் சொல்வது தகுமே. உபகாரஸ்ம்ருதி. நமக்கும்தானே!

**ஆராயிரப்படி** கடல் கடைந்து பெண்ணமுதைப் பெற்று அப்போது உகப்பாய் இருந்தாற் போலவே ஊரார் காரியத்தை வியாஜமாக்கி-பெண்களைப் பெற்ற ஹர்ஷத்தோடே கிருஷ்ணன் இருக்கிற இருப்பைக் கண்டவாறு. தயிர் கடையவன் என்று ஒரு வியாஜத்தாலே கந்நிகைகளைப் பெறவிருப்பது. கடல் கடைந்த மாதவனை-பிராட்டி புருஷகாரமாய் பெற்றவர்களுக்கு கிடைக்க அரியது ஒன்றுமில்லை.

**கேசவன்** ஆசைப்படும்படி கேசமுடி-கட்டு நெகிழ்ந்து அலைய நின்றாய்த்து கடல் கடைந்தது; கேசியைக் கொன்றது.

**மாதவன்** ஸ்ரீமத் சப்தாத்தம், கடைந்தது-ஆஸ்ரிதரின் பார தந்திரியம். இனிமேல் அதிகாரிகளின் யோக்யதை (வைலக்ஷணியம்) சொல்லிற்று. திங்கள் திருமுகத்து-கிருஷ்ண ஸம்ஸ்லேஷத்தால் மலர்ந்த திருமுகம்; மதிமுக மடந்தையர்; இத்துடன் செயற்கையழகு பாடகமும் பல்கலனும் அணிவது.

**அங்கு** நப்பின்னை பிராட்டி கட்டிலிலே-சீரிய சிங்காஸனத்திலே வீற்றிருந்து சொல்வதால் ஆஸ்ரயண பலமும் பலசித்தியும் சொல்லிற்று. அதனால் அணிபுதுவை, சீர்மல்குமாய்ப்பாடி-பெரியாழ்வார் அபிமானித்த தேசம் ஸ்ரீவில்லிபுத்தூர்.

**அணி புதுவை** ஆண்டாளுக்குப் பிறவியும் புக்கவிடமும் ஓர் ஊரிலேயான ஏற்றம் இவ்வூர்க் கோயிலுக்கே உள்ளது. வட பெருங் கோயிலுடையானின் தனி ஏற்றம் சொல்லியது.

**பட்டர்பிரான்** ஒரு மகள் தன்னையுடையேன்-வேதப் பயன் கொள்ள வல்லவராகையாலே - தாத்பர்யத்தை எல்லோருக்கும் சொன்னவர்.

**கோதை சொன்ன** ஸ்ரீ கோபிமார் தசையைப் பராபித்து அணி குருகூர் சடகோபன் சொன்ன-என்பதைப் போல-பும் ஸத்வம் மேலிடும்படியான குற்றமற்றிருக்கை. சுருதி சத சிரஸ் ஸித்தமான (வேதாந்த உபநிஷத்துக்களின் முடிரத்னம் போல) ஸர்வ உபஜீவ்யமாம்படி இவள் வாக்கு ஸ்பரிசத்தாலே காணும் அதிலும் அவா பெற்றது எனவும் நோக்குக; வேதம் அபௌருஷேயம். திருப்பாவைக்குப் பிறப்பாலுண்டான ஏற்றமுள்ளது.

**சங்கத் தமிழ் மாலை** ஸ்திரி குழாங்களுடன் சேர்ந்து பாடின அனுபவம்; இடைச் சேரியில் வந்து பிறந்த கிருஷ்ணனை அருமறையின் பொருளை-தமிழாய் வந்து ஸர்வ சுலபமானபடி.

**கோதை சொன்ன மாலை** (திரு) மாலைக் கட்டின மாலை, செவிப்பூவே-இவள் செவிக்கு அவன் ஒரு பூ கொடுத்தான்.

**முப்பதும்** சிறிய பிரபந்தம். நாராயணனே நமக்குப் பறை தருவான் என்று ஸங்கிரஹமாக ஸ்வரூப உபாய பலங்களை ஒன்று பத்தாகச் சொன்னது.

**தப்பாமே** ஒரு ரத்னமும் மாலையில் குறையாமே-முழுதும் சொல்வதால்-பெண்களுக்கு ஸம காலத்தில் ஸாக்ஷாத்கார முண்டாயிற்று. ஆண்டாள் அனுகார பிரகாரத்திலே பெற்றாள்-இவர்களுக்கு உக்தி மாத்திரமே அமையும்.

**திருத்தக்க** செல்வம்-திருப்பாவை ஆரம்பத்திலும் முடிவிலும் பிராட்டி சம்பந்தத்தை சொல்லுகையாலே த்வயத்தில் சொல்லுகிறபடியை இங்கு சொல்லிற்று

**திருமாலால் எங்கும்** இங்கு மங்கும் திருமால் என்று இருப்பது.

தை தினமும் அனுஸந்தித்து சுகமாஸ்வ-என்றார் எம்பெருமானார். அது போல ஆண்டாளும் திருவருள் பெற்று-திருமுகத்து திருமாலால் திருவருள் பெற்று 4 தடவைகள் தம்பாவில் திருவைச் சொல்லி எங்கும் திருவருள் பெற்று - ஐஸ்வர்யம் கைங்கர்யம் மோக்ஷம்-எல்லாம் பெற்று இன்புறுவர். ஐக்யமிதுனத்திற்கு-ஜகத்யேக காரண மூர்த்திக்கு உபாயத்தையும் உபேயத்தையும் சொல்லி அதனால் பெருமாளோடு பரமஸாம்யத்தைச் சொல்லினள்.

தேகயாத்ரை பூர்வகர்மங்களுக்கு ஏற்ப; ஆத்ம யாத்ரை பிரபத்தி அனுஷ்டானத்தினால் கண்டு கந்த பரம புருஷனுக்கு நாம் அதீனம் என்று தெளிவுற்று "அவனுடைய" கைங்கர்யத்தில் ஆசைப்பட்டு இத் "திருப்பாவையை" தினமும் பாடுவோமாக.

**எம்பாவாய்** பெண்ணே-தோழியைக் குறித்து ஆண்டாள் **சொல்வது** நாம் ஆண்டாளைக் குறித்து உபகார ஸ்மிருதியால் விளிப்பது. ஓ ரெம்பாவாய்-என்று முன்பு சொன்னது போலில்லாமல்-நோன்பு விஷயம் முடிவு பெற்றதாலும்-தோழி ஒருத்தியையோ-ஆண்டாளையோ நாமே விளித்துச் சொல்வது தகுமே. உபகாரஸ்ம்ருதி. நமக்கும்தானே!

**ஆராயிரப்படி** கடல் கடைந்து பெண்ணமுதைப் பெற்று அப்போது உகப்பாய் இருந்தாற் போலவே ஊரார் காரியத்தை வியாஜமாக்கி-பெண்களைப் பெற்ற ஹர்ஷத்தோடே கிருஷ்ணன் இருக்கிற இருப்பைக் கண்டவாறு. தயிர் கடையவன் என்று ஒரு வியாஜத்தாலே கந்நிகைகளைப் பெறவிருப்பது. கடல் கடைந்த மாதவனை-பிராட்டி புருஷகாரமாய் பெற்றவர்களுக்கு கிடைக்க அரியது ஒன்றுமில்லை.

**கேசவன்** ஆசைப்படும்படி கேசமுடி-கட்டு நெகிழ்ந்து அலைய நின்றாய்த்து கடல் கடைந்தது; கேசியைக் கொன்றது.

**மாதவன்** ஸ்ரீமத் சப்தாத்தம், கடைந்தது-ஆஸ்ரிதரின் பாரதந்திரியம். இனிமேல் அதிகாரிகளின் யோக்யதை (வைலக்ஷணியம்) சொல்லிற்று. திங்கள் திருமுகத்து-கிருஷ்ண ஸம்ஸ்லேஷத்தால் மலர்ந்த திருமுகம்; மதிமுக மடந்தையர்; இத்துடன் செயற்கையழகு பாடகமும் பல்கலனும் அணிவது.

**அங்கு** நப்பின்னை பிராட்டி கட்டிலிலே-சீரிய சிங்காஸனத்திலே வீற்றிருந்து சொல்வதால் ஆஸ்ரயண பலமும் பலசித்தியும் சொல்லிற்று. அதனால் அணிபுதுவை, சீர்மல்குமாய்ப்பாடி-பெரியாழ்வார் அபிமானித்த தேசம் ஸ்ரீவில்லிபுத்தூர்.

**அணி** புதுவை ஆண்டாளுக்குப் பிறவியும் புக்கவிடமும் ஓர் ஊரிலேயான ஏற்றம் இவ்வூர்க் கோயிலுக்கே உள்ளது. வட பெருங் கோயிலுடையானின் தனி ஏற்றம் சொல்லியது.

**பட்டர்பிரான்** ஒரு மகள் தன்னையுடையேன்-வேதப் பயன் கொள்ள வல்லவராகையாலே - தாத்பர்யத்தை எல்லோருக்கும் சொன்னவர்.

**கோதை சொன்ன** ஸ்ரீ கோபிமார் தசையைப் பராபித்து-அணி குருகூர் சடகோபன் சொன்ன-என்பதைப் போல-பும் ஸத்வம் மேலிடும்படியான குற்றமற்றிருக்கை. சுருதி சத சிரஸ் ஸித்தமான (வேதாந்த உபநிஷத்துக்களின் முடிரத்னம் போல) ஸர்வ உபஜீவ்யமாம்படி இவள் வாக்கு ஸ்பரிசத்தாலே காணும் அதிலும் அவா பெற்றது எனவும் நோக்குக; வேதம் அபௌருஷே யம். திருப்பாவைக்குப் பிறப்பாலுண்டான ஏற்றமுள்ளது.

**சங்கத் தமிழ் மாலை** ஸ்திரி குழாங்களுடன் சேர்ந்து பாடின அனுபவம்; இடைச் சேரியில் வந்து பிறந்த கிருஷ்ணனே அருமறை யின் பொருளை-தமிழாய் வந்து ஸர்வ சுலபமானபடி.

**கோதை சொன்ன மாலை** (திரு) மாலைக் கட்டின மாலை, செவிப்பூவே-இவள் செவிக்கு அவன் ஒரு பூ கொடுத்தான்.

**முப்பதும்** சிறிய பிரபந்தம். நாராயணனே நமக்குப் பறை தருவான் என்று ஸங்கிரஹமாக ஸ்வரூப உபாய பலங்களை ஒன்று பத்தாகச் சொன்னது.

**தப்பாமே** ஒரு ரத்னமும் மாலையில் குறையாமே-முழுதும் சொல்வதால்-பெண்களுக்கு ஸம காலத்தில் ஸாக்ஷாத்கார முண்டாயிற்று. ஆண்டாள் அனுகார பிரகாரத்திலே பெற்றாள்-இவர்களுக்கு உக்தி மாத்திரமே அமையும்.

**திருத்தக்க** செல்வம்-திருப்பாவை ஆரம்பத்திலும் முடிவிலும் பிராட்டி சம்பந்தத்தை சொல்லுகையாலே த்வயத்தில் சொல்லுகிறபடியை இங்கு சொல்லிற்று

**திருமாலால் எங்கும்** இங்கு மங்கும் திருமால் என்று இருப்பது.

**திருவருள்** பிராட்டி உத்தேஸ்யம் : நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும், ஏனெனில் சரணாகதி கத்யத்தில்-நிஸ்ஸம்ஸயம் ஸம்பத்ஸ்யதே-இவர்களை வாழ்த்திக் கடாக்ஷித்து பலித்தபடி பாராய் - உபாய நிஷ்டையும் இவளாலே; பிராப்ய விருத்தியும் இவளாலோ விரோதி நிவிருத்தியும் பலப்ராப்தியும் அவனாலே-அதிலும் இவளுக்கும் பங்கு உண்டு.

**இன்புறுவர்** இங்கு ஆண்டாளுடைய சீர்மையையும் அனுஸந்தித்து இனியராவார்கள், அங்கு போனால் (வைகுண்டம்) ;நிரந்தர ஸம்ஸ்லேஷம் (சேர்க்கை) ஐக்ய மிதுநானுபவம்; இங்கு பாமாலையைப் பாடுவதால் ஸம்ஸ்லேஷ இன்பம், மாதவனை-சேயிழையார் சென்று இறைஞ்சி - பறைகொண்டவாற்றை - கோதை சொன்ன தமிழ் மாலை - உரைப்பார்-எம்பாவாய் - இன்புறுவர், பெரிய பிராட்டியார் இன்புற்றாற் போலே இன்புற்றராவார்கள்.

ஸம காலத்திலே அனுஷ்டித்தாரோ பாதியும் அநந்தர காலத்தில் அனுகரித்தாளோபாதியும் பிற்பட்ட காலத்தில் கற்றோர்க்குப் பலிக்குமென்கை. கன்றிழந்த தலை நாகு தோல் கன்றை மடுக்க அதுக்கிரங்குமாப் போலே ஸ்நேஹிகள் சொன்ன இப்பாசுரங் கொண்டு புகவே, அதில்லாத நமக்கும் பலிக்கும் என்றார் பட்டர்.

கோதை-கோதா என்னும் வட சொல் விகாரம், ஸ்ரீ சூக்திகளைத் தந்தவள். இந்தப் பாசுரம் திரு நாமப் பாட்டென்றும் பல சுருதியென்றும் கூறியது. இதில் ஆண்டாள் தன்னைப் பிறன்போலக் கூறியது. தற்சிறப்புப்பாயிரம் எனப்படும். (அண்ணங்கராசாரியர்)- முப்பது பாட்டும் கொச்சகக் கலிப்பா என்றார்.

**ஸ்ரீமத் அழகியசிங்கர் அருளியது:**— கோவிந்த ஈ-வேதங்களால் போற்றப்பட்டவன். கோப குலத்தில் பிறந்து தாஸனாக விருப்பவள் - குறை **வில்லாத** கோவிந்தன் - ஸர்வத்ர உபயலிங்கம். நீ ஸ்வாமி நாங்கள் தாஸர்கள். இந்த உறவு ஒழிக்க முடியாது ப்ராப்யன் நீ பிராப்தர்கள் நாங்கள். சிவனும் "நரஸிம்மா நானும் உன் பக்தன், உன்னைச் சேவிக்கிறேன்"- என்றார். அது போலவாம்.

**சிறு பெயர்** கோவிந்தா மணிவண்ணு-இந்த சப்தங்களை வ்யுத் பத்தி பண்ணிஞலும் எவ்விதமான தோஷமும் வராது. நாராயண சப்தத்திற்கு அர்த்தம் சொன்ஞல் தோஷங்கள் வரலாம். நாராயணன் - நாரா நராணம் அயநம் - த்வேஷிகளுக்குக் கூடயிருப்பிடம். அது ஒரு தோஷம். நரகத்திலிருப்பவரையும் சொல்லலாம். அது ஒரு தோஷமாகலாம். அத்தகைய தோஷம் கோவிந்த நாமத்துக்கில்லே.

**இறைவா** சரணுகதி பண்ணின ஜீவாத்மாக்களுக்கு இறைவா-என்ருர்கள்.

**உன்** தன்ஞேடு நாமாட் செய்வோம்-புருஷார்த்தத்தை (கைங்கரியத்தை) அனுஸந்தித்தல்-திருமாலை 38ம் பாட்டு மேம் பொருள் போக விட்டு மெய்ம்மையை மிக வுணர்ந்து ஆம்பரி சறிந்து கொண்டு ஐம்புலனகத்து அடக்கி காம்பறத் தலே சிரைத் துன் கடைத்தலையிலிருந்து வாழும் சோம்பரையுகத்தி போலும் சூழ் புனலரங்கத்தானே-இது கீதையின் சரம ஸ்லோகம் போல்-திருமாலையில் ப்ரதானம். திருமந்திரம்-த்வயம் இவற்றின் அர்த் தங்களே உட்கொண் டிருக்கின்றது. நம்மாழ்வார் "அகலகில்லேன்" என்ற பாசுரத்திலே த்வயத்தின் பொருளான பிரபத்தியை அனு ஸந்தித்தார். ஆண்டாள் உன்தன்ஞேடு உற்ருேமே யாவோம் உனக்கே நாமட் செய்வோம் என்று புருஷார்த்தத்தை அனுஸந் தித்தாள்.

இவ் வாழ்வாரே திருமலேயில் த்வயத்தின் இரு பொருளேயும் அனுஸந்தித்தாரென்றும்-த்வயம் உபாயத்தை முன்னே கூறி-பலத்தை பின்பு சொல்லியது. இது அனுஷ்டான காலத்திற்கு இணங்க உபாய பலன்களின் உத்பத்தி கிரமத்தைச் சொல்லியது. இங்கே பலன் முன்னும்-உபாயம் பின்னும் சொல்லப்பட்டன. இது வ்யுதிபத்தி தசையைப் பற்றியது. பலனே முன்னே தெரிந்து உபாயத்தை ஒருவன் அனுஷ்டிப்பான்-என்று பெரியவாச்சான் பிள்ளை அருளினுர்.

**(உத்தமூர்)** மேம் பொருள் (மேலிருக்கும் புரு ஷார்த்தங்களை) போக விட்டு மெய்ம்மையை (தத்துவநிலையை)

மிக உணர்ந்து ஆம் பரிசு (ஸ்வரூபத்திற்குயேற்ப புருஷார்த்த பிரகாரத்தை) அறிந்து கொண்டு அகத்து அடக்கி காம்பு அற (அடிப்பாகமும் போக) தலை சிரைத்து (தலை மயிர்களைத் தொலைத்து - உபாயங்களை விட்டு) உன் கடைத் தலையிலிருந்து (உன் மாளிகையில் பிரதான வாசலில் நின்று) வாழும் சோம்பரை (வாழ்க்கையைப் பெற்றவரும் கமையைத் தாங்கச் சோம்பின வர்களை) உகத்தி போலும் (மோக்ஷம் பெற அனுக்ரஹிக்கிறாய் என நினைக்கிறேன்) இப் பாசுரத்தால் ஆழ்வார் ஆனுகூல்ய ஸங்கல்பாதி அங்கங்களுடன் சேர்ந்த ஆத்ம ரக்ஷாபரணத்தை பெருமாளிடம் செய்தே அவன் உகப்பைப் பெற வேண்டும் என்று தொண்டரடிப் பொடி ஆழ்வார் அருளினார். கடைத்தலை-நாம சங்கீர்த்தனம் செய்து நரகம் நேராதபடியாக்கிக் கொண்டவர். நாம சங்கீர்த் தனத்திற்கு மேலாக மோக்ஷோபாயமொன்று விரும்புகிறாராகை யால் கர்ம யோகாதிகளில் தமக்குத் தகுதியின்மையை உணர்த்தி விட்டாராகையால்-பிரபத்தியே கடைத்தலையாம். இது வேறு பலன்களுக்காகச் செய்யும் பக்திக்கும் மோக்ஷத்திற்காக செய்யும் பக்தி யோகத்திற்கும் அதற்கும் முன்னும் ஞானயோக கர்ம யோகங்களுக்கும் கூட ஸாதகமாயிருப்பதென்றுரைகையாலே முதல்-பிரதான-வாயில் கடைத்தலை என்பது அங்க பிரபத்தி-கர்ம ஞான பக்தி யோகம். பகவத் பிராப்தி என்ற கிரமத்திலே-முதலிலுள்ள பிரபத்தியையே முக்கிய (பிரதான) மாக்கி பகவத் பிராப்தியை அபேக்ஷிப்பது.

**குறைவொன்று மில்லாத கோவிந்தா**-மங்களா சாஸனம் செய்கிறார்கள். பல்லாண்டு பாடின பட்டரின் பெண்யாதலால் பகவான் தன் கரங்களைக் காட்ட-தோள்வலிமை யுள்ளவன் என்றும் அந்தக் கைகள் திருவடிகளைக் காட்ட - குறைவு ஒன்று மில்லாத-கோவிந்தா-என்றும் மங்களா சாஸனம் செய்தனர்.

**கோதாஸ்துதி:**—வேதாந்த தேசிகரும் 29 ஸ்லோகங்கள் கொண்ட கோதாஸ் ஸ்துதி என்ற கிரந்தத்தைச் செய்தார். ஆண்டாளை, பிரபந்த ஸாரத்தில் தூய திருமகள் என்றும் - இதில் ஸாக்ஷாத் க்ஷமாம்-நந்தவனத்தில் தோன்றிய கற்பவல்லி-சுடர் கொடி-சூடிக்கொடுத்த நாச்சியார் ஸ்ரீரங்கராஜ ஹரிசந்தன யோக

திருச்யாம்-கமலாமிவான்யம்-கோதாம் அனன்ய சரண: சரணம் பிரபத்யே என்றார். கோதே த்வமேவஜநநி - என்றார்; தயை என்னும் குண பூர்த்தியுடன் நீ விருப்பதால் - மேலும் முகுந்த ப்பிரானை பாமாலை பூமாலைகளால் கட்டியணைப்பதால் - கொடிய பாபிஷ்டர்களுக்கும் உனது புருஷகார மகிமையினால்-அந்த பிரபுவின் கடாக்ஷம் பிரஸாதம் அவர்களுக்கும் கிடைக்கிறது. வால்மீகி-மண் புற்றாகிற உனது ச்ரோரத்திலிருந்து தோன்றியதால் கவி ஸார்வபௌமரானார்.

இது ஒரு அத்புதமில்லை-உனது அரவிந்த முகத்திலிருந்து தேன் போல ஊறின பிரபந்தமாகிற திருப்பாவை மகரந்த ரஸ மாகவே விருக்கின்றது. மாதுர்யம் இயற்கையானதே! (வக்த்ரார விந்த மகரந்த ரஸமாகவே நிபா: - நாச்சியார்த் திருமொழியும் கூடச் சேர்த்துக் கொள்ளவும்) உன்னால் அல்லவோ பக்தி - பிரபத்தி எங்களுக்கு சிக்ஷிக்கப்படுகிறது. சிருங்கார ரஸத்தில் ஆழ்ந்து போன உன்னால் ஸம்ஸ்லேஷ விஸ்லேஷ தசைகளில் பகவானை எப்படி அனுபவிப்பது,பக்திம் நிஜாம் பிரணய பாவனயா க்ருணன்த:-விரக ஸங்கம ஜைரு தந்தை: ஸ்ருங்காரயந்தி ஹ்ருதயம் காண்பிக்கப் படுகிறது. நீயே எங்களுக்கு மார்க்கதரிசி-காதல் என்பது பகவத்காமம், நீயோ விஷ்ணு சித்தரின் மகள். ஆனால் உன் வாக்குக்கள் தாபத்தைப் போக்குகின்றன.அம்ருதத்தை வர்ஷிக்கும் சந்திரன் பாற்கட லில் தோன்றியதால் அந்த அம்ருதத்திற்குயேற்ப உன் மொழிகளிருப்பதால்-நீ க்ஷீராப்தியின் மகளாகவே - சந்திர ஸஹோதரி-இன்னொரு பெண்ணமுது என்று சொல்லும்படி யிருக்கும். அதனால் நீ ஹரிக்கு வல்லபையானாள். உன்னால் அணி யப்பட்ட மாலை அவருக்கு போக்யமாயிற்று-(கீத கோவிந்தத்தில் எப்படி ராதையின் பாதஸ்பர்சம் கிருஷ்ணனுக்குப் போக்ய மானதோ அது போலே-19ம் அஷ்டபதி. கீத கோவிந்தம்.)

த்வந்மௌலி கந்த சுபகா முபஹ்ருத்ய மாலாம லேபே மஹத்தர பதானுகுணம் பிரஸாதம்); கோதாஸ்துதி) உனது பெருமை எங்களுக்குத்தான் தெரியும் காரணம் ரங்கபதிநா பஹீமான பூர்வம் நித்ராளு நாபி நியதம் நிஹிதா; கடாக்ஷா:- உன் திசையாகிற அணி புதுவை வில்லிபுத்தூரை நோக்கி உன் பார்வைக்குப் பின்பு-தென்திசை இலங்கை நோக்கிப் படுத்திருக் கிறார். உன்கடாக்ஷம் விபீஷணனுக்கும்வேண்டும் என்பதாலே போ லும்! கோதா-என்னும் பெயரால் கோதாவரி என்கிற நதியும்- பெயர் பெற்று புண்ய நதியாக விளங்குகிறது. '' நாகசயனன் '' '' கருடக் கொடியன் '' என்ற பெயர்கள் பெற்று விளங்கும் பெரு மாள் என்று உன் தோழிகள் ஏசினாலும்-உன் பக்தி மாறாதபடி

யிருந்ததே! அந்த வார்த்தைகளால் கருடன் உனக்குப் பெருமாளைக் கொணர்ந்து நந்தான், ஆதிசேஷன் உனக்கும் படுக்கையானன், ஆகையால் நீயும் பர்யங்க வித்தையில் உபாஸிக்கத் தகுந்தவள் - பெருமாளைப் போல, पुरुषः पुरा;-என்பதால் பெருமாளும் நீயும் எங்களுக்கு உபாஸ்யம்.

உன் மாலையை அரங்கன் சிரஸால் வகித்து மார்பில் அணிந்து கொண்டான். அதனால் அவன் புதிய மணத்தை தன் குழலிலும் மார்பிலும் பெறப் பெற்றான். கேசவன் என்கிற நாமமும் புதிய நறுமணம் பெற்றது, வண்டுகள் மலரை நாடி வருவதும் அவருக்கு மயிற் குடைபிடித்தது போல விருக்கின்றன. பகவான வைஜயந்தியை அணிந்திருப்பவன் அதனுடைய பெருமையை விட உனது மாலை தலையில் சூட்டப்பட்டதால் அதிக பெருமை யுள்ளதாக விருக்கிறது. அந்த வண்டுகளின் ரீங்காரம் ஸ்வயம் வரத்திற்காகப் பாடப் பெறும் மங்கள வாத்ய கோஷமாக விருக் கின்றது. மங்கள தூர்ய கோஷம்! பகவானுக்கு மார்பிலும்— இருவடிகளிலும்-நாபியிலும் மலர்களிருந்தாலும் - உன் மாலையை அரங்கன் தலையில் சூட்டிக் கொண்டதால் - உன் மாலைக்குத் தனி யேற்றம் தான். திருவடியிலிருப்பது வேதங்களும் தமிழ் மறைகளு மான பாமாலை. உன் பிரபந்தமோ இவைகளையும்விட மேலான பூமாலை பாமாலையாக விருக்கின்றன. சிரஸாதவ மௌளி மாலாம்; உனது மேல் ஆடையையும் மாலைக்குச் சமமாக அரங்கன் ஏற்றுக் கொண்டான். தலை முடி மேலும் ஏற்று அணிந்து கொண்டான். இதனால் உனக்கும் அவனுக்குமே லாபம். உனக்கு அரங்கன் வசமானன். அவனுக்கு புதிய ஸௌபாக்ய ஸம்பத் கிடைத்தது. இதனால் இருவர்களுமே பெருமைபெற— நாங்கள் உங்களிருவர்களையும் தொழ - எங்களுக்கும் பெருமை பெற - நாங்கள் உங்களிருவர்களையும் தொழ - எங்களுக்கும் பெருமை ஏற்பட்டதென்று சொல்லலாமே! அபிஷேக மஹாதி காரம்; புதிய நறுமணம் பெற்ற கேசவனின் திருக்குழல்-உன்னு டைய முடியில் குடிலாலக வாஸிதாபி;-சுருண்ட குழலில் அணியப் பட்ட மாலையினால் - புதுமணம் பெற்றவனாக விளங்க; உன் பிரபந்தங்களின் காவ்ய மதுர ரஸங்களால் அலங்கரிக்கப்பட்ட திருமுடியின் சேர்க்கையால் வேதங்களும் உபநிஷத்துக்களும் தமிழ் மறையாக ஆயின். அதனால் உனது பாமாலை ஸூக்திகளின் மணம் தனிப்பட்டதாகும். ஸர்வகந்த இதி; உனது கடைக் கண் நோக்குகள் அரங்கனுக்கு பூமாலை பாமாலையைத் தவிர - கருங் நெய்தல் மாலை போலவிருக்கின்றன - அஸிதேக்ஷுணு இந்தீவ ரஸ்ரஜமிவாததி த்வதீயா -; வஸூதே - உங்கள் இருவர்களின் மாலை மாற்றுதல் - பார்த்து அனுபவிக்கும் எங்களுக்கு - உனக்கு

அவனே ஏற்றவன் ; நீயும் அவனுக்கு அவ்விதமே - துல்ய சீல விருத்தாம் - ஆகிறபடியால்-எங்களுக்கும் மிக்க சந்தோஷமாம், உனது தேக காந்திச்யாம நிறம்-தர்வா என்கிற அருகம் புல்லின் நிறத்தைப் போல கருஞ் பச்சை பொன் நிறமுள்ள லக்ஷ்மியின் சேர்த்தியினுலும்-எம்பெருமானின் நிறம் கருநீலம்-இம் மூன்று வர்ணங்களும் சேர்ந்து பெருமாளே மயில் கழுத்துள்ள எவ்வண்ண மாகவிருக்கின்றன - அதாவது மூன்று வர்ணங்களும் சேர்ந்து ஸ்வயம் பிரகாசமாக விருக்கின்றன. அதனுல் உங்கள் இருவர்களை சேவிப்பவர்களுக்கு மாங்கல்ய பதம் கிடைக்கிறது, சுபமான பலன்கள் உண்டாகின்றன. ரங்கராஜ மஹிஷியே - மனு போன்ற அரசர்கள் உங்களைப் பஜித்து நெடுங்காலம் த்ரைலோக்ய ராஜ்யத்தை அனுபவித்தார்கள். அதனுல் நீ வஸுதே யானுய்-அது போல எங்களுக்கும் அருள்வாய், மேலும் தேவி-உங்கள் இருவர் களின் ஸம்யோகம் ஆர்த்ராபராதிகளாகிற எங்களைக் காப்பாற்று கிறது. இதனுல் நாங்கள் பிழைத்துவிட்டோம், ப்ராயேண தேவி வதநம் பரிவர்த்திதம் ஸ்யாத் - எங்கள் பக்கம் நீயும் அரங்கனும் கடாக்ஷிக்கிறீர்கள், வணங்கிய ப்ரணத அபராதிகளை ரக்ஷிக்காமல் போனுல் - உனது புருவ நெறிப்பு - பகவானை மயங்கச் செய்கிற படியால் - தவ போகரஸானு கூலமாக விளங்கும் பெருமாள் எங்களுக்கு கிருபா விசிஷ்டனுக விருக்கிறுன்-அவனது ஸ்வாதந்திரி யமும் கர்மானுஸாரமாகப் பலன் கொடுக்கும் திறமும் தாழ்ந்தது. கோதா - இது உன் மகிமை. உங்கள் இருவர்களையும் பணிந்த எங்களுக்கு-கிருபா பிரவாகம் நதியைப் போல பள்ள நிலமாகிற எங்களது ஸம்சாரத்தில் பாய்கிறது. அதனுல் எங்கள் பாபங்களும் தாபங்களும் அணைந்து போகின்றன.

நாங்கள் பாபிகள் - நிக்ரஹத்துக்குரியவர்கள் ஆனுல் தேவி-தயையாகிற உன்னுல் தாய்ப்பால் சாப்பிட்டது போல-நாங்கள் உன்பக்கத்தில் பெருமாள் இருக்கும்போது-பயப்படுகிறதில்லை-ஸ்தன்யத்தை தாய் தனது கடிக்கும் பிரஜைக்கும் கொடுக் கிறுளன்ரே ! அதுபோல நீ எங்களுக்கு அளிக்கிருய் அதனுல் கோதா-நீ உன் மணவாளனுடன் எப்போதும் பிரியாதபடி-எங்கள் மனத்தில் குடிகொண்டிருக்க வேண்டும்-ஸாந்திரவாத் ஸல்ய ஸிந்து ; விலஸது ஹ்ருதி கோதா ; கோதாஸ்துதியை இயற்றின வேதாந்த தேசிகரின் இந்த ஸ்தோத்ரத்தை படிப்பவன் எவனும் பஹுமான - பஹுகுண ஸ்ரீமதே ரங்கபர்த்துவினுல் கடாக்ஷிக்கப் பட்டு அவருடைய சரண கமலங்களை சாஸ்வதமாக அனுபவிக்கப் பெறுவான். கைங்கர்யம் செய்து கொண்டு பகவானையும் பிராட்டி யையும் கோதையையும் திருப்தி செய்து வைப்பான்,

**ஸ்ரீமத் அழகியசிங்கர்:—**கோபிகைகள் ஸ்நானம் செய்து விரதத்தைமுடித்துக் கொண்டனர் கோவிந்தா ஸ்ரீ கிருஷ்ண னின் திருவடிகளை யடைந்து; அபயம் பெற்றுர்கள். சரண கதர்கள் 32 வித்யை (உபாஸனை)களில் பத்தியோக வித்யை சரணு கதி (நியாஸ) வித்யையாகும். பலன் அரச்சராதிகதியாகும்.

சேயிழையார் சென்று இறைஞ்சி பலனைப் பெற்றனர். ஆயிரம் கண்ணுடிகளில் ஆயிரம் தன் உருவம் தெரியுமாப்போலே அநேக அநேக லக்ஷம் பெண்களாகத் தன்னைக் கொண்டதால்-' அவர்கள் சேயிழையார்-ஆனுர். எப்படி ஸ்துதி செய்தனர்-மாலே, மணிவண்ணு, எல்லா உபநிஷத்துக்களும் போற்றுகின்றபடி!

பசுக்கள்-கீதையில் பார்த்தன் வத்ஸ: (கன்று). அதுபோல

பல்லாண்டு பாடின (மங்களாசாஸனம் செய்த) பட்டர் பிரானின் பெண் ஆதலால் அவளுக்கும் யேற்றம். பட்டர்பிரான் பரதத்வம் ஸ்தாபித்து, கிழி அறுத்தார்; பகவானே-உனக்கு ஒரு குறையும் இல்லாமல் இருக்கவேண்டும் என்றுர்கள்-தகப்பனும் அவரது பெண்ணும்.

பகவான் அவர்களை ஏற்று தோள்வலிமையுள்ள தன் கரங் களைக் காட்டினுர்-திருவடிகளைக் காட்டினுர்-குறை ஒன்றுமில்லாத படியால், மங்களாசாஸனம் செய்தனர் இருவரும்.

**ஸ்ரீ மதாண்டவன்:—**

நோன்பு ஸபலமாகி விட்டதால், பலன் கூறுகிறுள் ஸ்ரீ ஆண்டாள்.

வங்கம்-அலை நிறைந்த-கப்பல் நிறைந்த-திருவிருத்தத்தில் 51-ம் பாட்டு (வங்கம் வருகிறது.) மலை கொண்டு மத்தா அரவால் சுழற்றிய மாயபிரான் அலைகண்டு கொண்டவமுதம் கொள்ளாது கடல்-பரதர் விலை கொண்டு தந்த சங்கமிவை வேரித்துழாய் துணையாத் - துலைகொண்டு தாயம் கிளர்ந்து - கொள்வாளுத் தழைக்கின்றதே.

**கேசவன்** பாற்கடலைக் கடைந்த சமயம், பெண்ணமுது தோன்ற-அப்போது திருமால்-கடலைக்கடைந்த கேசவனின் மயிர் அழகினால் கேசவ நாமம். மயில் தோகை போலுள்ள கேசம். அணிபுதுவை-பிறந்தகமும் புக்ககமும் ஒன்றே ஸ்ரீ ஆண்டாளுக்கு. பட்டர்பிரான்-கல்ப சூத்திரம் வகுத்த பெரியாழ்வார். கோதை-அந்த ஆழ்வாரின் ஏகபுதல்வி. சங்கத் தமிழ் மாலை-ராமாயணத்தைக் கேட்க பலர் வருவது போல, பலர் திருப்பாவையைக் கேட்க கூட்டம் கூட்டமாக வருவார்கள். ஈர் இரண்டு மால் வரைத்தோள்-கிருஷ்ணனுக்கு அஷ்ட புஜங்கள்-(நான்கு புஜங்கள்) கம்ச வதம் ஆனபின்பு நான்கு புஜங்கள். பாரத யுத்த சமயம் அஷ்ட புஜங்கள் தோற்றம் (விசுவரூப தர்சனம்.)

மாதவன்-லக்ஷ்மியுடன் கூடிய பெருமாளை ஆண்டாள் கண்டாள். திருவருள் என்பது லக்ஷ்மியின் கடாக்ஷம். பிறகு ஆண்டாள் கல்யாணம் நிறைவேறப்பெற்றது.

பாவை நோன்பு முடிந்தது. ஆண்டாள் தமது தகப்பனார் பெரியாழ்வாருடன் ஸ்ரீரங்கம் வந்து சேர, அங்கே எல்லா க்ஷேத்ரங்களிலும்விட ஸ்ரீரங்கத்திலிருப்பவனே ராஜதானியிலுள்ள பெருமாள். மற்றவர்கள் அவனுடைய அம்சங்களே.

கிருஷ்ணவதாரம்-இதில் அர்ச்சை விபவத்தை விடச் சிறந்தது. அர்ச்சையையே ஸ்ரீ ஆண்டாள் வேண்டினாள், அதையே அடைந்தாள் ஸ்ரீ ரங்கத்திலே ஐக்யமானாள்.

பட்டர் பிரான் கதறி அழ, "நாம் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு வந்து மீண்டும் அவளை மணம் செய்து கொள்வோம்" என்று பகவான் சொல்ல, அவர்களின் திருமணம் வில்லிபுத்தூரில் சிறப்பாக நடந்தது. பாண்டியன் சீர்வரிசைகள் கொடுக்க, திருவேங்கடவன், சோலைமலை சுந்தரராஜன் கல்யாணம் ஆனபின்பு வர. எல்லா ஸந்நிதிகளையும் நாம் சேவிக்கவேண்டும், உள்ளூர் பெருமாளையும் சேவிக்க வேண்டும்-என்பதாம்.

அபயஹஸ்தம்-வரத ஹஸ்தம்-ருக்மிணியாகவே ஆண்டாள் அவதரித்து, பிராம்மண விவாக ரீதியாக தமது தகப்பனார்

பெரியாழ்வார் ''கன்னிகாதானம்'' செய்து கொடுக்கப் பெருமாள் அங்கீகரிக்க-இவ்விதமாக ஸ்ரீ ஆண்டாள் மணம் செய்து கொள்கிறாள். பட்டர், தேசிகர், ஆளவந்தார் ஆழ்வார்கள், ஆசார்யர்கள், ஸ்ரீ ரங்கநாதனையே புகழ்கிறார்கள்- எல்லா அவதாரங்களையும் செய்த பெருமாள் (கூர்மம் உள்பட).

குடதிசை முடியை வைத்து குணதிசை பாதம் நீட்டி-இது ஸ்ரீ ஆண்டாளுக்காகவும் ஸ்ரீவில்லிபுத்தூருக்காகவும் செய்தது-தன் முதுகை வளைத்து, வடக்கைப் பின்பு காட்டுதல்.

ஸ்ரீ ஆண்டாளால் திருவாய் மலர்ந்தருளப் பெற்ற திருப்பாவையை-பாராயணம் செய்பவர்கள் நித்ய லீலா விபூதிகள் கொண்ட திருமகள் கேள்வனின் திருவருளைப் பெறுவர். பாற்கடலை அறிவு எனும் மந்திரமலையால் கடைந்து அமுதம் எனப்படும் சொரூப ஞானத்தை வெளிப்படுத்தல். மாதவன்-திருமகள் கேள்வன்-திருவைப் பெற்றவன்.

தண் தெரியல்-இதை பட்டர் பிரானுக்குக் கூட்டிப்பொருள் கூறலாம். ஆண்மகனை ஆழ்வார் மாலை அளித்தவர் என்பதைவிட பெண்ணாகிற ஆண்டாள் மாலையை அணிந்தாள் மேல். அதனால் உச்சிஷ்டம் என்றார் பட்டர். சூடிக்கொடுத்த சுடர் கொடி-இறைவனே அவளுக்கு மாலை இட்டு வரித்துக் கொண்டதால், தண் தெரியல் கோதை எனப் பொருள் கூறப்பட்டது.

நேரிழையீர்-என்று முதற் பாட்டில் சொன்னது போல; திங்கள் திருமுகத்து சே இழையார் என்று சொல்லிற்று. சென்று, இறைஞ்சி-இதனால் அதிகாரி இலக்கணம் கூறலாயிற்று. ஞான வைராக்யம். ஆபரணங்களாம்.

ஞான ஒளியினால் பொலியும் முகத்தையுடைய பிரபந்நர்கள்-பரமாத்மாவை உபாயமாக வரித்து இறைஞ்சுதலைக் குறிக்கும். பாராயணம் செய்வதின் பலன் - இறைவனைப் பெறுதலும் முறை தப்பாமல் சொல்லுவதும் பாரயண முறையாகும்.



## கோதை வாழித் திருநாமம்

கோதை பிறந்த ஊர் கோவிந்தன் வாழும் ஊர்
சோதி மணிமாடம் தோன்றும் ஊர்—நீதியால்
நல்ல பத்தர்வாழுமூர் நான்மறைகளோதுமூர்
வில்லிபுத்தூர் வேதக்கோனூர்.
பாதகங்கள்தீர்க்கும் பரமனடிகாட்டும் கோதைத்தமிழ்
வேதமனைத்துக்கும் வித்தாகும்
ஐயைந்துமைந்தும் அறியாத மானிடரை
வையம் சுமப்பது வம்பு.

## ஸ்ரீ ஆண்டாள் வாழித் திருநாமம்

திருவாடிப் பூரத்து செகத்துதித்தாள் வாழியே
திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே
ஒருநூற்று நாற்பத்துமூன்றுரைத்தாள் வாழியே
உயரரங்கற்கே கன்னியுகந்தளித்தாள் வாழியே
மருவாருந் திருமல்லி வளநாடி வாழியே
வண்புதுவை நகர்க் கோதை மலர்ப்பதங்கள் வாழியே.

ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சரணம்

ஸ்ரீ விஷ்ணுசித்த குலநந்தன கல்பவல்லீம்

ஸ்ரீ ரங்கராஜ மஹிஷீம் - தஸ்யை-ஸ்ரீமத்கோதாயை
நித்ய மங்களம்

சுபமஸ்து

S. ஜெகந்நாராயணன்.
(S. Jagannarayanan)
Deputy Secy. (Retd.)
Ministry of Finance
Govt. of India, New Delhi,
(Madras.)

ஸ்ரீ



ஸ்ரீ வில்லிபுத்தூர் ஸ்ரீ ஆண்டாள்
திருவாய் மலர்ந்தருளிய

# திருப்பாவை

முப்பது பாடல்களுக்கும்
ஸ்வரம் வர்ண மெட்டுக்களுடன்

ஸ்வர அமைப்பு:
*சங்கீத வித்வான்*
ஸ்ரீ K. M. கோவிந்தராஜு பிள்ளை



**S. ஜெகந்நாராயணன்**
Dy. Secy., (Retd.)
Ministry of Finance
Govt. of India, New Delhi.

Author of:

*தியாகராஜ பஞ்சரத்ன கீர்த்தனைகள், துளசி 'மானஸ ராமாயணம்', திரிவேணி ராமாயணம்-திருமாலின் சீர் (நம்மாழ்வார்) கீதகோவிந்தம், மீராபஜன், பிரம்மவித்யா (சங்கர ராமானுஜ பாஷ்யங்கள்)*
*(தமிழில்)*

First Edition :- December 1986.

This Book has been published with the financial assistance given by Tirumala Tirupathi Devasthanams, Tirupathi. (A.P.)

(Under their Scheme - Aid to Authors for Religious books)

*பிரசுரிப்பவர் :* (Printers & Publishers.)

**சுதா - சுஜாதா**
*10, திருவீதி அம்மன் தெரு,*
*ராமகிருஷ்ணா நகர்,*
*சென்னை - 600 028.*
Phone 416326

*பிரதிகள் கிடைக்குமிடம் :*

**S. ஜெகந்நாராயணன்,**
*10, திருவீதி அம்மன் தெரு,*
*ராமகிருஷ்ணா நகர்,*
*சென்னை-600 028.*
*இவருடைய மற்ற புத்தகங்களின் விபரம் :*
(See cover Page)

*வெளியிடுவோர் :* (Release)

**சீனிவாச ஐய்யங்கார்,**
*அலமேலு அம்மாள் டிரஸ்ட்,*
*10, திருவீதி அம்மன் தெரு,*
*ராமகிருஷ்ணா நகர்,*
*சென்னை-600 028.*

***Printed by :***

New Bharathi Vijayam Printers,
49, Venkatachala Chetty Street,
Triplicane, Madras-600 005.

श्री :

# LOCATION AND GREATNESS OF SRIVILLIPUTTUR & Sri ANDAL

Srivilliputtur is situated 50 miles south of Madurai in Virudhunagar - Thenkasi line. This town is famous for the temples of Sri Andal and Vataphathra Sayee. The tower at the entrance of this temple is 192 feet in height. It is a model temple tower. Perialwar is said to have originally built it out of gold which he had won in the Court of Pandian King, Sri Vallabha Deva Pandian. Sri Ramanujar went to this place on his tour to the sacred towns in South India, after offering 100 pots of akkara vadisal (sweet pudding) to Lord Sundara Rajan (Kallazhagar) in Alagar Malai near Madurai. Sri Andal had longed to offer 100 pots to the Lord but could not fulfil it. She therefore welcomed Sri Ramanuja as her "elder brother" by stepping forward from the Garbhagraham to the kuradu in the Artha Mandapam. Hence the fame of the kuradu and the name of "Koil Annan" to Sri Ramanuja.

Sri Vedantha Desikar, Manavalamamunigal and his primary disciple Vanamamalai Jeer and various other Acharyas have gone to this temple for worship. Desikar's visit is celebrated on the occasion of Vaikasi Vasantham and is commemorated by the recital of his poem 'Gotha Sthuthi', Manavala Mamunigal's visit is commemoated by Thai Sankaranthi Ennaikappu festival, Souri Thirumanchanam for his special worship. Thiru Adipuram and Panguni Utharam are also important days of festival.

The Vanamamalai Jeer published the Inner-meaning of Thiruppavai. Raja Mannar with Andal on the right and garuda on the left-this is Pranava Sevai (Om).

Ever since the religious up-heaval and the spreading of the cult of Bakthi initiated by the Alwars, Sri Ramanuja and in recent times by His Holiness Sri Sankarachariar of Kamakoti peetam, Kanchi, His Holiness the Ahobila Mutt Jeer and His Holiness Srimad Andavan of Sri Rangam and other Acharyas, Thiruppavai is being sung by all persons in the month of Margali every year in temples, along with "Thiruvempavai".

Eminent Vidwan and Musician Late Sri Ariyakudi Ramanuja Iyengar came to Srivilliputhur in 1952 during the Adi festival and sang the thirty pasurams of "Thiruppavai" in karnatic Music with eminent Vidwans as accompaniments. Sangeetha Vidwan Sri T. M. Thyagarajan, Tanjore set the swaram and Notations (Varnamettu) in 1957-Dr. Sankara Narayana Iyer brought out the varna-metu in a simpler style for being sung in chorus or singly by boys and girls. Many Vidwans and Vidhushis like Dr. M. L. Vasantha Kumari, and recently by the Bombay Sisters have given recording of this Prabandham and have popularised it. Following their foot steps, Sri K. M. Govindaraja Pillai a performing eminent Vidwan in Karnatic Music and disciple of Vidhyala Pallavi Thirupathi Narasimhalu Naidugaru, has set varna mettu with notations for all the thirty songs of "Thiruppavai". We are greatly indebted to him for this noble service. We have pleasure in publishing them in this book.

My wife late Srimathi Rajalakshmi Jagannarayanan used to sing the Thiruppavai songs in music concerts and All India Radio, New Delhi during the month of Margali. In her sweet memory, we have pleasure in publishing them in this book as stated above. She had very great regard for Sri T. T. Krishnamachari formerly Union Minister of Finance for his discerning knowledge of Music & Musicians. Also she had great regard for Mr. & Mrs. K. R. Sundaram Iyer He was Presidenr of the Music Academy for some years. He had catholicity of out look

and wished well of others. His Sathabhishekam is to be celebrated in Feb. 87. On this occasion. I remember all of them with gratitude. The great mystic poem of Thiruppavai and the esoteric theme of love divine experienced and taught to us by Sri Andal is the essence of Vaishnavism. Let us tender our reverential adorations and sing Thiruppavai and pray for Her and the Lord's grace.

In publishing this book I have sought the help of Mr. Ganapathy Madhavan, Prop. "New Bharathi Vijayam Printers" 49, Venkatachala Chetti Street, Triplicane, Madras-5. I knew his father who had helped me in publishing the Pancharathna Kirthans of Sri Thyagaraja in memory of my wife. His son R. G. Madhavan is a fine young man with all the good qualifications for good printers and publishers. His press is well equipped to publish Sanskrit, Tamil, English and musical compositions with swaras with Varna Mettus notations. He is prompt in delivery and very good in execution of the work. Our hundred fold thanks are due to him for undertaking the printing of this work.

For publishing this book-Thiruppavai I have secured the financial assistance of Thirumalai Thirupati Devasthanams under their scheme "Aid to Authors"

My thanks are also due to the Srivilliputtur Devasthanam for their valuable publication on Andal's Thiruppavai.

I am very grateful to the Music Academy, Madras, particularly to its President Sri T. T. Vasu and its secretary Sri T. S. Parthasarathy for arranging to release the book during the Academy's Sixtieth Conference Presided over by Vidwan Sri K. V. Narayanaswamy on 28th December 1986. It is very appropriate the book is released during the Tamil month of Margazhi, so sacred to the memory of Sri Andal. I also remember with gratitude the pioneering services of Sri Ariyakudi

Ramanuja Ayyangar for setting the Varnamettus and the Swara-raga notations.

Sangeetha Bhushanam Sri T. S. Raghavan was my wife's guru and he was one of the disciples of Sangeetha Ratnakara Sri Ariyakudi Ramanuja Ayyangar for whom she had very great regard and reverence. During scholarship period my wife also learnt Music as a disciple under Sangeetha Kalanidhis T. K. Jayarama Iyer-A. I. R. New Delhi. and Sri T. L. Venkatarama Iyer, Supreme Court Jadge, New Delhi. respectivly. She also learnt some rare songs from Prof. N. S. Ramachandran formerly Director A.I.R New Delhi and Dean, Delhi University. and some songs from Sri T. S. Parthasarathy. She had great regard and respeet for Sangeetha Kalanidhi Dr. Semmangudi Srinivasa Iyer. I remember them on this occasion and tender my homage. It is very appropriate that these songs are being sung today on 28th December 1986. on this occasion by Sri K. V. Narayanaswamy the President of the 60th Annual Conference. We are very greatful to him and his wife Smt. Padma Narayanaswamy.

S. Jagannarayanan
Deputy. Secretary (Retd)
Ministry of Finance
Govt. of India - New Delhi.
(Now at Madras)

Madras
28—12—1986

# A HOMAGE TO SRI ANDAL
# of Srivilliputtur
# Vaishnavite Alwar - Goddess

## History of Sri Andal and Thiruppavai :

Goddess Earth-the revered consort of Lord Narayana took avathar as Sri Andal in the bed of Tulasi plants - in the flower garden maintained by Perialwar. From early childhood Sri Andal set her heart on Lord Krishna and was not for marrying any mortal, (like the Sachi Gopal of Puri). Thiruppavai and Nachiar Thirumozhi are the Psalms composed by Sri Andal - portraying Her Nayika Bhav-the ineffable experience in the ecstacy achieved in Love Divine. To relieve the anxiety of her father Perialwar, Lord Ranganatha of Srirangam appeared in his dream and expressed His desire to wed his dear daughter. With royal escort provided by the Pandiyan King - Vallabha Deva Pandian of Madurai, Sri Andal was taken to Sri Rangam (Trichy) in a Palanquin - the sacred abode of Lord Ranganatha, and as soon as the palanquin was put near the Kaveri Bund, Sri Andal disappeared mysteriously, and on Perialwar's search in the Sanctus Sanctorium of Sri Ranganatha Temple - he found his daughter sitting at the Holy feet of the Lord for doing Holy service which she had eagerly prayed for. In answer to Vishnu Chitta's prayer (Perialwar - her father) Lord Ranganathan asked him to make all preparations for the marriage on Panguni Uttaram day, and he promised to go over to Srivilliputtur, the birth place of Andal for marriage; this was done with great pomp and splendour. Even today, this marriage festival is conducted annually with great pomp and glory. Many devotees make a pilgrimage to this place to see the Wedding. In the Sanctus anctorium of the Temple at Srivilliputtur, Lord Ranganatha is in

the standing position in the form and name of Ranga Raja Mannar with Sri Andal on the right side - and Garuda (Vishnu's vehicle) on the left. This 'Pranava' (OM)Darshan - is unique and is always a source of perennial inspiration.

Sri Andal sang Thiruppavai - containing 30 Psalms in Tamil in praise of the Lord - and this book and Her other work - "Nachiyar Thirumozhi" are comparable in many ways to Meera "Bhajans"-Gita Govindam (Radha's divine love for Krishna) and Gopi's love for Krishna which is portrayed in Srimad Bhagavatam. In recognition of Sri Andal's devotion and richness of poetic and vedic concepts, She is worshipped as one of the Alwars - like her father Perialwar - both constituting Nos. One and Two in the Twelve Alwars - Vaishnavite Saints of South India. This great poem of Thiruppavai together with Nachiyar Thirumozhi (Her second work) constitute the esoteric of Love Divine (Gopi's divine love for Lord Krishna (in love) - experienced by her and taught to us as the essence of Vaishnavism.

Let us tender reverential adorations and sing Thiruppavai in Her Omnipresence and pray that Her grace and Benediction be upon us more and ever more.

S. JAGANNARAYANAN
Deputy Secy. (Retd)
Ministry of Finance.
Govt. of India, New Delhi
(Now at Madras.)

Madras
28—12—1986

# ஸ்ரீ ஆண்டாள் அருளிய திருப்பாவை

## முதல் பாடல்

மேளம் 36 நாட்டை (ராகம்) ஆதி தாளம்

**சலநாட்டையின் ஜன்யம்**

2 ׀ 2
ஆரோ : ஸ க ம ப நி ஸ்

2 ׀ 2 ׀ 3
அவரோ : ஸ் நி ப ம க ம ரீ ஸ

மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்ளுளால்
நீராடப்போதுவீர் ! போதுமிஞே நேரிழையீர்
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்
கூர்வேல்கொடுந் தொழிலன் நந்தகோபன் குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான்
நாராயணனே நமக்கே பறை தருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்.

1 ; ஸா க மா ப்ா ;; பா | ; க மா ப மா | மா ம க ப ம ரீ ||
மார்கழித் திங்கள் | மதி நிறைந் | த நன்நாளா ||

2 ஸா, ஸாகமா பமகம பாபா | ; ப நீ ப மா | மா ம க ப ம ரீ ||
ல் மார்கழித் திங்... கள் | மதி நிறைந் | த நன்நாளால் ||

1 ; க மா பா ம ம க ப ம ரீ ஸா | ; ஸா ம க மா | ; பா க ம பா ||
நீ . ராடப் போ... துவீர் | போதுமினோ | நே ரி ழை யீ ர் ||

2 ; ப நி ஸ் நி பா ப ம க ம ப நி பா | ; பா நி ப மா | ப ம க ம பா ; ||
நீ . ரா . டப் போ...து . வீர் | போதுமினோ | நே ரி ழை யீ ர் ||

1 ; க ம பா நீ ஸா ; ஸ் நிஸா | ; நி ஸ் ரீ ஸா | ஸ் நி நீ ஸா ஸா ||
சீர்மல்கும் ஆய்ப்பா . டிச் | செல்வச்சி | று . . மீர்காள் ||

